# சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக

முனைவர் (Ph.D) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


*ஆய்வாளர்*

**ப. சண்முகராணி**

பதிவு எண் : 3516

*நெறியாளர்*

**முனைவர் நீ. கந்தம்மாள்,** எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,டி.ஜி.டி.
தமிழ்த்துறைத் தலைவர்
தமிழ் ஆய்வு மையம்,
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி






**தமிழ் ஆய்வு மையம்**

**ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி**

**தூத்துக்குடி – 628 002.**

2011

**முனைவர் நீ. கந்தம்மாள்,** எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,டி.ஜி.டி.
தமிழ்த்துறைத் தலைவர்,
தமிழ் ஆய்வு மையம்,
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி.

## நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் செல்வி ப. சண்முகராணி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு தூத்துக்குடி ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரியில் ஆய்வு மேற்கொண்ட காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வின்மீது எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம் : தூத்துக்குடி,
நாள் :

**(நீ. கந்தம்மாள்)**
ஆய்வு நெறியாளர்

**ப. சண்முகராணி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி – 628 002.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக 2009-2011ஆம் கல்வியாண்டுகளில் முனைவர் நீ. கந்தம்மாள் அவர்களின் மேற்பார்வையில் நிகழ்த்தப்பெற்ற இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறதியளிக்கிறேன்.

இடம் : தூத்துக்குடி,
நாள் :

**(ப. சண்முகராணி)**
ஆய்வாளர்

நெறியாளர் உறுதிக் கையொப்பம்

**(முனைவர் திருமதி. நீ. கந்தம்மாள்)**
தமிழ்த்துறைத் தலைவர்,
தமிழ் ஆய்வு மையம்,
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி.

# நன்றியுரை

சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பு அளித்த மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கும், எமது கல்லூரிக் கல்விக் குழுத்தலைவர் திரு. ஏ.பி.சி.வீ. சொக்கலிங்கம் அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் **திருமதி. பச்சைநாயகி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வாளராக இடமளித்ததோடு மட்டுமன்றி என் ஆய்வு சிறந்த முறையில் அமைவதற்கு ஆக்கமும், உறுதுணையும் அளித்துத் தாய்மை உள்ளத்துடன் வழிகாட்டிய பேராசிரியர் **நீ.கந்தம்மாள்** அவர்களுக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவ்வப்போது சில ஆலோசனைகளோடு ஆய்வின் வளர்ச்சிக்கு உதவிய முனைவர் **ச.வே. சுப்பிரமணியன்** ஐயா அவர்களுக்கும் பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய எமது கல்லூரி நூலகத்தாருக்கும், பொதுநூலகத்தாருக்கும் தஞ்சைப் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டம் பெறும் அளவிற்கு என்னை உயர்த்திய என் அன்புப் பெற்றோர் **திரு. அ. பற்பநாதன், திருமதி ப.ஆனந்தவள்ளி** மற்றும் ஆய்விற்கு உதவிய என் சகோதரர் ப. ரத்தினகுமார் ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வின் எழுத்துப்பணிக்கு உதவிகள் செய்த என் தோழிகள் **ச.சரவணத்தாய், க. ஜெயமலர்** ஆகியோருக்கும் என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

உரிய நேரத்தில் இவ்வாய்வேட்டைக் கணிப்பொறி தட்டச்சு செய்து கொடுத்த **ஜெ.ஜெ.கம்ப்யூட்டர்ஸ், தூத்துக்குடி** நிறுவனத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**ப. சண்முகராணி**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| கலித் | - | கலித்தொகை |
| குறிஞ்சி | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| குறள் | - | திருக்குறள் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| நெடுநல் | - | நெடுநல்வாடை |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பதிற்று | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| புறம் | - | புறநானூறு |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - | பொருநராற்றுப்படை |
| மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| மலை | - | மலைபடுகடாம் |
| முல்லை | - | முல்லைப்பாட்டு |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| மேலது | - | மேலே கூறப்பட்ட நூல் |

# முன்னுரை

தமிழ் இலக்கியங்கள் மக்கள் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகின்றன. அவை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கைமுறை, வாணிபம், பண்பாடு, பழக்கவழக்கம் போன்றவற்றை எடுத்துக்காட்டி நிற்கின்றன. வாழ்க்கையின் வழிகாட்டிகளாகத் திகழ்கின்ற இலக்கியங்களில் நுழையுங்கால் நம் உணர்வுக்கு விருந்தும், உள்ளத்திற்கு அமைதியும் தருகின்றன.

இலக்கியத்தினை வாழ்க்கையின் உரைகல் என்று அறிஞர் குறிப்பிடுவர். மொழியின் வாயிலாக வாழ்க்கையை உணர்த்துவதே இலக்கியம். அம்முறையில் தனக்கென ஒரு விழுமிய வரலாறும் வாழ்க்கை நெறியும் படைத்த தமிழினம் பழமையும், சிறப்பும் கொண்டு விளங்குகிறது. இவ்விலக்கியம் ஒரு வரையறைக்குட்பட்ட கற்பனை, சிறந்த உணர்ச்சி, விழுமிய கருத்து, மனத்தைக் கொள்ளை கொள்ளும் வடிவம், அளவான ஓசை இவற்றினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. இதனால் அன்று தொட்டு இன்று வரை இந்நூலுக்கு முன்னோடி வேறெதுவுமில்லை என்று கூறலாம்.

**ஆய்வுப்பொருள்**

“சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்” என்னும் பொருண்மையில் ஆய்வுத்தலைப்பு அமைந்துள்ளது.

**ஆய்வின் நோக்கம்**

சங்கப்பாடல்கள் அகம், புறம் என இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் அகம் என்பது உள்ளம், மனம் என இருபொருள்படுகிறது. அகப்பாடல்கள் உள்மன வாழ்க்கையோடு தொடர்புடையவை. இவற்றில் மனம் ஒத்த தலைவனும், தலைவியும் இணைந்து வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றி ஆராய்வது முக்கிய நோக்கமாகும். மேலும் வாழ்வில் நடைபெறும் போர், வெற்றி, கொடை, நட்பு, பண்பாடு, பழக்கவழக்கம் பற்றி ஆராய்ந்து அவற்றின்வழி அக்கால மக்களின் வாழ்க்கையை அறிந்துகொள்ள முயல்வது மற்றொரு நோக்கமாக அமைகிறது.

**ஆய்வுச்சிக்கல்**

இன்றைக்குச் சுமார் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமே சங்ககாலம். அக்காலத்தில் பண்டைய தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றில் மக்கள் இயற்கையோடு செல்வச் செழிப்பாக இருந்தாலும் வாழ்வாதாரமாக விளங்கும் உணவு, உடை, இருப்பிடத்தில் பிரச்சினைகள் ஏற்பட்டன. இல்லற வாழ்வில் தலைவன் தலைவி அன்பால் இணைந்திருந்தபோதும் பரத்தையர் தோன்றினர். பரத்தையால் இல்லறத்தில் தொல்லைகள் ஏற்பட்டன. தொழில்கள் பல தோன்றின. பண்பாடு, நாகரிகம் உண்டாயின. அவை வாழ்வியலோடு பின்னிப்பிணைந்துள்ளன. இவற்றை ஆராயும் அடிப்படை ஆய்வாக இவ்வாய்வு விளங்குகிறது.

**ஆய்வுமூலங்கள்**

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு போன்ற நூல்கள் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

இலக்கணம், ஆராய்ச்சி கட்டுரைகள், இதழ்கள், ஆய்வேடுகள், இக்கால இலக்கியம் ஆய்வுத்தொடர்பான பிறநூல்கள் போன்றவற்றைத் துணைமை ஆதாரங்களாகக் கொண்டு இவ்வாய்வு அமைகிறது.

**கருதுகோள்**

ஒவ்வொரு செயலிலும் காலத்திற்கேற்ற வளர்ச்சியால் பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. இதனால் பழையன கழிதலும், புதியன புகுதலும் நிகழ்ந்தாலும் மனிதனின் வாழ்வில் சில மரபுகள் பழக்கவழக்கங்கள் மறைந்துவிடுவதில்லை. இவ்வகையில் சங்ககாலம் தொட்டு மக்களின் வாழ்வில் சில நம்பிக்கைகள், மரபுகள், பழக்கவழக்கங்கள், தொழில்கள் போன்றவற்றில் மாற்றங்கள் ஏற்படவில்லை என்ற கருதுகோளின் அடிப்படையில் இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வு அணுகுமுறை**

“சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்” என்னும் இவ்வாய்வில் மதிப்பீட்டுமுறைத் திறனாய்வும், பகுப்புமுறைத் திறனாய்வும் விளக்கமுறைத் திறனாய்வும், வரலாற்றுமுறைத் திறனாய்வும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு நடை**

ஆய்வு முழுவதும் எளிய தமிழ்மொழி நடையே பின்பற்றப்பட்டுள்ளது. சில இடங்களில் இலக்கிய நடையும் கையாளப்பட்டுள்ளது.

**ஆய்வுப்பகுப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டு அமைந்துள்ளது.

1. அறிமுகம்
2. ஐவகை நிலங்கள்
3. அகத்திணை மாந்தர்
4. தொழில்கள்
5. வாழ்வியல் முறை

என்பன.

முதலாவதாக அமையும் முன்னுரையில் ஆய்வுப்பொருள், ஆய்வின்நோக்கம், ஆய்வுச்சிக்கல், ஆய்வுமூலங்கள், கருதுகோள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுநடை, ஆய்வுப்பகுப்பு போன்ற செய்திகள் இடம்பெறுகின்றன.

‘அறிமுக’ இயலில் சங்க இலக்கியத்தை அறிமுகப்படுத்தும் விதமாக தமிழ்மொழியின் தொன்மை, இலக்கியவளம், உயர்சிந்தனை, தாய்மைத்தன்மை,

பொதுமைப்பண்பு ஆகியவை ஆராயப்பட்டுள்ளன. மேலும் எட்டுத்தொகை நூல்களின் சிறப்பு, பாடல் இயற்றிய புலவர் வரலாறு, நூல்களில் கூறப்பட்டுள்ள வாழ்வியல் செய்திகள் போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

'ஐவகை நிலங்கள்' என்னும் இரண்டாவது இயலில் நிலம், நிலத்தின்தன்மை, திணை, திணைப் பாகுபாடு, ஒவ்வொரு திணையில் வாழும் மக்களின் உணவு, ஊர், விலங்கு, தெய்வம், பொழுது, உரிப்பொருள் போன்றவை ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

'அகத்திணை மாந்தர்' என்னும் மூன்றாவது இயலில் அகத்திணை மாந்தர்களான தோழி, தலைவன், நற்றாய், செவிலி, பரத்தை போன்றோரின் பண்புநலன்கள் கூறப்பட்டுள்ளன. மேலும் தலைவன், தலைவியின் காதல் வாழ்வில் துணையாக நிற்கும் பாத்திரமான (வாயில்கள்) பாணன், பாடினி, பாங்கன் போன்றோரின் பண்புகளும் விளக்கப்பட்டுள்ளன.

'தொழில்கள்' என்னும் நான்காவது இயலில் உணவிற்காகத் தொடங்கிய உழவுத்தொழில் எல்லாத் தொழிலுக்கும் முதன்மையாக விளங்குகிறது. அத்தொழிலில் விளைநிலம், உழுதல், விதைத்தல், நடுதல், நீர்பாய்ச்சுதல், எருவிடுதல், களையெடுத்தல், அறுவடைசெய்தல் போன்றவை ஆராயப்பட்டுள்ளன. மேலும் வாழ்வியலுக்கு உதவும் நெசவு, தையல், தச்சு, ஓவியம், சிற்பம், கட்டிடம், அணிகலன் தயாரித்தல், தோல்தொழில், வேட்டையாடுதல், சங்கெடுத்தல், சலவைத்தொழில் போன்றவை வாழ்வியலுக்கு ஆதாரமாக விளங்குகிறது என்பது ஆராயப்பட்டுள்ளன.

'வாழ்வியல் முறை' என்னும் ஐந்தாவது இயலில் சங்ககால மக்கள் அதிகாலை கண்விழித்தது முதல் அவர்களின் வாழ்வில் நீராடல், உணவு, உடை, காதல், திருமணம், பண்பாடு, பழக்கவழக்கம், நாகரிகம் போன்றவை மக்களின் வாழ்வில் சிறப்புற்றிருந்த நிலை ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

இயல்தோறும் ஆராயப்பெற்ற தகவல்களால் அறிந்து கொள்ளப்பட்ட மெய்ம்மைகள் முடிவுரையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

இறுதியாக ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் அகரவரிசையில் தொகுக்கப்பட்டுத் துணைநூற்பட்டியலாக இடம்பெறுகின்றன.

# இயல் - 1

# அறிமுகம்

**முன்னுரை**

**"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்**

**இனிதாவ தெங்கும் காணோம்"[1]**

என்ற பாரதியின் பாடல் வரிகளுக்கேற்பப் பழம்பெருமை வாய்ந்த தமிழ்மொழி 'செம்மொழி' என்று அங்கீகாரம் பெற்றிருப்பது அதன் பெருமைக்குப் பெருமைசேர்க்கும் மணிமகுடமாய் விளங்குகிறது. உயர்தனிச் செம்மொழியாக உயர்வினைப் பெற்றுள்ள தமிழின் பொருள் 'அழகு' 'இனிமை' என்பதாகும். அதனால்தான் இம்மொழியைத் தேன்தமிழ், தீந்தமிழ் என்று அடைமொழியிட்டு அழைத்தனர். தமிழ் மொழியின் சிறப்புக்களை எளிதில் கூறி முடித்துவிட முடியாது. தமிழரின் தலை இலக்கியமாய்த் தன்னிகரற்ற இலக்கியமாய் தரணியில் தமிழின் புகழ்பாடும் ஒப்பற்றப் படைப்பாய்த் தமிழ்மொழி விளங்குகிறது. இம்மொழி இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழைப் பெற்றுள்ள சிறப்புமிக்க மொழி என்றால் அது மிகையன்று.

- இயல் தமிழ் படிப்பவர் எண்ணங்களை வளர்க்கிறது
- இசைத்தமிழ் உள்ளத்தை உருக்கி மகிழ்விக்கிறது
- நாடகத்தமிழ் நடித்துக் காட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறது

இத்தகைய சிறப்புக்களையுடைய தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நமது நாட்டிற்குச் 'செந்தமிழ்நாடு' என்று பெயர் வைத்தவர் மகாகவி பாரதியார். இதில் நாட்டிற்கு அடைமொழியாக நமது மொழியும் அதேபோன்று மொழிக்கு அடைமொழியாகச் செம்மையும் என்று அமைந்திருப்பது இதன் சிறப்பம்சமாகும்.

தமிழ்மொழி உலகமொழிகளில் மிகவும் முதன்மையானது. உலக மொழிகளுக்கெல்லாம் பழமையான மொழி தமிழ் என்பது இன்றைய அளவில் ஆராயப்பட்டு பன்மொழி அறிஞர்களின் பட்டறிவின் மூலம் இன்றைக்கு ஒத்துக்கொள்ளப்பட்ட ஓர் முடிவாகும். தாய் என்றாலும் மகவு விளித்தால் தாய்க்குப் பெருமை மகிழ்ச்சி. அதுபோன்று தமிழருக்குத் தமிழ்மொழியின் தொன்மை தெரிந்திருப்பினும் தமிழ்மொழியின் மேன்மை உலகெல்லாம் உணர்ந்து உரைக்கப்பட வேண்டும். இது தமிழ் உள்ளங்களின் நெடுங்கால அவா. அவ்அவாவின் வெளிப்பாடாக இன்றைக்குத் தமிழ்மொழி, செம்மொழி என்று அனைத்துலகும் அறியும் வண்ணம் நிகழ்வுகள் நடந்து வருவது தமிழரின் நீண்ட காலக் கனவாகும்.

**சங்கம்**

தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் இருந்தன. சங்கம் என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இது பிற்காலத்தில் தோன்றிய வழக்குச்சொல் என்பர். சங்கம் என்னும் சொல் சமண பௌத்த சமயத்தாரால் கையாளப்பட்டது என்பர். பின்னர் இறையனார் அகப்பொருள் உரையில் நக்கீரர் சங்கம் என்ற சொல்லைப் பலமுறை பயன்படுத்தியுள்ளார். சங்கம் என்னும் சொல் அவை, சபை, அவையம், புணர், கூட்டு எனப்பல பொருளில் வழங்கப்படுகிறது. தொல்காப்பியர் சங்கம் என்பதை அவையம் என்று பொருள் சுட்டுகிறார் அதாவது,

**"நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து"** **(தொல்-பாயிரம்:7)**

என்று தொல்காப்பியப் பாயிரம் குறிப்பிடுகிறது.

சங்ககாலத்தில் புலவர்களும், பாணர்களும், பாடினியர்களும், ஊர்விட்டு ஊர்சென்று தமிழ் மன்னர்களின் அவைகளில் அவர்களின் புகழினைப் பாடிப் பரிசில் வாங்கிச் சிறப்பித்ததோடு மட்டுமல்லாமல் அவையங்களையும் ஏற்படுத்தித் தமிழைப் போற்றினர். அத்தமிழைப் புலவர்கள் பலர் கூடி ஆராய்ந்துள்ளனர். அவற்றிற்கு மாங்குடி மருதன் என்ற புலவன் தலைவனாக இருந்தான் என்ற செய்தியைப் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

**"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவனாக**
**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**
**புலவர் பாடாது வரைக என்நிலவரை"** **(புறம் 72: 13-16)**

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியதாகும். சங்ககாலத்தில் பாண்டியன் அவையில் புலவர்கள் பலர் சென்று கூடி ஆராய்ந்தும் பின் புதுமைச் சொற்கள் பலவற்றை உருவாக்கியும் மகிழ்ந்தனர் என்று பல்வேறு சான்றுகள் கூறுகின்றன.

**"பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுச் செல்வர்க்கு**
**மதிமொழி இடன்மாலை வினைவர்போல் வல்லவர்**
**செதுமொழி சீத்த செவி செறுவாக**
**முதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனல்ஊர"** **(கலி 68:1-8)**

இப்பாடல், புலவர்கள் உருவாக்கிய புதுமொழிகளை அரசனும், புலவர்களும் கேட்டு மகிழ்ந்தனர் என்று சுட்டுகின்றது. இளவேனில் காலமாகிய சித்திரை, வைகாசி மாதங்களில் மதுரையில் புலவர் கூட்டங்கள் நிகழ்ந்துள்ளன என்று கலித்தொகை சுட்டுகின்றது.

**"நிலன் நாவில் திரிதருஉம் நீர்மாடக் கூடலார்**
**புலன் நாவில் பிறந்தசொல் புதிது உண்ணும் பொழுதன்றோ**
**பலநாடு நெஞ்சினோம் பிரிந்து நாம் விடுத்தக்கால்**
**சுடர் கிழாய் நமக்கு அவர் வருவதும் என்று உரைத்ததை"(கலி.35:17-20)**

பாண்டியன் புலவர்களை அழைத்து மகிழ்ந்ததை மதுரைக்காஞ்சியில் சுட்டப்படுகிறது.

**"தொல்லாணை நல்லாசிரியர்**

**புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்**

**நிலந்தரு திருவின் நெடியோன் போல"** **(மதுரை 761-763)**

என்கிறது. இதனால் மதுரை எப்பொழுதும் தமிழால் மலர்ந்தது மக்களுக்கு மகிழ்வைத் தந்துகொண்டிருந்தது என்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது.

**"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**

**மகிழ்நனை மறுகின் மதுரை"** **(சிறுபாண் 66-67)**

என்கிறது.

சங்கம் இருந்தமைக்குப் பிற்கால இலக்கியங்கள் மிகுதியான சான்றுகள் தருகின்றன. அதாவது சங்கம் நிறுவிப் புலவர்கள் அனைவரும் கூட்டமாக ஒன்றுகூடி நூல்கள் இயற்றினர் என்று பெரிய புராணம் கூறுகிறது. கம்பர் சங்க முத்திரை பெற்றப் பின்னரே தம் காவியத்தை அரங்கேற்றினார் என்று கதை வழங்கப்படுகிறது. வைணவத்தின் இருகூறுகளாக விளங்கும் வடகலை தென்கலைக் குழு பரம்பரைச் செய்திகள் 'திருவாய்மொழி' சங்கப்பலகை ஏறியதெனக் கூறுகின்றனர். பழையதும் பிந்தியதுமான இரண்டு திருவிளையாடற்புராண நூல்களுள் 'சங்கப் பலகை தந்த படலம்' எனச் சங்கத் தோற்றத்தை முப்பத்தெட்டுப் பாக்களில் கூறுகின்றது என்று அடைக்கலசாமி தன் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பிற்காலத்தில் எழுந்த தேவாரம், ஆழ்வார் பாடல்கள், திருக்கோவையார், சின்னமனூர்ச் செப்பேடுகள் போன்றவற்றில் சங்கம் இருந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன. திருமங்கையாழ்வார் சங்கமுகத்தமிழ், சங்கமலித்தமிழ் என்று தமிழைக் குறிப்பிடுகிறார். திருநாவுக்கரசர் சிவன், தருமிக்கு அருளியதைக் கூறும்போது,

**"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி"**[2]

என்கிறார்.

**"சங்கத்தமிழ் மாலை முப்பதும்"**[3]

என ஆண்டாளும்

**"தலைச் சங்கப் புலவனார் தம்முன்"**[4]

எனச் சேக்கிழாரும்,

**"சங்கத் தமிழ் மூன்றும் தா"**[5]

என ஔவையாரும்,

**"தமிழ்ச் சங்கம் சேர்கிற் டிரேல்"**[6]

எனக்கம்பரும் சங்கம் என்ற சொல்லைப் பல்வேறு இடங்களில் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

கி.பி.10-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சின்னமனூர்ச் செப்பேடும் தமிழ்நாட்டில் சங்கம் இருந்தமையைச் சுட்டுகின்றது.

**“மகாபாரதம் தமிழ்ப் படுத்தும்**

**மதுராபுரிச் சங்கம் வைத்தும்”[7]**

என்கிறது. எனவே மதுரையில் அமைந்த சங்கம் மகாபாரதத்தைத் தமிழ்ப்படுத்தியுள்ளதாகக் குறிப்பிடுகின்றது. இவ்வாறு சங்கம் இருந்தது என்பதைப் பல்வேறு சான்றுகள் உணர்த்துகின்றன.

**சங்க இலக்கியம்**

தமிழ்நாட்டில் சங்கம் அமைத்துத் தமிழ்வளர்த்த பெருமை தமிழ்ச்சான்றோர்க்கு உரியதாகும். இவர்கள் வளர்த்த இலக்கியங்களே சங்க இலக்கியம். பழந்தமிழ் மக்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் காலக்கண்ணாடியாகத் திகழ்வது சங்க இலக்கியங்கள். சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் குறிப்பிடப்படுகின்றன. சங்க இலக்கியம் உலக இலக்கியங்களின் இமயமாகத் திகழ்கிறது. ஆயினும் தமிழ்ச் செவ்வியல் இலக்கியமான சங்க இலக்கியம் பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை முறையை அகம், புறம் என்று இருவகையாகப் பாகுபாடு செய்துள்ளனர். ‘அகம்’ என்பது காதல் வாழ்வையும் ‘புறம்’ என்பது வீர வாழ்வையும் குறிக்கின்றன. தமிழர்கள் இவ்விரண்டையும் இரண்டு கண்களாகப் போற்றினர். சங்க இலக்கியங்களில் உள்ள பாடல்கள் பொருள், அடிவரையறை, யாப்பு, வண்ணம், திணை, துறை ஆகிய அடிப்படைகளில் தொகுக்கப்பட்டுள்ளன. பெரும்பாலான பாடல்களில் காதலும், வீரமும் பாடுபொருளாக அமைந்துள்ளன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவை ஒவ்வொன்றிலும் உள்ள பாடல்கள் பல்வேறு காலத்தில் வாழ்ந்த புலவர் பலரால் பல்வேறு சூழ்நிலைகளில் பாடப்பட்டவை.

**சங்ககாலம்**

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகில் எந்தமொழி செம்மையான இலக்கிய இலக்கணங்களைப் பெற்றுள்ளதோ அம்மொழி நீண்டதோர் வரலாற்றைப் பெற்றிருக்கும். இந்நிலையில் உயர்தனிச் செம்மொழியாகத் தமிழ் திகழ்கின்றது. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்க்கூறும் நல்லுலகத்துத் தமிழ் வழக்கில் இருந்தாலும் சிறப்பாக வளர்க்கப்பெற்றது பாண்டிய மண்ணில்தான் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்கின்றார்கள்.

**“பொருப்பிலே பிறந்து தென்னன்**
**புகழிலே கிடந்து சங்கத்து**
**இருப்பிலே இருந்து வைகை**
**ஏட்டிலே தவழ்ந்த பேதை**
**நெருப்பிலே நின்று கற்றோர்**
**நினைவிலே நடந்தோர் என**
**மருப்பிலே பயின்ற பாவை**
**மருங்கிலே வளருகின்றாள்”[8]**

என்று வில்லிபாரதச் சிறப்புப் பாயிரம் இக்கருத்தை உறுதி செய்வதை அறியலாம். மேலும் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த வரலாறு பழம்பெருமையாகப் பேசப்படுகிறது. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமே சங்ககாலமெனப் பல்வேறு அறிஞர் கருதுகின்றனர். இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளாகத் தனக்கென நாட்டு வரலாறும், மொழி வரலாறும் கொண்ட தமிழகம் தன்மொழியை வளர்ப்பதில் தனிக்கவனம் செலுத்தியது.

தமிழகத்தின் வடஎல்லை வேங்கடமாகவும், தெற்கெல்லை குமரி முனையாகவும், கிழக்கு மேற்கு எல்லைகள் கடல்களாகவும் விளங்கின. இவ்வெல்லைக்குள் சேர, சோழ, பாண்டியநாடு, கொங்குநாடு ஆகிய பலநாடுகள் இருந்தன. சேர, சோழ, பாண்டிய நாடுகளை முடிமன்னர்களும் பிற நாடுகளைக் குறுநில மன்னர்களும் ஆண்டனர். இவர்கள் புலவர்களை ஆதரித்து அவர்களின் வறுமையைப் போக்கினர். புலவர்களும் தங்கள் புலமையை மன்னரிடம் காட்டிப் பரிசுகள் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர். சுமார் எழுநூறு ஆண்டுகள் கொண்ட காலத்தை (கி.மு.500 – கி.பி.200) சங்ககாலம் என்று கூறுவர். இக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களையே சங்க இலக்கியங்கள் என்பர்.

கி.மு.500-இல் தமிழ்நாட்டில் மாற்றார் நுழையாத காலம். எனவே இக்காலத்தில் இலக்கியங்கள் வேற்றுமொழிக் கலப்பின்றிச் சொந்த மண்ணின் பண்பாட்டு மணத்தோடு பொதிகைத் தென்றலாய் இயற்கைச் சூழலில் இலக்கியங்கள் தோன்றின. சங்க இலக்கியங்கள் தோன்றிப் பெருமையடையக் காரணமாக இருந்தவை முச்சங்கங்கள். முச்சங்கங்கள் பற்றிய செய்திகளைக் கீழ்க்காணும் அட்டவணையின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**முச்சங்க வரலாறு**

| வ.எண் | சங்கம் | நடைபெற்ற இடம் | காலம் | புரந்த அரசர் | சங்க உறுப்பினர் | புலவர்களின் எண்ணிக்கை | தலைமைப் புலவர்கள் | நூல்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | முதற்சங்கம் | தென்மதுரை | 4440 ஆண்டுகள் | காய்ச்சின வழுதி முதலாக நெடுங்கோன் ஈறாக 89 பேர் | 549 | 4449 பேர் | அகத்தியர், முருகன் சிவபெருமான் முரஞ்சியூர் முடிநாகராயர் | அகத்தியம், பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களியாவிரை |
| 2. | இடைச்சங்கம் | கபாடபுரம் | 3700 ஆண்டுகள் | வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக 59 பேர் | 59 | 3700 பேர் | அகத்தியர், தொல்காப்பியர் இருந்தையூர்க் கருங்கோழி வெள்ளூர்க் காப்பியன், சிறு பாண்டரங்கன், திரையன், மாறன், துவரைக்கோன், கீரந்தை | அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், பூதபுராணம் இசை நுணுக்கம், கலி குருகு, வெண்டாளி வியாழமாலை, அகவல் |
| 3. | கடைச்சங்கம் | மதுரை | 1820 ஆண்டுகள் | முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக 49 பேர் | 49 | 449 பேர் | சிறுமேதாவியார் சேந்தம் பூதனார், அறிவுடை அரனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறன், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார் மருதனிள நாகனார் கணக்காயனார் மகனார் நக்கீரனார் | அகத்தியம், தொல்காப்பியம், நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது கலி எழுபது பரிபாடல் கூத்து, வரி சிற்றிசை, பேரிசை |

இவ்வட்டவணையின் மூலம் முச்சங்கங்கள் பற்றிய வரலாறு, அவை நடைபெற்ற இடம், காலம், சங்கங்களில் கலந்துகொண்ட புலவர்கள், அச்சங்கத்தின் போது இயற்றிய நூல்கள் போன்றவற்றை அறிந்து கொள்ள முடிகிறது.

**இலட்சியம்**

அகம் அல்லது புறம் ஏதாவதொன்றை இலக்காகக் கொண்டு பாடுவதையே இலட்சியம் என்கிறோம். இலக்கு+இயம் என்பது இலக்கினை இயம்புவதால் இலக்கியமாக (இலட்சியம்) இருத்தல் வேண்டும் என்று பொருள் கொள்ளப்படுகிறது. இங்கு இலட்சியம், குறிக்கோள் என இரண்டுவிதமாக எடுத்தியம்பப்படுகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு இலட்சியம் இருக்கும். வாழ்வில் மனிதன் முன்னேற்றம் அடைவதற்கு குறிக்கோள் அல்லது இலட்சியத்துடன் செயல்பட வேண்டும். அப்போதுதான் எந்த இலட்சியத்தையும் நிறைவேற்ற முடியும். இலட்சியம் என்பது வாழ்க்கைக்கு அடிப்படையான ஒன்றாகும். அதுபோல் இலக்கியங்களும் சிறப்பான இடத்தைப் பிடிப்பதற்குத் தன்னிகரற்ற தனித்தன்மைகளைப் பெற்றிருக்க வேண்டும். அத்தகைய தன்மையைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

**இலக்கிய வளம்**

சங்க இலக்கியம் அகம், புறம் என்ற இரண்டு தலைமைக் கூறுகளை உடையது. தமிழைச் செம்மொழியாக்கும் தகுதிகளுள் ஒன்றாக இலக்கிய வளம் பேசப்படுகிறது. இலக்கியம் மனிதனை மனிதனாக்கும் இயல்புடையது.

எழுத்தும் மொழியும் என்று தொடங்கியதோ அன்று தொட்டே இலக்கியவளம் மனித வாழ்வோடு ஒன்றிவிட்டது என்பர்.

- **"பலாப்பழத்தைச் சிறுசுளை பெரும்பழம் எனவும்" (பெரும்: 78)**
- **"முயலை நெடுஞ்செவிக் குறுமுயல் எனவும்" (பெரும்: 115)**
- **"இலை அடர்ந்து நிழல் படரும் பொழிலை வெயில் நுழைவு அறியாக் குயில் நுழை பொதும்பர் எனவும்" (பெரும்: 50-52)**

பாடியுள்ளனர்.

இப்பாடல்கள் இலக்கியவளம் பெற்றுத் திகழ்வதை அறிய முடிகின்றது. மேலும் தொல்காப்பியம் இலக்கண நூல் மட்டுமன்று இலக்கிய நூலுமாகும். இந்நூலில் இலக்கியச் சாயலையும், இலக்கியம் தோன்றுவதற்கான அடிச்சுவட்டையும் காணலாம். இலக்கணம் தத்துவத்தோடும் தர்க்கத்தோடும் இணைந்து வளராமல் இலக்கியத்தோடு ஒன்றி வளர்ந்த காலத்தில் தொல்காப்பியம் தோன்றியது. ஆதலால் இலக்கியச் சாயல் தொல்காப்பியத்தில் ஒளிவிடுகின்றது என்பதை,

**"தந்தையர் ஒட்பர் மக்கள் என்பதனால்**
**அந்தமில் சிறப்பின் மக நெருங்கினும்" (தொல்: 1098)**
**"காதல் எங்கையர் காணின் நன்றென**
**மாதர் சான்ற வகையின் கண்ணும்" (தொல்: 1042)**

என்ற வரிகள் சிறந்த இலக்கியப்போக்கு உடைய நூல் தொல்காப்பியம் என்பதற்குச் சான்றாகத் திகழ்கிறது.

**தொன்மை**

தொன்மை என்னும் சொல்லிற்குப் பழமை என்று பொருள் கூறுவர். தமிழ்மொழி இலக்கிய வளமும், இலக்கண வளமும் மிக்கது. தனித்தியங்கவல்லது. காலந்தோறும்

நிகழ்ந்து கொண்டிருக்கும் புதிய சமூக, பொருளியல், அரசியல், பண்பாடு மாறுதல்களுக்கு ஈடுகொடுக்க வல்லது. உலகின் தொன்மையான நாகரீகங்களில் ஒன்று தமிழர் நாகரிகம் மிகப்பழமை வாய்ந்த இனம் தமிழினம் அவற்றை,

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**

**முன்தோன்றிய மூத்தகுடி”**[9]

என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுவதால் தமிழினத்தின் தொன்மை புலப்படுகிறது. இவ்வுலகில் தமிழனைப்போல் முன்பு உயர்ந்தவன் இல்லை. முதன்முதல் நாகரீக விளக்கேற்றி நானிலம் முழுவதும் அறிவொளி பரப்பியவன் தமிழன். “எங்கு முதல் மனிதன் தோன்றினானோ அங்குதான் ஞாலமொழியும் தோன்றியிருக்கமுடியும். குமரி முதல் இமயம் வரை அவன் பேசிய மொழியே முதன்மொழி. அதுவே நம் தாய்மொழியாம் தமிழ்” என்று பாவணார் மனிதனின் தோற்றம் குறித்துக் கூறுகிறார்.

இன்று உலகில் வழங்கும் மொழிகளின் எண்ணிக்கை குறித்து வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. உலக மொழிகள் 4000 என்றும் 3500 என்றும் 1500 என்றும் வேறுபட்ட எண்ணிக்கையில் கூறுகின்றனர். எது எவ்வாறோ உலகில் பல மொழிகள் தோன்றி வழங்கி மறைந்தன. இவற்றுள்ளும் ஒருசில மொழிகள் மட்டுமே அழியாமல் நிறைபெற்றுள்ளன என்பது உண்மை. இவற்றிலும்கூடச் சில பேச்சு வழக்கு இழந்து இலக்கிய மொழியாக மட்டுமே உள்ளன. இந்நிலையில் உலக மொழிகளில் இன்று பழமையாகக் கருதப்பெறும் மொழிகள் இலத்தீன், கிரிக், சமஸ்கிரும், தமிழ் முதலான மொழிகளாகும். இவற்றுள் தமிழ் மட்டுமே உயிர்ப்புள்ள வழக்கிலுள்ள மொழியாகத் திகழ்கிறது என்பதைப் பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் எடுத்துரைக்கின்றது.

மூவாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தொல்காப்பியர் தமக்கு முன் வாழ்ந்த தமிழறிஞர்களை,

**“என்மனார் புலவர்” (தொல். 552)**

**“யாப்பறி புலவர்” (தொல். 552)**

**“நூல்நவில் புலவர்” (தொல். 1411)**

**“நுணங்கு மொழிப்புலவர்” (தொல். 1598)**

**“தொன் மொழிப் புலவர்” (தொல். 1494)**

என்று குறிப்பிடுவார். தொன்மைக் காலத்து வாழ்ந்த தொல்காப்பியரே தமிழைத் ‘தொன்மொழி’ எனக் கூறுவதை நோக்கும்போது தமிழின் பழமை கற்பனைக் கெட்டாத கடுந்தொலைவானது என்பது புலனாகிறது.

**“திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்**
**விண்ணோடும் உடுக்களோடும்**
**பெருங்குகடல் இவற்றோடும் பிறந்த தமிழ்”**[10]

என்று பாரதிதாசன் பாடுகின்றார் என்றால் தமிழ் மிகத் தொன்மையானது எனலாம். இதில் சிலப்பதிகாரம் காலத்தாலும், கதையாலும் பழமையானது. வடமொழியில் தோன்றிய மகாபாரதக் கதை ஜெயம் என்னும் கதையினை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டதாகக் கூறுவர். அதேபோன்று சிலப்பதிகாரக் கதையும் பழங்காலத்தில் வழங்கி வந்தமையைச் சில சான்றுகளால் அறியலாம். சிலப்பதிகாரத் தலைமைப் பாத்திரமாகிய கண்ணகி குறித்த செய்தி நற்றிணையில் இடம்பெற்றுள்ளது. அவை

**“எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்**

**குருகார் கழனியின் இதனைத தாங்கண்**
**ஏதிலாளன் கவலை கவுற்ற**
**ஒருமுலை மறுத்த திருமா வுண்ணி''** **(நற்.216:6-9)**

இப்பாடலில் இடம்பெற்றுள்ள திருமாவுண்ணி கண்ணகியாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. பொதிகை மலையானது அகத்தியர் வாழ்ந்து தமிழை வளர்த்த இடம் என்பர். அந்தப் பொதிகை மலையைப்பெற்ற பாண்டிய மன்னன் என்று குறிப்பிடுவதால் தமிழனின் ஆட்சியானது மிகத் தொன்மையானது என்றே உணரமுடிகிறது.

**பொதுமைப்பண்பு**

பொதுவாக இலக்கணங்கள் அல்லது இலக்கியங்கள் உலக நிலையில் பொதுப்பண்புகள் பெற்றுக் காணப்படும். ஆயினும் அவை சில நிலைகளில் ஒவ்வொரு மொழியின் இலக்கணங்கள் அல்லது இலக்கியங்கள் வேறுபட்டுத் தனித்துவம் பெற்று விளங்கும். எடுத்துக்காட்டாக அகத்திணைப் பாடல்களில் இடம்பெறும் தலைவன், தலைவியர் பெயர் கூறக்கூடாது என்பது தொல்காப்பியரின் கட்டளை இது.

**''மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**
**சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்''** **(தொல் 1000)**

எனச் சுட்டி காட்டுகிறார். இது இலக்கியத்தின் பொதுத்தன்மையைச் சுட்டிக்காட்டுவதோடு இலக்கியங்களில் வேறுபாடு காட்டாத பொதுமை உணர்வாகிய பண்பாட்டு அருமையையும் காட்டுகிறது. இதற்கு மாறாகப் புறவொழுக்கங்கள் மனிதர்களின் வாழ்வை மேம்படுத்துவதாலும் அவர்களுக்குச் சமூகத்தில் உயர்வான மதிப்பீட்டைத் தருவதாலும், புற இலக்கிய மாந்தர்களின் இயற்பெயர்களை வெளிப்படச் சுட்டிக் கூறலாம் என்றும் கூறுகிறார்.

**''புறத்திணை மருங்கின் பொருந்தி னல்லது**
**அகத்திணை மருங்கின் அளவு தலிலவே''** **(தொல்.நூ.1001)**

என்கிறார். இக்காலத்தில் நடப்புச் செய்திகளையோ புனைவுகளையோ கதையாகக் கூறும்போது கற்பனைப் பெயர்களால் படைத்து மொழிவதும் அக்காலத்து அகமாந்தர் குறிப்பிட்டுப் பெயர் சுட்டப்படாததும் இலக்கியம் ஒருவர்க்கன்றி எல்லோருக்கும் பொதுவானது என்று உலகப் பொதுமைப் பண்பைத் தொல்காப்பியம் சுட்டுகிறது.

உலக இலக்கியங்களில் இந்தப் பொதுமைப்பண்பு உத்தி, பாடுபொருள் இலக்கிய வகைமை அதன் அமைப்பு தோன்றிய காலம் ஆகியவற்றைக் கொண்டு வேறுபடுகிறது. சங்க இலக்கியங்களில் தலைவியின் பெயர், காலம் ஆகியவை சுட்டப்பெறவில்லை. எனவே, உலகின் எல்லா மனிதருக்கும் பொருந்தும் பொதுமைப் பண்பு கொண்டதாகத் திகழ்கின்றது. அவற்றை

**''ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்''** **(கலி, நெய்தல் 133:6-13)**

ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறைவு, முறை, பொறை போன்றவை உலக மக்கள் அனைவரும் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய பொதுநெறி முறைகளாகும். இவை அனைத்திற்கும் விளக்கம் தருகின்றது கலித்தொகை.

**''கண்டவர் இல்என உலகத்துள்ள உணராதார்**
**தங்காது தகைவு இன்றித் தாம் செய்யும் வினைகளுள்**
**நெஞ்சு அறிந்த கொடியவை மறையினும்''** **(கலி, நெய்தல் 125:1-3)**

இப்பாடல் உலக மக்களின் இயல்புகளை நன்கு சுட்டுகின்றது. காலம் கடந்து, இடம் கடந்து, சமுதாய எல்லைகளைக் கடந்து நிற்கும் உண்மையான உணர்வினை மிக நுட்பமாகக் கூறுவன அகப்பாடல்கள். இப்பாடல்களில் காணப்படும் காதல் சங்க காலத்திற்கு மட்டும் உரியதன்று. எக்காலத்திற்கும் மனித குழுவிற்கும் உரியதாகும் என்பதைக் குறுந்தொகை சுட்டுகின்றது.

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் மாரளவின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந் : 3)**

எனும் பாடல் மூலம் அறியலாம்.

அனைத்து இலக்கியப் படைப்புகளும் மனிதனின் வாழ்வியலை மையமாகக் கொண்டே உருவாக்கப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் காதலையும், வீரத்தையும் இரு கண்களாகக் கொண்டமைகின்றன. சங்கத்தமிழ் இலக்கியங்களின் தனித்தன்மைகளில் ஒன்று. தனிமனித வாழ்வியல் பிரச்சினைகளைக்கூட சமுதாயக் கண்ணோட்டத்தில் அலசி ஆராய்வதாகும். இதனால் இலக்கிய நிகழ்வுகளின் சாயல் தத்தமது வாழ்வில் பிரதிபலிப்பதாகக் கருதும் ஒவ்வொரு தமிழனும் அவ்விலக்கியப் படைப்புத் தன்னைச் சார்ந்ததாகவே எண்ணி மகிழ்கிறான். இதனால் ஒரு குறிப்பிட்ட சாரார் அல்லது பகுதியினர் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் அனைத்துத் தரப்பினரும் தங்களைச் சார்ந்த இலக்கியப் படைப்பாக அமைவதன் மூலம் அனைவரும் ஏற்கும் பொதுமைப் பண்பு உடைய படைப்புகளாக உலகுமுன் காட்சியளிக்கின்றன.

பொதுமைப்பண்பு என்பது உலகில் வாழும் உயிரினங்கள் அனைவருக்கும் பொதுவானவையாகும். உலக மக்களுக்குப் பொதுவானது. அன்பு அன்பினை மையமாகக்கொண்ட மானிட உறவு மாந்தர் ஒழுக்கம், காதலும் வீரமும், களவும் கற்பும் போன்றவை அகப்பாடலுக்கு மட்டுமல்ல, அகவுணர்வு கொண்ட மக்களனைவருக்கும் பொதுவானதாகும் என்பதை,

**"அன்பின் ஐந்திணை களவெனப் படுவது" (இறைகளவியல் 1:1)**
**"கற்பெனப் படுவது களவின் வழித்தே" (இறைகளவியல் 15:2)**

என்னும் பாடலடிகளில் ஐந்திணையும் களவும், கற்பும் அனைவருக்கும் பொதுவான ஒன்றாகும் என்று எடுத்துக் காட்டுகின்றன.

**தற்சார்பின்மை**

தற்சார்பின்மை என்பது கவிஞன் தான் பாடவந்த பொருள்மீது தற்சார்பின்றி நடுநிலையில் நின்று பாடுவது. கலித்தொகையில் வரும் அதிகமான பாடல்கள் தற்சார்பின்றியே காணப்படுகின்றன. சான்றாகத் தலைவனுக்கும் தலைவிக்குமிடையே நடைபெறும் உரையாடல் ஒன்றில் தலைவியின் பெற்றோர் தலைவனுடன் பேசக்கூடாது என்றும் தலைவனின் பெற்றோர் அவளை விடாது ஓம்புக என்னும் கூறியுள்ளதாக இருவரும் உரையாடுகின்றனர். இருவரும் இவ்வாறு சொல்லலளவில் கூறியிருப்பினும் உள்ளத்தளவில் ஒருவரையொருவர் விரும்பினர் என்று புலவர் இலக்கியத்தில் தற்சார்பின்றிப் படைத்துள்ளார். தலைவனின் மனவுணர்வு தலைவியின் மனவுணர்வு இருவரது குடும்பச்சூழல் ஆகியவற்றைத் தனித்தனியே அவரவரின் தற்சார்பின்மைக்கேற்ப விளக்கியுள்ளார்.

**தாய்மைத்தன்மை**

தாய் என்பவள் மறு உற்பத்திச் சக்தியாக எப்படி விளங்குகிறாளோ அதேபோல் இலக்கியங்களும் தன்னிலிருந்து இன்னொன்றைத் தோற்றுவிக்கவும், தோன்றவும் காரணியாக இருக்கவேண்டும். அத்தகைய இலக்கியமே காலத்தால் அழியாது. இன்றளவும் மக்களால் பயிலப்பட்டு வருகிறது. சங்க இலக்கியம் தாய்மைத்தன்மை உடையதாகத் திகழ்கின்றது.

பழந்தமிழகத்தில் ஆணும், பெண்ணும் ஒரு பண்பாட்டு ஒழுக்கநீதியில் வளர்க்கப்பட்டனர். திருமணம் ஆகாத பெண்களுக்கு அவர்தம் பெற்றோர்களால் அணியப்பெற்ற சிலம்பு 'கன்னிச்சிலம்பு' என அழைக்கப்படுகிறது. இக்கன்னிச் சிலம்பினைத் திருமணம் நிகழும் முன்னர் கழிப்பது பண்டைய மரபாகும். அதனைச் சிலம்புகழி என வழங்குவர். இதனை ஒரு விழாவாகவே பெற்றோர் கொண்டாடியுள்ளதைச் 'சிலம்பு கழிஇய செல்வம்' என்று நற்றிணை குறிப்பிடுகின்றது. இச்சடங்கின்போது மணமகள் உண்ணா நோன்பு இருத்தல் மரபாகும். தலைவி தலைவனோடு உடன்போக்குச் சென்ற நிலையில் தலைவனின் தாய் தலைவிக்குச் சிலம்புகழி நோன்பு இயற்றினாள் என்பதை

**"நும்மனைச் சிலம்பு கழிஇ அயரினும்**
**எம்மனை வதுவை நல்மணம்கழிக எனச்**
**சொல்லின் எவனோ"** **(ஐங்குறு 399:1-3)**

இப்பாடல் தலைவியின் தாய் சிலம்புகழி நோன்பு நிகழ்ச்சியைக் கண்டு வந்தவர்களிடம் புலம்புகின்றாள் என்று சுட்டுகின்றது.

**"சிறப்பும் சீரும் இன்றிச் சிறுூர்**
**ஏதில் வறுமனைச் சிலம்பு கழிஇய**
**மேயினள் கொல்லென நோவல் யானே"** **(அகம் 369: 22-26)**

என்ற பாடல் சிலம்புகழி நோன்பினைச் சிறப்பிக்கின்றது. தலைவிக்குத் தலைவனின் வீட்டில் சிலம்புகழி நோன்பு நிகழ்ச்சி நடந்தபோதிலும் தலைவியின் தாய் தன் வீட்டில் வதுவை நிகழ்த்த விரும்புவதன் மூலம் அத்தாயின் தாய்மைப் பண்பும், பண்பாடும் புலனாகின்றது.

நிலைபேறுடைய எந்தவொரு இலக்கியமும் தன்னிலிருந்து பல இலக்கியங்கள் உருவாக இடமளிக்கக்கூடியதாகத் திகழும் அந்த வகையில் சிலப்பதிகாரக் கதைமாந்தர்களாகிய கண்ணகி, கோவலன், மாதவி ஆகிய மூவரில் கோவலனுக்கும், மாதவிக்கும் பிறந்தமகள் மணிமேகலை குறித்த காப்பியத்திற்குச் சிலப்பதிகாரம் அடிப்படையாக அமைகின்றது. கதைத்தொடர்பால் இவை இரண்டும் இரட்டைக் காப்பியங்கள் என்று அழைக்கப்பெறுவதால் இவை தாய்மைத்தன்மை உடையதாகத் திகழ்கின்றது எனலாம்.

தாய்மைத்தன்மை என்பது சங்க இலக்கியத்திற்கு உரிய முதன்மைப் பண்பாகும். இலக்கிய இலக்கணத் தொடர் பாரம்பரியம் மிக்கதாக எடுத்துரைக்கின்றது. முதல் நூலுக்கான விளக்கம் தொல்காப்பியம் தருகிறது.

**"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முன்னவன் கண்டது முதல்நூல் ஆகும்"** **(தொல்.1594)**

இப்பாடலில் முன்னவன், படைப்பாளன் என இரு சொற்கள் இறைவனைச் சுட்டுவதாகக் கொள்ளப்பட்டால் இறையனார் ஆக்கிய அகப்பொருள் நூல் அசலாக நிற்கும். மேலும் பொருளிலக்கணம் பற்றிய வேறு நூல் எதுவும் கிடைக்காத நிலையில்

இயற்றப்பெற்றமையால் இதன் தாய்மைத்தன்மை வெளிப்படுத்தப்படுவதாகக் கொள்ள முடியும்.

**உயர் சிந்தனை**

பொருள் உணர்வாகிறது → உயர்வு எண்ணமாகிறது → எண்ணம் சிந்தனையாகிறது → சிந்தனை செயலாகிறது → செயல் விளைவுகளாகின்றன. விளைவுகளே வாழ்வியலாகிறது. இதில் எப்பொருள் எவ்விளைவாகிறது என்பதை வைத்துத்தான் வாழ்வியலின் பயன்பாட்டு மதிப்பீடு பயன்கொள்ளப்பெறுகிறது. இவற்றுள் உயர் வாழ்வியலைத் தரத்தக்கது உயர்சிந்தனையே ஆகும். உயர் சிந்தனையல்லாதன வாழ்வியலைத் தரலாம். அவை நல்வாழ்வியல், தீய வாழ்வியல் என்னும் இருதிறத்துள் அமையும் நல்வாழ்வியல் உயர் வாழ்வியலை நோக்கி உந்தும். ஆனால் தீய வாழ்வியல் நல்வாழ்வியலைப் பெறத் திணறும். எனவே காலம் இடம் சூழல்களால் மாறுபடாத மிகுந்த நல்விளைவுகளை உடைய சிந்தனைகளையே உயர் சிந்தனை எனலாம். உயர்சிந்தனை என்பது ஒரு வினைத்தொகைச் சொற்றொடர். அது முக்காலமும் பொருந்தும் என்பதால் எக்காலமும் பொருந்தும் எனல் திட்பமாகும் உயர்சிந்தனை என்பது உயர்த்தும் சிந்தனையாகும்.

மனிதனை நல்வழிப்படுத்துகின்ற அனைத்துக் கருத்துக்களும் உயர் சிந்தனைகளாக வைத்துப் போற்றப்படுகின்றன. ஆழமான கல்வி ஞானம் பண்பாடு விரிந்து பரந்த மனப்பான்மை ஈகை, செங்கோல் ஆட்சிமுறை, இல்வாழ்க்கைமுறை, புலால் உண்ணாமை, விருந்தோம்பல், அன்புகாட்டல், பொறாமையை ஒழித்தல், நட்புக்கொள்ளுதல், உண்மை, மன உறுதி போன்ற அறக்கருத்துக்கள் நிரம்பிய உயர் சிந்தனைகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன.

உலக உயிர்கள் அனைத்தையும் தழைத்தோங்கி வளர்க்கச்செய்வது அன்பாகும். அவ்வன்பினால் மட்டுமே நாம் எதனையும் வெற்றிகரமாகச் செய்து முடிக்க இயலும். அத்தகைய அன்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தவர் வள்ளுவப்பெருந்தகை. அன்புடைமை என்னும் ஓர் அதிகாரத்தை அமைத்துள்ளார். அன்புடையவர்கள் பொருளால் மட்டுமன்றி அவர்களுடைய உடம்பாலும் மற்றவர்களுக்குப் பயன் உடையவர்களாக இருப்பர். அன்பை அடிப்படையாகக் கொண்டதே உயிர்நிறைந்த உடம்பாகும். அன்பு மட்டும் இல்லையென்றால் இந்த உடம்பு வெறும் எலும்பின் மேல் தோலைப் போர்த்தியது போன்றதாகும் என்பதை,

**"அன்பின்வழியது உயிர்நிலை அ∴து இலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு"** **(குறள்: 150)**

என்று குறள்வழி வள்ளுவர் உயர்ந்த சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளார். உலக மானுடத்தின் உயர் சிந்தனை ஆவணங்களில் தலைமைத் தகைமை சான்றது சங்க இலக்கியம். உலக அறிஞர் பெருமக்களெல்லாம் ஒத்த கருத்தோடு சங்க இலக்கியம் சிறந்த இலக்கியம் என மதிப்பிடுவதற்குக் காரணம் இதனுள் மிகுந்திருக்கும் நிலைத்த உயர் சிந்தனையேயாகும். செம்மாந்த செம்மொழித்தமிழில் பல உயர்ந்த சிந்தனைகள், அறக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அவை எல்லா உயிர்களிடத்தும் அன்புகாட்டி இரக்கம் கொள்ளுதல், பசிப்பணி போக்குதல், தமக்கென வாழாமல் பிறருக்காக வாழுதல், வேண்டும் என்கிறது சங்க இலக்கியம்.

**"உண்டா லம்ம இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**

**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"** (புறம் :182)

**"யாதும் ஊரே; யாவரும் கேளிர்;**

**தீதும் நன்றும் பிறர்தர வாரா;"** (புறம் 192:1-2)

**"நீரின்று அமையா யாக்கைக் கெல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே!"** (புறம் 18: 18-19)

**"நல்லது செய்தல் ஆற்றி ராயினும்**

**அல்லது செய்தல் ஓம்புமின்"** (புறம் 195: 5-6)

**"உண்பது நாழி உடுப்பவை இரண்டே**

**பிறவும் எல்லாம் ஒரொக் கும்மே**

**அதனால் செல்வத்தின் பயனே ஈதல்"** (புறம் 189: 5-7)

இவ்வாறு மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத பல அரிய கருத்துக்களையும் உயர்ந்த சிந்தனைகளையும் சங்க இலக்கியங்கள் கொண்டுள்ளன. அந்த உயர்ந்த சிந்தனைகள் அனைத்தும் மனித வாழ்வில் பின்பற்றப்படுமேயானால் உலக வாழ்க்கை செழித்தோங்கி மலர்ந்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

**அமைப்பு**

சங்க இலக்கியத்தில் பாடல்கள் மூன்று அடிமுதல் எழுநூற்று எண்பத்தியிரண்டு அடிகள் கொண்டு அமைந்துள்ளன. சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 2387 ஆகும். அவற்றுள் அகப்பாடல்கள் 1877, புறப்பாடல்கள் 510, இவ்விலக்கியத்தைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 473, ஆசிரியர் பெயர் இல்லாத பாடல்கள் 10 ஆகும். இவர்களுள் பெண்பால் புலவர்கள் 30 இந்த எண்ணிக்கை குறித்து வேறுபாடுகளும் உள்ளன. சங்க இலக்கியதில் அதிகமான பாடல்களைப் பாடியவர் கபிலர் ஆவார். சங்க இலக்கியப் பாடல்கள் பாடிய அரசப்புலவர்கள் 25 பேர் ஆவார்கள். சங்க இலக்கிய நூல், பாடல்களின் எண்ணிக்கை, பாடிய புலவர், கிடைக்காத பாடல்கள் போன்றவற்றைக் கீழ்வரும் அட்டவணையின் மூலம் தெரிந்துகொள்ள முடிகிறது.

| எண் | சங்க இலக்கிய நூல் | பாடல்களின் எண்ணிக்கை | அதிகமான பாடல்கள் பாடிய புலவர்கள் | ஆசிரியர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை | கிடைக்காத பாடல்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | நற்றிணை | 401 | கபிலர் | 234 | 234 |
| 2. | குறுந்தொகை | 402 | அம்மூவனார் | 127 | --- |
| 3. | ஐங்குறுநூறு | 500 | ஓரம்போகியார் | 110 | 129, 130 |
| 4. | பதிற்றுப்பத்து | 86 | பேயனார் | 105 | 1-10,91-100 |
| 5. | பரிபாடல் | 35 | ஓதலாந்தையார் | 103 | 23-70 |
| 6. | கலித்தொகை | 150 | பரணர் | 85 | --- |
| 7. | அகநானூறு | 401 | மருதனிள நாகனார் | 70 | --- |
| 8. | புறநானூறு | 401 | பாலை பாடிய பெருங்கடுங்கோ | 68 | 267,268 |
| 9. | பத்துப்பாட்டு | 10 | ஔவையார் | 59 | --- |
| 10. | மொத்தப்பாடல்களின் எண்ணிக்கை | 2387 | | | |

சங்கப்பாடல்களில் பெரும்பாலானவை அகவல் யாப்பால் ஆனவை. கலித்தொகை கலிப்பாவால் ஆனது. மதுரைக்காஞ்சியில் வஞ்சி அடிகள் இடையிடையே வருகின்றன. வெண்பா பழக்கத்தில் இல்லை. சங்கப் பாடல்களில்

தனிச்சிறப்புச் சொற்களைச் செறிவுடன் கையாளும் நிலையைக் கூறலாம். பிற்காலச் சந்தநயமும், ஓசையும் சங்கப் பாடல்களில் இல்லை. எனினும் பரிபாடல் இசையுடன் பாடப்பட்டுள்ளது.

சங்கப் பாடல்களில் வரும் சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்கள் அதில் வடமொழிச் சொற்கள் அரிதாகக் காணப்பட்டன. சொல்லும் பொருளும் ஒன்றையொன்று தழுவிச்சென்று பொருள் முடியும் இடத்தோடு சொல்லும் முடிவது சங்க இலக்கியங்களின் தலையாய சிறப்பியல்புகளாகும்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்களில் பல்வேறு பாடல் தொகுதிகளையும், யாப்பு நலத்தையும் புலவர்களின் நிலையையும் அகம், புறம் பற்றிய விளக்கத்தையும், பல்வேறு வருணனைகளையும் உவமைகளையும் கூறும் காலக்கண்ணாடியாக உள்ளன என்பதை அறியமுடிகிறது.

## எட்டுத்தொகை

| வ. எண் | நூல்கள் | பாடல்களின் எண்ணிக்கை | கிடைக்காத பாடல்கள் | அடி அளவு | புலவர்களின் எண்ணிக்கை | பாடப்பட்ட தலைவன் | தொகுத்த காலம் | தொகுத்-தோர் | தொகுப்பித்-தோர் | பாவகை | பாடு-பொருள் | பழைய உரை | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | நற்றிணை | கடவுள் வாழ்த்து 400 | 400 | 9-12 | 175 | 44 | கி.பி.1இன் முற்பகுதி | - | பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி | - | அகம் | இல்லை | 234-ஆம் பாடல் இல்லை |
| 2. | குறுந்தொகை | கடவுள் வாழ்த்து 401 | 400 | 4-8 | 205 | 27 | கி.மு.1இன் முற்பகுதி | பூரிக்கோ | - | அகவற்பா தொகை | அகம் | இல்லை | 307, 391ஆம் பாடல்கள் இல்லை |
| 3. | ஐங்குறுநூறு | கடவுள் வாழ்த்து 500 | 498 | 3-6 | 5 | 8 | கி.மு.2இன் பிற்பகுதி | புலத்துறை முற்றிய கடலூர் கிழார் | யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை | ஆசிரியப்பா அகவற்பா | அகம் | 469க்கு உண்டு | 129, 300ஆம் பாடல்கள் இல்லை |
| 4. | அகநானூறு | கடவுள் வாழ்த்து 400 | 400 | 13-31 | 142-145 | 116 | கி.மு.1இன் முற்பகுதி | மதுரை உப்பூரிக்குடி கிழார் மகனார் உருத்திரசன்மர் | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி | - | அகம் | 1-92 வரை உண்டு | - |
| 5. | கலித்தொகை | 150 | 150 | 11-80 | 5 | - | கி.பி.1இன் முற்பகுதி | நல்லந்துவனார் | - | கலிப்பா | அகம் | நச்சர் உரை | - |
| 6. | புறநானூறு | கடவுள் வாழ்த்து 400 | 400 | 4-40 | 151-400 | 124, 160 | கி.மு.1இன் முற்பகுதி | - | - | அகவற்பா | புறம் | 1-266 வரை | 267, 268ஆம் பாடல்கள் இல்லை |
| 7. | பதிற்றுப்பத்து | 100 | 80 | 5-57 | 8 | 12 | கி.பி.2 அல்லது கி.பி.3 | - | - | அகவற்பா | புறம | உண்டு | 1-10, 91-100 பாடல்கள் இல்லை |
| 8. | பரிபாடல் | 70 | 22 | 32-140 | 13 | - | கி.பி.1இன் முற்பகுதி | - | - | பரிபாட்டு | அகமும், புறமும் | பரிமேலழகர் உரை | 48 பாடல்கள் இல்லை |

கடலாலும், கரையானாலும் தமிழ் நாகரிகத்தாலும், தமிழரின் பேணாப் பேதமையாலும் எண்ணற்ற தமிழ்நூல்கள் அழிந்துவிட்டன. எஞ்சிய பாடல்களைத் தேடித் தொகுத்துக் காக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தபோதுதான் தொகை நூல்கள் உருவாயின. சிதறிக்கிடந்த சங்கத் தனிப்பாக்கள் எல்லாம் எட்டுத்தொகைகளாகத் தொகுக்கப்பட்டன. அவை

**"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோ அகம் புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை"**[11]

என்று பழம்பாடல் ஒன்று எடுத்துக்காட்டுகிறது. இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் போன்றவை எட்டுத்தொகை நூல்களாகும். இத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்தும் அகப்பொருள் பற்றியன. புறநானூறும் பதிற்றுப்பத்தும் புறப்பொருள் பற்றிய நூல்களாகும். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு பலவகையாலும் பெரிதும் ஒப்புமையுடையன. குறுந்தொகைப் பாடல்களின் சிற்றெல்லை நான்கு அடியாகவும், பேரெல்லை எட்டு அடியாகவும் நீண்ட அடிகள் அடங்கிய நானூறு பாடல்கள் கொண்ட அகநானூற்றை, நெடுந்தொகை என்று கூறுவதுபோல் அகவற்பாவின் அமைப்பில் சுருங்கிய அடிவரையறையைக் கொண்ட பாடல் தொகுதி 'குறுந்தொகை' எனப்பெயர் பெறுவதாயிற்று. எட்டுத்தொகை நூல்களின் பெயர்களைத் தொகுத்து உரைக்கும்படியான வெண்பா இந்நூலை 'நல்லகுறுந்தொகை' என்று பாராட்டிக் கூறியிருப்பதைக் கொண்டு இதன் சிறப்பை உணரலாம்.

**நற்றிணை**

எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை நல்ல அகத்திணைப் பாடலைக் கொண்டது. நற்றிணை என்பது நல்ல திணை எனப்படுகிறது. திணை என்பது நல்ல திணை. திணை என்பது சொல்லாகு பெயராய் அகத்திணை நூலைக் குறிக்கிறது. 'திணை' என்ற சொல்லுக்குக் கொண்ட கொள்கையில் திண்மையாக நிற்பது என்று பொருள் கூறுவர். நற்றிணை என்பது நல் என்னும் அடைமொழியும் அகப்பொருள் கூறும் நூல்களுக்கு அமைந்த திணை என்னும் பெயரும் சேர்ந்து முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் அளவாக அமைந்து இன்பத்தை நல்குவதால் நற்றிணை என்று பெயரிடப்பட்டது. எட்டுத்தொகை நூல்களுக்கெல்லாம் இது முதலாவதாக அமைந்திருப்பதும் மற்ற நூல்களுக்குரிய அடைமொழி நூலின் பெயரில் இருந்து தனியாக விளங்க இந்நூலின் அடைமொழி மட்டும் நூலின் பெயரோடு பிரிக்கமுடியாவண்ணம் அமைந்திருப்பது இந்நூலின் சிறப்பு. ஐந்திணை ஒழுக்கங்களைப் பற்றிப் பாடப்பட்ட பாடல்களின் தொகுதி ஆதலால் நற்றிணை நானூறு எனப் பெயர்பெற்றது. ஐவகை நிலங்களில் வாழ்ந்த தமிழ் மக்களின் சிறந்த ஒழுக்கங்கள் பலவற்றை இந்நூலில் காணலாம். நற்றிணை பல வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கியுள்ளது. எடுத்துக்காட்டாக, பகைவன் செய்த கொடுமை உள்ளத்தைத் துன்புறுத்தத் தன் ஒரு முலையை அறுத்துக் கொண்டாள் திருமாவுண்ணி என்பதை,

**"ஏதிலாளன் கவலை கவற்ற**
**ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி"** **(நற்: 216)**

இது கண்ணகியின் வரலாற்றைக் குறிப்பது போலக் காணப்படினும் நற்றிணைப் பாடல்கள் சிலப்பதிகார காலத்திற்கு முற்பட்டவை. ஆதலால் இது சிலப்பதிகார கண்ணகியைக் குறிப்பிடவில்லை. கண்ணகி வரலாறு போன்று ஒருகதை சிலப்பதிகார காலத்திற்கு முன்பே தமிழ்நாட்டில் இருந்தது என்பதையே இப்பாடல் குறிக்கின்றது. இதனை வைத்தே சிலப்பதிகாரத்தில் கண்ணகி மதுரையை எரிப்பதற்குத் தன் முலையை அறுத்து எரிந்திருக்கலாம் என்பர். இவ்வாறு பல வரலாற்று செய்திகள் இடம்பெற்றுள்ளன.

நற்றிணை நானூறு பாடல்களைக் கொண்டது. இந்நூலிற்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கிறார். உலகத்தைப் படைத்த கடவுள் ஒருவர் உண்டு என்ற நம்பிக்கை பழங்காலத்தமிழர்க்கு உறுதியாக இருந்தது என்பதை நற்றிணையின் மூலம் உணரலாம். காட்டின் வழியாகப் பொருள்தேடச் செல்லும் தலைவனை நினைத்து உருகும் தலைவிக்குப் பாலையின் கொடிய தன்மை நினைவுக்கு வருகிறது. பாலையைப் படைத்த கடவுளே பாலை நிலத்தில் சென்று துன்புறவேண்டும் என்று தலைவி கூறுகிறாள்.

**“ஐதேகு அம்ம இவ்வுலகு படைத்தோனே”** **(நற்.: 240:1)**

என்கிறாள். இயற்கையில் தெய்வம் குடிகொண்டிருந்ததாகக் கருதினர். தெய்வம் உறைந்த பனைமரம் ஒன்று நற்றிணையில் பேசப்படுகிறது.

**“தொன்று உரை கடவுள் சேர்ந்த பராரை**
**மன்றம் பெண்ணை வாங்குமடல் குடம்பை”**

பருத்த அடியை உடைய ஊரின் நடுவில் உள்ள பனைமரம் என்பதைக் குறிப்பதற்கு ‘பராரை மன்றப் பெண்ணை’ என்ற சொற்றொடரைப் பயன்படுத்தினர். நற்றிணை உட்பட எல்லா அகம் பற்றிய பாடல்களிலும் மனிதனுடைய வாழ்வு இயற்கையைப் பின்னணியாகக் கொண்டே தீட்டப்படுகிறது. மனித வாழ்விற்கு அப்பாற்பட்டதாகவும், ஒட்டாததாகவும் இயற்கை இல்லை என்பதை அகம் பற்றிய நூல்கள் வலியுறுத்துகின்றன. இதனை அறிஞர் சங் ஷேவியர் தனிநாயக அடிகள் Nature in Ancient Tamil Poetry எனும் நூலில் வலியுறுத்தியுள்ளார்.

நறுந்தமிழ் மணம்கமழும் நற்றிணைப் பாக்களைக் கற்பனை வளமும் கருத்துச்செறிவும் கனியப் பாடியவர் 192 பேர் ஆவர். இப்புலவர்களின் வாழ்க்கை வரலாறு தெளிவாகத் தெரிந்துகொள்ள இயலாதவாறு உள்ளன. இவருள் சிலரின் இயற்பெயர் கூட அறியப்படவில்லை. பழந்தமிழ்ப் புலவர் ‘பேரும் வேண்டாப் பெரியராய்த் தம்மினும் தம் எண்ணங்களே மன்பதைக்கு வேண்டப்படுவன என்னும் வியத்தகு எண்ணத்தவராய் விளங்கினர்’. இதனால் தம் பாக்கட்குத் தம் பெயர் சூட்டாமல் மறைந்தனர். எனினும் சங்கத்துச் சான்றோர் ‘தேனூறும் தீந்தமிழ்ப்’ பாக்களை நானூறு நானூறாகத் தொகுத்த புலவர் பெருமக்கள் ஆசிரியர் அறியப்படாத அருங்கவிதைகட்கு அவற்றின் அழகிய சொற்றொடர்களை அவர்தம் பெயராக அமைத்தனர்.

நானூறு பாடல்களைக் கொண்ட நற்றிணையில் ஆசிரியர் தெரியாத பாடல்கள் 51, இந்நூலில் 98வது பாடல்கள் உக்கிரப்பெருவழுதி என்பவரால் பாடப்பட்டது. 97, 301 ஆகிய இரண்டு பாடல்கள் மாறன்வழுதி என்பவரால் பாடப்பட்டவை. இந்த நானூறு பாடல்களையும் தொகுத்தவன் பாண்டிய மன்னன் ‘பன்னாடு தந்த மாறன் வழுதி’ என்பது

அவன் பெயர் பாடல்கள் எல்லாம் ஆசிரியப்பாவால் இயன்றவை. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வாழ்ந்த பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் இதற்கு உரை வகுத்துள்ளார். 234-வது பாடல் மட்டும் கிடைக்கவில்லை. இப்பாடல்கள் திணை அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன. அவை

| திணை | பாடல்கள் |
|---|---|
| 1. குறிஞ்சித்திணை | 130 |
| 2. பாலைத்திணை | 107 |
| 3. நெய்தல்திணை | 101 |
| 4. மருதத்திணை | 33 |
| 5. முல்லைத்திணை | 28 |

இந்நூலில் குறிஞ்சிப் பாடல்களும், பாலைப்பாடல்களும் மிகுதியாக உள்ளன. அதனால் பரத்தையர் காரணமாகத் தலைவனுக்கும், தலைவிக்கும் ஏற்படும் ஊடல் குறித்த பாடல்கள் குறைவாகக் காணப்படுகின்றன. இந்நூல் பண்டைத்தமிழரின் வாழ்வியல் நெறிகளையும், பண்பாட்டினையும் எடுத்துக் காட்டுவதில் முந்தி நிற்கிறது. நற்றிணைப் பாடல்களில் அகச்சுவை நிரம்பிய பாடல்கள் மற்றும் மக்கள் அறவாழ்வு, மன்னர் கொடை, ஆட்சித்திறம், ஒருமைப்பாடு பழந்தமிழர் பழக்கவழக்கங்கள், உவமைத்திறம் உள்ளுறை உவமம் இறைச்சிப்பொருள் ஆகியவை கூறப்பட்டுள்ளன. ஐவகை நிலங்களிலே வாழ்ந்த தமிழ் மக்களின் சிறந்த ஒழுக்கங்கள் பலவற்றை இந்நூலில் காணலாம். தமிழ்ப் புலவர்களின் சிறந்த இயற்கையான கற்பனைகளையும், கவியின்பத்தையும், உயர்ந்த வாழ்க்கை அனுபவமும் விழுமிய உணர்ச்சியும் வளமான கற்பனையும் எளிமையான ஓசை இன்பமும் நல்ல அறிவுரையும் அமைந்த பாட்டுக்கள் பல இந்நூலிலே உள்ளன.

நற்றிணையின் பாடல்கள் வாழ்வியல் நிகழ்ச்சிகள் பலவற்றை ஒன்றோடு ஒன்று தொடர்புப்படுத்திப் பாடப்பட்டுள்ளன. முதல்பாடல் காதலின் சிறப்பை உணர்த்துகிறது. காதலின் காரணமாக தலைவி தலைவன் பிரிவைத் தாங்காமல் தோழியிடம் தலைவர் சொன்ன சொல்லைத் தவறாதவர் என்றும் நிலைத்த அன்பை உடையவர். எக்காலத்திலும் பிரிந்து போகமாட்டார். ‘தாமரை மலரில் தாது ஊதி’ உயர்ந்த சந்தனமரத்தில் கட்டிய இனிய தேன்கூடுபோல் தலைவனின் அன்பு உயர்ந்தது என்கிறாள். நீர் எவ்வாறு உலக வாழ்க்கைக்கு இன்றியமையாததோ அதுபோல தலைவி உயிருடன் இயங்குவதற்கு தலைவனது அருள்தோய்ந்த காதல் நெஞ்சம் இன்றியமையாதது என்பதை

**“நீர் இன்று அமையா நம் நயந்தருளி**
**நறு நுதல் பசத்தல் அஞ்சி”** **(நற்.1:6-7)**

என்கிறது. காதலினால் இயற்கையை உயிருள்ள உறவாகக் கருதுகின்றாள் காதலி. தலைவன் தன் காதலியை அவள் வீட்டுக்கருகிலுள்ள புன்னை மரத்தடியில் சந்தித்தான். அவள் இது நாங்கள் விளையாடுகிற பொழுது மறந்து போட்டுவிட்ட புன்னை விதையிலிருந்தது வளர்ந்தது. பிறகு நாங்கள் அதனைப் பாலும், தேனும் ஊற்றி வளர்த்தோம். அப்போதெல்லாம் எங்கள் தாய் உங்களை விட உங்கள் தங்கையான புன்னை மிக நல்லவள் எனப் பாராட்டுவாள். எனவே, என் உடன்பிறப்பான இப்புன்னை நிழலில் உங்களுடன் அளாவளாவ எனக்குக் கூச்சமாக இருக்கிறது. வேறு இடத்திற்குச் சென்று பேசிக்கொண்டிருப்போம் என்கிறாள். இயற்கையில் வளர்ந்த புன்னையைத் தங்கையாக நினைக்கும் உணர்வு நிலையை நற்றிணைப் பாடல்களில் காணமுடிகிறது.

**"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ்முளை அகைய**
**நெய்பெய் தீம்பால் பெபதினது வளர்ப்ப**
**நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று**
**அன்னை கூறினள் புன்னையது சிறப்பே**
**அம்ம நாணுதும் நும்மொடு நகையே"** **(நற். 172:1-6)**

என்று தலைவியின் நாணத்தைக் குறிப்பிடுகிறது. திருக்குறள் கருத்துக்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்ட இந்நூல் சார்ந்திருப்பவர் துன்பத்தைத் துடைப்பதையே அக்காலச் சான்றோர் பெரும் செல்வமாகக் கருதினர் என்பதை

**"சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே"** **(நற் : 210)**

என்ற பாடல் மூலம் அறியலாம். இந்நூல் எழுந்த காலமும் தொகுத்தகாலமும் ஒன்று என்பர். இந்நூலில் சில பாடல்கள் மாறன் வழுதி என்பவனால் பாடப்பட்டவை. இந்த உக்கிரப்பெருவழுதியும் மாறன்வழுதியும் ஒன்றா என்பது ஆராயத்தக்கது. மேலும் உக்கிரப்பெருவழுதி கடைச்சங்கக் காலத்திலிருந்தவன் என்பது கூறப்படுகிறது. இதனால் இந்நூல் தோன்றிய காலமும் கடைச்சங்கக் காலம் எனப்படுகிறது.

**குறுந்தொகை**

எட்டுத்தொகை நூல்களுள் இரண்டாவது இடம்பெறுவது குறுந்தொகை. குறைந்த அடிகளையுடைய பாடல்களைக் கொண்டதால் குறுந்தொகை என்று கூறுவர். இதை நல்ல குறுந்தொகை எனவும் அழைப்பர். சங்க இலக்கியத்தில் குறுந்தொகையும், கலித்தொகையும் தொகை என்ற பெயரால் அமைந்துள்ளன. "புறத்தே தோன்றும் காட்சிகளைச் செய்யுட்களில் புனைந்து காட்டும் ஆற்றலினும் அகத்தே தோன்றும் கருத்துக்களை உணர்ச்சியின் மெய்ப்பாடு புலப்பட உரைக்கும் ஆற்றலில் சிறந்தது குறுந்தொகை"[12] என்று உ.வே.சாமிநாதய்யர் குறிப்பிடுகிறார். இறையனார் களவியல் உரையாசிரியர் குறுந்தொகை நானூறு என்று குறிப்பிடுகிறார். "அடியளவில் குறுகிய இப்பாடல்களில் முதல் கருவைவிட உரிப்பொருளுக்குச் சிறப்பிடம் நல்கப்படுமாற்றைக் காணலாம்"[13] என்பர் வ.சுப.மாணிக்கம். இந்நூல் முழுவதும் அகத்திணைச் செய்திகள் நிறைந்துள்ளன. அடியளவால் குறுகிய பாடல்களாயினும் அரிய செய்திகள் பலவற்றை உள்ளடக்கியுள்ளது. அளவான கற்பனையையும் ஆழமான உணர்வு வெளிப்பாட்டினையும் கொண்டுள்ளது. அன்பு வாழ்க்கையின் அழியாத காட்சிகள் பலவற்றை எடுத்துக்காட்டும் எழிலோவியமாகக் குறுந்தொகை காட்சியளிக்கிறது. சிறந்த உவமைகள் இந்நூலில் அதிகமாகக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் காதலனைப் பிரிந்த தலைவிக்குப் பசலைநோய் வருகிறது. ஆனால் காதலனைக் கண்டும் பேசியும் தொட்டும் உறவாடும்போது பசலைநோய் பறந்துவிடுகிறது. இதைக்குளத்தில் உள்ள பாசிக்குத் தலைவி ஒப்பிடுகிறாள் என்பதை,

**"ஊருண் கேணி உண்துறைத் தொக்க**
**பாசி அற்றே பசலை காதலர்**
**தொடுவுழித் தொடுவுழி நீங்கி**
**விடுவிழி விடுவுழி பரத்தலானே"** **(குறுந் : 299)**

என்று குளத்துத் தண்ணீரைக் குவித்த கரங்களால் மொள்ளும்போது பாசி விலகுகிறது. கரங்களை வெளியே எடுக்கும்போது பாசி மறுபடியும் கூடிவிடுகிறது. இவ்வாறு பொருளுக்கு ஏற்ற பொருத்தமான உவமைகளைக் கையாண்டுள்ளனர். கட்டிய மனைவிக்கு அஞ்சிக்கைகட்டி வாழுகின்ற ஆடவனுக்கு ‘கையும் காலும் தூக்கத்தூக்கும் ஆடிப்பாவை’ என்று உவமை கூறப்பட்டுள்ளது. பறவை, விலங்குகளின் வாழ்க்கையைப் பின்னணியாக வைத்து ஆண்கள், பெண்கள் உள்ளத்தெழும் அக உணர்ச்சியைச் சித்தரித்துக் காட்டுவதில் இந்நூல் ஈடுஇணையற்றது. தலைவன் தலைவியுமாக வாழும் அன்பு வாழ்க்கையின் இனிய காட்சிகள் புதுக்கவிதை போன்றும் சிறுகதை போன்றும் நறுக்குத்தெறித்தாற்போல் கூறப்படுவது இப்பாடல்களின் சிறப்பைக் குறிக்கிறது. மேலும் புராணச் செய்திகள் பலவற்றை உள்ளடக்கியுள்ளது. எடுத்துக்காட்டாக,

**“கொங்கு தேர் வாழ்க்கை, அம்சிறைத் தும்பி;**
**காமம் செப்பாது, கண்டது மொழிமோ;**
**பயிலியது கெழிஇய நட்பின், மயில்இயல்,**
**செறி எயிற்று, அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோ, நீ அறியும் பூவே?”** **(குறுந் : 2)**

இப்பாடலைப்பற்றி வழங்கும் கதை ஒன்றுண்டு பாண்டிய மன்னன் ஒருநாள் தன் மனைவியுடன் சோலையில் வீற்றிருந்தான். அப்பொழுது அவன் மனைவியின் கூந்தலிலிருந்து நறுமணம் வந்தது. அது அவன் உள்ளத்தைக் கவர்ந்தது. அந்த மணத்திற்கு எந்த மலரின் மணமும் ஈடாகாது என்று எண்ணினான். தன் காதல் மிகுதியால் அந்த நறுமணம் அவள் கூந்தலின் இயற்கை மணம் என்று நினைத்தான். தன் கருத்தை அமைத்துப் பாடுவோருக்கு ஆயிரம் பொன் பரிசளிப்பதென்று முடிவுசெய்தான். தன் முடிவை அனைவருக்கும் அறிவித்தான். ஆயிரம் பொன்னடங்கிய முடிப்பைச் சங்க மண்டபத்தில் கட்டித் தொங்கவிட்டான். ‘தருமி’ என்பவன் மதுரைக் கோவிலின் அர்ச்சகன் தனக்கு அப்பொன்முடிப்பு கிடைக்கவேண்டுமென்று சொக்கநாதரை வேண்டிக்கொண்டான். மறுநாள் அவன் பூசைக்குப் போனபோது சொக்கநாதர் பீடத்திற்கு அடியிலே இப்பாடல் ஒரு ஓலையில் எழுதப்பட்டிருந்தது. தருமி இப்பாடலை எடுத்துக்கொண்டு வந்து சங்கத்தார் முன்னிலையிலே படித்தான். இப்பாடலின் கருத்தை தன் கருத்தென்று பாண்டியன் ஒப்புக்கொண்டான். புலவர்களும் பாடலைப் பாராட்டினர். தருமிக்குப் பொற்கிழி பரிசளிக்கப்பட்டது. தருமி பொற்கிழியை எடுக்கச் செல்லும்போது நக்கீரர் தடுத்தார். பாட்டிலே சொற்குற்றம் இல்லை. ஆனால் பொருட்குற்றம் உண்டு. கூந்தலுக்குச் செயற்கை மணந்தான் உண்டு இயற்கை மணம் இல்லை என்று கூறினார். தருமியால் இதற்குத் தக்க விடையறுக்க முடியவில்லை. தடுமாறினான். இறைவனை வேண்டினான். பின்னர் சொக்கநாதரே புலவர் போல் வந்து நக்கீரருடன் வாதிட்டார். கற்புடைய மகளிரின் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டென்றார். அதை மறுத்தார் நக்கீரர். அப்பொழுது சொக்கநாதர் தன் நெற்றிக்கண்ணைக் காட்டினார். ‘நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே என்று வாதிட்டார் நக்கீரர்’. உடனே சிவபெருமான் சினம்கொண்டு நக்கீரரைப் பொற்றாமரையிலே விழச்செய்தார். அதன்பிறகு நக்கீரர் சொக்கநாதரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். புராணம் தோன்றுவதற்கு முன்பே சங்க இலக்கியப் பாடல்கள் தோன்றியதால் திருவிளையாடற்புராணத்தில் இக்கதை தோன்றுவதற்கு குறுந்தொகைப் பாடல் அடிப்படையாய் இருந்திருக்கலாம்.

இந்நூலில் கடவுள் வாழ்த்து உட்பட 402 பாக்கள் உள்ளன கடவுள் வாழ்த்தை நீக்கி 401 பாக்கள் உள்ளன. இப்பாடல்களில் 307, 391 ஆகிய இருபாடல்கள் குறுந்தொகையின் அடிஎல்லையை மீறி என்பது அடிகள் பெற்றுள்ளன. 307ஆம் பாடல் எல்லா ஏடுகளிலும் ஒன்பது அடி கொண்டதாக அமைந்துள்ளனது. இப்பாடலை நீக்கினால் குறுந்தொகை 400 என்று பொருத்தமாகும் என்பர். தெ. ஞானசுந்தரம், இந்நூலின் முதல் 300 பாடல்களுக்குப் பேராசிரியரும், பின் 20 பாடல்களுக்கு நச்சினார்க்கினியரும் உரை எழுதியுள்ளனர். ஆனால் உரைகள் கிடைக்கவில்லை. தற்போது நூல் முழுமைக்கும் உ.வே. சாமிநாத ஐயர் எழுதியுள்ள உரை கிடைக்கிறது. இந்நூலைத் தொகுப்பித்தவர் யாரென்று தெரியவில்லை. தொகுத்தவர் பூரிக்கோ என்பவர் இவரைப்பற்றி வரலாறு ஒன்றும் அறியப்படவில்லை. 'கோ' என்பதனால் இவர் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்திருக்கலாம். இந்நூல் அகப்பொருளைப் பற்றி குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணை ஒழுக்கம் பற்றிய பாடல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

| திணை | பாடல்கள் |
|---|---|
| 1. குறிஞ்சித்திணை | 77 |
| 2. நெய்தல்திணை | 30 |
| 3. பாலைத்திணை | 41 |
| 4. மருதத்திணை | 29 |
| 5. முல்லைத்திணை | 22 |

இப்பாடல்களோடு மற்றப்பாடல்கள் எந்த வரிசை முறையுமின்றி எல்லாத்துறைப்பாடல்களும் கலந்து காணப்படுகின்றன.

குறுந்தொகைக்குப் பாரதம்பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்தாக முருகப்பெருமானை முன்னிலைப்படுத்திப் பாடியுள்ளார். அன்பால் நினைப்பவர்க்கு வேண்டிய அருள்புரியும் அருமுகக்கடவுள் ஐவகை நிலத்தில் வாழும் மக்களுக்கு அருள்புரிவதை

**"தாமரை புரையும் காமர் சேவடிப்**
**பவழத் தன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றால் உலகே"** **(குறுந்: கடவுள் வாழ்த்து ப-1)**

என்று முருகப்பெருமானுடைய திருவடி, நிறம், ஒளி, ஆடை, வேல், சேவற்கொடி என்னும் இவை ஆறும் வாழ்வின் பொருளோடு பொருந்துவதாகக் கூறப்பட்டுள்ளது. இந்நூல் நானிலத்து ஐந்திணை ஒழுக்கமும் கூறப்படுதலின் அகப்பொருளைத் தன்னுள் கொண்டுள்ளது. 'தாமரை புரையும் காமர் சேவடி' என்றமையால் மருதநிலத்துக் கருப்பொருளாகிய தாமரையும் 'பவழத்தன்ன மேனி' என்றமையால் நெய்தல் நிலத்துக் கருப்பொருளாகிய பவழமும் 'குன்றி ஏய்க்கும் உடுக்கை' என்றமையால் முல்லை நிலத்துக் கருப்பொருளாகிய குன்றி மணிக்கொடியும் 'குன்றின் நெஞ்சுபக எறிந்த' என்றமையால் குறிஞ்சி நிலத்துக்குரிய மலையும் கூறப்பட்டுள்ளன. இவற்றால் மக்களுக்கு அன்பின் ஐந்திணை ஒழுக்கம் கூறப்பட்டுள்ளது. நெடுவேலைக் கொண்ட முருகக்கடவுள் காத்து வருதலால் இவ்வுலக நிகழ்ச்சிகள் இடையூறின்றி நடைபெற்று வருகிறது. இந்நூல்

களவும், கற்புமாகிய இருவகை ஒழுகலாறுகளை விளக்கும் அகநூலாகையால் அவ்விருவகை ஒழுக்கத்தையும், உலகிற்குக் காட்டிய முருகப்பெருமானை ஆசிரியர் நூலின் முதலில் வைத்துப் போற்றியுள்ளார்.

சங்க இலக்கிய குறுந்தொகைப் பாடல்களை மொத்தம் 205 புலவர்கள் பாடியுள்ளனர். சங்ககாலத்து வாழ்ந்த புலவர்கள் ஓர் இனத்தவரோ, ஓரிடத்தவரோ, ஒரு காலத்தவரோ இல்லை. எனினும் அவர்கள் தம்முள் எத்தகைய வேறுபாடும் கருதாது தமிழ்மொழியை நன்குப் பேணி வளர்த்தனர். “சங்ககால புலவர்கள் அகம்பாடினாலும், புறம்பாடினாலும் செடி, கொடி, மரம், பறவை, விலங்கு முதலியவற்றின் இயற்கைகளை மனித இயற்கையாக உள்ளுறுத்திப் பாடுவர். ஏதோ தாமரையும், புன்னையையும் பாட்டாங்கு பாடுகின்றனர் என்று கொண்டு நுனிப்புல்லான ஒரு செய்யுள் என எண்ணிவிடக்கூடாது. வெள்ளியில் நாணயம் போல் இயற்கைப் புனைவில் மனிதப்பினைவு உயிரோடிக் கிடக்கின்றது”[14] என்கிறார் வ.சுப.மாணிக்கம். சங்கப்புலவர்கள் சிறப்பான மொழி நடையோடும் உள்ளுறை உவமையோடும் அழகுபடக்கூறி அகத்தையும், புறத்தையும் பாடியுள்ளனர்.

அக்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் கல்வியில் மட்டுமில்லாமல் வீரத்திலும் சிறந்தவர்களைப்போல் உணர்வோடு பாடல்களை இயற்றியுள்ளனர்.




என்று வகைப்படுத்தப்பட்டுள்ளனர். அக்காலத்தே ஆடவரேயன்றிப் பெண்டிரும் கல்வியில் சிறந்த கவிதைகள் இயற்றும் அளவிற்குப் புலமை பெற்று விளங்கினர். ஔவையார், வெள்ளிவீதியார், ஆதிமந்தியார், பாரிமகளிர், காக்கைப்பாடினியார், நச்செள்ளையார், பொன்முடியார் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். சங்ககாலத்தில் ஆணுக்குப்பெண் அறிவாற்றலாலும் நிகரானவர் என்பதை விளக்கும் பொருட்டு முப்பதுக்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் முன்னிலையில் வீற்றிருந்தனர். இவற்றுள் சில புலவர்கள் பாடல்

உவமை இவற்றால் பெயர் பெற்றுள்ளனர். சாதி, ஊர், தொழில், உறுப்புக்குறை முதலியவை சில புலவர்களின் பெயர்கள் மூலம் தெரியவருகிறது.

சங்கப்புலவர்கள் குறுந்தொகையில் பொருளுக்கு ஏற்ற பொருத்தமான உவமைகளைக் கையாண்டுள்ளனர். சிறந்த உவமையைக் கூறிப்பாடல்களை இயற்றியமையால் உவமையால் பெயர்பெற்றனர். "பொருத்தமான உவமைகளை எடுத்துக் காட்டுவதில் தமிழ்ப்புலவர்கள் தலைசிறந்தவர்கள் உவமைகளின் மூலம் உண்மைகளை விளக்குவதற்கு ஆற்றல் வேண்டும். இத்தகைய திறமைசாலிகள் உதாரணங்களைத் தேடுவதற்கு அங்குமிங்கும் அலையமாட்டார்கள். உவமைகள் தாமாகவே அவர்கள் கண்முன்னே வந்து நடமாடும்" என்கிறார் தமிழறிஞர் சாமிசிதம்பரனார். உவமையால் மட்டுமன்றிப் பாடலின் தொடராலும் பெயர்பெற்றவர்கள் இருந்தனர். இவர்களின் பெயர் அறியாத முடியாத காரணத்தினால் பாடலின் தொடரால் பெயர்பெற்றனர். தமிழகத்தின் தங்க காலமாகிய சங்க காலத்தில் புலவர்கள் சிறந்த ஆற்றலை உடையவர்களாக இருந்தனர்.

இந்நூல் முழுவதும் அகத்திணைச் செய்திகள் வாழ்வியல் நிகழ்ச்சிகளாகக் கூறப்பட்டுள்ளன. காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுப்படும் இன்பமும் அவ்வின்பத்திற்கு இடையூறாய் இருப்பனவும், காதல் வெற்றியும் இல்லற ஒழுக்கமும், தலைவன் தலைவியரிடையே பிரிவு ஆற்றியிருத்தலும் பிரிவில் துயரமுறுதலும், ஊடலும், கூடலும் ஆடவர் மகளிர் மனவுறுதியையும் இந்நூல் சிறப்பாகக் காட்டுகிறது. அகவாழ்க்கையின் காதல் நிகழ்ச்சியான "யாயும் ஞாயும் யாராகியரோ" எனத் தொடங்கும் பாடல் உலகக் காதலின் உச்சநிலையைக் காட்டுகிறது. காதலர் எந்த நாட்டினராகவும், எந்தமொழி பேசுபவர்களாகவும் இருந்தாலும் அவர்களுக்கு இப்பாடல் பொருந்துமாறு அமைந்துள்ளது.

**"யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடைய நெஞ்சம் தாம்கலந்தனவே"** **(குறுந் : 40)**

என்கிறது. காதல் என்பது இப்பிறவி மட்டுமல்லாது மறுபிறப்பிலும் தொடரும் என்பதையும் மறுபிறப்பு உண்டு என்ற நம்பிக்கையையும் வலியுறுத்துகிறது குறுந்தொகைப்பாடல்.

**"இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீஆகி யார்என் கணவனை**
**யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே"** **(குறுந் : 49: 3-5)**

இப்பிறவி மட்டுமல்லாமல் மறுபிறப்பிலும் காதலர் இருவரும் கணவன் மனைவியாக வாழவிரும்புவதைக் காட்டுகிறது. புதுக்குடித்தனம் போன தம்பதியினரின் தனிக்குடித்தன வாழ்க்கையின் அழகையும், அருமையையும் சுவைபடக் காட்டுகிறது. குறுந்தொகைப்பாடல்,

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்**
**குவளை உண்கண் குய்ப்புகை கமழத்**
**தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"** **(குறுந் : 167)**

திருமணமான புதிதில் தலைவி தலைவனுக்குத் தானே உணவு சமைத்துப் பரிமாறுகிறாள். அனுபவக் குறைவாலும், விரைவாகச் செய்ய வேண்டும் என்பதாலும் சேலையில் கையைத் துடைத்துக் கொண்டு கண்களில் புகைபடிய அவள் சமைக்கும் அழகே அவளுக்கு சமையலில் பழக்கமில்லை என்பதைக் காட்டுகிறது. இருந்தும் மனைவி முயன்று தன் அன்பை முழுவதும் கொட்டிச் செய்த மோர்க்குழம்பைத் தலைவன் புன்னகை பூக்க இனிது இனிது என்று உண்கின்றான். இதனால் இருவரின் இல்லறவாழ்வின் இனிமையையும், அன்பையும் உணரமுடிகிறது. இல்லற வாழ்வில் இணைந்த ஆண்களுக்கும், பெண்களுக்கும் அது உயிராக அமைகிறது என்பதை

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"** **(குறுந் 135: 1-2)**

என்ற பாடல் ஆண்களுக்கு அவர்கள் மேற்கொண்ட கருமமே உயிராக அமைகிறது. ஆனால் இல்லத்திலிருக்கும் பெண்களுக்கு அவர்கள் கணவரே உயிராக அமைகின்றனர். இவ்வாறு வினையே உயிராகக் கருதி வாழும் தலைவன் முன்னோர் வைத்துச் சென்ற செல்வத்தை எண்ணமாட்டான். தன் உழைப்பில் வாழ நினைப்பான். முன்னோர் விட்டுச்சென்ற சொத்தில் வாழ்வதை இளிவாகக் கருதினர். இதனை,

**"உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவுஎன"** **(குறுந் 283: 1-2)**

என்கிறது. இவ்வாறு குறுந்தொகைப் பாடல்கள் தமிழரது சிறந்த வாழ்வியல் பண்பைப் பெருமைப்படுத்துகிறது. இத்தொகை நூல் எழுந்த காலம் தொல்காப்பிய உரைகாரராகிய பேராசிரியர் குறுந்தொகைக்கு உரை வகுத்துள்ளமையால் அவர் காலமாகிய 14-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்றும் இளம்பூரணரும் குறுந்தொகைப் பாடல்களை மேற்கோளாக எடுத்தாளுதலின் அவர் காலமாகிய 12-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்றும் அறியப்பட்டுள்ளது.

**ஐங்குறுநூறு**

மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற திணைகளையும் திணைக்கு நூறுபாடல்களாக ஐநூறு பாடல்களைக் கொண்டது. ஐங்குறுநூறு இந்நூல் அமைந்த பாடல்கள் ஒவ்வொன்றும் குறைந்த அடிகளையுடைய பாக்களால் ஆனதால் இந்நூல் ஐங்குறுநூறு என்று பெயர் பெற்றது. இந்நூல் முழுவதும் அகவற்பாக்களால் ஆனது. சங்ககாலச் சூழ்நிலையில் பொங்கியெழுந்த நூல் ஐங்குறுநூறு. இஃது எட்டுத்தொகையுள் ஒன்று அகன் ஐந்திணையைக் கூறுவது. உரை ஆசிரியர்களால் நன்கு மதிக்கப்பட்டு மேற்கோளாக எடுத்தாளப்பட்டது. "ஒரே பொருளை வேறு வேறு முறைகளில் சுவைகுறையா வண்ணம் எப்படி எப்படிச் சொல்லமுடியும் என்பதற்கு ஐங்குறுநூற்றுப் பாடல்கள் எடுத்துக்காட்டு இலக்கியமாக விளங்குகின்றன"[15] என்று இரா. தண்டாயுதம் குறிப்பிடுகிறார். இன்னின்னார் இன்னின்ன பொருள்களில் பாடவேண்டும் என்ற நெறிமுறை சார்ந்த அமைப்பில் பாடல்கள் இயற்றும் பாங்கினை ஐங்குறுநூற்றில் காணமுடிகிறது. இத்தகு அமைப்புமுறை சங்கம் என்றதொரு அமைப்பு இருந்ததை வலியுறுத்துகிறது. மிகச்சுருக்கமாக இக்கால ஹைக்கூ கவிதைகள் போல சொல்ல வேண்டியதை மட்டும் சொல்லக்கூடிய திறம் பெற்ற பாடல்களாக இவை அமைந்துள்ளன.

**“அவரோ வாரார் தான்வந் தன்றே**
**குயிற்பெடை இன்குரல் அகவ**
**அயிர்க் கேழ் நுண்அறல் நுடங்கும் பொழுதே”** **(ஐங்.: 341)**

தலைவி உணர்த்த விரும்புவது இதுதான் இளவேனிற்காலத்தில் வருவேன் என்று சொல்லித் தலைவன் பிரிந்து சென்றான். இளவேனிற் காலமும் வந்தது. ஆனால் தலைவன் இன்னும் வரவில்லை. இளவேனில் வந்ததைத் தெரிவிக்கும் அடையாளங்களாகக் குயிலின் குரலும் தென்றல் ஆற்றுநீரை அலைத்தால் வரிவரியாக ஏற்படுகின்ற வண்டல்மண் ஒழுங்கும் வந்துவிட்டன. ஆனால் தலைவன் வரும் சுவடு தெரியவில்லை. இவ்வாறு பத்துப்பாடல்களிலும் சொல்லாது சென்ற இளவேனில் வந்துவிட்டதையும், சொல்லிச்சென்ற தலைவன் வராததையும் எண்ணித்தலைவி வருந்திப் பாடுவதற்கான அமைப்பினைக் காணமுடியும். இதேபோக்கில் அமைந்த பாடல்கள்

**“அவரோ வாரார் தான்வந் தன்றே**
**சுரும்பு களித்து ஆலும் இருஞ்சினைக்**
**கருங்கால் நுண்வங் கமழும் பொழுதே”** **(ஐங்.: 342)**
**“அவரோ வாரார் தான்வந் தன்றே**

**திணிநிலைக் கோங்கம் பயந்த**
**அணிமிகு கொழுமதை உடையும் பொழுதே”** **(ஐங்: 343)**

இந்த அமைப்பிலேயே ஒவ்வொரு பத்தின் பாடல்களும் அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் பத்துப்பத்துப்பாடல்களாக அமைந்த அகநூல் ஐங்குறுநூறு. ஒவ்வொரு திணைப்பாடல்களும் பத்துப்பத்துப்பாடல்களாகப் பகுத்துப் பாடப்பெற்றுள்ளன. இந்நூலில் உள்ள பாடல்கள் மூன்று அடிச்சிற்றெல்லையும் ஆறடிப் பேரெல்லையும் கொண்டு ஐந்நூறு பாடல்களாக அமைந்துள்ளன. இவற்றில் 129, 130 இரு பாடல்களின் மூலம் கிடைக்கவில்லை. இந்நூலில் திணைவாரியாகப் பாக்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவை அடியளவால் குறைந்தாலும் சொற்சுவையும், பொருட்சுவையும் பெருகிக் காணப்படும் பாடல்களைக் கொண்டது. இந்நூலில் கருத்தாழம் மிக்க உவமை, உள்ளுறை, இறைச்சி என்னும் புலப்பாட்டு உத்திகளை மிகத் திறமையாகப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு பத்துப்பாடல்களுக்கும் ஒரு பெயர் உள்ளது. இப்பெயர் பொருளமைப்பினாலோ அல்லது பாட்டில் சிறப்பாக அமைந்த ஏதேனும் ஒரு சொல்லினாலோ இப்பெயர் வழங்கப்படும் ‘தோழி வற்புறுத்த பத்து’ ‘மஞ்ஞைப்பத்து’ என்பன போன்று வரும். எடுத்துக்காட்டாக,

**I. மருதத்திணையிலுள்ள நூறுபாடல்கள்**

1. வேட்கைப்பத்து
2. வேழப்பத்து
3. கள்வன் பத்து
4. தோழிக்கு உரைத்த பத்து
5. புலவிப்பத்து
6. தோழிக்கூற்றுப்பத்து
7. கிழத்திக் கூற்றுப்பத்து
8. புனலாட்டுப் பத்து
9. புலவி விராய பத்து
10. எருமை பத்து

**II. நெய்தல் திணையிலுள்ள நூறுபாடல்கள்**

1. தாய்க்கு உரைத்த பத்து
2. தோழிக்கு உரைத்த பத்து
3. கிழவற்கு உரைத்த பத்து
4. பாணர்க்கு உரைத்த பத்து
5. ஞாழற் பத்து
6. வெள்ளாங் குருகுப்பத்து
7. சிறுவெண் காக்கைப்பத்து
8. தொண்டிப்பத்து
9. நெய்தற்பத்து
10. வளைப்பத்து

**III. குறிஞ்சித் திணையிலுள்ள நூறுபாடல்கள்**

1. அன்னாய்வாழிப் பத்து
2. அன்னாய்ப் பத்து
3. அம்ம வாழிப் பத்து
4. தெய்யோப் பத்து
5. வெறிப்பத்து
6. குன்றக் குரவன் பத்து
7. கேழற்பத்து
8. குரக்குப்பத்து
9. கிள்ளைப்பத்து
10. மஞ்ஞைப் பத்து

**IV. பாலைத் திணையிலுள்ள நூறுபாடல்கள்**

1. செலவு அழுங்குவித்த பத்து

2. செலவுப் பத்து
3. இடைச்சுரப் பத்து
4. தலைவி இரங்கு பத்து
5. இளவேனிற் பத்து
6. வரவுரைத்த பத்து
7. முன்னிலைப் பத்து
8. மகட் போக்கியவழித் தாய்இரங்கு பத்து
9. உடன்போக்கின் கண் இடைச்சுரத்து உரைத்த பத்து
10. மறுதரவுப்பத்து

**V. முல்லைத் திணையிலுள்ள நூறுபாடல்கள்**

1. செவிலி கூற்றுப் பத்து
2. கிழவன் பருவம் பாராட்டும் பத்து
3. விரவுப்பத்து
4. புறவணிப் பத்து
5. பாசறைப் பத்து
6. பருவங்கண்டு கிழத்தி உரைத்த பத்து
7. தோழி வற்புறுத்த பத்து
8. பாணன் பத்து
9. தேர்வியங் கொண்ட பத்து
10. வரவுச் சிறப்பு உரைத்த பத்து

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை எனச் சொல்லிய முறையால் சொல்லவும் படுமே எனும் இலக்கண விதியினை ஒதுக்கி மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என முறைப்படுத்தி ஒவ்வொரு தலைப்புக்கும் பத்துப்பாடல்களாக அதேபோல் திணைக்கு நூறு பாடல்களாக ஐந்திணைகளைக் கொண்டு அமைந்துள்ளது.

ஐந்து திணைகளுக்குரிய ஐநூறு பாடல்களுடன் இந்நூலில் கடவுள் வாழ்த்து சேர்த்து 501 பாடல்கள் உள்ளன. இதனைப்பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். நூலின் பிற பாடல்களின் அளவினைக் குறிப்பாகச் சுட்டும்வகையில் மூன்று அடிகளால் அமைந்த இப்பாடலில் சிவபெருமான் வணக்கம் பாடப்பட்டுள்ளது. அவை,

**“நீலமேனி வாழிலை பாகத்து**
**ஒருவன் இருதாள் நிழற்கீழ்**
**மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே”   (ஐங்கடவுள் வாழ்த்து ப-1)**

என்பதாகும். ஈழ நாட்டுச் சான்றோர் ஒருவர் இந்நூலிற்குச் சுருக்கமானதோர் உரை வகுத்துள்ளார். அப்புலமைச் சான்றோர் இவ்வாழ்த்தினை ஏற்புடையக் கடவுள் வாழ்த்து என்று குறித்துள்ளார். மனமொத்த ஆணும், பெண்ணும் ஒருயிரும் ஈருடலுமாய் வாழ்வது

பற்றியது அகத்திணை இலக்கியமாதலின் சிவபெருமானைப் பற்றிய வாழ்த்தினை அமைத்தார் பெருந்தேவனார். இதனைக் கல்லாடத்திலே வரும் ஒரு விழுமிய பகுதியால் விளக்கியுள்ளார்.

**“................................ தழைத்தெழு**
**தாளியும் கொன்றையும் தழைத்தலின் முல்லையும்**
**பாந்தளும் தரக்கும் பயிறலின் குறிஞ்சியும்**
**முடைத்தலை எரிபொரி யுடைமையின் பாலையும்**
**மாமையும் சலமும் மேவலின் மருதமும்**
**கடுவும் சங்கமும் ஒளிர்தலின் நெய்தலும்**
**ஆகத் தனது பேரருள் மேனியில்**
**திணையைந் தமைந்த இணையிலி நாயகன்”**

என்று நீல நிறமான திருமேனியையும், தூய அணிகலன்களையும் உடைய சிவபெருமான் பார்வதி தேவிக்கு இடப்பாகத்தில் இடங்கொடுத்தது ஆணும், பெண்ணும் சமமாக இவ்வுலகில் வாழ்வதைக் குறிக்கிறது. மேலும் சிவபெருமானின் பாதங்களின்கீழ் மூவகை உலகங்களான விண்ணும், மண்ணும் பாதாளமும் அடங்கும்படிதன் கரங்களினால் உலகை தோற்றுவித்துக் காத்துவரும் இறைவனின் பாதங்களை இடையறாது பணிந்து வாழ்வது மக்களின் கடன் என்பது இதனால் வலியுறுத்தப்படுகிறது.

சங்கப்புலவர்கள் பயன்படுத்திய சொற்களில் இயற்கை எழிலையும் உயிரினங்களின் வாழ்வியலுடன் உணர்வுகளையும் தெளிவிவாகப் படம்பிடித்துக் காட்ட வல்லவர்கள் என்பதற்கு ஐங்குறுநூற்றுப்பாடல்கள் எடுத்துக்காட்டு இலக்கியமாக விளங்குகிறது. அழகும், செறிவும் நிறைந்த இந்நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர்க்கிழார் என்ற புலவர். தொகுப்பித்தோன் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற சேர அரசன் இவ்விருவரும் சிறந்த நண்பர்கள் இம்மன்னனுடைய தூண்டுதலே இந்நூல் உருவாகக் காரணமாயிற்று என்பர். கூடலூர்க்கிழார் புலத்துறை முற்றியவராக இருந்தும் ஐங்குறுநூற்றின் பாடல்களை இயற்றும் பணியைச் செம்மையாக செய்ய வேண்டும் என்பதற்காக ஐந்து திணைகளுக்கும் ஐந்து புலவர்கள் வீதம் பிரித்து ஒவ்வொரு திணையையும் சிறப்பாகப் பாடவேண்டும் என்ற நோக்கத்துடன் ஐந்து புலவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம் சென்று தம் கருத்தினைக்கூறி அவர்களாலேயே தனித்தனி நூறுநூறு பாடலாகப் பாடவைத்து அவற்றை ஒருங்கே தொகுத்து ஐங்குறுநூறு எனப்பெயரிட்டு மன்னருக்கு வழங்கி மகிழ்வித்தார். ஐந்திணையை ஐந்து புலவர்கள் பாடினர் என்பதை,

**“மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்,**
**கருதும் குறிஞ்சி கபிலன் - கருதிய**
**பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே**

**நூலையோ தைங்குறு நூறு”**16

எனப் பழைய வெண்பா குறிப்பிடுகிறது.

| திணை | பாடியவர்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 1. மருதம் | ஓரம்போகியார் | 100 |
| 2. நெய்தல் | அம்மூவனார் | 100 |
| 3. குறிஞ்சி | கபிலர் | 100 |
| 4. பாலை | ஓதலாந்தையார் | 100 |
| 5. முல்லை | பேயனார் | 100 |

எனத்திணைக்கு நூறு பாடல்களாக ஐந்து புலவர்களால் ஐநூறு பாடல்கள் பாடப்பட்டன. அவற்றில் ஓரம்போகியார் மருதத்திணையைப் பத்துப்பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் வீதம் பாடியுள்ளார். இவர்தம் பாடலில் ஆதன் அவினி என்னும் சேரமானையும் சோழன் கடுமான் கிள்ளியையும் பாண்டியனையும் “விராஅன் மத்தி’ என்னும் குறுநிலத்தலைவர்களையும் குறிப்பிட்டுள்ளார். இவரது பாடல்களால் காவிரியாற்றையும் வையையாற்றையும் குறிப்பிடுவார். இவர் முதன் முதலாக இந்திர விழாவைப்பற்றிப் பேசுகின்றார். தைத்திங்களில் நிகழும் நோன்பு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அரசர்களின் செயல்கள் பற்றி அகத்திணைகளில் பேசுவது அக்கால மரபு. எனினும் அகத்திணைகளில் ஒரு மன்னனை வாழ்த்தும் மரபு இவரிடம் மட்டுமே காணப்படுகிறது. ‘விளைக வயலே’ ‘வருக இரவலர்’ ‘பால்பல ஊறுக’ ‘பகடுபல சிறக்க’ என்பன உலக நன்மைகள் குறித்து வேண்டுவது இவரிடம் மட்டுமே காணப்படும் புதுமையான பொதுநலன் சிந்தனை.

அம்மூவனார் நெய்தல்திணையைப் பத்துப் பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் வீதம் பாடியுள்ளார். இவர் மேலைக் கடற்கரையைச் சேர்ந்த சேர நாட்டில் தோன்றியவர். சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய தொண்டி நகரமும் அந்நாட்டு அகநகராகிய மாந்தையும் பாண்டி நாட்டுத் துறைமுகப்பட்டினமாகிய கொற்கையும் நடுநாட்டுத் திருக்கோவிலூரும் பெண்ணையாறும் இவரால் இடப்பட்டிருக்கின்றன. இதனால் இவர் சேரபாண்டியராகிய இருமுடி வேந்தராலும் மலையமான் திருமுடிக்காரி என்ற வள்ளல் பெருமானாலும் ஆதரிக்கப் பெற்றார். இவர்காலத்தில் வணிகத்தில் நெல்லும் உப்பும் ஒரே விலைக்கு விற்கப்பட்ட வரலாற்றை இவர் பாடிய (அகம் 140, 399) இரு பாடலால் அறியமுடிகிறது. பெண்ணுக்குப் பரிசும் கொடுத்தால் பற்றியும் (ஐங் 147, அகம் 250) இவரது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

கபிலர் குறிஞ்சித் திணையைப் பத்துப்பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் வீதம் பாடியுள்ளார். ‘சாங்கிய’ நெறியை நிறுவிய கபிலரின் நினைவாக

இப்புலவா்க்குக் கபிலா் என்னும் பெயா் வந்தது. என்றும் அது வடமொழிப்பெயா் என்றும் சங்ககாலச் சிறப்புச் பெயா்கள் என்னும் நூல் கூறுகிறது. கபிலா், பாாியின் உயிர்த்தோழர், பாாி வாழ்ந்த காலத்தில் பறம்பு மலையிலும், பின்னா்ச் சேர வேந்தன் செல்வக்கடுங்கோ வாழியாதனின் மலைநாட்டிலும் வாழ்ந்தவா். மலையமானது முள்ளூா் மலையும், கொல்லி மலையும் அவா் பழகிய மலைப் பகுதிகள் கபிலாின் வாழ்க்கைச் சூழல்தான் குறிஞ்சிப் திணைப் பாடல்களைப் பாடிக் ‘குறிஞ்சிக்கபிலா்’ எனப்பெயா்பெறக் காரணமாயிருந்தது. இப்புலவா் நல்லிசைப் புலவா் பலராலும் மதிக்கப்பட்டவா். இவருடைய சான்றாண்மை கீா்த்தி, கல்வி, தூய்மை முதலியவற்றைப் பலபுலவா்கள் பாராட்டியுள்ளனா். இவ்வாறு புலவா் பலரும் போற்றும் நிலையில் வாழ்ந்தமையின் இவா் புலவருள் சிறந்த புலவராய்த் விளங்கினாா். இவா் அகுதை, இருங்கோள் ஒாி, சேரமான், செல்வக்கடுங்கோ, வாழியாதன், நள்ளிபாண்டியன், மலையமான், திருமுடிக்காாி, விச்சிக்கோ, வேள் பாாி, வையாவிக்கோப்பெரும் பேகன், மலையன் என்னும் புரவலா்களைப் பாடியுள்ளாா். இவா் பாடல்களில் அயிரை மலை, கொல்லிமலை, பரம்புமலை, முள்ளூா்மலை, முதலிய மலைகளும் பறம்புநாடு, கொடுமணம் முள்ளூா் பந்தா் முதலிய இடங்களும் குறிப்பிடப்படுகின்றன.

ஓதலாந்தையாா் பாலைத்திணையைப் பத்துப் பிாிவுகளாகப் பிாித்து ஒவ்வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் வீதம் பாடியுள்ளாா். ‘ஓதல்’ என்பதுஇவா் பிறந்த ஊாின் பெயா் ஆதன் தந்தை என்னும் தொடா் ஆந்தை என மருவிற்று என்பா். ஓதல் ஆந்தையாா் என்பதற்கு ஓதுவதையே தொழிலாகக் கொண்ட ஆந்தையாா் என்பது பொருள். ‘ஓதல்’ என்னும் ஊா் மேற்கு கடற்கரையில் குட்டநாட்டில் உள்ளதென்றும் அது இக்காலத்தில் ‘ஓதலூா்’ என்றும் வழங்கப்படுகிறது. இவா்பாலை நிலத்து மக்களின் பண்பாடுகளை நன்றாக அறிந்து பாலையைப் பற்றிப் பாடுவதிலே வல்லவராகப் திகழ்ந்துள்ளாா். இவா் பாடல்களில் உடன்போக்குத் துறைகளைச் சிறப்பாக உணா்த்துகின்றாா். உடன்போக்கில் உள்ளத்துயா் உண்டு என்பதைத் தெளிவுப்படுத்துகிறாா். இக்களவுப்பாலையையும் கற்புபாலையையும் அறமும்திறமும் பொருந்தப்பாடிய ஓதலாந்தையாா் சிறந்த பாலைப்புலவா் ஆவாா். இவா் தம் பாடலைக் கற்ற மக்களுக்கு அகத்திணையின் இலக்கிய வளத்தில் ஐயந்தோன்றாது மரபு நிலை திாியாமல் அகத்துறைகளைப் படைக்கலாம் பாடலாம் என்ற புத்தாற்றல் தோன்றும்.

பேயனாா் முல்லைத்திணையைப் பத்துப்பிாிவுகளாகப் பிாித்து ஒவ்வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் வீதம் பாடியுள்ளாா். இவா் பெயா் பேயன், பேயாா், பேயனாா் என்று வழங்குகின்றது. பேயன் என்பது சிவபெருமானுக்குாிய பெயா்களில் ஒன்று. பேய்கள் வாழும் சுடுகாட்டில் இருப்பவன், பேய்களைப் படைகளாகப் கொண்டவன் ஆகையால் பேயன் என்று சிவனை அழைப்பா். இத்தகைய சிவபெருமான் பெயரையே இப்புலவரும்

பெற்றிருந்தார் என்று கருதலாம். முல்லை நிலமக்களின் பழக்கவழக்கங்களை நன்றாக அறிந்து அந்நிலமக்களுடன் பழகி முல்லைத்திணைப் பாடியதால் முல்லைக்குச் சிறப்புப் பெற்றவர். இவருடைய பாடல்கள் மிகவும் இனிமையாகவும் ஆழம் உடையனவாகவும் உள்ளன.

இவ்வாறு ஐந்து புலவர்கள் பாடிய ஐந்திணைப் பாடல்களும் ஐங்குநுறூறு எனப்பட்டது. ஐங்குறுநூற்றிலுள்ள புலவர்கள் பத்துப்பத்தாகப் பாடிய முறையைப் பின் பற்றித் திருவள்ளுவரும் திருக்குறளில் பத்தாக முறை வைத்துப் பாடியுள்ளார். பின்வந்த நாயன்மார்களும் பிறரும் இந்நூலைப் பின்பற்றிப் பதிகம் பாடத் தொடங்கினார்.

இப்பாடல்களில் உவமை, உள்ளுறை, இறைச்சி, என்னும் புலப்பாட்டு உத்திகளை மிகத் திறமையாகப் புலவர்கள் கையாண்டுள்ளனர். அவற்றில் உள்ளுறை சிறப்புப் பெற்று விளங்குகிறது. என்பதை

**“பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்**
**கழனி ஊரன் மார்பு**
**பழனம் ஆகற்க என வேட்டேமே”** **(குறுந் 4:4-6)**

இவ்வாறு பூத்த கரும்பில் காய்த்த நெல்லில் கழனியூரன் என்ற வருணனையிலும் கண்ணுக்கு அழகாக நாவிற்குச் சுவையாக இருக்கும் கரும்புபோலப் புலனுக்கு விருந்தாகப் பொழுதிற்குத் துணையாக மட்டும் அமைவாள் பரத்தை. ஆனால் இல் வாழும் மனைவியோ உண்ணும் உணவாக உயிர்க்குத் துணையாகப் பயன்படும் கழனி நெல்போல் விளங்குவாள். பூப்பதோடு நின்று விடுவது கரும்பு. பூப்பதோடு நில்லாது காய்த்து வாழ்வு தரும் வளமுடையது நெல் அதுபோல நிகழ்கால நேயத்திற்கும் வருங்கால வாழ்விற்கும் மனைவியே ஏற்ற வாழ்க்கைத் துணையாவாள் என்ற ஒப்பற்ற கருத்தையும் உள்ளுறையாக உணர்த்துகின்றது. மேலும்

**“நெல் பல பொலிக ! பொன் பெரிது சிறக்க!”** **(ஐங் : 1-2)**
**“விளைக வயலே வருக இரவலர்”** **(ஐங் (2:2)**
**“பால் பல ஊறுக பகடுபல சிறக்க”** **(ஐங் 3:2)**
**“பகைவர் புல் ஆர்க! பார்ப்பார் ஓதுக!”** **(ஐங் 4:2)**
**“பசி இல்லாகுக! பிணி சேண் நீங்குக!”** **(ஐங் 5:2)**
**“வேந்து பகை தணிக! யாண்டு பல நந்துக”** **(ஐங் 6:2)**

இவ்வாறு அன்றைத் தமிழரின் வாழ்வியலுக்கும் உலகியலுக்கும் இயைந்த பல நல்ல கருத்துக்களை உணர்த்துகிறது. இத்தொகைநூல் சேரநாட்டில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும். பதிற்றுப்பத்து முழுமையும் சேரமன்னர்களைப் பற்றியதாதலின் இவையிரண்டும் பத்துக்களாக இருப்பதனால் சேரமன்னர் தொகை நூல்களில் புதுமைபுகுத்த முயன்றனர்.

போலும் என்று எண்ணத் தோன்றுகிறது. இதனால் சேரமன்னர்கள் தோன்றியகாலம் இந்நூல் எழுந்தகாலம் எனப்படுகிறது.

**பதிற்றுப்பத்து**

பழந்தமிழரின் தொன்மை இலக்கியமான எட்டுத்தொகை நூல்களில் ஒன்று பதிற்றுப்பத்து அவை 'ஒத்தபதிற்றுப்பத்து' என்னும் அடைச்சிறப்பினைப் பெற்றுள்ளது. மூவேந்தர்களில் முதன்மையானவர்கள் சேரவேந்தர்கள். அவ்வேந்தர்களைப் பற்றிப் பத்து புலவர்கள் பாடிய பத்துப்பத்துப் பாடல்களின் தொகுதியே பதிற்றுப்பத்து. பத்துப்பாடல்களைக் கொண்ட ஒரு நூலைப் 'பதிகம்' என்றும் நூறு பாடல்கள் கொண்ட ஒரு நூலைச் 'சதகம்' என்றும் பிற்காலத்தார் கூறினர். இந்நூல் சேர மன்னர்களின் வரலாற்றுச் செய்தியைக் காலவரிசைப்படி விரித்துப்பாடுகிறது. சங்க இலக்கியங்களுள் ஒருகுடியின் வரிசையாகச் சொல்லும் ஒரே நூல் என்ற சிறப்பைப் பெற்றள்ளது. இதன் வாயிலாகச் சேரர் குடியின் வரலாற்றை அறிந்து கொள்ள முடிகிறது. இதனைப் பாடிய புலவர்கள் பிற எட்டுத்தொகைப் பாடல்களில் சில பாடல்களையும் பாடியுள்ளதால் சங்ககால மன்னர் வரலாற்றையும் தமிழக வரலாற்றையும் அறியமுடிகிறது. இந்நூலில் சங்ககாலச் சேரமன்னர்களின் செங்கோன்மை, கொடைத்திறம், படைப்பெருமை, வீரமிகுதி, முதலியவற்றை அறியமுடிகிறது. இந்நூல் சங்ககாலச் சேரமக்களின் வாழ்க்கை முறை இசைக்கலைஞர்களாகிய கூத்தர், பாணர், பொருநர், விறலி பற்றிய செய்திகளைக் கூறுவதில் சிறப்புப் பெற்றுள்ளது.

இந்நூலில் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை அதனால் எண்பது பாடல்களைக் கொண்டுள்ளது. பதிற்றுப்பத்து புறப்பாடல்களால் ஆனதொரு தொகுப்பாகும் இந்நூலில் ஒவ்வொரு பத்துப்பாட்டின் தொடக்கத்திலும் பதிகம் என்னும் தலைப்பில் சில அடிகள் செய்யுளாகவும் சில பகுதிகள் உரைநடையாகவும் காணப்படுகின்றன. இந்நூலில் உள்ள பாடல்கள் ஐந்தடி முதல் ஐம்பத்து ஏழு அடிகள் வரை உள்ளன. ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பனவற்றைக் காட்டும் குறிப்புகள் உள்ளன. அப்பாட்டில் அமைந்த சிறந்ததொரு தொடரே பாட்டின் தலைப்பாக அமைந்துள்ளது.

> **"முரசுகெழு நெடுநகர் அரசுதுயில் ஈயாது**
> **மாதிரம் பனிக்கும் 'மறம்வீங்கு பல்புகழ்'**
> **கேட்டதற்கு இனிது நின் செல்வம் கேட்டோறும்"** **(பதி. 12: 7-9)**

மன்னனின் வீரம் அவனுக்குச் சிறப்பளிக்கும் என்பதை உணர்த்தும் 'மறம்வீங்கு பல்புகழ்' என்ற தொடர் பாட்டின் தலைப்பாக அமைந்துள்ளது. இவ்வாறு எல்லாப் பத்துப்பாடல்களுக்கும் சிறந்த தொடர் பாட்டின் தலைப்பு குறிப்பிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு

பத்தின் இறுதியிலும் ஆசிரியர், அதன் பாட்டுடைத்தலைவர், அவர் இயற்றிய அறியபாடல்கள், ஆசிரியருக்கு அவர் அளித்த பரிசில் முதலிய செய்திகளைக் குறிப்பிடும் பதிகம் உள்ளது. இவை சாசனங்களில் காணப்படும் மெய்க்கீர்த்திகளைப் போன்று அமைந்துள்ளன.

**"பகுத்தூன் தொகுத்த ஆண்மை**
**பிறர்க்கென வாழ்திநீ ஆதல் மாறே"** **(பதிற் 38 : 15-16)**

என்பதால் பலருக்கும் பகுத்தளிப்பதற்கே செல்வத்தைத் தொகுத்து வைக்க வேண்டும். பிறர் நலத்தைப் பேணுவதற்காகவே வாழ்தல் வேண்டும் என்பன போன்ற வாழ்வியல் அறங்கள் சிறப்பாக இடம்பெற்றுள்ளன. இந்நூலில் பாடியவரும் பாடப்பட்டோரும் புலவர் பெற்ற பரிசில்கள் அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**பதிற்றுப்பத்தின் அமைப்பு**

| வ.எண் | நூல் | பாடியவர்கள் | பாடப்பெற்றவன் | புலவர் பெற்ற பரிசில்கள் | பாட்டின் தலைப்பு | ஆட்சி செய்த ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | முதல் பத்து | - | - | - | - | - |
| 2. | இரண்டாம் பத்து | குமட்டூர்கண்ணனார் | இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் | உம்பிற்காடு என்னும் பகுதியில் 500 ஊர்கள் பரிசாகப் பெற்றார் | 1. புண் உமிழ் குருதி<br>2. மறம் வீங்கு பல்புகழ்<br>3. பூத்த நெய்தல்<br>4. சான்றோர் மெய்ம்மறை<br>5. நிரைய வெள்ளம்<br>6. துயிலின் பாயல்<br>7. வலம்படு வியன்பனை<br>8. கூந்தல் விறலியர்<br>9. வளன் அறுபைதிரம்<br>10 அட்டு மலர் மார்பன் | 58 ஆண்டு |
| 3. | மூன்றாம் பத்து | பாலைக்கௌதமனார் | பல்யானைச் செல்கெழு குட்டுவன் | பத்துவேள்விகள் செய்து புலவரையும் அவரது மனைவியையும் சுவர்க்கம் புகச்செய்தான் | 1. அடுநெய் ஆவுதி<br>2. கடாறு குறுமுகவை<br>3. தனதந்த காஞ்சி<br>4. சீர்கால் வெள்ளி<br>5. கான் உணங்கு கடுநெறி<br>6. காடுறு கடுநெறி<br>7. தொடர்ந்த குவளை<br>8. உருந்து வருமலர் நிறை<br>9. வெண் கை மகளிர்<br>10. புகன்ற ஆயம் | 25 ஆண்டு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 4. | நான்காம் பத்து | காப்பியாற்றுக் காப்பியனார் | களங்காய்கண்ணி நார்முடிச்சேரல் | நாற்பது நூறாயிரம் பொன்பரிசு நாட்டின் ஒரு பாகம் பரிசாகக் கொடுத்தல் | 1. கமல் குரல் துழாய்<br>2. கழை அமல் கழனி<br>3. வரம்பு இல் வெள்ளம்<br>4. ஒன்பொறிக் கழற்கால்<br>5. மெய்ஆடு பறந்தலை<br>6. வாள் மயங்கு கடுந்தார்<br>7. வலம்படு வென்றி<br>8. பரிசிலர் வெறுக்கை<br>9. ஏவல் வியன் பனை<br>10. நாடு காண் அவிர்சுடர் | 25 ஆண்டு |
| 5. | ஐந்தாம் பத்து | பரணர் | கடல்பிறகோட்டிய செங்குட்டுவன் | உம்பற்காட்டு வாரி என்னும் நிலத்தையும் செங்குட்டுவனுடைய மகனாகிய குட்டுவன் சேரலையும் பரிசாகப் பெற்றார். | 1. சுடர்வீ வேங்கை<br>2. தசும்பு துளங்கு இருக்கை<br>3. ஏறா ஏணி<br>4. நோய்தபு நோன் தொடை<br>5. ஊண் துவை அடிசில்<br>6. கரைவாய்ப் பருதி<br>7. நல்நுதல் விறலியர்<br>8. பேர் எழில் வாழ்க்கை<br>9. செங்கை மறவர்<br>10. வெருவரு புனல்தார் | |
| 6. | ஆறாம்பத்து | காக்கைப் பாடினியார் | ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் இவர்பெற்ற பரிசு. | 1. வடு அடு நுண் அயிர்<br>2. சிறு செங்குவளை<br>3. குண்டு கண் அகழி<br>4. நில்லாத் தானை<br>5. துஞ்சும் பிந்தர்<br>6. வேந்து மெய்ம் மறந்த வாழ்ச்சி<br>7. சில் வளை விறலி<br>8. ஏ விளங்கு தடக்கை<br>9. மா கூர் திங்கள்<br>10.மரம் படு திம்கனி | 88 ஆண்டு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 7. | ஏழாம் பத்து | கபிலர் | செல்வக்கடுங்கோ வாழியாதன் | நூறாயிரம் பொற்காசுகளைப் பெற்றார் நன்றா என்னும் குன்றின் மேல் ஏறி நின்று கண்ணுக்கெட்டிய அளவுள்ள நாட்டையும் பெற்றார். | 1. புலா அம் பாசறை<br>2. வரைபோல் இஞ்சி<br>3. அருவி ஆம்பல்<br>4. உரைசால் வேள்வி<br>5. நாள் மகிழ் இருக்கை<br>6. புதழ் சூழ் பறவை<br>7. ஏம வாழ்க்கை<br>8. மண் கெழு ஞாலம்<br>9.பறைக்குரல் அருவி<br>10. வெண்போழ்க்கண்ணி | 22 ஆண்டு |
| 8. | எட்டாம் பத்து | அரிசில்கிழார் | தகடூர் எறிந்த நெடுஞ்சேரல் | ஒன்பது நூறாயிரம் பொற்காசு அரசனுடைய சிம்மாசனம் அரசாட்சி | 1. குருந்தாள் ஞாயில்<br>2. உருத்து எழு வெள்ளம்<br>3. நிறம் திகழ் பாசிழை<br>4. நலம்பெறு திருமணி<br>5. தீம் சேற்று யாணர்<br>6. மா சிதறு இருக்கை<br>7. வென்று ஆடு துணங்கை<br>8. பிறழ நோக்கு இயவர்<br>9. நிறம் படு குருதி<br>10.புண்ணுடை ஏறுழ்த்தோள் | 17 ஆண்டு |
| 9. | ஒன்பதாம் பத்து | பெருங்குன்றூர் கிழார் | இளஞ்சேரலிரும் பொறை | முப்பத்திரண்டாயிரம் பொற்காசுகள் பல வீடுகள் சில ஊர்கள் நல்ல நிலங்கள் அரிய ஆபரணங்கள் | 1. நிழல்விடு கட்டி<br>2. வினை நவில் யானை<br>3. பல் தோல் தொழுதி<br>4. தொழில் நவில் யாணை<br>5. நாடுகாண் நெடுவரை<br>6. வெந்திறல் தடக்கை<br>7. வெண்தலைச் செம்புனல்<br>8. கல்கால் கவனை<br>9. துவராக் கூந்தல்<br>10.வலிகெழு தடக்கை | 16 ஆண்டு |
| 10. | கடைசிப்பத்து | - | - | - | - | - |

பதிற்றுப்பத்தின் சிறப்பு ஒவ்வொரு பாடலுக்கும் திணை, துறை ஆகிய குறிப்புகளோடு வண்ணம், தூக்கு எழுத்துக்களின் வடிவத்தையும் 'தூக்கு' என்பது அப்பாடலைப் பாடுவதற்குரிய இசையைப் பற்றிய குறிப்பாகும்.

**(எ.கா)** வண்ணம் : ஒழுகுவண்ணம், சொற்சீர்வண்ணம்

தூக்கு : செந்தூக்கு, வஞ்சித்தூக்கு

இந்நூலின் மற்றொரு சிறப்பு அரசரோடு அவர்தம் தேவியரும் இப்பாடல்களில் இணைத்துப் போற்றப்பட்டுள்ளார். அரசரோடு அவர்தம் தேவியரும் இணைந்து காட்சிதரும் அழகைப் பதிற்றுப்பத்து படம்பிடித்துக்காட்டுகிறது. அரசர்தம் புகழுக்கு அவர்தம் தேவியரே காரணமாகின்றனர் என்று பாடும் அளவிற்கு இப்பாடல்களில் பெண்மை போற்றப்பட்டுள்ளது.

**"காமர் கடவுளும் ஆளும் கற்பில்**
**சேணாறு நறுநுதல் சேயிழை கணவ** **(பதிற் : 65)**
**பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்**
**கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்**
**புரையோற் கணவ"** **(பதிற் : 70)**

இதனை நோக்குமிடத்து சேரர் அரசமைப்பில் தாய்வழி உரிமை போற்றப்பட்டது. இதனை அடிப்படையாகக் கொண்டு 'சேரர் தாய முறை' என்ற ஆய்வு நூலை நாவலர் சோமசுந்தர பாரதியார் எழுதியுள்ளார். சேரனைப் பற்றி அவன் நாட்டுவளம், வீரம் மக்கள்வாழ்க்கை, கொடைத்திறமைப் பற்றிக் குறிப்பாகத் தனித்தன்மையோடு கூறும் இந்நூலில் அறிவுரைகளும் ஆங்காங்கே உயிரோட்டமாக உள்ளன. பல்யானை செல்கெழுகுட்டுவனைப் பார்த்துப் பாலைக் கௌதமனார்.

**"சினனே காமம் கழிகண் ணோட்டம்**
**அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை**
**தெறல் கடுமையொரு பிறவும் இவ்வுலக்து**
**அறந்தெரி திகிரிக்கு வழிநடை யாரும்"** **(பதிற் 22:1-4)**

என்ற அறிவுரை இன்றைக்கு மட்டுமல்ல என்றைக்கும் மக்களுக்குப் பயன்படும். மேலும் போர் வீரர்களுக்கு ஏற்படும் பெரும்புண்ணை ஊசியும் நூலும் கொண்டு தைத்து மருந்திட்டு ஆறவைத்தனர். இம்முறை இன்றைக்கும் பயன்படும் வகையில் உள்ளது. இதே போன்று வாழ்க்கையில் பயன்படும் கருத்துக்கள் என்றைக்கும் மக்களுக்கு பயன்படும் வகையில் பதிற்றுப்பத்தின் பாடல்கள் அமைந்துள்ளன.

**பரிபாடல்**

பழம்பெருமை மிக்க எட்டுத்தொகை நூல்களுள் ஐந்தாவதாக அமைந்தது பரிபாடல் 'ஓங்குபரிபாடல்' என்று புகழப்பட்ட சிறப்பை உடையது. பரிபாடல் என்னும் நூலைப் பரிபாட்டு என்றும் அழைப்பர். அகமும் புறமும் கலந்து பரிந்து செல்லும் ஓசையுடைய பாக்களால் அமைந்த ஒருவகைச் செய்யுள் பரிபாடலாகும். இந்நூல் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப்பாக்களுக்கும் பலவகை

அடிகளுக்கும் பரிந்து இடம் கொடுக்கும் பாட்டு என்று பொருள்படும். எண்வகை வனப்புகளுள் பரிபாடலை ‘இழை’ எனும் வனப்புக்குள் அடக்குவர். பரிபாடல் புரிதல் தன்மையுடையது. என்ற பொருளுக்கேற்பப் பற்று வைத்தல், காதல் கொள்ளுதல், சார்பாகப் பேசுதல், இரங்குதல், வருந்துதல், வெளிப்படுதல், வருந்திக்காத்தல், பகுத்தறிதல், அழித்தல், நீங்குதல் எனப்பல பொருள் கூறப்படுகின்றன. அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கனுள் இன்பம் ஒன்றையே பொருளாகக் கொண்டு பாடப்பட்டது. இந்நூல் பழந்தமிழரின் பண்பாட்டுக் கருவூலமாகத் திகழ்கிறது. இதன் உரைச்சிறப்புப் பாயிரம்

**“சங்க மென்னும் துங்கமலி கடலுள்**

**அரிதின் எழுந்த பரிபாட் டமுதம்”**

என்று சிறப்பிக்கிறது. இந்நூல் அக்காலத்தில் தோன்றிய பக்தி இலக்கியமாகவும் பிற்காலத்துத் தோன்றிய பல்வேறு பக்தி இலக்கியங்களுக்கு முன்னோடியாகவும் திகழ்கின்றது. சங்ககால மக்கள் வழிபட்ட கடவுளர்களையும் கடவுள் நெறிகளையும் பற்றி அறிய உதவும் பெட்டகமாகத் திகழ்வதுடன் தலைவன் தலைவியின் அக உணர்வுகளைப் படம்பிடித்துக்காட்டும் அரிய கலைப் படைப்பாக விளங்குகிறது. பரிபாடலில் வடமொழிப்புராணக்கதைகள் வடபுலத்து வழிபாட்டு மரபுகள் போன்றவற்றை மிகுதியாகக் காணமுடிகிறது. ஓங்கு பரிபாடல் என்று உணர்ந்தோரால் உயர்வாகக் கூறப்படும். இந்நூல் பழந்தமிழகத்தின் அழகுக் காட்சிகளைக் கண்குளிரக்காட்டிச் செல்கிறது.

இந்நூல் மொத்தம் எழுபது பாடல்களைக் கொண்டுள்ளது. இருபத்தைந்து அடிச் சிறுமையும், நானூறு அடிப்பெருமையும் கொண்டுள்ளது. இவற்றின் இடையிடையே அகச்சுவை விரவிக் காணப்படுகிறது இதனை

**“பரி பாட்டெல்லை**

**நாலீர் ஐம்பது உயர்வு அடியாக**

**ஐ ஐந்து ஆகும் இழிபு அடிக்கு எல்லை”** **(தொல் - நு 1418)**

என்று தொல்காப்பிய நூற்பாகாட்டுகிறது. திருமாலுக்கு எட்டுப்பாடல்களும், முருகப்பெருமானுக்கு முப்பத்தொரு பாடல்களும், கொற்றவைக்கு ஒரு பாட்டும் வையைக்கு இருபத்தாறு பாடல்களும், மதுரைக்கு நான்கு பாடல்களும் ஆக மொத்தம் எழுபது பாடல்கள் பரிபாடலில் இருந்தன என்று பழம்பாடல் ஒன்று கூறுகிறது.

**“திருமாற் இருநான்கு செவ்வேட்டு முப்பத்**

**தொருபாட்டுக் காடு காட்கு ஒன்று – மருவினிய**

**வையை இருபத்தாறு மாமதுரை நான்கென்ப**

**செய்ய பரிபாடல் திறம்”**[17]

என்கிறது. ஆனால் தற்போது இருபத்திரண்டு பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளன. திருமாலைப் பற்றி ஆறு பாடல்களும் செவ்வேள் பற்றி எட்டுப்பாடல்களும் வையை பற்றி எட்டுப் பாடல்களும் காணப்படுகின்றன. இந்நூல் யாப்பு அடிப்படையில் அமைந்துள்ளது. இச்செய்யுள் வகை பெரும்பாலும் காலம்பெற்று வருவதால் இதனை

இசைப்பாட்டு என்றும் கூறுவர். இந்நூல் மதுரை, வையை திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலை போன்றவற்றின் பெருமைகளையும் இயற்கை எழிலையும் சிறப்பாக வர்ணிக்கின்றது. இந்நூலுக்குப் பரிமேலழகர் உரை எழுதியுள்ளார். இந்நூலின் பாடலாசிரியர் பெயர், பாடலுக்குப் பண் வகுத்தவர் பெயர், பாடலின் பண் ஆகியவை கீழ்வரும் அட்டவணையில் கூறப்பட்டுள்ளன.

**பரிபாடலின் அமைப்பு**

| வ.எண் | பொருள் | அடி | புலவர் பெயர் | இசை வகுத்தவர்கள் | பண் |
|---|---|---|---|---|---|
| 1 | திருமால் | 65 | --- | --- | --- |
| 2. | திருமால் | 76 | கீரந்தையார் | நன்னாகனார் | பாலையாழ் |
| 3. | திருமால் | 94 | கடுவன் இளவெயினனார் | பெட்டநாகனார் | பாலையாழ் |
| 4. | திருமால் | 74 | கடுவென் இளவெயினனார் | பெட்டநாகனார் | பாலையாழ் |
| 5. | செவ்வேள் | 81 | கடுவென் இளவெயினனார் | பெட்டநாகனார் | பாலையாழ் |
| 6. | வையை | 106 | ஆசிரியன் நல்லந்துவனார் | மருத்துவன் நல்லந்துவனார் | பாலையாழ் |
| 7. | வையை | 86 | மையோடக் கோவனார் | பித்தாமத்தர் | பாலையாழ் |
| 8. | செவ்வேள் | 130 | ஆசிரியன் நல்லந்துவனார் | மருத்துவன் நல்லச்சுதனார் | பாலையாழ் |
| 9. | செவ்வேள் | 85 | குன்றம்பூதனார் | நல்லச்சுதனார் | பாலையாழ் |
| 10. | வையை | 131 | கரும்பிள்ளை நப்பூதனார் | நல்லச்சுதனார் | பாலையாழ் |
| 11. | வையை | 140 | நல்லந்துவனார் | நாகனார் | பாலையாழ் |
| 12. | வையை | 102 | நல்வழுதியார் | நந்நாகனார் | பாலையாழ் |
| 13. | திருமால் | 64 | நல்வழுதியார் | --- | நோதிறம் |
| 14. | செவ்வேள் | 32 | கேசவனார் | கேசவனார் | நோதிறம் |
| 15. | திருமால் | 66 | இளம்பெருவழுதியார் | நல்லச்சுதனார் | நோதிறம் |
| 16. | வையை | 55 | நல்வழுதியார் | மருத்துவன் நல்லச்சுதனார் | நோதிறம் |
| 17. | செவ்வேள் | 53 | நல்வழுதியார் | மருத்துவன் நல்லச்சுதனார் | நோதிறம் |
| 18. | செவ்வேள் | 56 | குன்றம்பூதனார் | மருத்துவன் நல்லச்சுதனார் | காந்தாரம் |
| 19. | செவ்வேள் | 105 | நப்பண்ணனார் | மருத்துவன் நல்லச்சுதனார் | காந்தாரம் |
| 20. | வையை | 101 | நல்லந்துவனார் | மருத்துவன் நல்லச்சுதனார் | காந்தாரம் |
| 21. | செவ்வேள் | 70 | நல்லச்சுதனார் | மருத்துவன் நல்லச்சுதனார் | காந்தாரம் |
| 22. | வையை | 49 | --- | நன்னாகனார் | காந்தாரம் |

இப்பாடலை இயற்றிய புலவர்கள் பதின்மூவர் இதன் பாக்களுக்கு நல்லச்சுதனார், நாகனார் போன்ற பத்து ஆசிரியர்கள் உரைவகுத்துள்ளனர். இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் யாரென்று தெரியவில்லை. தொல்காப்பிய உரையாசிரியர்களான பேராசிரியரும், நச்சினார்க்கினியரும், தொல்காப்பிய உரையில் தொகை என்ற சொல்லைக் கையாண்டுள்ளதால் பேராசிரியர் காலமாகிய கி.பி.12-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் இத்தொகை நூல் தோன்றியிருக்கலாம் என்கின்றனர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள்

இப்பாடல்களில் வரும் சேதிகள் முதலியவற்றைக் கணக்கில் கொண்டு இந்தநூல் சுமார் எட்டாம் நூற்றாண்டு வாக்கில் அமைந்திருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

வாழ்வியல் மரபுகளோடு வையை ஆற்றின் சிறப்பையும், சமயத்தையும் இணைத்துக் கூறுவது இந்நூலின் சிறப்பு. வையையின் கரைகள் வளமுற்றிருந்தன. அவைகளைக் கண்டவர்கள். அவைகள் வள்ளல் தன்மையிலே சிறந்த பாண்டிய மன்னனுடைய கொடையைப் போல இருக்கின்றன என்கின்றனர். மேகங்கள் படிகின்ற மலையிலே தோன்றிய மிளகு, சந்தனம் வெண்ணெய்க்காகக் கடையும் தயிரைப் போன்ற நுரை இன்னும் பல பண்டங்கள் வைகை வெள்ளம் தன் இருகரைகளிலும் குவித்துக் கொண்டு ஓடுகின்றது என்பதை,

**“கரையே**
**கைவண் தோன்றல் ஈகைபோன்ம் என**
**மைபடு சிலம்பிற் கறியொடும், சாந்தொடும்**
**நெய் குடை தயிரின் நுரையொடும், பிறவொடும்**
**எவ்வயினானும் மீதுமீது அழியும்”** (பரி.16: 1-4)

என்கிறது. மேலும் அகப்பொருளோடு பக்திப் பொருளைத் தொடர்புபடுத்திப் பாடுவது பரிபாடலின் மற்றுமொரு சிறப்பு. சான்றாக 14-ஆம் பாடலில் பருவம் கண்டறிந்த தலைமகள் முருகவேளைப் பரவுவாளாய் இப்பருவத்தே தலைமகன் வருமென்பதுபடத் தோழி வற்புறுத்தியது என்ற துறைக்குறிப்பைக் காட்டலாம். அகப்பொருளை உணராதவர்கள் தமிழை உணராதவர்கள் இறைவனை உணராதவர்கள் என்று தமிழை அகமரபோடும், சமய மரபோடும் இணைத்துக்காணும் திறம் பரிபாடலில் போற்றுதற்குரியது.

**நான்மறை விரித்து, நல்லிசை விளிக்கும்**
**வாய்மொழிப் புலவீர்! கேண்மின் சிறந்தது!**
**காதற்காலம் காமத்துச் சிறந்தது!**
**விருப்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி;**
**புலத்தலின் சிறந்தது கற்பே;**

**இத்தள்ளாப் பொருள் இயல்பின் தண்தமிழ் ஆய்வந்திலார்**
**கொள்ளார்இக் குன்று பயன்”** (பரி.9: 12-19)

இவ்வாறு வாழ்விலோடு சமயத்தையும், புராணத்தையும் இணைத்து மக்களின் வாழ்க்கைக்கு என்றென்றும் பயன்படும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

**கலித்தொகை**

கலித்தொகை எட்டுத்தொகை நூல்களில் ஆறாவதாக அமைந்துள்ளது. கலித்தொகை என்னும் சொல்லுக்குக் கலிப்பாடல்களின் தொகுதி என்று பொருள். கலி என்னும் சொல் களிப்பு, களிப்பின் செருக்கு, பெருக்கு, ஆரவாரம் என எழுச்சி

நிலைகளை உணர்த்துகிறது. கலிப்பாவிற்கு உரிய ஓசை துள்ளலோசை. துள்ளல் என்பதை ஆரவாரம் அல்லது எழுச்சி என்று பொருள் கொள்ளுவர். இந்நூல் கற்றறிந்தார் ‘ஏத்தும் கலி’ என்றும் ‘கல்வியாளர் கண்டகலி’ என்றும் போற்றப்படும் சிறப்புடையது. எட்டுத்தொகையில் யாப்பு வகையால் பெயரமைந்தவை பரிபாடலும், கலித்தொகையும் ஆகும். கலியாப்பு பிறயாப்பு முறைகளின்றும் வேறுபட்டது. அகப்பாடல்களைப் பாடுவதற்குக் கலிப்பாவே சிறந்தது என்பது தொல்காப்பியர் கருத்து. கலிப்பா என்பது உரையாடல் கலந்த நாடகப்பாடல் போல அமைவது. ஒருவர் வினாத்தொடுக்க மற்றவர் பதிலளிக்க வினாவும் விடையுமாக அமைவது இப்பாடல்களின் இயல்பு. இப்பாடல்களில் ஒன்றற்கு மேற்பட்ட மாந்தர்கள் இடம்பெறுவதாலும் கூற்று முறையில் அமைந்திருப்பதாலும், இவற்றை நாடகப் பண்புகளை மிகுதியாகக் கொண்ட பாடல்கள் என்பர். கிரேக்க இலக்கியத்தில் காணப்படும் குழுப்பாடல்களைப் போன்ற அமைப்புடையன கலித்தொகைப் பாடல்கள். கலித்தொகை வாழ்க்கை உண்மைகள் பலவற்றை எடுத்துச்சொல்வதில் பிற அகப்பாடல்களை மிஞ்சி நிற்கிறது.

**“ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்**
**அறிவெனப் படுவது பேதையர் சொல் நோன்றல்**
**செறிவெனப் படுவது கூறியது மறாஅமை**
**நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை**
**முறையெனப் படுவது கண்ணாடாது ஊர்வெளவல்**
**பொளையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்”** **(கலித்.133)**

இவ்வாறு நறுக்கத் தெறித்தாற்போன்ற சொல் விளக்கங்களும் பண்பு விளக்கங்களும் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.

எட்டுத்தொகை நூல்களுள் பாடல்களால் சிதைவும் குறைவுமின்றி நிறைவுடன் இன்றளவும் கிடைப்பன கலித்தொகையும் அகநானூறும் ஆகும். அவற்றுள் கலித்தொகை கடவுள் வாழ்த்தினைச் சேர்த்து நூற்றைம்பது பாடல்களைக் கொண்டது. இத்தொகை நூல் தமிழ் இலக்கிய மரபில் வந்த கடைசிகாலப் பாடல்களைக் கொண்டது. இந்நூல் பதினொரு அடிகள் முதல் எண்பது அடிகள் வரை உள்ளன.

| திணை | பாடல்கள் | பாடியவர்கள் |
|---|---|---|
| கடவுள் வாழ்த்து | 1 | ஆசிரியர் நல்லந்துவனார் |
| 1. பாலை | 35 | பாலைபாடிய பெருங்கடுங்கோ |
| 2. குறிஞ்சி | 29 | கபிலர் |
| 3. மருதம் | 35 | மருதன் இளவழகனார் |
| 4. முல்லை | 17 | சோழன் நல்லுருத்திரன் |
| 5. நெய்தல் | 33 | நல்லந்துவனார் |
| **மொத்தம்** | **150** | |

இவ்வாறு ஐந்திணைகள் பற்றிய நூற்றைம்பது பாடல்களைக் கொண்டு பாடல்களின் எண்ணிக்கை தெளிவாகக் கூறப்பட்டுள்ளமையால் கலித்தொகை சிதைவின்றிக் கிடைத்துள்ளது. இந்நூல் அன்பின் ஐந்திணையுடன் ஒத்த அன்பில்லாத மக்களின் உறவு பற்றிய கைக்கிளை, பெருந்திணை பற்றிக் கூறுகிறது.

**"காமஞ்சாலா இளமையோள்வயின்**
**ஏமம்சாலா இடும்பை எய்தி**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல்: 996)**

என்கிறது. தொல்காப்பியர் கைக்கிளைக்கும், பெருந்திணைக்கும் கூறகின்ற உரிப்பொருண்மைகள் கலித்தொகைப் பாடல்களில் காணப்படுகின்றன. கலித்தொகைப்பாடல்களில் பாலைத்திணை முதலில் வைத்து பாடப்பெறுவது சிறப்புடையது. மற்றத்தொகை நூல்களில் பிரிவை உணர்த்தும் பாலை முதலில் இடம்பெறவில்லை. பாலைத்திணை நான்கு நிலத்திற்கும் பொதுவாக அமைந்துள்ளதால் பாலைத்திணையை முன்னர்க்கூறிப்பின் சிறப்பினை உடைய குறிஞ்சி முதலிய பிற திணைகள் பின்னர்க் கூறப்பட்டுள்ளன.

**"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி**
**ஆக்கமளி ஊடல் அணிமருதம் நோக்கொன்று**
**இல்லிருத்தலின் முல்லை இரங்கிய போக்கோர் நெய்தல்**
**புல்லுங் கலிமுறைக் கோப்பு"**[18]

என்னும் வெண்பாவினால் பிரிவை உணர்த்தும் பாலை முதலிலும் புணர்தலை உணர்த்தும் குறிஞ்சி இரண்டாவதாகவும், ஊடலினை உணர்த்தும் மருதம் மூன்றாவதாகவும் இல்லிருத்தலினைப் பாடலின் இறுதியிலும் துறைக்குறிப்புப் பகுதி உள்ளது. இது தொல்காப்பிய அகத்துறைகளுக்கு விளக்கம் தரும் பகுதிகளாகவும் விரிவாகவும் உள்ளது.

**(எ.டு)** "தமர் வரைவு மறுத்துழித் தோழி தாயர்க்கு அறத்தொடு நிற்ப அவள் நற்றாய்க்கு அறத்தொடுநிற்ப அவள் தன்னையர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்ப, அவரும் ஒருவாற்றான் உடன்பட்டமை தோழி தலைவனுக்குக் கூறித் தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற்பொருட்டு வரையுறை தெய்வத்திற்குக் குரவையாட அவன் வரைய வருகின்றமை தலைவர்க்கு உரைத்தது" என்ற நீண்ட துறை விளக்கப்பகுதி கலித்தொகை 39ஆம் பாடலுக்கு எழுதப்பெற்றுள்ளது. இவ்வாறே பிற கலித்தொகைப் பாடல்களும் விரிவான துறை விளக்கங்களைப் பெற்றுள்ளன. பிற அகப்பாடல்களில் 'அறத்தொடு நிற்றல்' என்று மட்டுமே குறிப்பிடப்படும் இத்துறை அதன் ஆழமும் அகலம் புலப்படுமாறு கலித்தொகையில் விளக்கம் பெற்றுள்ளன.

கலித்தொகைப் பாடல்கள் வாழ்க்கை உண்மைகள் பலவற்றை எடுத்துக்காட்டுகிறது. இந்நூல் அக்காலத்தில் ஐந்துவகை நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் முறைகளைப் பழக்கவழக்கங்களை, எண்ணங்களை, எழுச்சிகளை, நம்பிக்கைகளைப் பண்டைத்தமிழர்தம் தொன்மைத்திறத்தைக் காட்டும் காலக்

கண்ணாடியாக விளங்குகிறது. சரியான வழியில் சேர்க்கப்படாத செல்வம் நிலைத்து நிற்காமல் இம்மைக்கும், மறுமைக்கும் பகையாகும் என்பதை,

**“செம்மையின் இகந்து ஒரிஇப் பொருள்செய்வார்க்கு அப்பொருள்**
**இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ”** **(கலி: 14)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. உலர்ந்துபோன உயர்ந்த மரங்களையுடைய பாலைவனத்தைப்போன்று குடிமக்கள் துன்புற அறமற்றவழியில் அவர்களின் பொருட்களைக் கொள்ளையடித்தும் கொலைக்கஞ்சாமல் ஆளும் அதிகாரிகளைக் கொண்டு கொடுங்கோலாட்சி புரியும் மன்னது நாடு பாழாகும் என்பதை,

**“அலவுற்றுக் குடி கூவ இன்றிப் பொருள் வெட்கிக்**
**கோலை அஞ்சா வினைவரால் கோல் கொடியன் நிழல்**
**உலகு போல உலறிய உயர்மா வெஞ்சும்”** **(கலித்: 10)**

என்கிறது. மேலும் அகச்செய்திகளான தலைவனுக்குத் தலைவியும், தலைவிக்குத் தலைவனும் எவ்வளவு இன்றியமையாதவர்கள் என்பதையும் தலைவன் தலைவி உறவு எப்படிப்பட்டது என்பதையும் சிறப்பாகக் கலித்தொகைப்பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. மலையில் சந்தனம் பிறக்கிறது. அதனால் சந்தனத்திற்கு என்ன பயன்? சந்தனம் யாரோ ஒருவருடைய மார்பில் அல்லவா கமழ்கிறது. முத்து கடலில் பிறக்கிறது. அதனால் கடலுக்கு என்னபயன்? அது யாரோ ஒருவருடைய கழுத்தில் அல்லவா தவழ்கிறது! யாழில் இசை பிறக்கிறது; அதனால் யாருக்கு என்ன பயன்? அது இசைப்பவர்க்கு அல்லவா இன்பத்தைத் தருகிறது. அதுபோலவே உன்னிடத்தில் பிறந்தவள்தான் உன் மகள். ஆனால் அவள் உனக்கு எந்த வகையில் பயனுடையவள் ஆவாள்? அவள் தலைவனுடன் இணையப்போவதுதான் இயற்கை. எனவே வருந்தாதே என்று தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்ட தலைவியைத் தேடிச்செல்லும் தாய்க்கு வழியிடைச் செல்வோர் அறிவுரை கூறினர்.

**“பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை**
**மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என்செய்யும்?**
**நினையுங்கால் நும்மகன் நுமக்குமாங்கு அனையளே!**
**சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை**
**நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்?**
**தேருங்கால் நும்மகள் நமக்குமாங்கு அணையளே!**
**ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை**
**யாழுளே பிறப்பினும் யாழ்க்கனவதாம் என்செய்யும்?**
**சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங்கு அனையளே!”(பாலை கலி 9:12-20)**

என்கிறது. இவ்வாறு உயர்ந்த அறிவுரைகளையும், பெண்ணின் முன்பாதி, பின்பாதி வாழ்வியலையும் அற்புதமாகக் கூறுகிறது இந்நூல்.

கலித்தொகையில் ஆரியக்கருத்துக்களின் நுழைவு பல பாடல்களில் காணப்படுகின்றன. ஆரியக் கதைகள் தமிழ்க் கடவுள்களைச் சுற்றிக் கூறப்பட்டன. சமயங்களுக்கு இடையிலான சமரச உணர்வு உச்சநிலையை அடைந்தது.

ஆரியப்பழக்க வழக்கங்களும் தமிழ்ப்பழக்க வழக்கங்களோடு கலந்தன. மதுரைநாடு ஒருவகை அரசியல் அமைதியின்மைக்கு ஆளாகியிருந்தது. களப்பிரர்களும் பாண்டியர்களும் ஆட்சி உரிமை காணப்போராடிக் கொண்டிருந்தனர். அதனால் புலவர்களைப் பேணும் புரவலர்களாம் அரசர்களின் பெயர்கூறிப் பாராட்டும் பழைய பாடல்கள்போல் அல்லாமல் கலித்தொகை பாண்டிய அரசர்களைப் பெயர் சுட்டாமல் தெளிவின்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் கலித்தொகையின் பாடல்கள் அனைத்தும் கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என அறியப்படுகிறது.

**அகநானூறு**

காதல் உலகத்தில் நிகழும் மிக நுட்பமான காட்சிகளைச் சொல்லோவியமாகக் காட்டும் பாடல்களைக் கொண்ட தொகைநூல் அகநானூறு. ஒத்த அன்பால் ஒருவனும், ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப்பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின்பின் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய்யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுருவதோர். பொருளாகலின் அதனை அகம் என்கிறார் நச்சினார்க்கினியர். அகம் காதல் வாழ்வில் ஏற்படும் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவற்றை விவரித்துக் கூறுகிறது. ‘அகம்’ என்ற சொல்லுக்கு மனம், வீடு, உள்ளிடம், காம இன்பம், ஆகாயம், உலகம், எண்ணம், அகப்பொருள் மருதம், ஆன்மா எனப்பல பொருள்கள் உள்ளன. அகம் என்பது அகப்பொருளைக் குறிப்பதோடு வீட்டு வாழ்க்கையைப் பற்றியும் பேசுகிறது. அகத்திணையை முழுமையான அளவில் விளக்கும் பாடல்களைக் கொண்டமையால் அகம் எனவும் அகப்பாட்டு எனவும் கூறுவர். அகம்பற்றிக் கூறும் நானூறு பாடல்களைக் கொண்டதால் அகநானூறு என்று பெயர் பெற்றது. நீண்ட அடிகளையுடைய பாடல்களைக் கொண்டதால் இந்நூல் நெடுந்தொகை என்றும் அழைக்கப்படுகிது. இந்நூலின் பெரும்பான்மையான பாடல்களில் அகப்பொருளின் மூலக்கூறுகளாகிய முதல், கரு, உரிப்பொருள் பற்றிய செய்திகள் அழகுறக் கூறப்பட்டுள்ளன. இந்நூல் அகப்பொருளின் நயத்தை உணர்த்துவதோடு பண்டைத்தமிழக வரலாற்றுச் செய்திகளையும் அறிய உதவுகிறது.

**“பல்புகழ் நிறைந்த வேல்போர் வேந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழிஇக்**
**நீர்முதல் கரந்த நிதியங் கொல்லோ”** **(அகம் 265: 4-6)**

என்ற பாடலில் வடபுல வரலாற்றுக் குறிப்புக் காணப்படுகிறது.

இந்நூல் நானூறு நீண்ட அகவற்பாக்களால் இயற்றப்பட்ட தொகைநூல். இவை பதின்மூன்று அடிச்சிற்றெல்லையும் முப்பத்தொரு அடிப்பேரெல்லையும் கொண்டுள்ளது. அகத்துறை அமைந்த நானூறு பாடல்களும் மூன்று பெரும்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை

களிற்றியானை நிரை (1-120) → 120

மணிமிடைப் பவளம் (121-300) → 180

நித்திலக்கோவை (301-400) → 100

எனத் தொகுக்கப்பட்டுள்ளது. அவற்றில், களிற்றியானை நிரை கம்பீரமாக அசைந்து செல்லும் ஆண்யானைகளைப்போல் சொல்வளத்தைப் பெற்றுள்ளது. மணிமிடைப்பவளம் மாணிக்கம் போன்ற சொற்களும் பவளம் போன்ற மொழிகளும் கலந்த பாடல்களைக் குறிக்கிறது. நித்திலக்கோவை முத்துப்போன்ற ஒரே வகையான சொற்களால் அமைந்த பாடல்களைக் கொண்டுள்ளது. இக்கூற்றுக்களை ஆராயும்போது இந்நூலின் அமைப்பு அணிகலனைக் குறித்து வந்த பெயரே எனத்தெரிகிறது. ஐந்திணை கூறும் இந்நூல்களின் பாடல்களைத் தொகுத்த உருத்திரசன்மனார் ஓர் ஒழுங்குமுறையைப் பின்பற்றித் தொகுத்துள்ளார். அவை,

| திணை | எண் | பாடல்கள் |
|---|---|---|
| பாலை | 1, 3, 5, 7, 9 | 200 |
| குறிஞ்சி | 2, 8, 12, 18 | 80 |
| முல்லை | 4, 14, 24, 34 | 40 |
| மருதம் | 6, 16, 26, 36 | 40 |
| நெய்தல் | 10, 20, 30 | 40 |

இம்முறையினால் அகநானூற்றுப் பாடல்களில் எண்களைக் கொண்டு பாடல்களின் திணையை அறியமுடிகிறது.

இந்நூலில் உள்ள 400 பாடல்களைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 145 இதனைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மர். இவர் இறையனார் அகப்பொருளுக்கு நக்கீரனார் செய்த உரையே சிறந்த உரையென்று தீர்ப்புக் கூறியவர். இவர் முருகனுடைய அவதாரம் ஊமை ஐந்து வயதிலேயே நுண்ணறிவுப் படைத்த அருந்தமிழப் புலவராய் விளங்கினார். ஊமையாயினும் காது கேட்கும் இறையனார் அகப்பொருளுக்குப் பல புலவர்கள் உரையெழுதியிருந்தனர். அவர்கள் உரை ஒவ்வொன்றையும் படித்துக்காட்டும்போது நக்கீரர் உரைக்குத்தான் தலையசைத்துப் புன்முறுவல் காட்டினாராம். இவ்வாறு இவரைப்பற்றிய வரலாறு ஒன்று வழங்குகின்றது. உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டியன் இந்நூலைத் தொகுக்கும்படி செய்தவன் இவன் கடைச்சங்கத்தைக் காப்பாற்றி வந்தவன். இவனும் சிறந்த தமிழ்ப்புலவன். அகநானூற்றின் இருப்பத்தாறாவது பாடல் இவன் பெயரில் உள்ளது. புலவர்கள் ஒருவர்பால் மற்றொருவர் கொண்ட மதிப்பினை இந்நூலில் காணமுடிகிறது. இந்நூலில் ஊட்டியார், நோய்பாடியார் என்ற சொற்றொடரால் பெயர்பெற்ற புலவர்கள் இடம்பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

**“ஊட்டி யன்ன ஒண்தளிச் செயலை**
**ஓங்குசினைத் தொடுத்த ஊசல்”** **(அகம்: 68 (5-6)**

என்ற சொற்றொடரால் சிறப்புப்பெயர் பெற்றிருக்கிறார்.

இந்நூல் ஐவகை நிலங்களின் இயற்கைவனப்பை வர்ணிப்பதுடன் அப்பகுதி மக்களின் வாழ்க்கை நிலைமைகளை வர்ணிக்கிறது. பண்டைத்தமிழர்தம் வாழ்க்கை

முறைகளையும், பண்பாட்டினையும் விளக்கும் கருவூலமாகத் திகழ்கிறது. சான்றாகப் பண்டைக்காலத்தில் திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது என்பதை 86-ஆம் பாடலில் சுவைபடக் கூறுகிறது. முழவும், முரசும் முழங்கத் திருமணத்தின் முதல் நிகழ்ச்சியாக இறைச்சி கலந்த வெண்சோற்றை விருந்தாக வழங்குவர். மணப்பந்தலின்கீழ் வெண்மணல் பரப்பி விளக்கேற்றுவர். மணமகளை நீராட்ட முதுபெண்டிர்கள் நீர்க்குடங்களைக் கொண்டுவருவர். மக்களைப் பெற்ற வாழ்வரசியார் நால்வர் அதில் மலரும், நெல்லும் தூவி மணமகளைக் கற்பு நெறிவழுவாது கடமை ஆற்றிக் கணவன் விரும்பும் மனைக்கிழத்தி ஆகுக என்று வாழ்த்தி மணநீராட்டுவர். மண நீராடிய தலைவிக்குத் தம்தூய ஆடைகளையும், அணிகளையும் அணிவிப்பர். திங்கள் உரோகிணியைக் கூடிய நல்லோரையில் மணமேடையை அலங்கரிப்பர். பின்னர் இறைவழிபாடு நடத்துவர். வாகையிலையோடு அறுகின் கிழங்கும் சேர்த்துக் கட்டப்பெற்ற வெண்நூலைத் தலைவிக்குக் காப்பாகச் சூட்டுவர் என்பதை,

**“உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்**
**மடம்கெண் மழைஇய நோக்கின்**
**ஒடுங்குரர் ஓதிமாஅ யோளே”** **(அகம்: 86)**

என்ற பாடல் உணர்த்துகிறது. மேலும் இந்நூல் வாழ்வின் பல நிகழ்ச்சிகளை இன்றளவும் நடைபெறுபவையாகக் கூறப்பட்டுள்ளது. இக்காலத்தைப் போன்றே மக்களின் மத்தியில் நடைபெறும் வாக்கெடுப்பைப்போன்று பண்டைக்காலத்திலும் வாக்கெடுப்பு நடைபெற்றுள்ளது. இதனைக் குடவோலைமுறை என்று குறிப்பிடுகின்றனர்.

**“கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்டுமார்**
**பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்”** **(அகம் 77: 7-8)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது. மேலும் இந்நூலில் வாணிபத்தொடர்பு பற்றியும் குறிப்பிட்டுள்ளது.

**“யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்”** **(அகம் 149: 9-10)**

மிளகு பெறுவதற்காக யவனர்கள் நம்நாட்டோடு தொடர்புகொண்டிருந்தது இந்நூலில் இடம்பெற்றுள்ளது. வரலாற்றுச் செய்திகளோடு புராணச் செய்திகளும் இடம்பெற்று இந்நூலைச் சிறப்பிக்கிறது.

**“வென்வேல் கவுரியர் தொன்முது கோடி**
**முழங்கு இரும் பௌவம் இரங்கும் முன்துறை**
**வெல்போர் இராமன் அருமறைக்க அவித்த**
**பல்வீழ் ஆலம்”** **(அகம்: 70)**

இப்பாடல் இராமன் இலங்கைக்கும் போகும்போது தனுஸ்கோடியில் ஒரு ஆலமரத்தின் கீழ்த்தங்கினான். வானர வீரர்களுடன் அமர்ந்து இலங்கையைப் பற்றிய செய்திகளை ஆலோசித்துக் கொண்டிருந்தான். அப்போது அவ்வாலமரத்தின் மேலிருந்த பறவைகள்

கூச்சலிட்டன. அந்தக் கூச்சலை அடக்கியபின் ஆலோசனை புரிந்தான். இராமாயணக் கதை தோன்றுவதற்கு அடிப்படையாக இருந்தது அகப்பாடல்கள்.

**"முதியப்பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை"** **(அகம்: 233)**

தம் முன்னோரின் வீரத்தையும், கொடையையும் பேணிப்பாதுகாத்த உதியஞ்சேரலாதன் பாரத யுத்தத்திலே இருபக்கத்துப் படைகளுக்கும் நிறைய சோறு போட்டதை இப்பாடல் குறிக்கிறது. இந்நூலில் பண்டைய மக்களின் பழக்க, வழக்கங்கள் நம்பிக்கைகள், தொழில், உணவு, உடை, திருமணமுறை, பறவை, விலங்குகள், செடிகொடிகள் போன்ற செய்திகளும் மற்றும் வரலாற்றுக் குறிப்புகளும் காணப்படுகின்றன. இந்நூலின் மற்றொரு சிறப்பு ஒரே பாடலில் இருவேறு வரலாற்றுச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

இந்நூலின் காலம் கடைச்சங்ககாலம் என்பர். கிரேக்க மன்னன் மாவீரன் அலெக்ஸாண்டர் இந்தியாவின்மீது படையெடுத்தான். அப்போது மகத நாட்டை நந்தர் ஆண்டனர். அவர்களின் தலைநகரம் பாடலிபுத்திரம் படையெடுப்பைக் கண்டு அஞ்சிய நந்தர் தம் பொன்னையும், மணியையும் பாதுகாக்க முற்பட்டனர். வலிய பெட்டி ஒன்றைச் செய்து அதில் ஆபரணங்களை வைத்துப் பூட்டி பாடலிபுத்திரத்தின் அருகே ஓடும் கங்கையாற்றின் நீர்ப்போக்கை இரண்டாகப் பிரித்து ஆற்றின் அடியில் அறையொன்று அமைத்து இதில் அப்பேழையை வைத்து நீர்ப்புகாதவாறு மூடினர். பின் ஆற்றுநீர் முன்போலவே செல்லுமாறு விடுத்தனர். இச்செய்தியை அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. பொருள்தேடச் சென்ற தலைவன் குறித்த காலத்தில் திரும்பவில்லை. பிரிவாற்றாமையினால் வருந்தும் தலைவி மேற்குறித்த செல்வத்தையே தலைவன் நாடிச் சென்றுள்ளானோ என ஐயமுடன் தோழியிடம் வினவுகின்றாள்.

**"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலில் குழிஇக் கங்கை**
**நீர் முதல் கரந்த நிதியங் கொல்லோ"** **(அகம்: 265 (4-6)**

என்கிறாள். மேலும் மௌரியர் காலத்தை ஒட்டிச் சங்க இலக்கியம் தோன்றின என்பதற்கு உமட்டுக்கிழார் மகனார் பரங் கொற்றனாரின் பாலைப்பாடல் சான்றாக அமைந்துள்ளது.

**"விண்பொரு நெடுங் குடை இயல்தேர் மோரியர்**
**பொன் புனை திகரி திரிதாக் குறைத்த**
**அறை இறந்து அகன்றனர் ஆயினும் எனையாதுஉம் நீடலர்"**
**(அகம் 69 (10-13)**

என்னும் பாடலில் மௌரியர் பாறைகளை உடைத்துத் தேர் செல்ல வழியினை உருவாக்கினர் என்னும் குறிப்பு உள்ளது. இப்பாடல்களின் வழி அகநானூற்றுப் பாடல்கள் இக்காலக் கட்டத்திலேயே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரமுடிகிறது.

**புறநானூறு**

புறநானூறு புறப்பொருள் பற்றிப் பேசும் நானூறு பாடல்களைக் கொண்டமைந்துள்ளது. பண்டைத் தமிழர்தம் புறஒழுக்கம் பற்றிக் கூறும் பாடல்கள் அடங்கிய தொகுப்பாதலின் இந்நூலுக்குப் புறநானூறு என்று பெயர். 'புறம்' என்ற சொல்லுக்கு, வெளியிடம், அன்னியம், வீரம், பின்புறம், இடம் எனப் பலபொருள் சுட்டப்படுகிறது. இந்நூலுக்குப் புறம், புறப்பாட்டு, புறம்பு என்ற பெயர்கள் உள்ளன. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு இலக்கிய வகைகளை அகம், புறம் என இரண்டாகப் பிரித்தனர். அகம் என்பது வீட்டு வாழ்க்கையையும் புறம் என்பது நாட்டு வாழ்க்கையையும் குறிக்கும். புறம் என்பது கண்ணால் பார்க்கவும். வாயினால் பேசவும் வெளிப்படையாக நடைபெறும் நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகிறது. மேலைநாட்டிலிருந்து கிறித்தவ சமயத்தைப் பரப்பவந்த ஜி.யு.போப் அவர்களின் நெஞ்சைக் கவர்ந்த இலக்கியங்களுள் ஒன்று புறம். இந்நூலின் சிறப்பினை உணர்ந்த அவர் சில பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவங்கள் பலவற்றைத் தன்னுள் கொண்டுள்ளது.

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்"** **(புறம் 192:1)**

**உண்பது நாழி உடுப்பவை இரண்டு** **(புறம் 189:5)**

**செல்வத்தின் பயன் ஈதல்** **(புறம் 189:7)**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே** **(புறம் 18:19)**

இப்பாடல்கள் உலகமக்களுக்குப் பொதுநிலையில் பல வாழ்க்கை உண்மைகளை எடுத்துரைக்கிறது.

இந்நூல் நானூறு வெண்பாக்களைக் கொண்டு நான்கு அடிச்சிறுமையும் 40 அடிப்பேரெல்லையும் கொண்டு புறப்பொருள் கருத்துக்களைத் தழுவி அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்தைச் சேர்த்து மொத்தம் 398 பாடல்கள் கிடைத்துள்ளன. இவற்றில் மூன்று அழிந்துவிட்டது. 44 பாடல்களுக்குப் பல வரிகள் அழிந்தன. இடையிடையே சிலசொற்கள் சிதைந்துவிட்டன. இன்று சிதையாமல் கிடைக்கும் மொத்தப்பாடல்கள் 358 மட்டும்.

**புறநானூற்றுப் பாடல்கள்**

| முற்றும் கிடைக்காத பாடல்கள் | தொடக்கமில்லாத பாடல்கள் | இடையில் சில பகுதிகள் இல்லாத பாடல்கள் | | | | | பிற்பகுதியில்லாத பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 267, 268 | 328, 370 | 282 | 283 | 285 | 288 | 306 | 244, 355, 361 | |
| | | 323 | 328 | 333 | 334 | 335 | | |
| | | 337 | 339 | 340 | 41 | 345 | | |
| | | 347 | 352 | 353 | 361 | 362 | | |
| | | 366 | 373 | 377 | 379 | 380 | | |
| | | 383 | 384 | 387 | 388 | 390 | | |
| | | 391 | 393 | 395 | 396 | 398 | | |
| | | 399 | 400 | 317 | 321 | 357 | | |
| **2** | **2** | **40** | | | | | **3** | **47** |

| | | |
|---|---|---|
| முழுமையாகக் கிடைத்துள்ள பாட்டுக்கள் | : | 352 |
| சில பகுதிகள் இல்லாத பாட்டுக்கள் | : | 45 |
| முற்றும் கிடைக்காத பாட்டுக்கள | : | 2 |
| கடவுள் வாழ்த்து | : | 1 |
| | | **400** |

இதன் திணை துறைகள் பிற்காலத்தன. அவற்றில், 11 திணைகளுக்கு உரிய பாடல்கள் கண்டறியப்பட்டுள்ளன.

| வ.எண். | திணை | பாடல்கள் |
|---|---|---|
| 1. | வெட்சி | 5 |
| 2. | கரந்தை | 12 |
| 3. | வஞ்சி | 12 |
| 4. | காஞ்சி | 31 |
| 5. | நொச்சி | 6 |
| 6. | தும்பை | 27 |
| 7. | வாகை | 77 |
| 8. | பாடாண் | 143 |
| 9. | பொதுவியல் | 70 |
| 10. | கைக்கிளை | 3 |
| 11. | பெருந்திணை | 5 |

இவற்றில் 244, 282, 289, 323, 355, 361 ஆகிய 6 பாடல்களுக்குத் திணைப்பெயர்கள் அறியமுடியவில்லை. சில பாடல்களுக்கு இரு திணைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலின் பல பாடல்கள் வேந்தர்களைப் பற்றியும் குறுநில மன்னர்களைப் பற்றியும் பாடப்பட்டுள்ளன. அவற்றில் 138 பாடல்கள் 43 வேந்தர்களைப் பற்றியும், 141 பாடல்களில் 48 பாடல்கள் குறுநில மன்னர்களைப் பற்றியும், 119 பாடல்களுக்குப் பாடப்பட்டவர்களின் பெயர் தெரியவில்லை. இவற்றில் 138 பாடல்கள் மூவேந்தர் பற்றிப் பாடப்பட்டுள்ளன.

**அரசர்கள் மற்றும் குறுநில மன்னர்கள்**

| எண். | அரசர்கள் | பாடப்பட்டுள்ள அரசர்கள் | பாடப்பட்டுள்ள பாட்டுக்கள் | பாட்டுக்களின் எண்கள் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| 1. | வேந்தர்கள்<br>சேரர் – 18<br>பாண்டியர் – 12<br>சோழர் – 13 | 43 | 27 | 2, 5, 8, 11, 13, 14, 17, 20, 22, 48, 50, 53, 54, 62, 63, 65, 74, 210, 211, 229, 245, 267, 369, 387, 399 |
| | | | 37 | 3, 6, 9, 12, 15, 18, 19, 21, 23, 26, 51, 52, 55-59, 64, 71, 72, 76-79, 182-184, 188, 196, 198, 246, 247, 367, 371, 372 |
| | | | 74 | 4, 7, 10, 13, 16, 27, 47, 58, 60-63, 66-70, 73, 75, 80-85, 190, 197, 203, 212-216, 219-228, 266, 367, 370, 373, 377, 376, 382, 386, 393, 397, 400 |
| 2. | குறுநில மன்னர்கள் | 48 | 141 | |
| 3. | பாடப்பட்டவர்களின் பெயர் தெரியாத பாட்டுக்கள் | --- | 121 (-2)<br>119 | 267, 268 இரண்டு பாட்டுக்களும் முழுமையாகக் கிடைக்காதவை |

| வ.எண். | வேந்தர்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 1. | சேரர் | 27 |
| 2. | சோழர் | 74 |
| 3. | பாண்டியர் | 37 |

மேலும் 141 பாடல்களில் 48 குறுநில மன்னர்கள் பற்றிப் பாடியுள்ளனர்.

| வ.எண். | குறுநில மன்னர்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 1. | அதியமான் நெடுமானஞ்சி | 23 |
| 2. | வேள்பாரி | 17 |
| 3. | ஆய் அண்டிரன் | 14 |
| 4. | பேகன் | 7 |
| 5. | குமணன் | 7 |
| 6. | காரி | 6 |
| 7. | நாஞ்சில் வள்ளுவன் | 5 |
| 8. | பிட்டங்கொற்றன் | 5 |
| 9. | எழினி | 4 |

இவற்றைத்தவிர 29 குறுநில மன்னர்கள் ஒவ்வொரு பாடலிலும் 6 குறுநில மன்னர்கள் இரண்டிரண்டு பாடல்களிலும் 4 குறுநில மன்னர்கள் மும்மூன்று பாடல்களிலும் பாடப்பட்டுள்ளனர். இவர்களின் பாடப்பட்டவர் பெயர் தெரியவில்லை. பாடப்பட்டவர்களின் பெயர் தெரியாமல் அமைந்துள்ள பாடல்கள் தாபதநிலை முதல் மறக்காஞ்சி ஈறாக மூன்று துறைகளில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்நூலை 157 புலவர்கள் பாடியுள்ளனர். இவர்களில் 15 பெண்பாற்புலவர்கள் 142 ஆண்பாற் புலவர்கள். இவர்களில் 76 புலவர்கள் பாடிய பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளன. இந்நூலின் பாடலின் இறுதியில் பாடினோர், பாடப்பட்டோர், பாடப்பட்ட சூழல் போன்ற பல குறிப்புகள் காணப்படுகின்றன. புரவலனை விட புலவனே போற்றப்பட்ட உண்மையினை அவனை அவர் பாடியது என்று அரசனை அவன் என்றும் புலவரை அவர் என்றும் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. மேலும் புலவர்களில் கபிலர், பரணர் போன்றோர் இயற்பெயரோடு விளங்கினாலும் எஞ்சிய புலவர்கள் ஊராலும், உறுப்பாலும், தொழிலாலும், மரபாலும் பெயர்பெற்றுள்ளனர். அகப்பாடல்களைப்போல் இரும்பிடத்தலையார், கொடித்தலை விழுத்தண்டினார் போன்றோர்தாம் பாடிய பாடல்களினால் பெயர்பெற்றனர்.

**(எ.கா)** **"இரும் பிடர்த்தலை இருந்து**

**கருங் கை உள்வாள் பெரும்பெயர் வழுதி"** **(புறம் 3: 11-12)**

என்கிறது. அரசர்க்கு நீதி பல புகட்டி உலகில் நீதிகாத்தப் புலவர்களில் இவரும் ஒருவர். இவர் பாண்டிய மன்னன் ஒருவனிடம் வாக்குத்தவறாத நாணயம் உடையவனாக அவன் வாழவேண்டும் என்பதை,

**"நிலம் பெயரினும் நின்சொல் பெயரல்"** **(புறம்: 3:14)**

என்று அறிவுரை கூறுகிறார். போரின்போது அறமுறை பிறழாமல் போர்முறைகளைக் கைக்கொள்ளுமாறு புலவர்கள் துணிவுடன் எடுத்துக்கூறிய நிகழ்ச்சிகள் பலவற்றை இந்நூல் காட்டுகிறது. அவற்றில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுக்கும் அவன் பகைவன் மலையமானுக்கும் போர் மூண்டது. போரில் மலையமான் மாண்டான். ஆயினும் கிள்ளிவளவனின் சினம் தணியவில்லை. போரில் உயிர்பிழைத்த மலையமானின் சிறுபிள்ளைகள் இருவரை யானையின் காலால் மிதிக்க உத்தரவிட்டான். யானையும் வந்தது. சிறுவர்கள் அழுவதை மறந்து தமக்கு எதிரே நிற்கும் யானையைப் பார்த்துச் சிரித்தனர். இந்நிகழ்ச்சி புலவர் கோவூர்கிழார் உள்ளத்தை உருக்கியது. இதன் வாயிலாக அவர் கிள்ளிவளவனுக்கு அறம் உணர்த்தினார். கிள்ளிவளவனின் முன்னோர் பெருமைகளை அறிவுறுத்தி அதன் வாயிலாக இந்தப் பிள்ளைகளை விடுவிக்க எண்ணினார்.

கிள்ளிவளவனே உன் முன்னோனாகிய சிபிச்சக்கரவர்த்தி ஒரு புறா தன்னைத் தஞ்சம் அடைந்தது என்ற காரணத்திற்காகத் தன்னையே தராசுத்தட்டில் ஏற்றியவன். அப்படிப்பட்ட மரபில் வந்த நீ இந்தச் செயலைச் செய்யலாமா? இதோபார் இந்தச் சிறுவர்கள் அழுவதைக்கூட மறந்து யானையைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். இவர்களைக் கொல்லுவது அறமாகுமா. நீ விரும்புவதைச் செய்வாயாக என்று அவனைத் திருந்துமாறு அறிவரை கூறினார். இம்மையில் நன்மை செய்தால் மறுமையில் பேறு கிடைக்கும் என்பதற்காகப் பயன்கருதி அறக்காரியங்களைச் செய்யச் சொல்லவில்லை. அவற்றின் சிறப்பை உணர்த்தி உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய்ஆண்டிரன் ஆகியோர் அறம்செய்யத் தூண்டினர். இதனை

**"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்**
**அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்**
**சான்றோர் சென்ற நெறியென**
**ஆங்கு பட்டன் றவன்கைவண் மையே"** **(புறம்: 134)**

என்கிறது. மேலும்,

- ❖ அரசர்களது புதல்வர்கள் ஆட்சியுரிமை வேண்டித் தம் தந்தையை எதிர்த்து நின்றபோதும் (புறம்: 213)
- ❖ ஒரு குடியைச்சேர்ந்த இருவர் அரசுரிமைக்காகப் போரிட முனைந்தபோதும் (புறம்:45)
- ❖ அண்ணன் அரசுரிமையைத் தம்பி பறித்துக்கொண்டபோதும் (புறம்:158) என்கிறது

இவ்வாறு பல்வேறு சூழல்களில் புலவர் பெருமக்கள் நீதியினை எழுத்துக்கூறி அறத்தை நிலைநாட்டியுள்ளனர். மேலும் புலவர்கள் மன்னர்களிடம் தங்களுக்கு இருந்த நட்பின் உரிமையால் அவர்களை இடித்துரைத்து நல்வழிப்படுத்தினர். புலவர்கள் தங்கள் பாடல்களில் பிற புலவரைக் குறித்துப் பாடியிருக்கின்றனர்.

| **எண்** | **பாடிய புலவர்** | **பாடப்பட்ட புலவர்** | **பாட்டு எண்.** |
|---|---|---|---|
| 1. | ஔவையார் | பரணர் | 99 |

| | | | |
|---|---|---|---|
| 2. | கண்ணகனார் | பிசிராந்தையார் | 218 |
| 3. | கபிலர் | கழாத்தலையார்<br>பாரி மகளிர் | 202 |
| 4. | கோப்பெருஞ்சோழன் | பிசிராந்தையார் | 215 |
| 5. | கோவூர்க்கிழார் | இளந்தத்தன் | 47 |
| 6. | பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் | மாங்குடி மருதனார் | 72 |
| 7. | பிசிராந்தையார் | அறிவுடைநம்பி | 184 |
| 8. | பெருஞ்சித்தனார் | மோசிகீரனார் | 158 |
| 9. | பேய்மகள் இளவெயினி | சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ | 11 |
| 10. | பேரலவாயர் | பூதபாண்டியன் தேவிபெருங்கோப்பெண்டு | 247 |
| 11. | பொத்தியார் | பிசிராந்தையார் | 127 |
| 12. | பொருந்தில் இளங்கீசனார் | கபிலர் | 53 |
| 13. | மாறோக்கத்து நப்பசலையார் | கபிலர் | 174 |

புலவர் பெருமக்கள் மட்டுமல்லாது அரசர்களும் அரசமாதேவியரும் வள்ளல்களும் படைத்தலைவர்களும் என்றிவ்வாறு சமுதாயத்தின் பலதரப்பட்ட குடியினரும் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. இந்நூல் கி.மு.1000க்கும் - கி.பி.250க்கும் இடைபட்ட நீண்டகாலப்பரப்பில் பாடப்பட்ட இலக்கியமாகப் புறநானூற்றை இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்

உலகத்தோடு ஒட்டி வாழக்கூடிய வாழ்வியல் உண்மைகளை அக்கால மக்களின் அரசியல், சமுதாய நிலை, கல்வி, நாகரிகம், கலை வளர்ச்சி, வீரம், கொடை, ஆடை, அணிகலன், பழக்கவழக்கங்கள், வாணிபம் ஆகியவற்றோடு ஒப்பிட்டு அறிய உதவும் இலக்கியப் பேழையாக இந்நூல் திகழ்கின்றது. நாட்டு மக்களின் வாழ்வாதாரத்திற்கு முதன்மையானவன் மன்னன்தான். அதனால் மக்கள்,

**“நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**
**அதனால் யான் உயிர் என்பது அறிக்கை**
**வேல் மிகு தானை வேந்தர்க்குக் கடனே”** **(புறம்: 186)**

என்கிறது. மன்னன் முறை அறிந்து வரிவசூலித்தால் அவன் நாடும் மக்களும் பயன்பெறுவர். அதிகமாக வரிவசூலித்தால் யானைப்புக்க நிலம்போல நாடும் மக்களும் கெடுவர் என்பதை,

**“காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே**
**மா நிறைவு இல்லதும் பன்னாட்டு ஆகும்**
**நூறு செறுவாயினும் தமிந்துப்புக்கு உணினே**
**வாய்புகு அதனினும் கால் பெரிது கெடுக்கும்**
**யானை புக்க நிலம் போலத்**
**தானும் உண்ணான் உலகமும் கெடுமே”** **(புறம் 184)**

என்று விளைந்த நெல்லைச் சேதமில்லாமல் அறுத்துக் கவளம் கவளமாய் உண்டால் குறைந்த நிலத்தில் விளைந்த நெல்லும் பல நாட்களுக்கு உணவாகும். நூறு வயல்களில் நெல் நன்றாக விளைந்தாலும் ஒரு யானை அவ்வயலில் தனியாக இறங்கி அந்த நெல்லை உண்ணத் தொடங்கினால் அவ்வளவும் பாழாகிப் போய்விடும். அதன் வாயில் போகும் நெல்லை விட அதன் கால்களால் சேதமாகும் நெல்லே மிகுதியாக இருக்கும். இவற்றை உணர்ந்து மன்னன் குறைவாகப் பகுதிபகுதியாக வரிவாங்கினால் நாட்டு மக்கள் செழிப்படைவர். இவ்வறம் உலக மன்னருக்கும், மக்களுக்கும் உணர்த்தப்பட்ட வாழ்வியல் உண்மை. மேலும் வாழ்வில் 'விதி' என்பதை நம்பினர். விதி வழியே எல்லாம் நடக்கும் என்பதை 'யாதும் ஊரே யாவரும் கேளீர்' என்ற கருத்தோடு இணைந்து மிக அருமையாகக் கூறுகிறார் கணியன் பூங்குன்றன்.

**"கல்பொருது இரங்கும் மல்லர் பேர் யாற்று**
**நீர்வழிப் படுஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படுஉம்"** **(புறம்: 192: 8-10)**

என்று வெள்ளத்தின் வழியே இழுத்துச் செல்லப்படும் தெப்பம்போல் உயிர் விதி வழியே இழுத்துச் செல்லப்படும் என்கிறது. இந்நூல் வாழ்வியலோடு பண்டைத் தமிழகத்தின் அரசியல் வரலாற்றையும், சமூக வரலாற்றையும் அறிவுறுத்தும் அரிய கருவூலமாகத் திகழ்கின்றது. மேலும் இந்நூலின் பாடல்கள் உயர்ந்த வாழ்வியல் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

**"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்"** **(புறம் 195: 6-7)**

**"பெரியோரை வியத்தலு மிலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே"** **(புறம் 192: 12-13)**

**"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"** **(புறம் 183: 1-2)**

என்று புறக்கருத்துக்களோடு வாழ்வின் நிகழ்ச்சிகள் தொடர்புபடுத்திப் பாடப்பட்டுள்ளன. இப்பாடல்கள் இக்கால மக்களின் வாழ்க்கைக்கும் பொருந்தும். வகையிலும் உலக மக்களுக்குப் பல அறக்கருத்துக்களை உணர்த்தும் வகையிலும் அமைந்துள்ளன.

**தொகுப்புரை**

தமிழ்மொழி பழமையானது அப்பழமையான மொழி பேசிய மக்களின் வாழ்க்கை மரபுகள், உணர்வுகள் போன்றவற்றை இலக்கியமாகப் பதிவு செய்வதற்கு ஒரு இலக்கண வரைமுறையை வகுத்துக் கொடுப்பது சங்க இலக்கியம். இது பழமையான நூல் மட்டுமல்லாமல் பழங்காலத் தமிழக மக்களின் வாழ்வியலைக் குறிப்பிட்டுக் காட்டும் காலக்கண்ணாடி என்பதனை அறியமுடிகிறது.

தமிழர்கள் இயற்கையோடியைந்த இன்பவாழ்வு வாழ்ந்தனர். அத்தகைய வாழ்க்கைக்குத் தமிழகம் துணைநின்றது இயற்கைச் சூழலில் வாழ்வு நடத்திய பழந்தமிழரின் கற்பனைக் கனவுகளும் இயற்கையோடு இயைந்தனவாகவே விளங்கின. அத்தகைய கனவுகள் பழந்தமிழரின் கலைச்செல்வமான சங்க இலக்கியத்தில் பதிவாகியிருப்பது ஆராயப்பட்டுள்ளன.

சங்கம் தோன்றிய வரலாறு முச்சங்கம் பற்றிய கருத்து வரலாற்றுப் பின்னணி புலவர்கள் மற்றும் உரையாசிரியர்கள் கூறிய கருத்து ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய நூலான எட்டுத்தொகை வழி அகப்பொருள் புறப்பொருள் பற்றிய செய்தி ஆராய்ந்து அதன் சிறப்புச் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. சிறந்த கருத்துக்களின் பதிவே இலக்கியம் என்பர் எமர்சன். சங்கநூல் வாழ்வைக் கூறும்போதெல்லாம் இடையிடையே அரிய கருத்துக்களைப் புகுத்திச் செல்லும் கருத்துக் கருவூலமாகத் திகழ்வது ஆராயப்பட்டுள்ளது.

இலக்கியமும், வரலாறும் பிரிக்க முடியாத இரட்டைக் குழந்தைகள் இக்கூற்றிற்கு ஏற்ப சங்க இலக்கிய நூலான பதிற்றுப்பத்தும், புறநானூறும் முற்றும் வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கின்றன. சங்க இலக்கியம் சங்ககால வரலாறே தெரியாமல் மறைந்திருக்கும். மேலும் இந்நூல்களின் பாடல்கள் எந்தச் சூழலில் எழுதப்பட்டது. எப்பாவகையைச் சேர்ந்தது பாடிய புலவர்கள், தொகுத்தவர் தொகுப்பிக்கச் செய்தவன் ஆகியவை ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

பழமரம் நாடும் பறவை போன்ற நாடோடி வாழ்வினை மேற்கொள்ளக் கூடியவர்கள் புலவர்கள் அத்தகைய புலவர்கள் பிறர் துயர்களைய வழிகூறத் தான் பெற்ற பரிசைப் பகிர்ந்தளித்துச் செம்மையாக வாழ்ந்தனர். இவர்கள் சில உயரிய பண்புகளைப் பெற்று வாழ்ந்தனர். தாம் நேராகக் கண்டவற்றையும் உள்ளத்தால் எண்ணித்துய்த்தவற்றையும் உள்ளவாறு கூறினர்.

எட்டுத்தொகையின் எட்டு நூல்களுக்கும், நூலின் விளக்கம் அமைப்பு, கடவுள் வாழ்த்து புலவர்கள் வரலாறு பாடல்களின் சிறப்பு, வாழ்வியல் சிந்தனைகள் காலவரலாறு போன்றவை ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.2:3: 1-2
2. எம்மார் அடைக்கலசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, ப-13
3. மேலது, ப-13
4. மேலது, ப-13
5. மேலது ப-13
6. மேலது ப-13
7. மேலது ப-13
8. வில்லிபாரத பாயிரம் ப-1
9. புறப்பொருள் வெண்பாமாலை ப.4: 1-2
10. பாரதிதாசன் கவிதைகள் பா.21: 8-10
11. எம்மார் அடைக்கலசாமி, ப.34
12. கி. இராசா, தமிழ் இலக்கிய வரலாறு, ப:13
13. வ.சுப. மாணிக்கம், தமழ்க்காதல், ப-35
14. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப-35
15. இரா. தண்டாயுதம், ப.231-232
16. தமிழண்ணல், உலகத்தமிழ் இலக்கிய வரலாறு, ப-113
17. இறையனார் அகப்பொருள் உரை, சூ-1
18. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப-144

# இயல் - 2

## ஐவகை நிலங்கள்

**முன்னுரை**

இயற்கையமைப்புக்கு ஏற்ப மக்கள் வாழ்க்கை ஐந்து விதமாக அமைந்திருந்தது. குறிஞ்சிநிலம், முல்லைநிலம், மருதநிலம், நெய்தல்நிலம், பாலைநிலம், என்னும் நிலப் பிரிவுப்படி அவர்களுடைய வாழ்க்கையும் ஐந்து வகையாக இருந்தது. மலையும் குன்றுகளும் உள்ள இடங்கள் குறிஞ்சிநிலம் என்று பெயர் பெற்றன. மேற்குத் தொடர்ச்சி மலைகளும், கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் தமிழ்நாட்டில் அமைந்துள்ளன. மலைகளின் மேலும் மலைச்சாரல்களிலும் மக்கள் வாழ்ந்து வந்தனர். மலைகளுக்குக் கீழே இருந்த காடுகளும் காடு சார்ந்த இடங்களும் முல்லை நிலம் என்று பெயர் பெற்றன. இங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை மலைகளில் வாழ்ந்தவர்களின் வாழ்க்கையை விட வேறு விதமாக அமைந்திருந்தது. ஆறுகள் பாய்கிறதும் ஏரிகுளங்கள் உள்ளதுமான சமவெளிகள் மருதம் என்று பெயர் பெற்றன. இங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை மற்றவர்களுடைய வாழ்க்கையைவிட மேலானதாக இருந்தது. கடற்கரையோரமாக இருந்த நிலங்கள் நெய்தல் நிலம் என்று பெயர் பெற்றன. மேற்குக் கடற்கரையையடுத்திருந்த சேரநாடும், துளுநாடும் தமிழ்நாடாக இருந்தபடியால் பழந்தமிழகத்துக்கு மிக நீண்ட கடற்கரை இருந்தது. நெய்தல் நிலத்தில் வசித்தவர் வாழ்க்கை துன்பகரமானதாக இருந்தது. அவர்கள் நாள்தோறும் கடலில் வெகுதூரம் சென்று மீன் பிடித்து வந்து வாழ்க்கையை நடத்தினர்.

இந்த நால் வகையான இயற்கை நிலம் அல்லாத வறண்ட பிரதேசம் பாலை நிலம். இங்கு நிலையாகத் தங்கி மக்கள் வாழவில்லை. யாரேனும் இங்கு வசித்தார்கள் என்றால் அவர்களின் வாழ்க்கை கொடுமையாக இருந்திருக்கும். இவ்வாறு இயற்கையாக அமைந்த வெவ்வேறு சூழ்நிலைகளில் வசித்த அக்காலத்துத் தமிழ் மக்களுடைய வாழ்க்கை வெவ்வேறு வகையாக இருந்தன. அவர்களுடைய உணவு, தொழில், வாழ்விடம் வெவ்வேறாக இருந்தன. அவற்றை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**நிலம்**

உலகம் நிலம்,நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களால் ஆனது. நிலம் என்பது மக்கள் வாழும் இயற்கைச் சூழலுடன் சார்ந்த பகுதி. "நிலம் என்பதற்குத் தரை, மண், பூமி, இடம், வயல், பதவி நிலத்திலுள்ளார், எழுத்து, அமைச்சர்களாகிய இசைப்பாட்டின் தானம், விடயம், மேன்மாடம், கள்ளிவகை, என்று தமிழ் அகராதி பொருள் கூறுகிறது"[1] நிலமும் பொழுதும் (Space and Time) மக்களின் வாழ்வோடு தொடர்புடையது. இவற்றின் முதன்மை கருதி தொல்காப்பியர் இவை இரண்டையும் முதற்பொருளாகக் குறிப்பிட்டுள்ளார்.

**“முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பு எனமொழிப இயல்பு உணர்ந்தோரே”** **(தொல் : 950)**

என்கிறது. நிலம் பல அணுக்களால் ஆனது நிலத்திலிருந்து ஆகாயம் உயர்ந்துள்ளது. காற்று ஆகாயத்தைச் சார்ந்துள்ளது. காற்றிலிருந்து தீ பிறக்கிறது. தீயோடு மாறுபட்டு நீர் விளங்குகிறது இதனை,

**“மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புவதை வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரு மென்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போல”** **(புறம் 2:1-6)**

என்கிறது. மேலும் ஐம்பெரும் பூதங்களும் தனித்த நிலையில் இல்லாமல் ஒன்றையொன்றைச் சார்ந்துள்ளதை அறிய முடிகிறது. ஐம்பெரும் பூதங்கள் பற்றிய செய்திகளைப் பதிற்றுப்பத்து, பரிபாடல் போன்ற நூல்களில் காணமுடிகிறது. இவ்வுலகம் ஐம்பெரும் பூதங்களால் ஆனது என்பதை,

**“நிலம் தீ நீர் வளி விசும்பொடைந்தும்**
**கலந்த மயக்கம் உலகம்”** **(தொல்-மரபு-90)**

என்கிறது தொல்காப்பியம். Space என்ற ஆங்கிலச் சொல் தமிழ் மொழியில் இடம், வெளி போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. இதைப் போன்றே Time என்ற சொல்லும் தமிழில், காலம், நேரம், பொழுது போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. தொல்காப்பியர் நிலம், பொழுது (Space and Time) ஆகிய இரண்டையும் முறையே நிலம், இடம், திணை என்றும், காலம், பொழுது என்றும் சுட்டுகின்றார். நிலத்தையும், பொழுதையும் அடிப்படையாகக் கொண்டே ஏனைய பொருள்கள் தோன்றுகின்றன.

பழந்தமிழ் மக்கள் வாழ்ந்த நிலப்பகுதிகள் பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. தொல்காப்பியர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனப்பாகுபாடு செய்துள்ளார்.

**“மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சேயோன் மேய மைவறை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் யுலகமும்**
**வருணன் மேய பெருமணல் யுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”** **(தொல்-பொருள்-அகத்-5)**

என்று காடும் காடு சார்ந்த நிலப்பகுதி முல்லை என்றும், மலையும் மலை சார்ந்த நிலப்பகுதி குறிஞ்சி என்றும், வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதி மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த நிலப்பகுதி நெய்தல் என்றும், இதைத் தவிரப் ‘பாலை’ என்ற

நிலமும் குறிப்பிடப்படுகிறது. தொல்காப்பிய அகத்திணையியலில் கூறப்படும் கைக்கிளை,முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் பெருந்திணை, என்ற ஏழுதிணைகளில் 'நடுவண் ஐந்திணை" என்பது முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்று இளம்பூரணரின் உரை கூறுகிறது. குறிஞ்சி, முல்லை என்ற நிலங்களைத் தழுவியே பாலை நிலம் உருவாகிறது. காடாகிய முல்லை நிலமும் மலையாகிய குறிஞ்சி நிலமும் கோடை வெப்பத்தால் தத்தம் பசுமை இழந்து திரிந்த நிலையே பாலை எனப்படும். மேலும் "கால வேற்றுமையால் இரண்டு திங்கள் இயல்பு மாறித் தோன்றும் நிலச் செய்கையே பாலை நிலமாகும்"[2] என்கிறார். வ.சுப.மாணிக்கம் இதனை,

**"வேலைங் கிழவனோடு வெங்கதிர் வேந்தன்**
**தாலைத் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்" (சிலம்பு 11:62-66)**

என்கிறது சிலப்பதிகாரம். கோடைக்காலத்தில் மரஞ்செடி கொடிகள் உலர்ந்து நீர் நிலைகள் வறண்டு காணப்படும் இடங்களைப் பாலை என்று கூறலாம். இந்த நிலப்பாகுபாடுகள் புவியின் அமைப்பாக வகைப்படுத்தப்பட்டுள்ளதை உணர முடிகிறது.

**திணை**

திணை என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற இவ்வைந்து நிலங்களின் பாகுபாடு திணை என்று கூறப்படுகிறது. திணை என்னும் சொல் குடி, நிலம், இல், திண்ணை, குடிப்பிறப்பு, குலம், சொல், பகுப்பு, மண்ணுலகு, ஒழுக்கம், இடம், பூமி, ஒழுகலாறு, நிகழ்ந்த இடம் என்னும் பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. ஆரம்பக் காலத்தில் குடும்பமும் குழுவும் சேர்ந்திருந்த குடியிருப்பைக் குறிப்பிடுகின்றது. கால வளர்ச்சியில் சொற்பொருள் மாறுதலடைந்து மக்களின் ஒழுக்கத்தைச் சுட்டுகின்றது. திணை என்பது நிலம், நிலத்தில் வாழும் மக்கள் கூட்டத்தையும் அவர்களுடைய ஒழுக்கத்தையும் சுட்டுகின்றது. 'ஒழுக்கத்திணை' என்று கொண்டு அதன் அடிப்படையில் பாகுபாடு செய்தால் திணை ஏழு வகைப்படும் என்று கூறுவர் தொல்காப்பியர். இதனை

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல் - பொருள்-1)**

என்று பாகுபடுத்தியுள்ளார். மேலும் திணை என்பதற்குக் கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டையும் சேர்த்து ஒழுக்கம் என்றே பொருள் கொண்டுள்ளார். நச்சினார்க்கினியர் பொருளதிகாரத்தில் திணை என்பது மக்களின் ஒழுகலாற்றையும் அவ்வொழுகலாற்றிற்குரிய பண்பும் தொழிலுமாகிய செயல்களையும் அவற்றிற்கு அடிப்படையான துணைப்பொருள்களையும் ஒருங்கு சுட்டும் இலக்கணக் குறியீடாகும்.

அது இலக்கண முறைமையில் கூறுமிடத்து முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றற்கும் உரிமையுடையதொரு தொகுதிப் பெயராக அமைவதாயிற்று என்கிறார். ச.பாலசுந்தரம் "மக்கள் ஒழுகலாறு அதற்கு அடிப்படையான முதல், கரு, உரி இவற்றின் ஒட்டு மொத்தமே அவற்றின் குறியீடே திணை"[3] என்கிறார். திணை என்பதை,

**"மண் திணிந்த நிலனும்" (புறம்:2)**

**"திணி மணல் அடைகரை" (குறுந் : 165)**

**"வான் திணைப் புரையோர்" (குறிஞ்சி : 205)**

போன்ற தொடர்களால் திண், திணி, திணை, என உருவாகும் சொல் வடிவை அறியலாம். திண்ணிதான நிலத்தையே முதலில் திணை என்னும் சொல் குறித்தது என்பது இதனால் புலனாகிறது. இத்திணைப் பிறத்தல், இக்குடியில் பிறத்தல் (குறுந்:45) விழுத்திணை சிறந்தகுடி (புறம்:27) என்னும் மூத்த விழுதிணை, வசையில் விழுதிணை என்னும் அடைமொழிகளும் இவ்வுண்மையைக் காட்டும். பின் மக்களின் ஒழுக்கத்தையும் இச்சொல் குறித்தது. மலைபடுகடாத்தில் 'தொல்திணை மூதூர்" எனவரும் இடத்தில் பழையதாகிய உயர்ந்த ஒழுக்கத்திணை உடைய பழைய ஊர்கள் என்று நச்சினார்க்கினியர் உரை எழுதுகிறார். மேலும் திணையை "எண்ணெய் விளக்காகிய சுடர் இருந்த இடமும் விளக்கு எனப்பட்டது போல இனி ஒரு சாரார் ஒழுக்கத்தையும் திணை என்ப ஐந்திணையையும் திணை என்ப"[4] என்ற இறையனார் களவியல் கூற்றிலிருந்து அறியலாம். தொல்காப்பியத்தில் திணை என்பது இலக்கணச் கலைச் சொல்லாகவும், இலக்கியச் கலைச் சொல்லாகவும் பயன்படுகிறது. அறிவு ஒழுக்கங்களால் சிறந்த மக்களைச் சுட்டும் சொற்கள் உயர்திணை என்றும், மக்களல்லாத அனைத்தையும் சுட்டும் சொற்கள் அஃறிணை என்றும் பாகுப்படுத்தப்படுகிறது. திணை என்பது இலக்கணக் கலைச் சொல்லாகிறது. ஆயினும் பொருளதிகாரத்தில் அது பெரிதும் இலக்கியக் கலைச் சொல்லாகவே ஆளப்படுகிறது.

**திணை – பாகுபாடு**

திணை என்பது அகம், புறம் என இருவகைப்பட்டது. "அகப்பொருளாவது போக நுகர்ச்சி ஆகலான் அதனால் ஆயப்பயன்தானே அறிதலின் அகம் என்றார். புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆயபயன் பிறருக்குப் புலனாதலின் புறம் என்றார்"[5] இளம்பூரணர் இக்கருத்தைப் பின்பற்றி நச்சினார்க்கினியர் சிறிது விரிவான விளக்கம் தருகிறார். "ஒத்த அன்பான ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வை நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்கிறது ஓர் ஆகுபெயராம் இதனை ஒழிந்தன ஒத்த அன்புடையோர் தாமேயன்றி

எல்லோர்க்கும் துய்த்து உணரப்படுதலின் இவை இவ்வாறிருந்தெனப் பிறருக்கும் கூறப்படுதலின் அவை புறமெனப்படும் என்கிறார் நச்சினார்க்கினியர்”[6]. இவற்றிலிருந்து அகம், புறம் என்ற பகுப்பு மக்கள் மன உணர்ச்சி ஒழுக்கம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு அவற்றை உணர்த்தும் இலக்கிய வகைகளுக்குப் பெயராயின என்று உணரலாம். இதனை,

**“அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**

**புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்” (தொல்-பொருள்-59)**

என்று அகத்திணை ஒரு வகை என்பதும் அவ்வகை பற்றிக் குற்றமறத் தெரிந்து கொண்டவர்களுக்கும் புறத்திணை என்ற வகையின் இலக்கணம் எளிதில் புலனாகும் என்பதும் உணர்த்தப்படுகின்றன. அகத்திணையின் உள்வகைகள் ஏழும் திணையென்றே பாகுபாடு செய்யப்படுகின்றன. இதனை,

**“நடுவண் ஐந்திணை நடுவனது ஒழிய” (தொல்-பொருள்-2)**

என்று அகத்திணை ஏழனுள் கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் இடைப்பட்ட அன்பின் ஐந்திணைகளுடன் நடுவனதாகிய பாலைத்திணை தவிர்த்து ஏனைய நான்கு திணைகளும் தனக்கென தனிநிலம் பெறும் என்பது குறிப்பிடப்படுகின்றது. இதனால் அவ்வந்நிலத்தின் பெயரால்தான் வகைப்படுத்தப்பட்டுள்ளன என்பது புலனாகின்றன. எனினும் அவை இங்கு இலக்கிய வகைகள் ஆன பிறகு அவற்றைக் கொண்டு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்றாகப் பிரித்ததில் உள்ள நுட்பமும் விதியும் நுணுகி ஆராயத்தக்கன இதனை மேலும்,

**“புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல்**

**ஊடல், இவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே” (தொல்-பொருள்-16)**

என்கிறார் தொல்காப்பியர். இவற்றில் முதல், கரு, உரி என்ற மூன்றும் ஒத்த மதிப்புடையனபோல மேற்போக்காகக் காண்போர்க்குத் தோன்றும். நிலமோ பொழுதோ இல்லாமல் வாழ்வில்லை. தெய்வத்தின் திருவருள் உணவு முதலியன இல்லாமலும் வாழ்வில்லை இவை இல்லாமல் உரிப்பொருள் என்னும் ஒழுக்க நெறிக்கு இடமேயில்லை ஆதலால் மூன்றாவதாகச் சொல்லியுள்ள உரிப்பொருள் தரத்தால் சிறப்புப் பெற்றுள்ளது என்பதை,

**“முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நவலுங் காலை முறை சிறந்தனவே” (தொல்-பொருள்-3)**

என்கிறார் தொல்காப்பியர். முதற்பொருளும், கருப்பொருளும் கலந்து உரிப்பொருளைச் சிறப்பிக்கலாம். அவற்றுள் ஏதேனும் ஒன்று மட்டும் வந்து உரிப்பொருளைச் சிறப்பிக்கலாம் அல்லது முதலும் கருவும் வராமலேயே உரிப்பொருளை மட்டும் அமைத்துச் சிறப்பிக்கலாம். முதலோ கருவோ இல்லாவிட்டாலும் உரிப்பொருள் கட்டாயம் வேண்டும். முதலும் கருவும் வந்தாலும் வராவிட்டாலும் ‘ஒழுக்கத்தைச் சுட்டும்’ உரிப்பொருளுக்கே தலைமையும் சிறப்பும் தரப்படும். ‘முதற்பொருள் என்னும் பிரிவில் நிலமும் பொழுதும் அடங்கும் கருப்பொருள் என்னும் பிரிவில் தெய்வம்,

உணவு முதலான வாழ்க்கைத் துணைப்பொருள்கள் அடங்கும். உரிப்பொருள் என்னும் பிரிவில் அந்தந்த ஒழுகலாறு அடங்குவதால் சிறப்பைப்பெற்றுள்ளது. உரிப்பொருள் இல்லையேல் பொருட்பயன் இல்லை என்கிறார் நச்சினார்க்கினியர்.

அகப்புறப் பாடல்களுக்குத் திணைப்பெயர் நிலனடிப் படையிலேயே வந்தது. குறிஞ்சி நில மக்கள் பாடிய பாடல்களில் வேட்டையாடலும் திணைப்புனம் காத்தலுமாகிய பழக்கங்கள் காணப்பட்டன. களவு வாழ்க்கை மலைவாழ் மக்களிடம் மேலோங்கிக் காணப்பட்டதால் குறிஞ்சித்திணை களவுத்திணையாயிற்று. மருதநில மக்கள் பயிர் செய்து பண்டமாற்றில் தலைமை பெற்றுச் செல்வக் குடியினராய் வாழ்ந்ததால் அங்கு கலை, ஆடல் பாடல்கள் பரவ, பரத்தமையும் வாழ்வின் ஒரு பகுதியாயிற்று. அம்மருதநிலக் கருப்பொருள்கள் இடம் பெற்றதுடன் முற்கூறிய பரத்தை வாழ்வு தொடர்பான நிகழ்ச்சிகள் பெரிதும் இடம்பெற்றன. இவ்வாறு ஒவ்வொரு நில மக்களும் அந்தந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்ப உணவு. பழக்கவழக்கம் போன்றவற்றைப் பிரித்திருந்தனர். இவற்றிலிருந்து திணைகளும் திணைகளுக்குரிய பாடுபொருள்களும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன.

**அகத்திணை**

இவ்வுலகத்தில் மக்களின் ஆறாவது அறிவிற்குக் காரணமாகிய மனம், புத்தி, சித்தம், முனைப்பு என்னும் கூறுகளைக் கொண்டு விளங்கியதால் மக்களைக் தமிழ் நூலோர் உயர்திணை என வகுத்தனர். அகவாழ்விற்குரிய பல்வேறு பொருட்களின் தேவைகளை நோக்கிய மக்கட் கூட்டமே சமுதாயம் ஆகும். அச்சமுதாய மக்களின் மேன்மை பொருந்திய வாழ்க்கை முறைகளைக் காட்டும் கண்ணாடிகளாக இலக்கியங்கள் திகழ்கின்றன.

அகத்திணை – கைக்கிளை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் பாலை, பெருந்திணை என ஏழு வகைகளை உடையதாகும்.

**புறத்திணை விளக்கம்**

புறத்திணை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு வகைப்படுத்தப்பட்டுள்ளது. இவற்றுள் முன்னைய நான்கும் போர் வகைகள் பற்றியன. வெட்சி என்பது ஆனிரை கவர்தலும், மீட்டலும் பற்றிய போராகும். பிற்காலத்தில் இதனை இரண்டு வகைகளாக்கி வெட்சி, கரந்தை எனப்பிரித்தனர்.

வஞ்சி என்பது நிலத்தைக் கவர்தலும், காத்தலும் பற்றிய போராகும். இதனையும் பிற்காலத்தவர் இரு பிரிவுகளாக்கிவிட்டனர். நிலத்தைக் கவரும் போர் வஞ்சி எனவும் அதைத் தடுத்து நிறுத்தும் போர் காஞ்சி எனவும் வகுக்கப்பட்டன. உழிஞை என்பது பெரிய கோட்டை கொத்தளங்களுள்ள தலை நகரங்களில் நடக்கும் மதில்போர் ஆகும். இதனையும் பிற்காலத்தில் இரண்டு பிரிவுகள் ஆக்கிவிட்டனர். மதிலைத் தாக்கும் போர் உழிஞை எனவும் அதைத் தடுத்துக் காக்கும் போர் நொச்சி எனவும் பிரிக்கப்பட்டன.

தொல்காப்பியர் கரந்தை, நொச்சி என்பனவற்றை உள்துறைகளாகவே சுட்டினார் அவை பின்பு தனித் திணைகளாக்கப்பட்டன. தும்பை என்பது மன்னர்கள் தத்தம் வலிமையை நிலைநாட்டுதல் பொருட்டு நேருக்குநேர் நின்று போர் புரிவதாகும்.

தொல்காப்பியர் கருத்துப்படி வாகை என்பது போரில் ஏற்படும் வெற்றியையும் வாழ்க்கையில் பிறரினும் மேம்படும் வெற்றிகளையும் குறிக்கும் காஞ்சி போரினால் ஏற்படும் இரங்கலையும் மற்றும் பொதுவான அவலம் பற்றிய இரங்கலையும் பாடுவதாகும்.

பாடாண் என்பது கொடை, அளி, செங்கோல், வீரம் முதலிய சிறப்புகளைப் புனைவதாகும். தொல்காப்பியரை அடுத்து வந்தவர்கள், பன்னிரெண்டு என அதிகப்படுத்தினர். வெட்சி, கரந்தை பொதுவியல், கைக்கிளை பெருந்திணை என்பன அவை,

அகமும் புறமுமாய் அமைந்த பழந்தமிழ்ப்பாடல்களைச் சங்க இலக்கியம் எனக் குறிப்பது காலப் பின்னணியையும் சமுதாயச் சூழ்நிலையையும் பற்றிய பெயரே ஆகும். திணை இலக்கியம் என்பதே வகைமை பற்றிய பொருத்தமான பெயராகும்.

**முதற்பொருள்**

முதற்பொருளை நிலம், பொழுது என்று இரு வகையாகப் பிரிக்கலாம். பொழுது பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டு வகைப்படும். ஒரு நாளை ஆறாகப் பிரித்து இரவுப் பொழுதின் பிற்பாதி இரண்டு மணி முதல் ஆறு மணி வரை வைகறை என்றும், பகற்பொழுதின் முதல்பாதி ஆறுமணி முதல் பத்து மணி வரை காலைப்பொழுது என்றும் அழைக்கப்படுகிறது. “நிலமும் பொழுதும் இரண்டறக் கலந்து நிற்பதே இயற்கை எனலாம். நிலத்தைப் புனையும் பொழுது பருவமும் உடனியைந்து நிற்கும் ஒன்றைவிட்டு ஒன்றைத் தனியே புனைவதென்பது இயலாது இதனை நன்குணர்ந்த தமிழ்ச்சான்றோர் நிலத்தையும், பொழுதையும் இணைத்து முதற்பொருள் என்றனர்”[7] என்கிறார், தமிழண்ணல். இதனை அட்டவணையின் மூலம் அறிய முடிகிறது.




**பெரும் பொழுது**

| வ.எண் | பொழுது | மாதம் |
|---|---|---|
| 1. | இளவேனில் | சித்திரை, வைகாசி |

| | | |
|---|---|---|
| 2. | முதுவேனில் | ஆனி, ஆடி |
| 3. | கார் | ஆவணி, புரட்டாசி |
| 4. | குளிர் | ஐப்பசி, கார்த்திகை |
| 5. | முன்பனி | மார்கழி, தை |
| 6. | பின்பனி | மாசி, பங்குனி |

**சிறு பொழுது**

| வ.எண் | பொழுது | மாதம் |
|---|---|---|
| 1. | காலை | காலை 6 மணி முதல் 10 மணி வரையுள்ள நேரம் |
| 2. | நண்பகல் | காலை 10 மணி முதல் பிற்பகல் 2 மணி வரை |
| 3. | எற்பாடு | பிற்பகல் 2 மணி முதல் மாலை 6 மணி வரை சூரியன் மறையும் வரை |
| 4. | மாலை | மாலை 6 மணி முதல் முன் இரவு 10 மணி வரை – முன் இரவு |
| 5. | யாமம் | இரவு 10 மணி முதல் பின் இரவு 2 மணி வரை – நள்ளிரவு |
| 6. | வைகறை | விடியற்காலம் 2 மணி முதல் 6 மணி வரை – பின் இரவு |

**கருப்பொருள்:**

ஒவ்வொரு திணையின் இயல்புக்கு ஏற்ப அந்தந்த நிலத்தில்வாழும் மக்களையும் பொருள்களையும் கருப்பொருள் என்றனர். முதல்பொருளாகிய நிலத்தினும் பொழுதினும் தோன்றும் பொருள்கள் கருப்பொருள்கள் ஆகும். இவை அந்தந்த நிலத்திற்குரிய மக்கள் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்து காணப்படும். எனவே ஒவ்வொரு திணைக்குரிய நிலத்தில் வாழும் மக்கள் அவர்களின் உணவு ஊர் மற்றும் பயன்படுத்திய பொருள்கள் இவற்றுடன் விலங்கு, பறவை, செடி, கொடி, முதலியவற்றைக் கருப்பொருளாகக் கொண்டனர். "நிலம் பொழுதுகளின் இணைவால் உருவாகும் விளைப்பொருள்கள் மரஞ்செடி, கொடிகள், விலங்குகள், பறவைகள் போல்வனவும் அவ்வந்நிலத்திற்குரிய மக்களின் தொழில்கள் யாழ் முதலிய இசைக்கருவிகள் வழிபடு தெய்வங்கள் போல்வனவும் அவ்வற்றுக்குரிய நிலத்திற்குரியப் பாடல்களில்தான் இடம்பெறும் இங்ஙனம் இயற்கைப் புனைவாகவும், இடப்பின்னணியாகவும் அமைய உதவுவனவற்றைக் கருப்பொருள் என்றனர்"[8] என்று தமிழண்ணல் கூறுகிறார்.

அந்தந்த நிலத்திற்கேற்ற கருப்பொருளைத் தெய்வம், மக்கள், பறவை, விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில் என்ற அடிப்படையில் வைத்துப் பிரிப்பர். இதனை

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**

**அவ்வகைப் பிறவும் கருவென மொழிப''** **(தொல்-பொருள்-20)**

என்கிறார் தொல்காப்பியர்.

**உரிப்பொருள்**

காதல் வாழ்வில் தலைவன் தலைவியிடையே காணப்படும் உணர்ச்சிகள் ஒவ்வொரு திணைக்கும் பிரிக்கப்பட்டன. அவை அந்தந்த திணைக்குரிய உரிப்பொருள் ஆகும். இதனை

**''புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல்**
**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங்காலை திணைக்குரிப் பொருளே''** **(தொல்-பொருள்-16)**

என்கிறது தொல்காப்பியம்.

| **வ.எண்** | **பொழுது** | **மாதம்** |
|---|---|---|
| 1. | குறிஞ்சி | புணர்தலும், புணர்தல் நிமித்தமும் |
| 2. | முல்லை | இருத்தலும், இருத்தல் நிமித்தமும் |
| 3. | மருதம் | ஊடலும் ஊடல் நிமித்தமும் |
| 4. | நெய்தல் | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |
| 5. | பாலை | பிரிதலும், பிரிதல் நிமித்தமும் |

**முல்லைத்திணை**

காட்டுப்பகுதிகளில் அதிகம் பூப்பது முல்லை மலர் என்பதால் இப்பெயர் வந்தது. மேலும் 'முல்லை' என்ற சொல்லுக்கு 'இருத்தல்' என்ற பொருளும் உண்டு. ஐந்து திணைகளில் முல்லையை முதலில் வைத்ததற்குக் காரணம் கூறும் நச்சினார்க்கினியர், "இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொல் பிழையாது. இல்லிருந்து நல்லறம் செய்தல் மகளிரது இயற்கை பண்பானதால் முல்லையானது முதலில் கூறப்பட்டது. எனவே முல்லையென்ற சொல்லுக்குப் பொருள் இருத்தலாயிற்று"[9] என்று விளக்குவர்.

சங்க இலக்கியத்தில் 234 பாடல்கள் முல்லைத் திணைக்குரிய பாடல்கள் ஐங்குறுநூற்றில் ஐந்தாவதாக முல்லைத்திணைப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைப் பாடியவர் பேயனார் ஆவார். முல்லைக்குரிய பாடுபொருள்கள் அனைத்தும் ஐங்குறுநூற்றில் முழுமையாக இடம்பெற்றுள்ளன. குறுந்தொகையில் 45 பாடல்கள் முல்லை திணைப் பாடல்கள் இதில் பெரும்பாலும் தலைவியின் கூற்றுக்களே இடம்பெறுகின்றன. நற்றிணையில் 30 பாடல்கள் முல்லைதிணைப்பாடல்கள். அகநானூற்றில் 4,14 எனத் தொடங்கும் எண்களில் அமைந்த பாடல்கள் 40 முல்லைக்குரியவை. தலைவனது பாசறையிருப்பும், பாசறைத்தொழில் முடித்துத் திரும்பும் நிலையுமாகத் தலைவன் கூற்றுகளும், கானம், கார், மாலை ஆகியவற்றின் வருணனைகளும் சிறப்பிடம் பெறுகின்றன.

கலித்தொகையில் 17 பாடல்கள் முல்லைக்குரியனவாக உள்ளன. மற்றத்தொகை நூல்களில் உள்ள முல்லைப் பாடல்களுக்கும் கலித்தொகையில் வரும் முல்லைப்பாடல்களுக்கும் வேற்றுமை உள்ளது. முதல் 7 பாடல்களில் ஏறுதழுவல், குரவைக்கூத்தாடுதல் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

**தெய்வம் : திருமால்**

முல்லைத்திணைக்குரிய கருப்பொருள்களில் முதலாவதாகத் தெய்வம் இடம்பெறுகின்றது. இத்திணைக்குரிய தெய்வம் திருமால். முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்களால் வணங்கப்பட்ட தெய்வம் மாயோன். இக்கடவுள் மால் என்றும் மாயோன் என்றும் குறிக்கப்பட்டுள்ளார். 'மால்' என்றால் 'கரியவன்' என்ற பொருளும் உண்டு. இதனை,

**"நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல்"** **(முல்லை : 1-3)**

என்றும்,

**"கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய வோண நன்னாள்"** **(மதுரை 590–591)**

என்றும்,

**"மண்ணுறு திருமணி புரையு மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோன்"** **(புறம் 56 : 5-6)**

என்றும் பாடியதிலிருந்து அறியமுடிகிறது. மாயோன் என்ற சொல்லை ஆராயும் பாவாணர் இந்தச்சொல் எப்படி உருவானது என்பதை 'மாயோன்' மால், விண்டு ஆகிய சொற்கள் ஒரேபொருளைத் தருகின்றன என்கிறார். விண்டு எனும் சொல்லுக்கு மேகம், வானம், திருமால் என்னும் பொருள்களும் கிடைக்கின்றன. திருமால் நன்றாகக் கழுவப்பட்ட நீலமணி போன்ற மேனியை உடையவன். விண்ணுயர் பொற்கொடி ஏந்தியவன் என்பதை,

**"மண்ணுறு திருமணி புரையு மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோன்"** **(புறம் 56 : 5-6)**

என்று புறம் சுட்டிக் காட்டுகிறது. 'ஆலிலையின் மேல் எழுந்தருளிய திருமால்' என்ற பொருளைத் தருகிற விதத்தில்

**"ஆலமர் கடவுள்"** **(புறம் 198 : 9)**

என்றும், ஆழியை ஏந்தியிருப்பவன் என்பதை

**"நீனிற வுருவி னேமியோன்"** **(புறம் 58 : 15)**

என்றும் கூறுகின்றன. அவனது நிறம் மலையைப் போன்று இருப்பதை

**"மாயோ னன்ன மால்வரை கவா அன்** **(நற் : 32)**

என்ற நற்றிணைப் பாடல் அடியும் அவனது வாமன அவதாரத்தைப் பற்றி

**"நீர்செல நிமிர்ந்த மாஅல்"** **(முல்லை : 3)**

என்ற முல்லைப்பாட்டு அடியும் கூறுகின்றன. இறைவனுக்கு உரிய விழாவினை முல்லை நிலத்து மக்கள் எவ்வாறு எடுத்தனர் என்பதைச் சில சான்றுகளைக் கொண்டு அறிய முடிகிறது. மின்னல்வீசக்கூடிய அணிகலன்களை அணிந்து கொண்டிருக்கும் அழகிய பெண்கள் துணைவரோடும் அழகான தாமரையைப் போன்ற முகங்களை உடைய குழந்தைகளோடும் கூடிநின்று காவல் தொழிலைச் செய்யும் கடவுளாகிய திருமாலைப் பூக்களையும் புகையையும் கொண்டு வணங்கினர் என்பதை

**“திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை**
**யோம்பிணர்த் தழிஇத் தாம்புணர்ந்து முயங்கித்**
**தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்**
**தாமு மவருமோ ராங்கு விளங்கக்**
**காமர் கவினிய பேரிளம் பெண்டிர்**
**பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சி” (மதுரை 461 – 66)**

என்கிறது மதுரைக்காஞ்சி. திருமாலுக்குரிய ஓணவிழா நாளைச் சிறப்பாகக் கொண்டாடினர்.

**“கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்” (மதுரை 590–91)**

என்ற பாடலால் அறியலாம். பல்வேறு விதத்தில் திருமாலின் இயல்புகள் சொல்லப்பட்ட போதும் பண்டைய இலக்கியங்களில் திருமால் ஒரு பெருந்தெய்வமாகக் காட்டப்படவில்லை என்று சிலர் கூறுவர். “வேதநூல்களும் திருமாலை ஒரு சிறு தெய்வமாகக் குறித்துள்ளதை அந்நூல்களில் உள்ள சில வழிபாட்டுப் பகுதிகளிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. இதே கருத்தை வித்தியானந்தன் தமிழர் சால்பு எனும் நூலில் இதிகாசங்களில் கண்ணன் விஷ்ணுவின் ஒரு அவதாரமாகவும் ஒரு போர் வீரனாகவும் காட்சியளிக்கிறான். அவனை ஒரு பெருந்தெய்வமாக அக்காலத்தில் மக்கள் கருதவில்லை. ஆரியர் திராவிடரிடமிருந்தே கண்ணன் வழிபாட்டைப் பெற்றிருத்தல் வேண்டும். கண்ணன் உண்மையில் ஓரிடத்தில் நிலையாக இருந்து வாழ்ந்த இடையர் குலத்தெய்வமே. ஆரியர் பொருளாதாரத்தில் இடையராக இருந்தபோதும் அவர்கள் நாடோடிகள். மேலும் கண்ணன் கருமைநிறம் வாய்ந்த தெய்வமாக இருப்பதும் அவன் திராவிடத்தெய்வம் என்று கொள்வதற்கு அறிகுறியாய் அமையும் எனலாம். என்று சான்று காட்டுகிறார்.

வேதங்களில் சிறு தெய்வமாகத் திருமால் குறிப்பிடப்பட்டிருந்த போதிலும் பின்னர் ஒரு பெருந்தெய்வமாக உருவாவதற்குத் தேவையான வழிபாட்டு முறைகளைத் தந்த பெருமை சங்ககால முல்லை நிலத்து மக்களுக்கே உரியது என்பதைக் காணமுடிகிறது. திருமால் முல்லைநிலத்தெய்வமாக வழிபட்டாலும் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே முத்தொழில்களுள் காக்கும் கடவுளாக உயர்த்தப்பட்டிருக்கிறான். என்பதை

**“மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின்**

**தாவா விழுப்புகழ் பூவை நிலையும்''** **(தொல்-பொருள் 43:9-10)**

என்னும் அடிகளால் அறியலாம். திருவுடை மன்னரைக் காணும் போதெல்லாம் திருமாலின் நினைவே மக்கள் மனத்தில் பசுமையாகப் பதிந்திருக்கிறது. திருமாலை முழுமுதற் கடவுள் நிலைக்கு உயர்த்தும் நிலைமையைப் பரிபாடலில் காணமுடிகிறது.

**குடில்கள்**

முல்லை நிலத்து ஆயர் குடில், வரகுக் கற்றையால் வேயப்பட்டது. ஆடுகள் தின்னக்கூடிய அளவிற்குத் தழைகளால் செய்த குறுகிய கால்களைக் கொண்டது. அதன் வெளிப்புறம் திடாத்தோலைப் பாயாகக் கொண்டு அதில் துஞ்சும் காவலை உடையதாக இருப்பதை,

**''குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பசைச்**
**செற்றை வாயில் செறிகெழிக் கதவின்**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**
**அதளோன் துஞ்சுங் காப்பின் உதள**
**நெடுந் தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்**
**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்''.** **(பெரும் 148-153)**

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. இரவு நேரங்களில் கொடிய விலங்குகள் குடிலை அணுகாமல் இருப்பதற்காகக் குடிலின் முன்னர் நெருப்பை எரித்தனர். இதனை

**''மெய்யுரித் தியற்றிய மதியட் பள்ளித்**
**தீத்துணை யாகச் சேந்தனிர் கழிமின்''** **(மலைபடு 419–420)**

என்கிறது. இவற்றின் மூலம் முல்லைநிலத்து மக்கள் எளிமையாகக் குடிசைகளை அமைத்து வாழ்ந்ததை அறியமுடிகிறது.

காடும் காடு சார்ந்த இடமும் முல்லை எனப்பட்டது. முல்லைநில மக்கள் கால்நடைகளை வளர்ப்பதை முக்கிய தொழிலாகக் கொண்டு வாழ்ந்தனர். எனவே முல்லை நில மக்களுக்குக் கால்நடைப் பொருளாதாரம் முக்கியமாக விளங்கியது. என்றாலும் புன்செய் வேளாண்மையும் செய்து வாழ்ந்தனர்.

**''கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்த்த''** **(நற் 266:1)**

**''ஆடு தலைத் துருவன் தோடுதலைப் பெயர்க்கும்**
**வன் கை இடையன்''** **(நற் 169 : 6-7)**

என்ற பாடல் அடிகள் ஆடு, மாட்டை முல்லை நிலமக்கள் மேய்த்ததை உணர்த்துகின்றன. மேலும் ஆடு மேய்ப்பாரை இடையன், இடைமகன் என்றும் மாடு மேய்ப்பவரைக் கோவலர் என்றும் அழைத்ததை அறியமுடிகிறது. மேலும் அவர்களது முக்கிய உணவுப்பொருளாகப் பால் இருந்ததையும் சிறுவர்கள் கன்றுகளை மேய்க்கச் சென்றதையும்

**''மன்ற எருமை மலர்தலைக் காரான்**
**இன்தீம் பாற்கயம் கொன்மார் கன்றுவிட்டு**

**ஊர் குறுமாக்கள் மேற்கொண்டு கழியும்''** **(நற் 80 : 1-3)**

என்கிறது. மேலும் இடையர் இரவில் நரி போன்ற விலங்கினங்களிடமிருந்து ஆடுகளைக் காக்க ஒலி எழுப்பிக் கொண்டு இருந்தனர். இதன் மூலம் விலங்குகள் இருந்தததையும் ஆடுகள் வளந்ததையும் அதற்குக் காவலர் காவல் இருந்த்ததையும் அறியமுடிகிறது. முல்லை நிலத்தில் எள்ளில் பசுமை நிறமுடைய காய்கள் முற்றி காணப்பட்டன. மேலும் கரியதாளினை உடைய வரகின் கருமை நிறக்கதிர்கள் முற்றிலும் கிழங்கு அகழ்ந்த ஆழமான குழிகளில் அழகிய மணிகள் கிடந்து ஒளி வீசும். இவற்றின் வாயிலாக முல்லை நில விளைபொருட்களையும் வளத்தினையும் அறியமுடிகிறது.

**''சிறுதினை கொய்ய கவ்வை கறுப்ப**
**கருங்கால் வரகின் இருங்குரல் புலர**
**ஆழ்ந்த குழம்பில் திருமணி கிளர**
**எழுந்த கடற்றில் நன்பொன் கொழிப்ப''** **(மதுரை 271–274)**

என்கிறது மதுரைக்காஞ்சி.

முல்லை நிலப்பகுதியில் செம்மண் அதிகமாகக் காணப்படுவதால் செம்புலம் என்றனர். இந்நிலம் நீர் வசதியற்ற பகுதியாகக் காணப்படுகிறது. மரஞ்செடி, கொடிகள் அடர்ந்து நீர் தங்காது வழிந்தோடும் உயரமான மலைகளையும் குன்றுகளையும் கரடுமுரடான மேட்டுநிலங்களையும் உடையதாக இருப்பதால் வன்புலம் என்று சுட்டப்படுகிறது.

**''கறை அணற் குறும்பூல் கட்சிச் சேக்கும்**
**வன்புலம் இறந்த பின்றை''** **(பெரும் 206 – 207)**
**''பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி**
**முட்டை கொண்டு வன்புலம் சேரும்**
**சிறு நுண் எறும்பு''** **(புறம் 173 : 6-8)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை ஆகியவை முல்லைக்குரியவை. முல்லைப்பாட்டில் முதலில் திருமாலின் உவமையோடு மழை வருணனையும், மாலை வருணனையும் கோவலர் வாழ்க்கை நிலையும் இடம்பெறுகின்றன. தலைவனின் பாசறையிருப்பு தலைவியின் துயர்நிலை,தலைவன்மீளல், கார்கால வர்ணனை ஆகியவை இடம் பெறுகின்றன. நெடுநல்வாடையில் "தலைவி துயர்தீரத் தலைவன் பாசறைத் தொழில் இன்னே முடிக" என்று பாடும் அமைப்புடையதாக அமைந்துள்ளது. இப்படி சங்க இலக்கியங்களில் உள்ள முல்லைப் பாடல்களின் மூலம் முல்லை நில மக்களின் வாழ்க்கை அறியப்படுகிறது.

இந்நிலம் கோடையில் வறட்சியாகக் காணப்படுவதால் அங்குள்ள மரஞ்செடி கொடிகள் அழகிழந்து காணப்படும். கார்காலத்தின் தொடக்கத்தில் காடுகள் செழிப்பாக உள்ளதால் முல்லை நிலத்திற்குரிய பெரும்பொழுது கார்காலமாகும். இந்நிலத்திற்குரிய

முல்லைப்பூ மலரும் காலமாதலாலும் பசுக்கள் வரும் காலமாதலாலும் ‘மாலை’ சிறுபொழுதாகக் கூறப்படுகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி தலைவனின் வருகைக்காகக் காத்திருப்பதால் ‘இருத்தல்’ உரிப்பொருளாகச் சுட்டப்படுகிறது. மேலும் இவற்றைக் கீழ்வரும் அட்டவணையில் அறியலாம்.

**முதற்பொருள்**

| 1. | **நிலம்** | **காடும் காடு சார்ந்த இடமும்** | |
|---|---|---|---|
| 2. | பொழுது | பெரும்பொழுது | கார்காலம் |
| | | சிறுபொழுது | மாலை. |

**கருப்பொருள்**

| **வ.எண்** | **கருப்பொருள்** | **முல்லைநிலம்** |
|---|---|---|
| 1. | தெய்வம் | திருமால் |
| 2. | உயர்ந்தோர் | நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி |
| 3. | தாழ்ந்தோர் | இடையர், இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர் |
| 4. | உணவு | வரகு, சாமை, முதிரை |
| 5. | புள் | காட்டுக்கோழி |
| 6. | விலங்கு | மான், முயல் |
| 7. | ஊர் | பாடி, சேரி, அனை, கான் |
| 8. | நீர் | குறுஞ்சுணை நீர், காண்யாற்று நீர் |
| 9. | பூ | முல்லைப்பூ, குல்லைபூ, தோன்றிப்பூ, பிடவம்பூ |
| 10. | மரம் | கொன்றை, காயா, குருந்தம். |
| 11. | பறை | எறங்கோட்பறை |
| 12. | யாழ் | முல்லையாழ் |
| 13. | பண் | சாதாரி |
| 14. | தொழில் | சாமை விதைத்தல், வரகு விதைத்தல், களைகட்டல், அரிதல் கடாவிடுதல், கொன்றைக் குழலூதல் கால்நடைகளை மேய்த்தல் கொல்லேறு தழுவல், குரவை கூத்தாடுதல் கான்டாறு ஆடல் |

**உரிப்பொருள்**

| | | |
|---|---|---|
| 1. | உரிப்பொருள் | இருத்தலும், இருத்தல் நிமித்தமும் |

**குறிஞ்சித்திணை**

குறிஞ்சி நிலத்தில் அதிகம் பூக்கும் மலர் குறிஞ்சி என்பதால் இப்பெயர் பெற்றது. இம்மலர் மிகுதியான தேனை உடையது. இதன் ‘தேனைப்பெருந்தேன்’ என்று தேவகுலத்தார் என்றும் புலவர் கூறுகிறார். அதன் தோல்கள் கடுமையாக இருக்கும். மலையிலும் மலைசார்ந்த இடங்களிலும் இக்குறிஞ்சி வளரும். மலைப் பின்னணியில் தலைவன் தலைவியரின் காதல் ஒழுகலாறுகளைப் பாடும் பாடல்கள் திணையைச் சாந்தவையாகும். களவு என்னும் கைக்கோளில் அமைந்த பாடல்கள் அனைத்தும் குறிஞ்சி என்று கொள்ளப்படும்.

எட்டுத்தொகையில் அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, குறுந்தொகை என்ற ஐந்திலும் திணைப் பாடல்கள் இடம்பெறுகின்றன. பத்துப்பாட்டில் குறிஞ்சித்திணைப் பற்றி வருவது கபிலரால் இயற்றப்பெற்ற குறிஞ்சிப்பாட்டு என்ற

நூலாகும். கபிலர் குறிஞ்சித் திணையைச் சிறப்பாகப் பாடிய புலவராகையால் குறிஞ்சிகோர் கபிலர் என்று குறிக்கப் பெற்றார். இவர் குறிஞ்சிப்பாட்டில் குறிஞ்சித்திணையின் பாடுபொருள் அனைத்தையும் கோர்வைப்படுத்திக்காட்டுகிறார்.

"சங்க இலக்கியங்களை எட்டுத்தொகையில் 489 பாடல்களும் பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு ஒன்று சேர்ந்து மொத்தம் 490 பாடல்களும் குறிஞ்சித்திணையைப் பற்றிப் பாடுகின்றன என்று"$_{10}$ நா.செயராமன் கூறுகின்றார்.

**தெய்வம் - முருகன்**

குறிஞ்சித்திணைக்குரிய கருப்பொருள்களில் முதலாவதாகத் தெய்வம் இடம்பெறுகின்றது. இத்திணைக்குரிய தெய்வம் முருகன் ஆவான். சங்க இலக்கியங்களில் முருகப்பெருமான் பற்றிய வழிபாடுதான் அதிகமாகக் காணப்படுகிறது. முருகப்பெருமானுடைய மேனியழகும் அவனுடைய சாதனைத் திறமும், திருவடியின் பெருமையும் இந்த உலகத்தைக் காப்பதில் அவனுக்கு இருக்கும் பொறுப்புணர்ச்சியும் குறுந்தொகையில் பாரதம் படிய பெருந்தேவனாரால் வாழ்த்திப் பாடப்பட்டுள்ளது. கடவுள் நம்பிக்கை என்பது அச்சத்தால் உருவாகியிருக்க வேண்டும் என்று சொல்லுகிறவர்களுக்குச் "சேவலங்கொடியோன் காக்கிறான்" என்ற அடி கடவுள் இந்த உலகத்தைக் காப்பதால் அவனை வழிபட வேண்டிய கடமை என்ற கருத்தை வலியுறுத்துகிறது. முருகன் போரில் சிறந்தவன் என்பதை

**"வெல்போர்ச் சேஎய்"** **(மலைபடு: 493)**

**"செருமிகு சேஎய்"** **(புறம் 14:19)**

**"செருவஞ் சேஎய்"** **(புறம் : 120-21)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவன் வெற்றித் தெய்வமாகிய கொற்றவையின் சிறுவன் என்பதை,

"வெல்போர்க் கொற்றவைச் சிறுவ" (திருமுரு:258) என்கிறது. திருமுருகாற்றுப்படை "மனிதர்கள் தங்களின் நெருக்கமானவர்களாகக் கடவுள்களை ஆக்கிக் கொள்வதற்குத் தங்களைப் போலவே அவர்களுக்கு வடிவத்தை அமைக்கிறார்கள். தங்கள் வாழ்க்கை முறையைப் போலவே அவனுக்கும் வாழ்க்கை முறையைக் கற்பனை செய்து கொள்கிறார்கள். இந்த வகையில் தான் குறிஞ்சி நில மக்களாகிய குன்றக்குறவர்கள் முருகன் குறத்தியை மணந்து கொண்டான். என்று கூறிய நிகழ்ச்சியும் அமைகிறது" என்கிறார் சி. இலக்குவனார். முருக வழிபாடு எப்படி நடந்தது என்பதைத் தொல்காப்பியம் சுட்டிக்காட்டுகிறது. முருகனைப் போல வேடம் பூண்டு கையில் வேலேந்தி ஆடும் மலைநாட்டுப் பூசாரி வேலன் எனப்பட்டான். அவன் குறமகளது நோய் முருகனால் வந்ததென்று ஐயுறின் அக்கடவுளை அமைதி செய்ய ஒருகளத்தை அமைத்துப் பூசையிட்டு ஆடிப்பாடி வழிபடுவது வழக்கம். இதனை

**"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட்டு அயர்ந்த காந்தளம்"** **(தொல்-பொருள் 62)**

என்கிறது தொல்காப்பியம். குறிஞ்சி நிலத்து மக்கள் வெறியாடுவதற்கு முன்னா் வெறியாடுகளத்தைத் தூய்மை செய்தனா். வேலுக்கு மாலை சூட்டினா். பின் ஆரவாரத்துடன் முருகனைப் புகழ்ந்து பாடி ஆட்டைப்பலி கொடுத்து அதன் இரத்தத்தைத் தினையுடன் கலந்து முருகன் மீது தூவி வழிபட்டனா் என்பதை,

**"களம் நன் கிழைத்துக் கண்ணி சூட்டி**
**வளநகா் சிலம்பப் பாடிப், பலி கொடுத்**
**துருவச் செந்தினை குருதியோடு தூ உய்**
**முருகாற்றுப் படுத்த உருகெடு நடுநாள்"** **(அகம் 22 : 8-11)**

என்று அகநானூறும்,

**"சிறுதிணை மலரோடு விரைஇ மறியறுத்து**
**வாரணக் கொடியொரு வயிற்பட நிறீஇ**
**யூடுா்ஊா் ஊா் கொண்ட சீா்கெழு விழுவனும்"** **(திருவரு 218–22)**

என்று திருமுருகாற்றுப்படையும் குறவா்களின் வழிபாட்டு முறையை விரிவாகக் கூறுகின்றன. வேலன் ஆட அவனோடு 'கானவரும்' ஆடுவர். சாதிக்காய், தக்கோலக்காய், காட்டு மல்லிகை வெண்டாளி மலா் என்பவை தம்முள் விரவக்கட்டின கண்ணியோடு சிவந்த ஆடையையும் அணிந்தான். வெட்சி மாலையைச் சூடினான். வேலன் மயிலேறிச் சேவற்கொடியை உயா்த்திக் கொடியைத் தோளில் அணிந்து குரவையாடிக் கொண்டிருந்த குறமகளிரோடு கைகோத்து குரவை ஆடியதை

**"கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவா்**
**நீடமை விளைந்த தேக்கட் டேறற்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து**
**தொண்டாகச் சிறுபறைக் குரவை யயர**
**குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே யதா அன்று"** **(திருமுரு 194:201)**

என்கிறது. முருகனை நினைத்து பலி அரிசியாகிய சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்தும், ஆட்டை அறுத்தும், கோழிக் கொடியோடு ஓரிடத்தில் நிலைநாட்டி விழா எடுத்தால் தலைவியின் காதல் நோய் தீரும் என்று நற்றாய் நம்பினாள் என்பதை,

**"வெறி என உணா்ந்த உள்ளமொடுமறி அறுத்து**
**அன்னை அயரும் முருகு"** **(ஐங் : 24-3)**

என்கிறது. முருகன் தமிழகத்து மரபுகளுக்கேற்ப உருவான கடவுள் என்பதை இவ்வழிபாட்டின் மூலம் நன்கு அறிய முடிகிறது. குறவா்களால் செய்யப்படும் வழிபாட்டு முறையில் ஆகமங்களோ பாா்ப்பனா்களோ இடம் பெறவில்லை. இம்மக்கள் வழிவழியாக நடத்திய வழிபாட்டு முறையையே பின்பற்றி இருக்கின்றனா். இத்தகைய வழிபாட்டின் மூலமாகவே தங்கள் கடவுள் வெளிப்படுவான் என்று நம்பினா். குறிஞ்சி நில மக்களிடையே வணங்கப்பட்ட முருகன் புறநானூற்றில் ஞாலங் காக்கும் நால்வருள் ஒருவனாக உயா்கிறான். பரிபாடலில் இவனுக்கெனப் பல பாடல்கள்

அமைந்திருப்பதும் இவனது செல்வாக்கின் வளர்ச்சியைக் காட்டுகிறது. திருமுருகாற்றுப்படையிலோ இந்திரன் முதலிய தேவர்களும் வழிபடுவதற்குரிய கடவுளாக உள்ளதை உணரமுடிகிறது. இரு பிறப்பினர் உயர்ந்த முறையில் வழிபாடு இயற்றுகின்றனர். மேலும் சங்க காலத்திலேயே அறுபடை வீடுகள் என்ற புகழ் பெற்ற வழிபாட்டிடங்கள் அமைந்து விடுவதைக் காணமுடிகிறது.

**குடில்கள்**

குறிஞ்சி நிலத்து மக்களாகிய குறவர்கள் தினைத்தாளால் வேயப்பட்ட சிறுகுடில்களிலும், புல்லால் வேயப்பட்ட குடில்களிலும், வரகால் வேய்ந்த குடில்களிலும் வாழ்ந்தனர் என்பதை,

**“இருவி வேய்ந்த குறுகாற் குரம்பை” (குறிஞ்சி : 154)**

**“புல்வேய் குரம்பைக் குடிதொறும்” (மலைபடு : 439)**

**“ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்**

**வேழம் காவலர் குரம்பை ஏய்ப்ப” (பெரும்: 50-51)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. மலையில் விலங்கினங்கள் உள்ளே நுழையாத அளவிற்குக் கோழிக்கூடு போன்ற குடில்களில் வாழ்ந்தனர். மழைவாழ் மக்களாகிய குறவர்கள் எளிமையான குடிசையில் வாழ்ந்தனர். மலைச்சரிவுகளிலும் மேடுபள்ளங்களாகிய நில அமைப்பு அறிந்து தங்களிடம் கிடைக்கக் கூடிய பொருட்களைக் கொண்டே தங்கள் குடில்களை அமைத்துக் கொண்டனர். குறிஞ்சி மலைசார்ந்த நிலமாக இருப்பதால் இந்நிலம் சிறுசிறு மணல்கலந்த பகுதியாகக் காணப்படும். இக்குறிஞ்சி நிலமக்கள் வேட்டையாடுதலையும் இயற்கையாகக் கிடைக்கும் காய்கனி, கிழங்கு, கொட்டை, தேன் போன்ற உணவுப் பொருள்களைச் சேகரிப்பதையும், பயிரிடுதலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர். இதனை,

**“யானை வேட்டுவன் யானையும் பெறுமே**

**குறும்பூழ் வேட்டுவன் வருங் கையும் வருமே” (புறம் 214 : 4-5)**

**காடு தேர் வேட்டத்து விளிவுஇடம் பெறா அது**

**வரி அதன் படுத்த சேர்க்கை” (அகம் 58 : 3-4)**

**“ஒட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட**

**வேட்டம் போகிய குறவன் காட்ட” (அகம் 182 : 5-6)**

என்ற பாடல் அடிகளால் அறிய முடிகின்றது. குறிஞ்சி நிலத்தில் வேட்டையாடுதல் நிகழ்ந்ததையும் அப்போது யானை, பறவை, முள்ளம்பன்றி, புலி போன்றவை வேட்டையாடப்பட்டதையும் வேட்டைக்கு நாய்கள் துணையாகப் பயன்பட்டதையும் அறிய முடிகிறது. குறிஞ்சிப் பூக்களைக் கொண்டு மலைப் பகுதியில் கரிய மரக்கிளைகளில் பெரிய தேனை வண்டுகள் சேகரித்து வைத்திருக்கும் என்பதை,

**“கருங்கோற் குறிஞ்சிப் பூ கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும்” (குறுந் 3:3-4)**

என்கிறது குறுந்தொகை.

**“நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெல்லொடு அரில் கொள்பு நீடி**
**இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும்**
**பல்வேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி”** **(மதுரை 286 – 290)**

என்ற பாடல் அடிகள் குறிஞ்சி நிலவளத்தை எடுத்துரைக்கின்றன. மனம் கமழும் சந்தனத்தையும் அகிலையும் வெட்டி மேட்டு நிலங்களில் விதைக்கப்பட்ட குறுகிய கதிர்களை உடைய ‘தோரை’ என்னும் நெல்லும், நெடிய தாளினை உடைய வெண்சிறு கடுகும், ஐவன்நெல் என்னும் வெண்ணெல்லுடன் பிணைந்து வளர்ந்த இஞ்சியும், மஞ்சளும் மிளகும், கொடியும் மட்டுமல்லாது பல்வேறு பொருட்களும் குவித்து வைக்கப்பட்டிருக்கும் தினை விளையும் மலைப் பக்கத்தில் அவற்றைத் தின்னவரும் கிளிகளை ஓட்டுவர். அவரையின் தளிர்களைத் தின்னவரும் காட்டுப்பசுக்களை ஓட்டும்போது ஆரவாரம் செய்வதன் மூலம் பல்வேறு வகையான விளைபொருட்கள் மிகுதியாக விளைந்ததையும் பயிர்களைப் பாதுகாத்தலையும் அறிவதோடு குறிஞ்சி நிலத்தின் வளத்தையும் காணமுடிகிறது. மேலும் வாழ்வியல் செய்திகளும் நிறைந்துள்ளன. குறிஞ்சிப்பாட்டில் தலைவியின் காதலைத் தோழி செவிலிக்குக் கூறச் செவிலி நாற்றாயிடம் கூறுவாள். தலைவனுக்குத் தலைவியை மணம் செய்வதே அறநெறியாகும். அப்படி இல்லை என்றால் தலைவியின் உயிருக்குத் தீமை ஏற்படும் என அறிவிக்கின்றாள். இதை உணர்ந்த பெற்றோரும் அவள் நினைத்தவனையே மணம் செய்து கொடுத்ததை,

**“இருவர்கட் குற்றமும் இல்லையேல் என்று**
**தெருமந்து சாய்ந்தார் தலை”** **(குறிஞ்சி)**

என்கிறது குறிஞ்சிப்பாட்டு. மேலும் குறிஞ்சிப்பாட்டின் அமைப்பும் அழகும் பற்றிக் கூறும்போது

**“நின்குற்றம் இல்லை நிரைதொடியும் பண்புடையவள்**
**என்குற்றம் யானும் உணர்கலேன் பொன்குற்று**
**அருவி கொழிக்கும் அனிமலை நாடன்**
**தெரியுங்கால் தீயுது இலன்”**

என்று தினைப்புனத்தைக் காக்கத் தலைவியை அனுப்பிய தாயும் தவறு செய்யவில்லை தலைவியும், தலைவனும் குற்றம் செய்யவில்லை என்கிறாள் தோழி. தலைவன், தலைவி காதல் தோழியின் உதவியால் மணம்புரிந்து வாழும் வாழ்வியல் நிகழ்ச்சிகள் பலவற்றைக் கூறுகின்றது குறிஞ்சிப்பாட்டு.

இந்நிலத்திற்குரிய பெரும்பொழுது கூதிர்காலம் சிறுபொழுது யாமம், முன்பனிக் காலமாகிய மார்கழித் திங்களும், தைத்திங்களும் குறிஞ்சித்திணைக்குரியதாகச் சுட்டப்படுகிறது. இந்நிலம் மலைப்பகுதியாக இருப்பதால் குளிர் நிறைந்து காணப்படும்.

இந்தச் சூழல் உயிரினங்கள் புணர்வதற்கு ஏதுவாக அமைகிறது. இந்நிலத் தெய்வமாகிய முருகன் பற்றிய குறிப்புகளும் வழிபாடுகளுள் ஒன்றாகிய வெறியாட்டு செய்திகளும் குறிஞ்சிப்பாட்டில் இடம் பெறுகின்றன. இவற்றினைப் பின்வரும் அட்டவணை உணர்த்துகிறது.

**முதற்பொருள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | நிலம் | மலையும் மலை சார்ந்த இடமும் | |
| 2. | பொழுது | பெரும்பொழுது | குளிர்காலமும் முன்பனிக்காலமும் |
| | | சிறுபொழுது | யாமம் |

**கருப்பொருள்**

| **வ.எண்** | **கருப்பொருள்** | **குறிஞ்சிநிலம்** |
|---|---|---|
| 1. | தெய்வம் | முருகன் |
| 2. | உயர்ந்தோர் | பொருப்பன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி |
| 3. | தாழ்ந்தோர் | குறவர், கானவர், குறத்தியர். |
| 4. | உணவு | மலைநெல், தினை, மூங்கில் அரிசி |
| 5. | புள் | கிளி, மயில் |
| 6. | விலங்கு | யானை, புலி, கரடி, சிங்கம் |
| 7. | ஊர் | சிறுகுடி |
| 8. | நீர் | அருவிநீர்,சுனைநீர் |
| 9. | பூ | குறிஞ்சிப்பூ, காந்தள்பூ, வேங்கைப்பூ |
| 10. | மரம் | சந்தனம்,தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில் |
| 11. | பறை | தொண்டகப்பறை |
| 12. | யாழ் | குறிஞ்சியாழ் |
| 13. | பண் | குறிஞ்சிப்பண் |
| 14. | தொழில் | வெறியாடல்,மலைநெல் விதைத்தல், தினை காத்தல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், அருவி நீராடல், சுனைநீராடல் |

**உரிப்பொருள்**

| | | |
|---|---|---|
| 1. | உரிப்பொருள் | புணர்தலும் புணர்தல் நிமித்தமும் |

**மருதத்திணை**

மருதம் என்பது அகப்பொருள் நெறியில் கூறப்படும் ஐவகை திணைகளுள் ஒன்றாகும். மருதமரங்கள் செழித்து வளர்ந்துள்ள பகுதி மருதம் எனப்படும். மருதம் என்பது நீர் நிறைந்த வயல் பகுதியைக் குறிக்கும் மருதநிலம் பார்ப்பதற்குப் பசுமையாக இருக்கும். இங்கு வாழும் மக்களின் தொழில் உழவுத்தொழிலாகும். இம்மக்கள் கொண்டாடும் விழாக்களில் சிறந்ததாகக் கருதப்படுவது. இந்திரனுக்கு எடுக்கும் இந்திரவிழாவாகும். “மூவேந்தர்களது அரசவை உள்ள நகர்ப்புறங்களில் தான் மருதப்பாடல்கள் தோன்றியிருக்க வேண்டும்”[11] என்று நா செயராமன் கூறுகின்றார்.

| **வ.எண்** | **நூல்** | **மருதத்திணை** |
|---|---|---|
| 1. | அகநானூறு | 40 |
| 2. | கலித்தொகை | 35 |

| | | |
|---|---|---|
| 3. | ஐங்குறுநூறு | 100 |
| 4. | நற்றிணை | 32 |
| 5. | குறுந்தொகை | 48 |

மருதத்திணையின் மொத்தப்பாடல்கள் 255 இத்திணையைச் சிறப்புறப் பாடியவர் இளங்கடுங்கோ ஆவார். ஆதலால் மருதம்பாடிய இளங்கடுங்கோ என்று இவர் சிறப்புறக் குறிக்கப்பெற்றார். பரிபாடலில் வையை பாடல்களில் பரத்தமை பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. தலைவன் பரத்தையிடம் சென்று மீளல், தலைவி,தோழி, ஆகியோர் அவனது ஒழுக்கத்தைக் கண்டித்தல் ஆகியவை இத்திணையில் பாடப்படும் பாடுபொருள் ஆகும்.

**தெய்வம் - இந்திரன்**

மருதநில மக்களின் மனதில் நிற்கும் தெய்வம் இந்திரனாவான். அதனால் அவனுக்குக் கோவில் இருந்ததை

**“அண்டிரன் வருஉ மென்ன வெண்டொடி**
**வச்சிரத் தடக்கை நெடியேன் கோயிலும்”** **(புறம் : 24)**

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. மேலும் திருமுருகாற்றுப்படையில் இந்திரன் தந்தங்கள் பெருத்த யானையின் பிடரி மீதமர்ந்து வருவான் என்றும் அவன் பகைவரை வெற்றி கொண்டவன் என்றும் குறிக்கப்படுகின்றது. இதனை

**“வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து**
**ஈரிரன் வேடந்திய மருப்பின் எழினடைத்**
**தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை**
**பெருத்த மேறிய திருக்கினர் செல்வனும்”** **(திருமுரு : 159–159)**

என்ற பாடலடிகளால் அறியலாம். இந்திரன் பற்றிய செய்திகள் மிக அரிதாகவே சங்க இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கின்றன. காலத்தால் பிந்தியது என்று கருதப்படும் திருமுருகாற்றுப்படையில் ஒரு குறிப்பு இருக்கிறது. ஆயிரம் கண்களை உடையவனும் நூறு வேள்விகளை நடத்தியவனும் திருக்கிளர் செல்வனுமாகிய இந்திரன் தன் பகைவரை வெற்றிக்கொண்டான் என்பதை,

**“நூற்றுபத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்**
**வேள்வி முற்றிய வென்றடு கொற்றம்”** **(திருமுறு 155–156)**

என்கிறது. பின்னயை இலக்கியங்களில் மருத நிலக் கடவுளான இந்திரன் தீயவனாகவும் ஒழுக்கக் கேடனாகவும் சித்தரிக்கப்படுகிறான். அகலிகை முதலான கதைகளை வைத்துப் பார்க்கும் பொழுது இந்திரன் தவறுகளைச் செய்தவன் என்பது உணரமுடிகிறது. இவ்வாறு தவறுகள் செய்தவனாகச் சித்தரிக்கப்படுவதற்கு ஓர் நியாயமான காரணம் இருந்திருக்கக்கூடும். மருத நிலத்தினுடைய செல்வ வளத்தின் காரணமாக அங்கு பரத்தையர் ஒழுக்கம் மிகுதியாக இருந்திருக்கிறது என்பதைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இந்திரனுக்கு வழிபாடு என்பது சிலப்பதிகாரக் காலத்தில்தான் சிறந்திருக்கிறது. சிலப்பதிகாரத்தில் இந்திர விழவுரெடுத்த காதையில்

மருத்திணை மக்கள் இந்திரனை நீராட்டியும் இந்திரனுக்குப் பல விழாக்கள் எடுத்தும் தங்களது இறைவனை வழிபடுகின்றனர் மேலும்

**“மலைச்சிறகு அரிந்த வச்சி வேந்தனுக்குக்**
**கலிகெழு கூடல் செவ்வணி காட்டக்**
**கார் அர சாளன் வாடை யொடு வருஉம்**
**காலம் அன்றியும்”** **(சிலம்பு 14:94–97)**

என்ற பாடலடிகளால் மலைகளின் சிறகினை அரிந்த வச்சிரப் படையையுடைய இந்திரனுக்கு ஆரவாரம் மிக்கக் கடலின் செவ்வணியைக் காட்டுமாறு கார்காலம் வாடையோடு வருவது குறிக்கப்படுகிறது.

**இல்லங்கள்**

மருத நிலத்து இல்லங்கள் தோப்புகளுக்கு இடையே அமைந்து சிற்றூர்கள் போல விளங்கின. அவ்வீடுகள் யாவும் தென்னங்கீற்றால் வேயப்பட்டன. மஞ்சள் முற்றத்தில் பயிராயிருந்தது. மணங்கமழ் பூந்தோட்டங்களைக் கொண்டு தன்னந்தனியாக அமைத்திருந்தனர். மருதநில மஞ்சள் பயிர்களைக் காக்க வயல் வரப்புகளிலேயே புதிய வைக்கோலால் வேய்ந்த இல்லத்தை அமைத்து வாழ்ந்தனர். என்பதை

**“பழஞ்சோற்று அமலை முனைஇ, வரம்பில்**
**புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்”** **(பெரும் 224–225)**

என்கிறது. மேலும் வளமுடைய ஊர்களில் உழவர் வீடுகளின் முற்றத்தில் கன்றுகளைக் கட்ட நெடிய தாம்புகளைக் கொண்ட முளைகள் நடப்பட்டிருந்தன. நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையுடைய கதிர்கள் இருந்தன. சிறுவர்கள் அந்த முற்றத்தில் சிறுதேர் உருட்டி விளையாடினர் என்பதை

**“பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்**
**கவைத் தாம்பு தொடுத்த மூன் றல்கு**
**ஏணி யெய்தா நீ னெடு மார்பின்**
**முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்**
**குமரி மூத்த கூடோங்கு நல்லிற்**
**தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**
**ஊரா நற்றே குருட்டிய புதல்வர்”** **(பெரும் 243–249)**

என்றும் பெரும்பாணாற்றுப்படை பாடலடிகள் சான்று காட்டுகின்றன.

மருதநிலம் நீர் வசதியுள்ள வளமானப் பகுதியாகக் கூறப்படுகிறது. காட்டு நிலங்களுக்கும் கடலோர நிலங்களுக்கும் இடையே உள்ள செழிப்பான பகுதியாகும். இந்நிலத்தை மென்புலம் என்றும் அழைத்தனர் வயலும் வயல் சார்ந்த பகுதியாக இருப்பதால் உப்புத்தன்மையோ உவர்த்தன்மையோ இல்லாத நன்னீரே மருதநிலத்தில் காணப்படுகின்றது. நல்ல தண்ணீர் இருக்கும் இடத்தில்தான் தாவரங்கள் செழிப்பாக வளரும் இந்நிலத்திற்குரிய கருப்பொருட்களில் ஒன்றான மருதமரம் நன்னீர் உள்ள நிலத்தில் தான் வளரக்கூடியதாகும். இக்காலத்தில் வயல்நிலங்களை அடுத்து மருத மரங்கள் இருப்பதைக் காணமுடிகிறது.

**“ஆறலவிர் வார் மணல் அகலியாற் றடைகரைத்**

**துறையணி மருது தொகல்கொள வோங்கி”** **(அகம் :97)**

**“வருபுனல் வையை மருதோங்கி முன்றிறை”** **(சிலம்பு 14:72)**

என்ற பாடலடிகள் மருதமரம் ஆற்றையும் பொய்கையையும் வயலையும் அடுத்திருந்ததாகக் கூறுகின்றன. மற்ற நிலங்களைக் காட்டிலும் நீர்வளமும் விளைபொருட்களின் வளமும் அதிகமாக மருத நிலத்தில் இருந்தன. மேலும் மருத நிலத்தில் வற்றாத நீர்நிலைகள் இருந்ததையும் அவற்றில் வெண் தாமரை மலர்கள் மலர்ந்து குளிர்ந்த வயல்கள் நிறைந்து இருந்தன என்பதையும் அறியலாம். மேலும் சான்றோர்களையும் அகன்ற வீடுகளையும், அகழியையும் உடையதாய் மருதநிலம் விளங்கியது. உழவர்கள் ஏரினையும், எருதினையும் உடையவராய் விளங்கினர் என்பதை

**“நறும்பூங் கோதை தொடுத்த காட்சினைக்**

**குறுங்காற் காஞ்சி கொம்பர் ஏறி**

**நிலை அருள் குட்டம் நோக்கி நெடிதுஇருந்து”** **(சிறு 178–190)**

என்கிறது சிறுபாணாற்றுப்படை. இந்நிலத்தில் வாழ்பவர் பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, வள்ளிக்கிழங்கு, போன்றவற்றோடு அரிசிச் சோற்றையும் உணவாக உட்கொண்டனர் மேலும் கரும்புச்சாறும் கரும்புச்சாற்றுடன் நெல்லில் இருந்து எடுக்கப்பட்ட அவலையும் சேர்த்து உணவு தயாரித்தனர். இவ்வுணவு இந்நிலத்தில் சிறந்த உணவாகக் கருதப்படுகிறது.

**“வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**

**மனைவாழ் அளகின் வட்டொடும் பெறுகுவிர்”** **(பெரும் 255-256)**

**“தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனி**

**கரும்பு அமல் படப்பை” (அகம் 256:14-15)**

**“இருங்கதிர்அலமரும் கழனிக் கரும்பின்**

**விளைகழை பிழிந்த அந்தீஞ் சோற்றோடு**

**பால்பெய் செந்நெல் பாசவல் பகுக்கும்**

**புனல்பொரு புதவின் உறத்தை”** **(அகம் 237:11-14)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய வளமிக்க மருதநிலம் நல்ல விளைவைக் கொடுத்தால் அந்நிலமக்கள் கவலையின்றி வாழ்ந்ததோடு நுண்கலைகளும் பிறகலைகளும் உலகில் செம்மையாக வளர்ச்சியடையக் காரணமாக விளங்கினர். எனவே நாகரிக வளர்ச்சிக்கும் கலை வளர்ச்சிக்கும் அடிப்படையாய் விளங்கியது மருதநிலம். “நகரங்கள் முதன்முதலில் தோன்றியது உழவுத்தொழிற்குச் சிறந்த மருதநிலத்திலேயே உழவுத்தொழிலும் நிலையான குடியிருப்பும் ஊர்ப்பெருக்கம் நாகரிகம் தோன்றுவதற்குப் பெரிதும் துணை செய்தன. உழவுத்தொழிலால் வேளாண்மையும் பதினெண்பக்கத் தொழில்களும், பிறதொழில் செய்வோர்க்கும் போதிய

உணவும், வாணிகமும் ஏற்பட்டது"[12] என்கிறார் தேவநேயப்பாவணார். இவ்வாறு செல்வச் சிறப்புடன் இருந்த மருதநிலத்தில் பரத்தையர் மிகுந்திருந்தனர்.

சங்க இலக்கியத்தில் மருதம் பரத்தையர் வாழ்வைப் பாடுவதாக அமைந்திருக்கிறது. வள்ளுவர் இக்களங்கத்தைப் போக்கி அன்பில் பிணைப்பு கொண்டு அறநெறியில் வாழ்கின்ற ஈருயிர்கள் படிப்படியாய் இணைகின்ற ஊட்டாட்டமே மருதம் அல்லது ஊடல் என்ற மரபில் மாற்றம் செய்தார். வள்ளுவரின் வழியைப் பின்பற்றிக் கம்பனும் மருதம் அரசு வீற்றிருக்கின்றக் காட்சியை உழவரது உழைப்பின் உயர்வாகக் காட்டுகிறார்.

**"தண்டலை மயில்களாடத் தாமரை, விளக்கம் தாங்கக்**
**கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைக்கண் விழித்துநோக்கத்**
**தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகரயாழின்**
**வண்டுகள் இனிதுபாட மருதம் வீற்றிருக்கும் மாதோ" (கம்பரா—நாட்டு-2)**

என்ற பாடலால் இச்செய்தியை அறிய முடிகிறது. கணவன் மனைவிக்கு இடையே ஏற்படும் சிறு ஊடல்களே மருதத்திணையின் உரிப்பொருளாகும். ஊடலுக்குக் காரணமாகப் பரத்தமை கூறப்பட்டுப் பரத்தமை தொடர்பான செய்திகளே மருதத்திணையின் பாடுபொருளாகின்றன. மருத நிலத்திற்குப் பெரும்பொழுது தொல்காப்பியரால் சுட்டப்படவில்லை. ஆறு பெரும்பொழுது வரும் என்பதை இளம்பூரணர் உரையால் அறியமுடிகிறது. மருதநிலம் கடின உழைப்பின்றியே பயன்தரக்கூடியது. வளமிக்க நிலமாக உள்ளதால் உற்பத்தி, சேமிப்பு போன்றவற்றிற்குக் காரணமாக உள்ளது. இதனால் செல்வ வளமும் ஓய்வு நேரமும் மிகுதியாக இருப்பதால் பரத்தமை தோன்றக் காரணமாக அமைகிறது. தலைவன் பரத்தமை நாடிச்செல்வதால் தலைவனிடம் தலைவிக்குத் தோன்றும் ஊடல் இந்நிலத்திற்குரிய உரிப்பொருளாகச் சுட்டப்படுகிறது.

**முதற்பொருள்:**

| | | | |
|---|---|---|---|
| 1. | நிலம் | வயலும் வயல் சார்ந்த இடமும் | |
| 2. | பொழுது | பெரும்பொழுது | ஆறு பெரும் பொழுது |
| | | சிறுபொழுது | வைகறை, காலை |

**கருப்பொருள்:**

| வ. எண். | கருப்பொருள்கள் | மருதநிலம் |
|---|---|---|
| 1. | தெய்வம் | இந்திரன் |
| 2. | உயர்தோர் | ஊரன், மகிழ்நன், கிழத்தி,மனைவி |
| 3. | தாழ்ந்தோர் | உழவர்,உழத்தியர்,கடையர்,கடைச்சியர் |
| 4. | உணவு | செந்நெல்அரிசி,வெண்ணெல் அரிசி, |
| 5. | புள் | வண்டாளம்,மகன்றல் நாரை, அன்னம்,பெருநாரை,கம்புள்,குருகு, தாரா |
| 6. | விலங்கு | எருமை,நீர்நாய் |
| 7. | ஊர் | பேரூர்,மூதூர் |
| 8. | நீர் | ஆற்றுநீர்,கிணற்றுநீர்,குளத்துநீர் |
| 9. | பூ | தாமரைப்பூ,குவளைப்பூ,கழுநீர்ப்பூ |
| 10. | மரம் | காஞ்சி, வஞ்சி, மருதம் |

| | | |
|---|---|---|
| 11. | பறை | நெல்லரி இணை, மண முழவு |
| 12. | யாழ் | மருதயாழ் |
| 13. | பண் | மருதப்பண் |
| 14. | தொழில் | விழாச்செய்தல்,வயற்களை கட்டல்,நெல்லரிதல்,கடாவிடுதல்,குளங்குடைதல்,புதுநீராடல் |

**உரிப்பொருள்:**

| | | |
|---|---|---|
| 1. | உரிப்பொருள் | ஊடலும் ஊடல் நிமித்தமும் |

**நெய்தல் திணை**

ஐந்திணைகளுள் ஒன்றாகிய நெய்தல் திணை நான்காவதாக உள்ளது. இத்திணையில் நெய்தல் என்பதற்கு வெள்ளாம்பல், கருங்குவளை எனத்தமிழ்ப்பேரகராதி பொருள் தருகிறது. நெய்தல் என்பது பின்னுதல் என்ற பொருளைத் தருகிறது. பரதவன் பின்னிய வலை மணற்பரப்பெங்கும் காயவைக்கப்பட்டிருந்தால் அந்நிலம் நெய்தல் நிலம் எனப்பட்டது. இந்நிலத்தில் மிகுந்திருந்த மலர் நெய்தல் மலர். மேலும் 'நெய்தல்' என்ற சொல்

**"நீணறு நெய்தல்" (குறிஞ்சி :79)**

**"கணைக்கால் நெய்தல்" (பெரும் :213)**

**"கழிநெய்தல்" (குறுந் 336:5)**

**"கண்போல் பூத்தமை கண்டு நுண்பல**
**சிறுபா சடைய நெய்தல்" (நற் 8:8)**

**"கண்ணவிழ் நெய்தல்" (சிலம்பு 14:77)**

என்று இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன. நெய்தல் நிலத்தில் வளரும் நீர்கொடியின் மலர் நெய்தல் மலர் எனப்பட்டது. இம்மலர் இலைக்கு மேலே நீண்டு வளரும் தன்மையது. கடற்கரையெங்கும் செழித்துப் படர்ந்திருக்கும் நெய்தல் கொடியானது தலைவியைக் காணவரும் தலைவனது தேர்ச்சக்கரத்தால் அடிக்கடி துண்டிக்கப்படும் நெய்தல் பூவை நாரை விரும்பியுண்ணும் இம்மலரின் காம்பு நீண்டிருப்பதால் அதனைக் 'கணைக்கானெய்தல்' என்பர் நறுமணமும் சுவைமிகுந்த தேனும் உள்ள இம்மலரைச் சுற்றி அரும்புகள் மொய்த்த வண்ணமிருக்கும்.

சங்க இலக்கியங்களில் நெய்தல் திணை பற்றி அதிகமான பாடல்களைப் பாடிச் சிறப்பிடம் பெற்றவர் அம்மூவனார் ஆவார். நெய்தல் திணைக்குரிய பாடல்களை இரங்கல் உரிப்பொருளாகிய தலைவியின் பெருந்துயரைப் பாடுவது என்றும் கடற்கரைப் பின்னணியோடு களவுச் செய்திகளைப் பாடுபவை என்றும் இரண்டாகப் பிரிப்பர். நெய்தல் திணை கடற்கரைப் பின்னணியோடு காதல் நிகழ்ச்சிகளையும் பாடுகின்றன. இத்திணையைப் பற்றி மொத்தம் 346 பாடல்கள் உள்ளன. அவை.

| வ.எண் | நூல் | நெய்தல் திணை |
|---|---|---|
| 1. | அகநானூறு | 40 |
| 2. | நற்றிணை | 102 |

| | | |
|---|---|---|
| 3. | குறுந்தொகை | 71 |
| 4. | ஐங்குறுநூறு | 100 |
| 5. | கலித்தொகை | 33 |

நெய்தலுக்குரிய பாடல்களில் 41 பாடல்கள் களவுக்குரிய பாடல்களாகக் காணப்படுகின்றன. இவற்றில் ஒன்று தவிர மற்றவை கற்புக்குரியவையாகக் கூறப்படுகின்றன. ஆயினும், அவையும் களவுக்குரியவையாகவே கருதப்படுகின்றன. எனவே, நெய்தல் பாடல்கள் அனைத்தும் களவுப் பாடலாக உள்ளன. 'நெய்தல் திணைக் களவுச் செய்தியையே பாடும்"$_{13}$ என்று தமிழண்ணல் குறிப்பிடுகிறார்.

**தெய்வம் வருணன்**

கருப்பொருள்களில் முதலாவதாகத் தெய்வம் கூறப்படுகிறது. நெய்தல் திணைக்குரிய தெய்வம் வருணன் ஆவான். கடல் தெய்வம் என்றும் வருணன் அழைக்கப்படுகிறான். நெய்தல் நில மக்கள் முழுநிலா நாளில் கடலுக்குள் மீன்பிடிக்கச்சென்று கடல் தெய்வத்தை வழிபட்டனர் என்ற செய்தியை,

**"அந்நில்**
**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி"** **(அகம்:240)**
**"பழையர் மகளிர் பனித்துறைப் பரவள்"** **(அகம் : 201)**

என்ற பாடலடிகளால் அறியலாம். சங்க இலக்கியங்களில் வருணன் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படவில்லை. வருணனைப்பற்றிய குறிப்புக் காணப்படவில்லை என்றாலும் வழிபாடு பண்டைக்காலத்தில் சூசா. சார்டிஸ், டெமாஸ்கஸ், பாபிலோன் போன்ற நாடுகளில் பரவியிருந்தது என்பதை இராதகிருட்டிணன் வலியுறுத்துகிறார். கடலில் மீன்பிடிக்கச் செல்லும் கணவனுக்குப் பாதுகாப்பு வேண்டித் தெய்வத்தை வேண்டி நிற்கக்கூடிய அவசியம் நெய்தல் நிலப்பெண்களுக்குத்தான் அதிகம் இருந்திருக்கிறது இருப்பினும் அவர்கள் எவ்வாறு வழிபட்டு வருணனைப் பாராட்டிப் போற்றியிருக்கிறார்கள் என்று சங்க இலக்கியம் எவையும் குறிப்பிடவில்லை பத்துப் பாட்டினுள் ஒன்றான பட்டினப்பாலை மட்டுமே.

**"சினைச் சுறவின் கோடு குட்டு**
**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**
**மடற்றாழை மலர் மலைந்தும்**
**பிணர்ப் பெண்ணைப் பிழி மாந்தியும்**
**புன்றலை யிரும்பபரதவர்"** **(பட்டினப்: 36-90)**

எனக் குறிப்பிடுகிறது இங்குச் சினைச்சுறவின் கோட்டைநட்டு வழிபட்டார்கள் என்று கூறுகின்றதே தவிர வருணனை வழிப்பட்டார்கள் என்று வெளிப்படையாகக் கூறவில்லை. ஆனால் "வருணன் மேய பெருமணல் உலகம்' எனும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை கூறும் நச்சினார்க்கினியர்

**"நெய்தல் நிலத்தில் நுளையர்க்கு வலைவளர் தப்பின் அம்மகளிர்**

**கிளையுடன் குழிஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுகடன்**

**கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார்''**

**(தொல்-நச்சி-உரைப-5)**

என்கிறார். வருணன் என்ற சொல் சமஸ்கிருதச் சொல். அதனால் கடலோன் என்று இருந்திருக்க வேண்டும் என்று பி.டி. சீனிவாச அய்யங்கார் கூறுகிறார். நெய்தல் நிலத்து மக்களாகிய பரதவர்கள் தெய்வ நம்பிக்கை மிகுந்தவர்கள். இவர்கள் தம் இடத்திலுள்ள பனை, புன்னை, மரத்தில் தொன்முது தெய்வத்தை ஏற்றி வழிபட்டதை

**"தொன்முது கடவுள் சேர்ந்த பராரை**

**மன்றப் பெண்ணை'' (அகம 303.3-4)**

**"கடவுள் மரத்த முள்மிடை குடம்பை'' (அகம் 270:12)**

என்ற அடிகளால் அறிய முடிகிறது.

**"பெருங்கடல் தெய்வம்'' (கலி 131:1)**

**"பெருங்கடற் பரப்பின் அமர்ந்துறையணங்கு'' (நற் 155:6)**

என்பவை கடற்தெய்வத்தைக் குறிப்பிடுகிறதே தவிர வருணனைச் சுட்டுவதாக இல்லை.

**இல்லங்கள்**

நெய்தல் நிலத்து மக்கள் மணல் பரந்த மேட்டு நிலங்களில் வாழ்ந்து வந்தனர். இம்மக்கள் கடற்கரையோரத்தில் கடற்காற்று பாதிக்கா வண்ணம் குறுகலான நுழைவுவாயில் உடைய குடிசையில் வசித்தனர் என்பதை,

**"புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை**

**கண்டல் வேலிக் கழி சூழ் கடம்பை**

**முண்டகம் வேய்ந்த குறி யிறைக் குரம்பை'' (அகம் 200:2)**

என்கிறது. இம்மக்கள் தழையால் வேயப்பட்டு உப்பங்கழிகள் சூழ்ந்த நிலப்பகுதியில் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த இப்பகுதியைப் "படப்பை" என்றும் கூறுவர். இப்பரதவர்கள் வாழும் குடியிருப்பின் முன் அவர்களது தொழிலுக்குரிய நெடிய கோல் சாத்தப்பட்டிருந்தது. அகன்ற வெண்மணற் பரப்பில் மீன்வலை உலருவதற்காகக் காயவைக்கப்பட்டிருந்தன. அவர்களது யதார்த்த வாழ்க்கையின் அமைப்பினைப் பட்டினப்பாலை சுட்டுகிறது. இம்மக்களின் வீடுகள் புல்லாலும் வைக்கோலாலும் வரகு, கரும்படை, கூவையிலை இவற்றாலும் வேயப்பட்ட சிறு சிறு குடில்களாக அமைந்திருந்தன என்பதை,

**"சிறுகுடிப் பரதவர்'' (அகம் 330:15)**

**"கான எண்ணிய சிறுகுடி'' (குறுந் 228:3)**

**"பெருமீன் கொள்ளும் சிறு குடிபரதவர்'' (நற் 219:6)**

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது.

நெய்தல் என்பது கடல்சார்ந்த நிலப்பகுதியைக் குறிக்கும் அங்கு மக்கள் அதிகம் வாழவில்லை. மிகக்குறைந்த மக்களே குடியிருந்தனர். இந்நில மக்கள்

கடலில் உள்ள மீனைப் பிடிப்பதையும், உப்பு விளைப்பதையும் முக்கிய தொழிலாகக் கொணடிருந்தனர். எனினும் வேளாண்மையும் இந்நிலத்தில் நடைபெற்றது என்பதை,

**"கடல் இறவின் சூடு தின்றும்**
**வயல் ஆமைப் புழுக்குஉண்டும்"** **(பட்டி 63-64)**

என்ற பாடல்வரிகளால் நெய்தல் நில மக்கள் கடல் இறாமீன்களையும் வயல் ஆமையையும் உண்டனர் என்பதனால் நெல் வேளாண்மை செய்ததை அறிய முடிகிறது. மேலும் இந்நிலத்தில் மழைபெய்தால் நெல்விளையும், மழைபொய்ப்பின் உப்பு விளையும் இந்நிலம் மென்புலம் என்று சுட்டப்படுகிறது.

**"பெயினே, விடுமான், உழையினம், வெறிப்பத் தோன்றி**
**இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே**
**வறப்பின் மாநீர் முண்டகந்தா அய்சோறு புலர்ந்து**
**இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்"** **(நற் 311:1-4)**

என்கிறது நற்றிணை. நெய்தல்நில மக்கள் தங்கள் உணவுத் தேவையை ஈடுசெய்ய மீனை உணவாக உட்கொண்டனர். அதனால் கடற்கரை நோக்கிச் சென்றனர். கடற்கரையில் உணவைப்பெற்ற பரதவர் கடற்கரையின் மணல்மேடுகளில் குடில்கள் கட்டி வாழ்ந்து வந்தனர். நெய்தனிலத்து ஊர்கள் சிறுநல்லூர் என்றும் சிறுகுடி என்றும் வழங்கப்பட்டன என்பதை,

**"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**
**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்தி**
**வெண்கல் உப்பின்"** **(அகம் 140:1-3)**

என்கிறது அகம். நெய்தல் நிலத்துக் கடற்கரை சோலைகளாகவும், மலர் விரிந்த மணல் பரப்பாகவும் இருந்ததால் தலைவனும், தலைவியும் கடற்காற்றை சுவாசித்து இன்புற்று தங்கள் காதலைப் பரிமாறிக் கொள்ள நல்லிடமாய் அமைந்திருந்தது.

நெய்தல் திணைக்குப் பெரும்பொழுது ஆறும் சுட்டப்படுவதோடு, சிறுபொழுதாக ஏற்பாடு சுட்டப்படுகிறது. நெய்தல் என்பது உருகுதல் என்ற பொருளில் ஆளப்படுகிறது. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆற்றாமை காரணமாகத் தலைவனை எதிர்பார்த்து இருப்பதால் 'இரங்கல்' நெய்தலின் உரிப்பொருளாகச் சுட்டப்படுகிறது. கடலுக்கு மீன்பிடிக்கச் சென்ற தலைவன் வருகைக்காகத் தலைவி எதுவும் செய்வதறியாது எதிர்பார்த்துக் காத்திருப்பதே இரங்கல் என்பதாகும். இவ்வாறு வாழ்வில் தேவைப்படும் உணவு, இருப்பிடம், போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. ஏனையவற்றைக் கீழ்வரும் அட்டவணையில் காணலாம்.

**முதற்பொருள்**

| 1. | **நிலம்** | **கடலும் கடல் சார்ந்த இடமும்** | |
|---|---|---|---|
| 2. | பொழுது | பெரும்பொழுது | ஆறு பெரும்பொழுது |
| | | சிறுபொழுது | ஏற்பாடு |

**கருப்பொருள்**

| வ.எண் | கருப்பொருள் | நெய்தல் நிலம் |
|---|---|---|
| 1. | தெய்வம் | வருணன் |
| 2. | உயர்ந்தோர் | சேர்ப்பன், துறைவன், புலம்பன், பரத்தி, நுளைச்சி |
| 3. | தாழ்ந்தோர் | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர் |
| 4. | உணவு | மீன், மீனையும் உப்பையும் மாற்றுதலால் வரும்பொருள் |
| 5. | புள் | கடற்காகம் |
| 6. | விலங்கு | சுறாமீன், முதலை |
| 7. | ஊர் | பாக்கம், பட்டினம் |
| 8. | நீர் | உவர்நீர்க்கேணி, கவர்நீர் |
| 9. | பூ | நெய்தல் பூ, புன்னைப்பூ, தாழம்பூ, முண்டகப்பூ, அடப்பம்பூ |
| 10. | மரம் | கண்டலி, புன்னை, ஞாழல் |
| 11. | யாழ் | விளரியாழ் |
| 12. | பண் | செவ்வழிப் பண் |
| 13. | தொழில் | மீன்பிடித்தல், உப்பு உண்டாக்கல், அவற்றை விற்றல், மீன் உணக்கல், அவற்றை உண்ண வரும் பறவைகளை ஓட்டுதல் கடலாடல். |

**உரிப்பொருள்**

| | | |
|---|---|---|
| 1. | உரிப்பொருள் | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |

**பாலைத்திணை**

தொன்மை வாய்ந்த இலக்கணப் படைப்பாளரான தொல்காப்பியர் நிலத்தை நான்கு வகையாகப் பாகுபடுத்தியுள்ளார். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன தொல்காப்பியரின் நிலப்பாகுபாடாகும். இப்பகுப்பில் பாலைக்கு நில வரையறை சுட்டப்பெறவில்லையே தவிர அந்நிலத்திற்குரிய பொழுதும் அந்நிலத்திற்குரிய உரிப்பொருளும் தொல்காப்பியரால் கூறப்பட்டுள்ளன. அதனால் பிற்காலத்தவர் பாலைக்கு நிலம் உண்டு என்று வலியுறுத்தினர். அதற்குச் சான்றுகாட்ட தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியத்தையும் தாண்டி இளங்கோவடிகள் கருத்தை எடுத்துக்காட்டினார்.

**"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய நறுத்துப்**
**பாலை பென்பதோர் படிவங் கொள்ளும்" (சிலம்பு 11:64-66)**

என்கிறது.

**தெய்வம் கொற்றவை**

கருப்பொருள்களுள் முதலாவதாகக் கூறப்படும். பாலைத்திணையின் தெய்வம் கொற்றவை. சங்ககால மக்களின் வெற்றித்தெய்வமாகப் போற்றப்படும் கொற்றவை முருகனுடைய தாயாகத் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்படுகிறாள். இதனை,

**"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ" (திருமுரு 5)**

என்கிறது. மேலும் மக்கள் கொற்றவைக்கும் பலியிட்டு வழிபாடு நடத்தினர் என்பதை

**"விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூனாம்" (குறுந் :218)**

என்கிறது குறுந்தொகை. மேலும் கலித்தொகை கொற்றவையைப் பற்றிக்கூறும்பொழுது எல்லாம் உணர்ந்தவள், பெரிய காட்டிடை வாழ்பவள் பேய்கணங்களை உடையவள் என்று சிறப்பிக்கின்றது. சிலப்பதிகாரத்தில் இத்தெய்வத்தைக் கொற்றவை, ஐயை, அமரி, குமரி, கவுரி, சமரி, சூலி, நீலி, மாலின்தங்கை, செய்யவள், முதலான பெயர்களால் குறிப்பிடுகின்றார் இளங்கோவடிகள் இதனை,

**"அமரி, குமரி, கவுரி, சமரி**
**சூலி, நீலி, மால்வதற்கு இளங்கிளை**
**ஐயை செய்வள்" (சிலம்பு 12: 67-70)**

என்கிறார். கொற்றவைக்குப் 'பழையோள்' (திருமுரு:259) என்ற பெயரும் உண்டு. போரிலே வெற்றி பெற்றப்பின் போர் வீரர்கள் கொற்றவைக்கு உயிர்ப்பலியிட்டு வணங்குவார்கள். கொற்றவையின் அருளால் வெற்றியடைந்ததற்காகப் பலிகொடுக்கப்படும் செய்தி உள்ளது. இதையே,

**"மறம்கடை கூட்டிய துடிநிலை, சிறந்த**
**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே" (தொல்பொருள் :461)**

என்கிறது தொல்காப்பியம் வீரத்தினால் பெற்ற வெற்றியைக் கொண்டாடுவதைத் 'துடிநிலை' என்றும் அந்த வெற்றிக்குத்துணை செய்தது கொற்றவையே என்றும் இவளைக் 'காடுகெழுசெல்வி' என்றும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**குடில்கள்**

எயினர் வீடு அம்புகள் தூங்கும் கால்களையுடைய பந்தலினையும் சங்கிலியால் நாய்கள் கட்டப்பட்ட காவலினையும் முள்ளையுடைய பாழ்வேலியினையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டினையுடைய பக்கத்தினையும் கணைய மரம் ஏற்பட்ட உட்கதவினையும் வாயினையும் உடையது. இவர்களது குடில்கள் ஈந்திலையால், வேயப்பட்டவை என்பதை

**"இவை வேய் குரம்பை யுழையதட் பள்ளி**
**யுவலைக் கண்ணி வன்சொ விளைஞர்" (மதுரை:310-311)**

என்று மதுரைகாஞ்சியும்,

ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை (பெரும்:88) என்று பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. பாலைத்திணை என்பது முல்லைத்திணையும், குறிஞ்சித்திணையும் திரிந்து வந்த நிலம் ஆகும். இந்நிலத்தை

கடந்து செல்வது மிகவும் அரிதாக இருந்தது. இந்நிலப்பகுதியில் எட்டிய தூரம் வரை நீரின்றி காணல் நீராகக் காட்சிதரும். இங்குள்ள மரங்கள் வெயிலின் மிகுதியால் காய்ந்து எவரும் ஒதுங்குவதற்கு நிழலின்றிக் காணப்படும். இப்படி வறண்ட நிலமாக பாலைநிலம் காணப்படுகிறது. இதனை நச்சினார்க்கினியர்,

**"பாலை தன்மையாவது காலையும் மாலையும்**
**நண்பகலென்ன கடுமைகூரச் சோலை தேம்பிக் கூவல்மாறி**
**காரும் நிழலும் இன்றி பயன் துறந்து**
**புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது"**

என்று பாலையின் தன்மையைக் குறிப்பிடுகிறார். மேலும் பாலை நிலம் குறிஞ்சி நில வறட்சியையும், முல்லைநில வறட்சியையும் தழுவியே தோன்றுகிறது. தனக்கென நிலமற்றதாகத் தோன்றுகிறது. நீரும், நிழலும் இல்லாமல் வெம்மையாகவும் தனிமையாகவும் காணப்படுவதால் 'இன்னா வைப்பு' என்று கூறப்படுகிறது. பாலைநில விழியின் கொடுமையை 'அருஞ்சுரம்' எனக் கூறுவர். இந்நிலம் ஊழியிழந்து காணப்படுவதால் 'புன்புலம்' என்றனர். இதனை,

**"இன்னா வைப்பிற் சுரன்** **(கநற் 314:6)**
**நிழற்கவின் கிழந்த நீரில் நீளிடை**
**அழலவிற் அருஞ்சுரம்"** **(அகம் 265:22)**
**"வெம்முனை அருஞ்சுரம் இறந்தோர்"** **(அகம் 265 :22)**
**"புன்புலம் தழிஇய புறஅணி வைப்பு"** **(பதிற்று 30:25)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. பாலைநிலத்தில் வெப்பம் மிகுதியாக இருப்பதால் மரஞ்செடிகொடிகள் காய்ந்து விலங்குகளுக்குத் தேவையான நீர் இல்லாமல் வலிமையிழந்து காணப்படும் பாலை நிலத்தில் உண்டாகும் கானல்நீரை உண்மையான நீரென்று எண்ணி விலங்குகள் ஏமாற்றமடைவதைச் சங்க இலக்கிய வருணனையால் அறியமுடிகிறது. பாலையில் தோன்றும் கானல்நீர் 'உருஇல்பேய்' 'ஊராத்தேர்', 'இலங்குதேர்' 'பேய்த்தேர்' என்று சுட்டப்படுகிறது. இக்கானல் நீர் பார்வைக்கு நீர் போன்று மாயத்தோற்றம் தருகிறது.

சங்க இலக்கியத்தில் பிற திணைப் பாடல்களைக் காட்டிலும் பாலைத்திணைப் பாடல்கள் மிகுதியாக உள்ளன. இத்திணைப் பாடல்கள் மொத்தம் 527 அவை,

| வ.எண் | நூல் | பாலைத்திணை |
|---|---|---|
| 1 | அகநானூறு | 200 |
| 2 | நற்றிணை | 102 |
| 3 | குறுந்தொகை | 90 |
| 4 | ஐங்குறுநூறு | 100 |

| | | |
|---|---|---|
| 5 | கலித்தொகை (பாலைக்கலி) | 35 |

பாலை நிலத்தின் வெம்மையைப் பெரும்பாலான பாடல்கள் விலங்குகளைச் சுட்டிக்காட்டியும், பறவைகளைச் சுட்டிக்காட்டியும் இயற்கைச் சீரழிவைச் சுட்டிக்காட்டியும் விளக்கியுள்ளன. இந்நிலத்தில் வேட்டுவர், எயினர், மறவர் போன்ற இனமக்கள் வாழ்ந்தனர். பெண்களை எயிற்றியர், மறத்தியர் என்று அழைத்தனர். இவர்கள் வாழ்ந்த ஊர் குறும்பு, பறந்தலை என அழைக்கப்பட்டது. இந்நிலத்தெய்வமாக ஐயை, கொற்றவை போன்ற பெண் தெய்வங்கள் இருந்தன. இந்நிலத்தில் வழிப்பறி செய்தலைத் தம் பிழைப்பாகக் கொண்ட ஆறலைக்கள்வர்களும் வாழ்ந்துவந்தனர். இவர்கள் நீரில்லா இடங்களின் வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களை அம்பு எய்து கொள்ளையடிப்பதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர் என்பதை,

**“நெடுங்கழைத் தங்கிய நீர்இல் ஆர்இடை**
**ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று**
**கொடுஞ் சடிலை மறவர் கடறு கூட்டுண்ணும்”**

என்கிறது குறுந்தொகை.

இந்நிலத்திற்குரிய பெரும்பொழுதாக இளவேனில், முதுவேனில் என்ற பருவங்களும், சிறுபொழுதாக நண்பகலும் சுட்டப்படுகிறது. தொல்காப்பியம் பின்பனிப்பருவத்தைப் பாலைத் திணைக்குரியதாகக் குறிப்பிடுகிறது. பாலைநிலம் வறட்சியாகவும் அதிகமான வெப்பமாகவும் உள்ளதால் சேர்ந்து வாழ்வதற்குத் தகுதியற்றதாகக் கூறப்படுகிறது. எனவே, பாலை நிலத்திற்குப் பிரிதல் உரிப்பொருளாகச் சுட்டப்படுகிறது. இவற்றைப் பின்வரும் அட்டவணையில் காணமுடிகிறது.

**முதற்பொருள்**

| | | | |
|---|---|---|---|
| **1.** | **நிலம்** | **மணலும் மணல் சார்ந்த இடமும்** | |
| **2.** | **பொழுது** | **பெரும்பொழுது** | **இளவேனில், முதுவேனில், பின்பனி** |
| | | **சிறுபொழுது** | **நண்பகல்** |

**கருப்பொருள்**

| **வ.எண்** | **கருப்பொருள்** | **பாலைநிலம்** |
|---|---|---|
| 1. | தெய்வம் | துர்க்கை |
| 2. | உயர்ந்தோர் | விடலை, இகுளை, மீளி, எயிற்றி |
| 3. | தாழ்ந்தோர் | மறவர், எயினர், எயிற்றியர், மறத்தியர் |

| | | |
|---|---|---|
| 4. | உணவு | வழிபறித்தவை, கொள்ளையடித்தவை |
| 5. | புள் | புறா, பருந்து, எருவை, கழுகு |
| 6. | விலங்கு | செந்தாய் |
| 7. | ஊர் | குறும்பு |
| 8. | நீர் | நீரில்லாக்குழி, நீரில்லாக்கிணறு |
| 9. | பூ | மராஅப்பூ, குராஅப்பூ |
| 10. | மரம் | உழிழை, பாலை, ஓமை, இருப்பை |
| 11. | பறை | துடி |
| 12. | யாழ் | பாலையாழ் |
| 13. | பண் | பஞ்சரம் |
| 14. | தொழில் | போர்செய்தல், பகற்சூறையாடுதல் |

**உரிப்பொருள்**

| | | |
|---|---|---|
| 1. | உரிபொருள் | பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

**தொகுப்புரை**

பண்டைய தமிழர்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பகுத்தனர். இந்நிலங்களில் முதலில் தோன்றியது மலை, அடுத்து அம்மலையைச் சூழ்ந்த மண் பகுதியில் தோன்றியது காடு மலையிலிருந்து பெருக்கெடுத்த ஆறுகளால் வளம் பெற்ற வயல் ஆறு முடிவில் சென்றடைந்த கடல் என்றும் இயற்கைத் தன்மைகளைக் கொண்டே நிலப்பாகுபாடுகளை மேற்கொண்டனர் என்பது ஆராயப்பட்டுள்ளது.

நிலப்பாகுபாடு நிலத்தின் இயல்புக்கேற்பப்பகுக்கப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. ஐவகை நிலப்பாகுபாடு ஒவ்வொரு நிலத்திலும் சிறப்பாகவும், அதிகமாகவும் காணப்படுகிறது. மலர்கள், மரங்கள் போன்றவற்றின் பெயர்களால் நிலங்களுக்குப் பெயரிடப்பட்டுள்ளது.

இவற்றில் முதற்பொருள் நிலத்தின் தன்மையும் பருவ நிலையையும் உள்ளடக்கியதாக இருக்கிறது. கருப்பொருள் அந்தந்த நிலத்திற்கும் பருவத்திற்கும் தக்கவாறு அமைகிறது. உரிப்பொருளாகிய மக்கள்பண்பு முதற்பொருளையும் கருப்பொருளையும் சார்ந்துள்ளது என்பதை வாழ்வியல் அடிப்படையில் ஆராய்ந்து இந்த நிலங்களின் தன்மைகளும் பண்புகளும் விளக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு திணையும் திணைக்குரிய பாடல்களும் திணையின் அமைப்பும் மக்களின் வாழ்வியல் நிகழ்ச்சிகளும் ஆராயப்பட்டு அட்டவணையுடன் கொடுக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. க. நெடுஞ்செழியன், உலகத்தோற்றமும் தமிழர்கோட்பாடும் ப-13
2. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப-22.
3. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும் ப-12
4. இறையனார், அகப்பொருள் நூ-1
5. தொல்காப்பியம், இளம்பூரணர் உரைப்பாயிரம் - 1
6. தொல்காப்பியம் - 1, நச்சினார்க்கினியர் உரை
7. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு கொள்கைகள் ப-238
8. மேலது
9. செயராமன், முல்லைப்பாடல்கள் ப-29
10. நா.ஜெயராமன், சங்கத்தமிழ்ச் செய்யுள் கோவை ப-13
11. நா.செயராமன், நெய்தல் பாடல்கள் ப – 2
12. ஞா.தேவநேயப்பாவாணர், பண்டைய நாகரிகமும் பண்பாடும், ப-1
13. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய கொள்கைகள் ப-32

## இயல் - 3

# அகத்திணை மாந்தர்

**முன்னுரை**

காதல் உலகளாவியது. உலகக்கவிஞர்கள் காதலைப் பாடுபொருளாகக் கொண்டு கவிதைகளைப் படைத்துள்ளனர். காதலர்களின் உறவு, பிரிவு, ஊடல், இறுக்கம், நெகிழ்ச்சி ஆகிய அனைத்து உணர்வுகளையும் பாடல்களில் பதிவுசெய்துள்ளனர். மொழி என்னும் பூந்தோட்டத்தில் பூத்துக் குலுங்கும் மலர்களாக மணம் வீசுபவை காதற்பாடல்கள். இக்காதல்பாடல்கள் இல்லையென்றால் மலர்கள் இல்லாத பூந்தோட்டம் போல் மொழி வெறுமையாகிவிடும். மொழிக்கு இளமையை ஊட்டும் காதல் அமிழ்தம் போல அமைவது. உலகத்தில் சிறந்தவை காதல், வீரம் அவற்றில் காதலை மொழிக்கு உரிய இலக்கணங்களில் ஒன்றாக அமைத்த இனம் தமிழினம்.

எழுத்திலக்கணத்தையும், சொல்லிலக்கணத்தையும் தமிழ் மொழியின் வரலாற்றோடும், அதன் வளர்ச்சியோடும், பாதுகாப்போடும் கூடிய வகையில் அமைத்த தமிழர்கள், பொருள் இலக்கணத்தை மக்களின் வாழ்வோடு இணைத்துள்ளனர்.

பொருள் என்பது அகப்பொருள், புறப்பொருள் என இரண்டு வகை. காதல் இளைஞனின் வாழ்வில் உரியப் பருவத்தில் வெளிப்படும் இயல்பான இயற்கை உணர்வு. இன்ப நாட்டமும், அதன் அடிப்படையான உணர்வுகளும் உயிரின் இயற்கைப்பண்பு என்பதைத் தொல்காப்பியர்,

**“எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான மர்ந்துவரும் மேவற் றாகும்”** **(தொல்பொருள் நு.224)**

என்கிறார். மனித வாழ்வில் மனிதனை அலைக்கழிக்கும் உணர்வுகளில் தலையாயது இன்பநாட்டம். இவ்வுணர்வு பருவம் வாய்க்கப்பெற்ற ஆண், பெண் இருவருக்கும் ஏற்படக்கூடிய இயற்கைப்பண்பு. ஒருவரை ஒருவர் சேர்ந்து வாழ்வதால் பெறக்கூடிய பயன்களுக்கெல்லாம் அடிமனைப் போன்றது அகம். இவ்வின்பத்தை மனிதனது தனிமையினால் பெறமுடியாது என்பதை,

**“வாழ்க்கை மலர் சொறிக்கின்ற இன்பத்தேனை**
**மனிதனது தனிமையினால் பெறுவதில்லை”**[1]

என்கிறார் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன். காதல் என்பது மனத்தளவில் உய்த்துணரக் கிடக்கும் உணர்வு, உள்ளம் நுகரும்பொருள், உணர்ந்தவர் கூற இயலாத தன்மை கொண்டது. உணர்ந்தவரேயன்றிப் பிறர் அறிய இயலாதது. மனம் உணரும் அனைத்துவகை உணர்வுகளையும் அகம் எனக் குறிப்பிடுதல் முறை. எனினும் இளமைப்பருவத்தில் தலைவன் தலைவியர் துய்க்கும் காதல் ஒழுக்கம் அகத்திணை என அழைக்கப்படுகிறது. தலைவன், தலைவியரின் காதல் மன உணர்வுகளையும்,

அவ்வுணர்வுகளுக்குத் துணைநிற்கும் பிற அகமாந்தர்களின் மன உணர்வுகளையும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**அகம்**

அக உணர்வுகளுக்கு உயிர்நாடியாக விளங்கும் காதல் உணர்வில் உள்ளம் ஈடுபட்டு நிற்றலின் காதலாகிய இவ்வகநாட்டத்தை அகம் எனக்குறியீடு செய்தனர். அனைத்துணர்வுகளும், செயல்களும் அக ஈடுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. அகநாட்டத்தைத் தடைப்படுத்தி நிற்பவை துன்பமாகவும், வெறுப்பாகவும் படுகின்றன. இதனை இரு எல்லைக்குள் அடக்குவர் அறிஞர். “அரிஸ்டாட்டில் இன்பம், துன்பம் என்ற இரு எல்லைக்குள்ளும் பிளேட்டோ விருப்பு, வெறுப்பு என்ற இரண்டிற்குள்ளும், வைவ்ஸ் நல்லது, கெட்டது என்ற இரண்டிற்குள்ளும் அடக்குவர்”[2]. அகத்திணை என்பதற்கு இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கணம் எனப்பொருள் கூறுவர். காதலையும், அதன் உணர்வுகளையும் உணர்வதற்கு அகத்திணையை நாட வேண்டும். மேலும் நெறியாகவும், அளவாகவும் காமத்தின் நுட்பத்தைக் கூறும் உலக இலக்கியம் தமிழில் உண்டு. அது அக இலக்கியம். “அகத்திணை கற்ற கணவனும், மனைவியும் பிறந்த உலகை மதிப்பர். எடுத்த உடம்பை மதிப்பர், கொண்ட மணத்தை மதிப்பர், ஒருவருக்கொருவர்தம் காமநாடிகளைப் புரிவர். காமக்குறைவு கடமைக்குறைவாம் என்று உணர்வர், வித்தில்லாக் காமப்பழத்தை உண்பர். மெய்யின்பத்தை உயிரின்பமாகப் போற்றி ஒழுகுவர். அகத்திணை வாழ்க்கையை அன்புத்திணை வாழ்க்கையாகக் காண்பர்”[3] என்கிறார் வ.சுப. மாணிக்கம். அகப்பாடல்கள் அன்பின் முதிர்ச்சியாகிய காதல்பாடல்கள் உலகக் காதலர் அனைவருக்கும் உரியவை. ஒரு தனிப்பட்ட இனத்திற்கோ, மொழியினர்க்கோ கூறப்பெற்றவை அல்ல உலகினருக்குக் கூறப்பெற்றவை அகப்பாடல்கள் என்பதை,

**“யாயும் ஞாயும் யார்ஆ கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்படை நெஞ்சம் தாம்கலந் தனவே”** **(குறுந் : 40)**

என்று செம்மண் நிலத்தில் பெய்த நீர் அம்மண்ணின் நிறத்தையும், சுவையையும் கலந்துவிடுகிறதோ அதுபோல் காதலினால் முன்பின் அறியாத நெஞ்சங்கள் இணைந்தன. இப்பாடல் தமிழ் உள்ளங்களுக்கு ஏற்பட்ட அக உணர்வு அல்ல. உலக மனிதர்களுக்கு ஏற்பட்ட உணர்வு. அதனால்தான் இப்பாடலை ஆங்கிலத்தில்,

“What He said
What could my mother be to yours?
What kin is my father to your anyway – And
How did you and meet ever
But in love

Our heart have mingled

Like red earch and pouring rain"

என்று மொழிபெயர்த்து லண்டன் நகரில் பூமிக்கு அடியில் ஓடும் சுரங்கத் தொடர்வண்டியில் எழுதிவைத்ததை இந்து நாளிதழ் வெளியிட்டுள்ளது (The Hindu 01.07.2001) சங்க அகப்பாடல்கள் ஒருபுறம் நடைமுறை சார்ந்த வாழ்க்கை நெறிமுறைகளையும், மறுபுறம் அகத்திணைக்கான கவிதைமரபுகளையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளனவாக உள்ளன.

**அகம் - விளக்கம்**

அகம் என்ற சொல்லுக்கு மனம், வீடு, உள்ளிடம், காமஇன்பம், ஆகாயம், உலகம், எண்ணம், அகப்பொருள், மருதம், ஆன்மா போன்ற பலபொருள்கள் உள்ளன. இங்கு அகம் என்ற சொல் அகப்பொருளைக் குறிப்பதோடு வீட்டு வாழ்க்கையைப் பற்றியும் பேசுகிறது. மன வாழ்க்கையாகவும், மனைவாழ்க்கையாகவும் அகவாழ்க்கை அமைகின்றது. ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற உயர்ந்த ஒழுக்கநெறியோடு வாழ்க்கையைத் தொடங்குமிடத்துப் பிறந்த பேரின்பம் இத்தகையது எனப் பிறருக்கும் எடுத்துரைக்கமாட்டததாய் அவ்விருவரும் உள்ளத்து உணர்வை நுகர்ந்து மகிழ்தற்குரிய ஒருபொருள். ஆதலின் அக்காதலின்ப வாழ்க்கையை அகவொழுக்கம் என்றும் அவ்வின்ப வாழ்விற்குத் துணைநிற்கும் பொருளீட்டல், புகழீட்டல் போலும் செயல்களைப் புறவொழுக்கம் என்றும் சான்றோர் வகுத்துக் காட்டியுள்ளனர். எல்லா உயிர்களுக்கும் பொதுவான காமம் அகவொழுக்கம் அமைவதற்கு அடிப்படைக் காரணமாக உள்ளது. காதலன், காதலி உள்ளப்புணர்வு அகத்திணைக்கு உயிர்நாடியாக அமைகின்றது. ஆண், பெண், இருவர் உள்ளத்து நுகர்ந்த உணர்வினை வெளிப்படுத்த இயலாது. ஆதலின் இது அகவொழுக்கம் எனப்பட்டது. இதனால் அகம் என்னும் சொல் இதற்கு குறியீடாக அமைந்துள்ளது. அகம் என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. அகத்திணைக் கோட்பாட்டில் அகம் என்ற சொல், மனத்தில் புதைந்து கிடக்கும் அன்புணர்வைக் குறிக்கிறது. மேலும் அக நூலார் உள்ளத்தை,

**"உள்ளத்தில் எழுந்த அவா உடல்வழிப் படர்ந்து உள்ளத்தை**
**குளிர்விப்பது ஆதலின் உள்ளம் என்பதோடு**
**தொடர்புபட வருவதை அகம் என்றனர்"**

மேலும் தமிழ் என்பதற்கு அகம் என்று பொருள் கூறினர். ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்தப் பாடியது என்ற குறிஞ்சிப்பாட்டின் துறைக் குறிப்பு குறிக்கிறது. தமிழ் நுதலியது என்ற களவியல் உரையின் குறிப்பும் ஒண்தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையே என்ற திருக்கோவையார் பாடலடியும், தமிழின் சிறப்பினை மட்டுமல்லாமல் அகத்தின் சிறப்பையும் உணர்த்துகின்றன. இவ்விடங்களில் தமிழ் என்னும் சொல் அகத்திணைக்கு மறுபெயராய்க் கூறப்பட்டுள்ளது. மேலும் அகம் என்பதற்கு,

**"அகம்மலி உவகை ஆர்வமொடு அளைஇ"** **(மளபெடு : 184)**

**"அகம்மலி உவகையொடு அணுகல் வேண்டி**
**கொண்டுசினம் தணியாப் புலவுநாறு மருப்பின்**
**வெஞ்சின வேழம் நல்கினன்"** **(புறம் : 394)**

**"ஆர்கலி யினனே சோணாட்டு அண்ணல்**
**கவி கை மண் ஆள் செல்வர் ஆயினும்**
**வாள் வலத்து ஒழியப் பாடிச் சென்றாஅர்**
**வரல்தோறும் அகம் மலர"** **(புறம் : 337)**

**"மெய்இயல் அரிவை! நின் நல்அகம் புலம்ப**
**நின்துறந்து அமைகுவென் ஆயின் எல்துறந்து**
**இரவலர் வாரார் வைகல்**
**பலஆ குக! யான் செலவுறு தகவே"** **(குறுந் : 137)**

என்று விளக்கம் தருகின்றன. மேலும் அகம் என்பதற்குப் பலர் விளக்கம் தந்துள்ளனர்.

**"அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனான் ஆய**
**பயன் தானே அறிதலின் அகம் என்றார்"**[4]

இளம்பூரணர். அகவாழ்க்கையின் அனுபவங்களை ஒருவன் தானே உணர முடியுமே தவிரச் சொற்களால் புலப்படுத்துதல் இயலாது என்கிறார், நச்சினார்க்கினியர் அகததிற்கு.

**"ஒத்த அன்பான ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப்**
**பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும்**
**ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக்**
**கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து**
**இன்பமுறுவதோர் பொருளாகலின் அதனை அகம் என்றார்"**[5]

அக உணர்வுகளை எப்படியிருந்தது என்பதை அனுபவித்து உணரமுடியுமே தவிரச் சொற்களால் சொல்ல முடியாது என்பதை விளக்கமாகக் கூறுகிறார் ந.சுப்புரெட்டியார்.

**"ஐவகை ஒழுக்கங்களாகப் பேசப்பெறும் இதன் பல்வேறு**
**துறைகளும் எளிய மெல்லிய சார்பினவாகம் இவை நெஞ்சம்**
**கலந்தகாதலர் பற்பலரின் வாழ்க்கையில் வெவ்வேறு**
**காலத்து வெவ்வேறு சூழ்நிலையில் ஆங்காங்கு நிகழ்ந்து**
**வரும் தனி நிகழ்ச்சிகளின் ஒரு கோவையாகும்**
**சங்கப்பாடல்கள் இத்தனி நிகழ்ச்சிகளைச் சித்தரித்துக் காட்டுபவை**
**இந்த ஏழுதிணைகளையும் இணைக்கும் அடிப்படைப் பாலமே**
**உள்ளமும், உடலும் கலந்த இன்ப செய்தியாகும். இதுவே**
**அகம் என வழங்கப்படுகின்றது"**[6]

என்கிறார்.

அகத்தில் ஏற்படுகின்ற உணர்வுகளும், செயல்களும் அக ஈடுபாட்டின் அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. மனித எண்ணங்களும், செயல்களும் ஏதாவது ஒருவகையில் அகஉணர்வுகளுக்கு மூலங்களாக அமைகின்றன. இவ்வுணர்வுக்கு அன்பு காரணமாக அமைவதால் மனித உள்ளம் காதல்நெறிக்கு வசப்படுகிறது. இவ்வக ஈடுபாட்டைச் சான்றோர் அகம் என்றனர். 'அகத்திணை இன்பத்திற்குப் பொருள்வளம் அடிப்படையன்று மனவளமே அடிப்படையாகும் என்பதையும் அகப்பாடல்கள் உணர்த்துகின்றன'. அகமாந்தரின் வாயிலாக வெளிப்படுத்த இயலாத மனஉணர்வுகளை உள்ளுறை இறைச்சிவாயிலாக உணர்த்தும் மரபு அக இலக்கியங்களில் சிறப்பாக அமைந்துள்ளன.

**அகம் தோன்றக்காரணம்**

ஒவ்வொரு நூலும் அந்தந்தக் காலச் சூழ்நிலையை ஒட்டியே எழுந்தமை இலக்கிய வரலாறு காட்டும் உண்மையாகிறது. சான்றாகக் களப்பிரரின் ஆட்சிக்காலத்தில் அறம் அழிந்தபோது அறநூல்கள் தோன்றின. அந்நிய மதங்களான சமண, பௌத்த மதங்களின் ஆதிக்கத்தைத் தடுக்கும் முயற்சியாகச் சைவ, வைணவ மதங்கள் தோன்றின. அவ்வாறே அக இலக்கியங்களின் தோற்றத்திற்குச் சில காரணங்கள் உள்ளன.

- அரசனைப் பற்றியும், போரைப் பற்றியும் பாடினால் புலவர்கள் பரிசில் பெற வாய்ப்பு இருந்தது. ஆயினும் பரிசுபெற விரும்பாத புலவர்கள் அகம் பாடினர்.
- வாழ்க்கை அனுபவங்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள எழுந்த எண்ணம்
- போரை விரும்பாத அமைதி வாழ்க்கை வாழ விரும்பிய புலவர்கள் புறப்பாடல்களைப் பாடுவதை விடுத்து அகப்பாடல்களைப் பாட நினைத்தமை
- பின்வரும் தலைமுறையினருக்கும், பயனளிக்கும் வகையில் அகவுணர்வுகளைப் படைக்க விரும்பியமை
- போரை விரும்பிய மக்களின் மனதை இல்லறத்தில் செலுத்துவதற்கு மேற்கொண்ட மனமாற்ற முயற்சி

- வாழ்ந்த இன்ப வாழ்வின் மகிழ்ச்சியின் விளைவு
- போரால் பெறும் இன்பத்தினும் இல்லற இன்பம் சிறந்தது என்பதை உணர வைத்தல்

போன்ற நிகழ்ச்சிகள் அகம் தோன்றுவதற்குக் காரணமாயின. புலவன் தன் பாடலுள் உணர்வுகளைப் புலப்படுத்துவதற்கு ஏற்படுத்திக் கொண்ட இலக்கியம் அக இலக்கியம். அது படைப்பாளியின் எண்ணம் எதுவாயினும் அவற்றையெல்லாம் வெளியிடும் இலக்கியங்கள் ஒரு கட்டுக்கோப்புக்குள் மரபினை மீறாமல் அமைய வேண்டும் என்ற கொள்கை அக இலக்கிய மரபாக விளங்குகிறது என்கிறார் ச.வே.சுப்பிரமணியன். மேலும் புலவன் அகப்பாடல்களைச் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப்

பெறாது' என்று படைக்க முனைந்ததற்குக் காரணம் காலங்கடந்த படைப்புகளாக அக இலக்கியங்களைப் படைக்க விரும்பியமை. தாம் படைத்த பாடல்கள் காலம் கடந்த நிலையில் எக்காலத்திலும் படிப்பவர்க்கு இன்பத்தை அளிக்க வேண்டும் என்பதற்காகப் பாடப்பட்டவை அகப்பாடல்கள். இப்பாடல்கள் தேனில் ஊறிய தீஞ்சுவை பலாப்பழத்தைப் போன்று இனிமையானவை.

**அகத்திணைத் தோற்றம்**

மக்களின் மேன்மைபொருந்திய வாழ்க்கை முறைகளைக் காட்டும் கண்ணாடிகளாக அக இலக்கியங்கள் திகழ்கின்றன. இவற்றில் அகத்திணைத் தோற்றம் 'சமுதாயவியல், மானிட நிலவியல், தொல் தமிழினத்தின் உளவியல், என்றும் வகைப்படுத்தி ஆராயவேண்டும் என்கிறார் வ.சுப. மாணிக்கம். இதனைக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்ற முப்பிரிவுகள் அகத்திணையுள் அடங்கும் என்கிறார் தொல்காப்பியர்.

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப"** **(தொல்-பொருள்-அக. -1)**

என்று ஏழுதிணைகளாகப் பகுத்துள்ளார். அவை அகத்திணை – கைக்கிளை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல், பாலை, பெருந்திணை என ஏழுவகைப்படும்.

இவற்றுள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன முறையே காடு, மலை, வயல் சார்ந்த பகுதிகளாகும். பாலைக்குத் தனி நிலம் இல்லை. காடு மலைப்பகுதிகளின் எல்லையோரத்தில் கோடைக்காலத்தே வறட்சி மிகுந்த பாலையாக மாறும் நிலம் மீண்டும் மழைக்காலத்தில் நன்மை பெற்று விளங்கின. எனவே முல்லை, குறிஞ்சி சார்ந்த நிலப்பகுதிகளைக் காலத்தை ஒட்டிப் பாலை எனப்பட்டன. சிறுமை கருதியும் மிகை கருதியும் கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நிலம் வகுக்கவில்லை.

அகத்திணை சார்ந்த பாடல்கள் முதல், கரு, உரிப்பொருள் என்ற அடிப்படை உடையன. அவற்றுள் முதற்பொருளாவது நிலமும், பொழுதும் என்ற இரண்டின் இயல்புகளைக் குறித்துக் கூறுவதாகும்.

கருப்பொருளாவது அந்தந்த நிலத்தின் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, தொழில், கருவி, செய்தி போன்றவற்றைக் குறிக்கிறது.

உரிப்பொருளாவது மக்களின் உணர்வோடு பொருந்திய ஒழுக்கங்கள். அவை புணர்தல், பிரிதல், இரங்கல், ஊடல் இவற்றின் நிமித்தம் எனப்பட்ட மக்களின் காதல் ஒழுக்கச் செய்தியைக் குறிக்கிறது. இவற்றின் புனைவே அகத்திணை இலக்கியம் என்பதை 'அகம் புகல் மரபின் வாயில்கள்' என்று தொல்காப்பியம் குறிக்கிறது. அகத்திணை மாந்தரெல்லாம் ஒரு வீட்டு உறுப்பினர்களாவர். அகத்திணையில் காதல்

மட்டும் பேசப்படுகின்றது. ஆதலின் அகம் என்னும் சொல் வீடு என்பதனைக் குறிக்கின்றது. இச்சொல் குறியீடாக அமைந்துள்ளது.

> **"சங்கத்தார் தாம் வடித்த புதிய காதல் இலக்கியத்தின்**
> **கூறுகள் எல்லாம் தோன்றத் தக்கதொரு சொல்லை**
> **ஆராயந்தனர். காதலர் தம் உள்ளப்புணர்ச்சி**
> **அவ்விலக்கியத்தின் உயிர்க்கூறு. உள்ளம் என்னும் பொருளும்**
> **அகச்சொல்லுக்கு இயல்பாக இருத்தலின் அகத்திணை**
> **என்று இலக்கியக் குறியீடு வைத்தனர்"**[7]

என்று வ.சுப. மாணிக்கம் சுட்டியுள்ளார்.

**அகப்பொருளின் சிறப்பு**

சங்கப் பாடல்கள் அகம், புறம் என்னும் ஒற்றுமை, வேற்றுமைகளைப் பெற்றிருப்பினும் புறத்தினும் அகம் சிறப்புடையது. புறத்திணைப் பொருளான வீரம் மக்களுள் சிலர்க்கே உரியது. ஆனால் அகத்திணைக்குப் பொருளான காமமோ ஆண், பெண் என்னும் பிரிவமைந்த உயர்திணை, அஃறிணை உயிர்களுக்கெல்லாம் பொதுவானது என்பதால் தனிச்சிறப்பைப் பெற்றுள்ளது. மேலும், புலவர்களும் புறத்தைவிட அகப்பாடல்களைச் சிறப்பாகவும், அதிகமாகவும் பாடியுள்ளனர்.

சங்கத் தமிழ்ப் பாடல்களின் தொகை : 2381
அகத்திணைப் பாடல் : 1862
அகம்பாடிய புலவர்கள்: 378

**அகப்பாடல்கள்:**

| | | |
|---|---|---|
| அகநானூறு | : | 400 |
| நற்றிணை | : | 400 |
| குறுந்தொகை | : | 401 |
| ஐங்குறுநூறு | : | 500 |
| கலித்தொகை | : | 149 |
| பரிபாடல் | : | 8 |
| பத்துப்பாட்டு | : | 4 |
| | | 1862 |

**புறப்பாடல்கள்:**

2381
− 1862
புறம் : 519

இப்பாடல்களின் எண்ணிக்கையைக் கொண்டு ஆராயும்போது அகப்பாடல்களே தனிச்சிறப்பைப் பெற்றுள்ளன. அகத்தின் சிறப்பினை விளக்கும் சங்கப் புலவர்கள் தங்கள் உள்ளங்கவர்ந்த காதலைப் பாடுபொருளாகக் கொண்டு அதிகமான பாடல்களை இயற்றியுள்ளனர். இவற்றில் அகம் பாடாது புறம் பாடியவர் தொகை 95, புறம் பாடாது அகம் பாடியவர் 301, அகமும் புறமும் பாடிய இருதிணைப் புலவர் 71, அகத்திணையில் கற்பியல் பாடாது களவியல் மட்டும் பாடியோர் 145, களவியல் பாடாது கற்பியல் பாடியவர் 140 களவும், கற்பும் பாடியவர் 93 என்று வகைப்படுத்துகிறார் வ.சுப.மாணிக்கம்.

**அகப்பாடலின் பாகுபாடு**

| **திணை** | **பாடல்கள்** | **புலவர்கள்** | **பெயர்தெரியாத பாடல்கள்** |
|---|---|---|---|
| ஐந்திணை | | | |
| களவு | 832 | 238 | 41 |
| கற்பு | 966 | 233 | 28 |
| கைக்கிளை | 4 | 2 | |
| பெருந்திணை | 10 | 1 | |

அகப்பொருளில் சிறப்புப் பெறுவது களவு, அக்களவு இன்பத்தினைத் தரவல்லது. அவ்வின்பத்திற்கு இன்பஞ் செய்யவல்லது ஊடல். இதனை,

**“புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல்**
**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே”** **(தொல்.960)**

என்ற தொல்காப்பியம் புணர்தலை முன்னும் ஊடலைப் பின்னுமாக அமைத்துள்ளது.

அகத்திணையில் அமையும் பொருள்களை முதல், கரு, உரி எனப்பகுப்பர் தொல்காப்பியர். இம்மூன்றனுள் சிறப்பிடம் பெறுவது உரிப்பொருள், முதல்,

கருப்பொருள் இன்றிப் பாடல்கள் இயற்றப்பெறலாம். ஆனால் உரிப்பொருள் இன்றிப் பாடல்கள் இயற்ற இயலாது. இதனைப்போன்று சங்கப்பாடல்களிலும் அகத்திணைப் பாடல்கள் சிறப்பினைப் பெற்றுள்ளது. “அகவாழ்க்கை மக்களின் தனி வாழ்க்கை. புறவாழ்க்கை அவர்தம் பொதுவாழ்க்கை. தனிவாழ்க்கையின் உணர்வுகள் எக்காலத்தும் மாறாதவை. எவ்விடத்தும் மாறாதவை. புறவாழ்க்கையின் உணர்வுகள் காலந்தோறும் மாறுபவை. இடத்திற்கேற்ப மாறுபவை. நிலைபேறு கொண்ட உணர்வுகளை நயமுற வெளிப்படுத்தும் அகப்பாடல்கள். பிறப்பு இறப்பு என்னும் நிலைப்பேற்றுச் செய்திகளைச் சொல்வதில்லை. வாழ்க்கை நிலைபேறு கொண்டது என்னும் அரிய செய்தியை நுட்பமாக அகப்பாடல்கள் வெளியிடுகின்றன”[8] என்கிறார், ஈகோ பாஸ்கரதாஸ். சங்க இலக்கிய அகப்பாடல்கள் அதற்கேயுரிய மரபுகளுடன் மக்களின் தன்னிகரற்ற வாழ்க்கையை நுட்பமாக வெளியிடுகின்றன.

**அகத்திணை மாந்தர்**

மனித உணர்வுகள் காலங்களைக் கடந்தவை. எத்தனை நூற்றாண்டுகள் உருண்டோடினாலும் அடிப்படை மானுட உணர்வுகளின் மாற்றங்கள் இருப்பதில்லை. மனித உணர்வுகளுள் மகத்தானது காதலுணர்வு. காதல் வயப்படுவதும் காதலில் கட்டுண்டு கிடப்பதும் காலங் காலமாக நடைபெற்று வந்திருக்கும் காட்சிகள். சங்க அக இலக்கியங்களில் வெளிப்படக் கூறமுடியாத மன உணர்வுகளை உள்ளுறை, இறைச்சி வாயிலாக உணர்த்தும் மரபு உள்ளது. கேட்போர் புரிந்து கொள்ளும் வண்ணம் இவ்வுள்ளுறை இறைச்சி வாயிலாகக் குறிப்பிட்ட சூழலில் குறிப்பிட்ட மன ஓட்டங்களை முன்நிறுத்துகின்றனர். அக மாந்தரின் மன உணர்வுகள் கூறுவோரின் இன்பதுன்ப மன நிலைக்கு ஏற்பவும் கேட்போரின் மன நிலைக்கு ஏற்பவும் மாறுபட்டு ஒலிக்கின்றன.

அகமாந்தர்கள் தம்மனநிலையை உணர்த்த விரும்பியபோது உள்ளுறையையோ உவமத்தையோ கையாளது வெளிப்படையான கூற்றைப் பயன்படுத்தியுள்ளனர். தலைவனைச் சிந்திக்கத் தூண்டுவதோ, உணர்வு வயப்படுத்துவதோ இங்கு நோக்கமன்று. தலைவியின் நிலையைத் தெளிவாக எடுத்துரைப்பதே நோக்கம். ஆற்ற இயலாத தலைவியின் மனநிலையைப் புரிந்துகொள்ளாமல் பிரிய நினைக்கும் தலைவனை

> **“வாழா ளாதல் அறிந்தனை சென்மே !** (நற் : 19:9)
> **புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை**
> **யானும் ஆற்றேன்** (நற் : 124:3-4)

என மனமறிந்து கூறுவதற்குத் தம் மனநிலையைத் தெளிவுப்பட கூறும் நோக்கமே காரணம். இலக்கண இலக்கியங்களில் அகமாந்தர்களையும் அவர்தம் உணர்வுகளையும் முன்னிலைப்படுத்துகின்றனர்.

தொல்காப்பியர் தோழி, தலைவி, தலைவன், செவிலி, நற்றாய், காமக்கிழத்தி, வாயில்கள் என்று அகத்திணை மாந்தர்களின் கூற்றுப்பற்றிக் குறித்துச் செல்கிறார். தோழி, தலைவன் கூற்றுக்கள் அகத்திணையியல், களவியல், கற்பியல் ஆகிய மூன்றிலும் இடம்றெுகின்றன. தலைவியின் கூற்று அகத்திணையியலில் காணப்படவில்லை. அது விடுபட்டிருக்கலாம் என இளம்பூரணர் கூறுவர். சங்க அக இலக்கியங்கள், திணை துறைகளுக்குத் தரும் சிறப்பினும் அகமாந்தரின் மன உணர்வுகளுக்குச் சிறப்பிடம் தருகின்றன. சங்க அக இலக்கியங்கள் அகமாந்தரின் கூற்று அடிப்படையில் அமைந்துள்ளன. சங்க இலக்கியங்களில் இடம்பெறும் அகமாந்தர்கள்

1. தோழி
2. தலைவி
3. தலைவன்
4. நற்றாய்
5. செவிலி
6. பரத்தை
7. வாயில்கள்

என்பவராவார்.

**தோழி**

அக இலக்கியத்தில் இன்றியமையா இடம் பெறுபவள் தோழி. அகத்திணை மாந்தர்களுள் தோழிக்கெனத் தனிச்சிறப்பிடம் உண்டு. களவு, கற்பு இரு நிலைகளிலும் பெரும்பங்கு ஏற்பவள் தோழி. தலைவியின் குழந்தைப் பருவத்தில் உடலைப் போற்றி வளர்ப்பவள் செவிலி. இளமைப் பருவத்தில் உள்ளத்தைப் போற்றிப் காப்பவள் தோழி. தோழியரே பின்னால் செவிலியர் என்ற நிலையை அடைகின்றனர். தலைவியின் விளையாட்டுப் பருவத்திலிருந்து தோழியாக இருந்து மகப்பேறு நிலையில் செவிலியாக மாறுகின்றாள். செவிலியின் மகள்தான் தோழி என்பதை

**“தோழி தானே செவிலி மகளே” (தொல்-பொருள்: 127)**

என்கிறார் தொல்காப்பியர்.

**“சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே”**

**(தொல்-பொருள்: 128)**

என்கிறது. தலைவன் தலைவியரிடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்துக் கனிவதற்குத் தோழி உறுதுணையாகிறாள். தலைவனும், தலைவியும் செல்வநிலையில் ஓங்கி நிற்கும்போது தோழி, சொல், செயல் ஆகியவற்றை அவர்களுக்கு உணர்த்துகிறாள். அதனால்தான் தோழி துணைப்பாத்திரமாயினும் இணையிலா நிலைமையில் முதல்நிலையில் வைத்து எண்ணப்படுகிறாள். சொல்லும், செயலும் எப்போதும் ஒன்றிருப்பதில்லை. ஆனால் இருநிலையிலும் பெருமைப் பாத்திரமாக விளங்குகிறாள். தோழி தலைவிக்காகவே தலைவியின் காதல் வெற்றிக்காகப்படைக்கப்பட்ட பாத்திரமாகக் காணப்படுகிறாள். களவு வாழ்க்கை என்ற

தேரினது அச்சாணியுடன் கூடிய சக்கரம் போன்றவள் தோழி. அவளின் செயல்திறன் இல்லையானால் தலைவி தலைவனின் களவொழுக்கம் சிறப்பாக அமையாது. தோழியின் கூற்றில் அவளது தனிப்பட்ட வாழ்க்கையோ பிற அகமாந்தா்களுடன் தொடா்பு கொள்ளாமல் அவளுக்கெனத் தோன்றும் தனிப்பட்ட மன உணா்வுகளோ சித்தரிக்கப்படவில்லை. பிற அகமாந்தா்களின் மன உணா்வுகள் தோழியினால் விளக்கமாக, எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| தோழி கூற்று மொத்தப்பாடல் | - | 780 |
| தோழி தலைவனுக்கு உரைத்தவை | - | 417 |
| தோழி தலைவிக்கு உரைத்தவை | - | 290 |
| தோழி செவிலிக்கு உரைத்தவை | - | 37 |
| தோழி தன் நெஞ்சிற்கு உரைத்தவை | - | 3 |

தோழியின் கூற்றில் தனிமைப் புலம்பலும், மனப்போராட்டங்களும் காணப்படவில்லை. தோழி அறிவில் ஓங்கி உயா்ந்த நிலையில் இருக்கிறாள். இதனை.

**"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்**
**அறிவும் அருமையும் பெண்பாலான"** **(தொல் - 55)**

என்ற தொல்காப்பியரின் கூற்றிற்கு ஏற்பச் சிறந்த நிலையில் விளங்குபவள் தோழி. தோழியா் பலா் இருந்ததாக இலக்கியம் சுட்டுகிறது. இதனை 'நன்னா் மாக்கள்" என்கிறது அகம். தோழியா் பலா் இருந்தாலும் தலைவிக்கு உயிா்த்தோழியே தோழியாகக் கருதப்படுவாள். மற்றவரெல்லாம் தோழியாகக் கருதப்பட்டாலும் தலைவி, தலைவன் களவு, கற்பு ஒழுக்கத்தில் ஈடுபடுவதற்கு உதவமாட்டாா்கள். தலைவியின் வாழ்க்கையில் மிகுந்த பொறுப்பு உடையவள் தோழி அதனால் தலைமக்களது வாழ்க்கையில் தோழியே முதன்மை பெறுகின்றாள். தோழி இல்லையேல் தலைவியின் காதல் பாங்கற் கூட்டத்துடன் முடிந்துவிடும். தோழிதான் தலைவியின் காதல் அரும்பை மலா்வித்துக் காயாக்கிக் கனிவிக்கிறாள். தலைவி என்னும் வித்து செடியாகிக் குழந்தைக் கிளையுடைய குடும்பமாகத் தழைக்கச் செய்கிறாள். தோழி அம்மரத்தின் அடிமண்ணாக இருந்து பிறா் அறியாமல் செயல்படுகிறாள். தலைவியின் வாழ்வில் தோழியின் இடத்தை வேறு எந்தத் துணை மாந்தராலும் நிரப்ப முடியாது. இதனை உணா்ந்த தலைவி,

**"தோழி, நீ திறமை மிக்கவள்**
**இடமறிந்து காலமறிந்து**
**இன்சொல்லும் கடுஞ்சொல்லும் பேசும் கலையில் வல்லவள்**
**தலைவனின் உள்ளம் வருந்தாத வகையில்**
**அறிவுரை கூறித் தெருட்டும் நின்பணி**
**சிறப்பதாக நீ நெடிது வாழ்க"**[9]

என்று தோழியின் செயலைப் புகழ்ந்து அவள் நெடிது வாழ வேண்டும் எனத் தலைவி வாழ்த்துகிறாள். தோழி இல்லையென்றால் தலைமக்களின் காதல் இல்லை என்று கூறும்படி முதன்மையான இடத்தைப் பெற்றிருப்பவள் தோழி.

**தோழி – சொல்லாராய்ச்சி**

தோழி என்ற சொல்லை தோழ்+இ எனப் பகுத்தனர். இ என்பது பெண்பால் விகுதியைக் குறிக்கின்றது. மனித உறுப்புகளில் தோள் தமக்கும், பிறர்க்கும் உதவும் முதன்மையான உறுப்பு. தோளோடு தோள் நின்று உழைத்தல், தோள் கொடுத்தல் என்பன உதவுதல் என்ற பொருளில் வழங்கிவருகிறது. உடல் உறுப்புகளில் கை என்பது முயற்சியைச் சுட்டுவது போல தோள் என்பது உடனிருந்து உதவும் தன்மையைச் சுட்டுகிறது. தோள் போன்றவன் தோழன், தோழி என்பது எடுத்துக்காட்டாக உள்ளன. மேலும் வடமொழியில் மூவகை நிலையில் தோழிகள் சுட்டப்படுகின்றனர். அவர்கள் ஹண்டே (Hande), ஹஞ்சே (Hanje), ஹால (Hala) என்பவராவர். இவர்களில் ஹண்டே என்பவள் பணிப்பெண், ஹஞ்சே என்பவள், அணுக்கத்தொண்டு புரிபவள். ஹால என்பவள் நட்புரிமைத்தோழி, வேற்றுமொழிகளை விடத் தமிழ்மொழியில்தான் தலைவியுடன் தோழி சமநிலையில் சுட்டப்படுகிறாள். இகுளை, பாங்கி, சிலதி, இணங்கி, துணைவி, சேடி, சகி போன்ற சொற்கள் தோழியைக் குறித்தன. தோழி என்ற சொல்லே பழமைச் சிறப்புடையது. தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களிலும் சங்க இலக்கியங்களிலும் தோழி என்ற சொல்லே பயன்பாட்டில் உள்ளது. தோழி என்பதை,

**"தோள் புரை புணை**
**தோள்துணையாக வந்தனர்"** **(ஐங்.78:4)**

என்று சோமசுந்தரனார் குறிப்பிடுகிறார்.

**"தோழிஇஇ"** **(கலித்: 103)**

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

**"தொழுது நிற்றலை யுடையவள் தோழி"**[10]

என்று குமாரசாமிப் புலவர் குறிப்பிடுகிறார்.

'தோளை வீசி ஆடும் தோளி' என்ற வரிக்கூத்துக்குரிய பெண்டிருள் சிறந்தோள் தோழி ஆவாள் என்ற கருத்துக்கும் இடமுண்டு என்கிறார் இளங்குமரன்[11].

தொழில் செய்வோர் தொழுவர் எனப்படுவர். தலைவியின் ஏவல் தொழிலைச் செய்வோருள் முதன்மை பெற்றவள் தோழி எனப்படுவாள். இவ்வாறு தோழி என்ற சொல்லைப் பலரும் குறிப்பிடுகின்றனர்.

**இகுளை**

தோழி என்ற பெயருக்கு அடுத்தபடியாகச் சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற சொல் இகுளை என்பது. 'இது' இகு என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்தது இகு என்பதற்குச் சொரிதல் என்னும் பொருள் கூறுகிறது இறையனார் அகப்பொருள். தோழி என்பதை அன்பைச் சொரிபவள் என்று பொருள் கூறுகிறது. தோழி தலைவியைத் தோழி என்றழைத்தது போலவே அவள் தலைவியையும் இகுளை என்று அழைப்பதும் சங்ககால மரபு. இகுளை என்பதைச் சீதநாட்டு சொல் என்கிறது நன்னூல். மேலும் இகுளை என்ற சொற்கள் சங்க இலக்கியங்களில்,

| | |
|---|---|
| **"வறிதால், இகுளை! என் யாக்கை"** | **(நற்.64:9)** |
| **"கார்அன்று இகுளை! தீர்கநின் படரே"** | **(குறுந் 251:4)** |
| **"இணையல் வாழியோ இகுளை! வினைவயின்"** | **(ஐங்.467:2)** |
| **"வள்ளை அகவுவம் வா இகுளை"** | **(கலி 42:8)** |
| **"அரிய அல்லமன் இகுளை!"** | **(அகம் 8:5)** |

என்று பல இடங்களில் இடம்பெற்றுள்ளன.

**பாங்கி**

தலைவியோடு ஒன்றாகவாழும் உரிமைபெற்றவள். தலைவியின் பக்கத்தில் எப்போதும் இருப்பவள் தலைவியின் கருத்துக்களை ஏற்றுத் தலைவியைப் பேணும் முறைமை பெற்றவள் பாங்கி. பாங்கி என்பதற்கு உரிமை, பக்கம், இணக்கம், முறைமை என்ற பொருள்கள் கூறப்படுகின்றன. பாங்கி என்ற சொல்லை நம்பியகப்பொருள், மாறன் அகப்பொருள், இலக்கண விளக்கம் ஆகிய பிற்கால நூல்கள் எடுத்தாளுகின்றன. தலைவியின் வாழ்க்கையில் சிறப்புமிக்கப் பங்கு பெறுபவள் தோழி. எனவே தோழி பாங்கி எனப்பட்டாள்.

**சிலதி**

பிற்காலத்தில் சமநிலையிலிருந்து தோழி தாழ்த்தப்பட்டாள். அருமை தோழி போலிருந்தவள் வேலைக்காரி நிலைக்கு இறக்கப்பட்டாள் 'சிலதர்' என்பதற்குத் தொழில் செய்வோர் என்பர் நச்சினார்க்கினியர். சிலதி குற்றேவலுக்கு உரியவள் என்று பொருள் கூறுவர்.

**இணங்கி**

தலைவியின் கருத்துக்கு இணங்கி நடப்பாள் என்பதால் இப்பெயர் வந்தது. இது இலக்கியத்தில் பயின்று வந்ததாகத் தெரியவில்லை பிங்கல நிகண்டில் மட்டும் காணப்படுகிறது.

**துணைவி**

தலைவியின் செயல்கள் அனைத்திற்கும் துணையாக இருப்பவள். இக்காலத்துக் கணவன் மனைவி முறையே துணைவன், துணைவி என்ற நிலையில் ஒருவருக்கொருவர் துணையாக இருப்பதுபோல் அக்காலத்தில் தோழி தலைவிக்குத் துணைவியாக இருந்திருக்கிறாள்.

**சேடி, சகி**

வடமொழித் தாக்கத்தின் விளைவாக வழக்கில் வந்த சொற்கள் சேடி, சகி, என்பவை. 'சகி' என்பது கூட நிற்பவள் என்ற பொருளும் சேடி என்பது அனுபப்பபடுபவள் என்ற பொருளும் தரும் இச்சொற்களைப் பிங்கல நிகண்டும் நம்பியகப் பொருளும் சுட்டுகிறது. 'பாலும் கசந்ததடி சிகியே' என்று பாரதியாரும் பாடியுள்ளார்.

**அறிஞர் பார்வையில் தோழி**

- ❖ தலைவிக்குத் தோழியாகவும் நற்றுணையாகவும் அவளை முழுமையாக உணர்ந்து அறிந்தவளாகவும், அவளுக்காகவே வாழ்ந்து சொல்லாடிச் செயற்படுபவளாகவும் காட்டப்படும் தோழி சொல்வன்மை மிக்கவளாக அமைந்ததைத் தோழி கூற்றுப்பாடலில் அமையும் உள்ளுறை மிகுதி உணர்த்துகிறது என்கிறார் ச.வே.சுப்பிரமணியன்
- ❖ தோழி கூலிக்கு அமர்த்தப்படுகின்ற வேலைக்காரி போன்ற பாங்கியல்ல. பெரும்பாலும் எல்லா வகையாலும் தலைவயினையொத்த அவளுக்குச் சமமான உயிர்த்தோழியாவாள் என்கிறார் சுப. இராமநாதன்
- ❖ அறிவுசான்ற அக்காலப் பெண்ணுலகிற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றவள் நம் தோழி என்கிறார் புலவர் குழந்தை.
- ❖ தலைவியும், தோழியும் ஒட்டிப்பிறந்த கவைமகவு போன்ற ஒற்றுமையுள்ளவர்கள் என்பதை உளங்கொளல் வேண்டும் என்கிறார் வெங்கடராமச் செட்டியார்.
- ❖ களவு, கற்பு என்னும் இருகை கோள்களிலும் இத்தோழி தொடர்பு இல்லாத இடனில்லை என்று கருதத்தக்க முதன்மை வாய்ந்தவள் என்கிறார் ஆர்.வெங்கடாசலம் பிள்ளை.
- ❖ தோழியானவள் அன்பும் அறிவும் அறமும் முறையே உள்ளம் உரை செயல்களாகத் திரண்டு பெண்ணுருக் கொண்டு வந்தாற்போலும் பெருமையுடையவள் என்றால் சாலும் என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.
- ❖ தலைமகன் தலைமகள் தாயார் முதலானவர்களைத் தன் செயல்வழி ஒழுகச் செய்யும் திறமை, தோழி பாலுண்டெனக் கொள்ளலாம் என்பர் மு. அருணாசலம்.
- ❖ தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும் ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் இன்றியமையாதவள் என்பதும் தோழியிற்புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சைக் கவர்ந்தன என்பதும் பெறலாம் என்கிறார் வ.சுப. மாணிக்கம்.
- ❖ தலைவன் தலைவி என்னுமிருவர் கூற்றினும் இவ்விருவர் அன்பினையும் வளர்க்கும் நன்மதி நாட்டம் அமைந்த தோழியின் கூற்றே இக்களவொழுக்கத்தின் இயல்பினை இனிது விளக்குவதாம் என்கிறார் வெள்ளைவாரணர்.

- ❖ அரிய நட்புடையவராய் அன்னையாய் அமைச்சராய் விளங்கும் தோழி தலைவியின் வாழ்வு வளம்பெறச் செய்யும் சேவை பெரிது பெரிது என்கிறார் ந.செயராமன்.
- ❖ During the period courtship, the Toli of the girl Flgures prominently. The toli companion plays the role of a faithful comrade a genuine Friend and guide Dr.K.K.Pillai
- ❖ She (Toli) thinks only of the welfare of the heroine she undergoes difficulties to protect the lovers and she sacrifices her joys for the sake of the lovers welfare – R.K. Nagu
- ❖ In short, the Toli in Akapporul may be compared to Lord Krishna in Maha Bharatham Lord Krishna is the driving force throughout the story and it is his plan that is being executed unwillingly. Bharatham is the story of ten Pandavas or the Gauravas but in fact Lord Krishna dominates the whole story. It is the same case with the Toli without Toli, perhaps the love story will neither be interesting not impressive. It is she that makes the story lively and purposeful. - M.R. Pothilinga Guruswami

**தோழியின் சிறப்பு**

தோழி இல்லையேல் காதல் இல்லை அகப்பொருளும் இல்லை என்று சுட்டும் அளவிற்கு சிறப்பைப் பெற்றுள்ளாள். ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழறிவுறுத்த விரும்பிய கபிலர் தோழி படைப்பைத் தேர்ந்தெடுத்துள்ளார். தலைவி, செவிலி, நற்றாய் போன்றவர் அறத்தொடு நிற்கும் உரிமை இருந்தும் அவர்களைத் தேர்ந்தெடுக்காமல் தோழியை அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டது அவளது சிறப்பை விளக்குகிறது. அறத்தொடு நிற்றலில்தான் தோழியின் பொறுப்பு சிறப்பாக விளக்கப்படுகிறது. 99 வகையான மலர்களை அடுக்கிச் சொல்லும் சிறப்பைப் பெற்றுள்ளாள் தோழி. தலைவனிடம் புலவி நீங்காத தலைவிக்குத் தோழி அறிவுரை கூறும் பாடல் உலகப்புகழ் பெறும் சிறப்பைப் பெற்றுள்ளது.

**“பரத்தமை தாங்கலோ விலனென வறிதுநீ**
**புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை**
**அதுபுலந் துறைதல் வல்லி யோரே**
**செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்**
**தாமட் டுண்ட தமிய ராகித்**
**தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப**
**வைகுந ராகுதல் அறிந்தும்**
**அறியா ரம்மவ.ஃ. துடலு மோரே”** **(அகம் 316:10-17)**

தலைவனின் பரத்தமை நினைத்து வருந்தும் தலைவியைத் தேற்றுவதும், தாய்க்கு அறத்தொடு நிற்பதும் இத்தோழிக்கே உரிய செயல்கள். உடன்போக்கும் நிலையில் தலைவியைப் 'பாயலுணர்த்த நலங்கவர் பசலையை நகுவோம்' என அழுகையூடே சிரிப்பதும் தோழிக்கு உரிய சிறப்பு என்பதை,

**"இலங்குவீங்கு எல்வளை! ஆய்நுதல் கவனப்**

**பொலந்தேர்க் கொண்கன் வந்தனன் இனியே**

**விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி**

**நலங்கவர் பசலையை நருகம் நாமே"** **(ஐங் : 200)**

என்கிறது ஐங்குறுநூறு. இலக்கியத்தில் புதுப்பாதை அமைத்த சிறப்பை உடையவள் தோழி. களவுக்காலத்தில் தலைவியிடம் பெற்ற இன்பத்தை நினைவூட்டி அவள் அன்பின் நிலையைச் சுட்டுதல் தோழியின் மற்றொரு சிறப்பு.

களவில் அமைந்த தோழியின் தொண்டு கற்பிலும் தொடர்கிறது. பொருள் ஈட்டல், பகைதணித்தல் முதலான காரணங்களால் தலைவன் பிரிய நினைக்கும்போது அவனைப் பிரிந்துவாழ இயலாத் தலைவியின் நிலை எண்ணிச் செலவழுங்குவிக்க நினைக்கிறாள். தோழி தவிர்க்க இயலாத நிலையில் அப்பிரிவு நிகழும்போது வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தலைவன் வழியில் காணும் அன்புக்காட்சி கூறித்தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவியை ஆற்றுவிக்க இயற்கையைப் பின்புலமாக்கும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.

**"அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்**

**வன்புறை யாகும் வருந்திய பொழுதே"** **(தொல்-பொருள்-227)**

என இலக்கணம் வகுப்பர் தொல்காப்பியர். ஒருவேளை தலைவன் பொருள் வேட்கையால் நீட்டிக்க விரும்பினாலும் அவன் செல்லும் வழியில் வற்றிய பாலையில் வற்றாப் பேரன்புக் காட்சிகள் அவனை மறக்கவிடாது அவற்றைக் கண்ட பிறகும் அவன் அங்கு தங்கமாட்டான், உன்னை நினைத்து வருவான் என ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வதற்குப் பொருளே அடிப்படையாதலை உணர்ந்த தோழி பொருளின் சிறப்பற்ற நிலையை உணர்த்துகிறாள்.

**"மன் னாப்பொருள் பிணி"** **(நற்.46: 10)**

**"நிலையரும் பொருட்பணி"** **(அகம் 271:10)**

என்று பொருளின் நிலையற்ற தன்மையையும், வண்டுகள் நுகரும் புதுமலர்கள் நிறைந்த நீர்நிலை நாள்தோறும் குறைதலைப் போன்ற வாழ்நாள் நிலையாமையையும், இளமை நிலையாமையையும் சுட்டி அவற்றை உடனே துய்த்தல் வேண்டும் என்கிறாள். பொருள் நிலையாமை, இளமை நிலையாமை, வாழ்நாள் நிலையாமை இவற்றோடு முரண்படுத்திக் காட்டுதல் தோழி கையாளும் மற்றொரு உத்தி. பொருள் எக்காலத்திலும் சென்று ஈட்டுதற்குரியது. ஆனால் இளமையும் வாழ்நாளுமோ காலத்தால் கட்டுப்பட்டவை. நாடு கடந்து சென்று ஈட்டும் பொருளும் கற்கும் கல்வியும் தலைவியின் நலன், இளமை, காமம், இன்பம், குழந்தையின்மை ஆகியவற்றைத்

தருமோ என்று முரணமைப்பில் நிலையாமைத் தத்துவத்தை வலியுறுத்துகிறாள் தோழி. நிலையாமை பொருளைச் சுட்டிய தோழி நிலைத்த சிறந்த பொருள் இன்னது என்று கூறுகிறாள். தலைவியுடன் கூடி வாழும் வாழ்க்கையே சிறப்பாக ஆற்றும் இல்வாழ்க்கை தலைவியின் தோள்பிரியாமையே பொருளினும் சிறப்புடையது எனத் தனது சொல்வன்மையால் சிறப்புப் பெறுகிறாள் தோழி.

தலைவன் பரத்தனானபோது அவன் ஒழுக்கம் சுட்டிக் கடிகின்றாள். அவன் உள்ளம் திருந்தி வரும்போது தலைவியிடம் அவனுக்காக வேண்டியும் வாயில் நேர்ந்தும் உதவுகின்றாள். தலைவன் தான் இல்லாத நாட்களில் என்ன செய்தீர் என்று கேட்கிறான். அதற்கு தோழி வேந்தனின் பகை நீங்கவும், அறம் நனி சிறக்கவும், அரசு முறை செய்யவும் எனத் தலைவி பொதுநலத்துடன் இருந்ததைத்தன் சொல்லாற்றாலால் எடுத்துக்கூறுகிறாள்.

**"வாழியாதன் வாழி யவினி**
**அறநனி சிறக்க அல்லது கெடுக**
**வெனவேட் டோனே யாயே"** **(ஐங். 7:1-3)**

எனத் தலைவி மன்னனின் நலனை விரும்பி வழிபடுவதாகத் தோழி கூறுகிறாள். "தோழி தலைவியுடன் பிரித்தறிய முடியாத தன்மை உடையவளாதலின் தலைவி உணர்வதைத் தானும் உணர்ந்து கூற இயலும். தோழி தலைவியின் வேறுபட்டவள் என்பது உண்மையாதலின் பிரிந்து மூன்றாவது ஆளாக நின்று திருத்தவும் இயலும். தலைவன் தாயார் போன்றோரின் குற்ற நாற்றங்களைத் திறனாய்வு முறையில் எடுத்துக்கூறவும் அவளால் இயலும். இத்தோழி தலைவன் தலைவியர் உறவையும் அறிவாள் அதுபற்றிய ஊரார் வாயையும் உற்றுக்கேட்டு அறிவாள். இதனால் தலைவன் தலைவியரை நல்வழிப்படுத்தவும் தீங்குவராமல் காக்கவும் அவளால் முடியும்"[12] எனத்தோழியின் செயல்களையும் பேச்சையும் சிறப்பிக்கிறார் தமிழண்ணல்.

தமிழிலக்கியத்தில் தலைவியின் மிக நெருங்கிய தோழியாக இருந்து பல சிறப்பான செயல்களைச் செய்து சிறப்புப் பெறுகிறாள். அகமாந்தர் கொள்ளும் மன உணர்வுப் போராட்டங்களை அமைதிப்படுத்துகின்ற சூழல்களால் எல்லாம் தோழி காணப்படுகிறாள். அவள் களவை வரைவிற்கு ஆற்றுப்படுத்தும் வரைவுகடாதல் துறை, களவையும், கற்பையும் இணைத்து நிற்கும் அறத்தொடு நிற்றல், களவு, கற்பாக மாறும் சூழல் தெளிவில்லாதபோது தோன்றும் உடன்போக்கு, தலைவியின் களவை ஆராய்தல் தலைவன் பொருட்டு, தலைவியைக் குறைநயப்பித்தல், பிரியும் தலைவனைச் செலவழுங்குவித்தல், பிரிந்த தலைவியைத் தேற்றுதல், புறத்தொழுக்கம் கொண்ட தலைவனைத் தெருட்டுதல், பரத்தையிற்பிரிதல் தலைவன் அல்லது வாயில்களுக்குத் தலைவியின் மனநிலை அறிந்து வாயில் நேர்தல் அல்லது மறுத்தல் ஆகிய அனைத்துத் துறைகளிலும் தோழி முன்னிலைப்படுத்தப்படுகிறாள்.

**குறை நயப்பித்தல்**

தலைவிக்கமைந்த அச்சம், நாணம், மடம் ஆகிய பண்புகளினால் தலைவன் தோழியின் துணையொடு களவை நீட்டிக்க நினைக்கிறான். தலைவனின் இச்செயல் குறையுறுதல் என்றும் தலைவியின் இசைவு குறைநேர்தல் என்றும் தோழியின் துணைநலம் குறைநயப்பித்தல் என்றும் கூறப்படுகிறது. தோழி உரிமையுடன் கடிந்தும் உறழ்ந்தும் குறைநயக்கிறாள் தலைவியின் களவுச்செயலைத் தன் மேலிட்டும் கூறுகிறாள். தோழி தலைவியிடம் குறைநயத்தலை

**"குறைந்து அவட்படரினும்"** **(தொல்-பொருள் 112:17)**

என்கிறது தொல்காப்பியம். தலைவன், தலைவி களவு வாழ்வில் தோழியின் செயல்திறன் குறைநயப்பித்தலால் தொடங்குகிறது. களவு மேற்கொண்ட தலைவி தன் கனவை நேராகக் கூறித் தோழியின் உதவியைக் கேட்கவில்லை. மாறாக மறைக்கிறாள். தலைவியின் நிலை உணர்ந்த தோழி தலைவியிடம் நேராகக் களவைக் கேட்காமல் தான் அறிந்ததை உள்ளுறை வாயிலாக உணர்த்துகிறாள். தலைவனுடன் களவொழுக்கம் கொண்டு அதனை மீண்டும் பெற விரும்பும் ஆசை உணர்விற்கும், அச்சமன நிலையால் தன் ஆசைகளை அடக்கி நிற்கும் ஏக்க உணர்விற்கும் இடைநின்று தலைவி கொள்ளும் தவிப்பைத் தவிர்ப்பது தோழியின் நோக்கம். இதனால் தலைவிக்கு இருக்கும் ஏக்கத்தைத் தான் உணர்ந்து கொண்டதைத் தலைவிக்குக் கூறுகிறாள் தோழி.

**"காமம் செப்ப நாணின்று கொல்லோ"** **(அகம்: 330)**

எனத் தோழி கேட்கும் வினாவில் தலைவனிடம் கொண்ட காமத்தைக் கூறுவதற்கு நாணி நிற்பதை விளக்குகிறாள். தலைவியின் களவைத் தோழி உணர்ந்தபோது அதனைத் தலைவியோடு உரையாடி முழுவதும் அறிய முயல்கிறாள். தோழி இக்களவொழுக்கத்தை அறியக் கைக்கொள்ளும் அணுகுமுறைகள் இரண்டு. ஒன்று தலைவனோடு தான் களவுத் தொடர்பு உடையவள்போலத் தலைவியிடம் நடித்தல், மற்றொன்று தலைவனிடம் தலைவியை அறியாதவளாகக் காட்டுதல். முன்னர் கூறியது களவை அறிதற்குத் தலைவியிடம் கையாளப்படும் உத்தி பின்னர் கூறியது களவின் ஆழத்தை அறிதற்குக் கையாளப்படும் உத்தி. தோழி தலைவனுடன் உறவு கொண்டவளாகக் காட்ட முயலுதற்கு இரு நோக்கங்கள் காணப்படுகின்றன. தலைவியின் களவைத் தானே வெளிப்படும்படி செய்வது. காமத்திற்கும், தயக்கத்திற்கும் இடைப்பட்டு ஊசலாடும் தலைவனின் மனநிலையை இரக்கம் தோன்ற எடுத்துரைத்தல், தலைவனுக்கு வாக்குத்தந்ததை எடுத்துக்கூறி மறுத்தால் பழி தன்னைச் சேரும் எனத்தோழி வருந்துதல். தலைவன் எதிர்கொள்ளாது போனால் அவனை இழக்க நேரும் என எச்சரித்தல் - இவை குறைநயக்கத் தோழி கொள்ளும் அணுகுமுறைகள்.

தன் சொற்களால் தலைவியின் செயலில் நேரும் மாற்றத்தையும் கூறித் தலைவியை உடன்பட வைக்கிறாள். தலைவியின் உளங்கவரும் வண்ணம் தலைவனின் பேரழகு, செல்வச்சிறப்பு, வீரம், அடக்கம் முதலியவற்றை எடுத்துக்கூறுகிறாள். தலைவன் உயர்ந்தோனாயினும் தலைவிமீது கொண்ட காதலால்

அவனுடைய, பணிவு, அடக்கம், காதலை அடைய மேற்கொள்ளும் முயற்சி ஆகிய அனைத்தையும் எடுத்துக்கூறித் தலைவியின் உள்ளத்தில் இரக்க உணர்வைத் தோற்றுவித்து அவள் தலைவனை ஏற்குமாறு செய்கிறாள். நேராகவே இனிநாம் அவனைக்காக்க விடக்கூடாது என்று வற்புறுத்திக் 'கிளி ஓட்ட இல்லையென்றாலும் அழாதிருத்தலைச் செய்க' என வேண்டுகிறாள். பெரியோர் ஆராய்ந்து நட்புகொள்வர். நட்பு செய்தபின் ஆராயமாட்டர் என்பதை,

**"வருந்தினன் என்பதுஓர் வாய்ச்சொல் தேறாய்:**
**நீயும் கண்டு நுமரொடும் எண்ணி**
**அறிவறிந்து அளவல் வேண்டும்; மறுதரற்கு**
**அரிய வாழி! தோழி! பெரியோர்**
**நாடி நட்பின் அல்லது**
**நட்டு நாடார்தம் ஓட்டியோர் திறத்தே"** **(நற்.32: 5-9)**

என்று கடிந்து கூறுகின்ற முறையில் அமைந்துள்ளது. குறைவேண்டும் தலைவனை உயர்வாகக் காட்டித் தலைவியின் மனத்தில் தலைவனைப்பற்றி உயர்ந்த எண்ணத்தை உருவாக்குவது தோழியின் நோக்கம்.

தலைவனைக் குறை கூறத்தயங்கி நிற்கும் தலைவியிடம் தலைவனின் குறையை எடுத்துரைக்கும் தோழியின் கூற்றில் அவனது மனமும் செயலும் பெரிதும் பேசப்படுகின்றன. தலைவியின் உறுப்புநலன் பாராட்டிய தலைவனின் பேச்சு தலைவிக்குக் கூறப்படுகிறது. தலைவி தன் இன்சொலால் எழிலால் தன் உயிரை வாங்குவதாகக் குறைகூறுகிறான் தலைவன். இதனை உணர்ந்த தோழியின் உள்ளத்தில் இருவரும் இனிது உரையாடி இன்புற்றது தெரியும் என்பதை உணர்த்தும் துடிப்புக் காணப்படுகிறது.

**"நகையாகின்ற தோழி**
**தான்நம் அணங்குதல் அறியான் நம்மில்**
**தான் அணங் குற்றமை கூறி... தொழுது நின்றதுவே"** **(நற்: 245)**

எனக்கூறும் தோழி தலைவனுடன் இன்புற்ற தலைவி அவனது பிரிவால் வருந்தி நிற்கிறாள் என்பதைத் தான் உணர்ந்து கொண்டதைத் தலைவிக்கு உணர்த்த விரும்புகிறாள். காதல்வயப்படும் மனதால் தலைவனுடன் தலைவி ஒத்திருக்கிறாள் என்பதையும் அதன் வெளிப்பாட்டில் மட்டுமே வேறுபாடு காட்டி நிற்கிறாள் என்பதைத் தோழி தான் உணர்ந்ததைக் குறிப்பால் உணர்த்துகிறாள். குறையே இல்லாத தலைவனின் நிலையைத் தலைவிக்கு எடுத்துரைக்கும் தோழி விருப்பப்படும் பெண் யானையை இழந்த களிற்றின் நிலையோடு ஒப்பிடுகிறாள். தலைவனின் பணிவுநிலையை அறிந்தபோது தோழி மென்மையாக வேண்டுகிறாள். மடலேறும் மனநிலையை அறிந்தபோது புறச்சுழலை நன்கு விளக்கிக் கடுமையாக வேண்டுகிறாள். முன்னது குறையை ஏற்குமாறு வேண்டுவது. பின்னது குறையை மறுத்தலால் ஏற்படும் விளைவுகளைக் கூறுவது. தலைவி தலைவனுக்குக் குறை நேராமல் இருப்பினும்

நாணம் அழியும் சூழலைச் சுட்டி இடைநிற்கும் நாணத்தை விலக்கிக் குறைநேர்க என்பது தோழியின் அறிவுரை.

**வரைவு கடாதல்**

தலைவனிடம், தலைவியின் நிலையையும், சுற்றுப்புறத்தையும் விளக்கி மணம் புரியுமாறு தோழி வேண்டுவது வரைவு கடாதல் எனப்படுகிறது. இது களவைக் கற்பாக்கத் தோழி எடுக்கும் முன்ஏற்பாடு. திருமணம் தவிர்க்க முடியாதது. இன்றியமையாதது, இதனைப் புரிந்துகொண்டால் நயமும் பொருத்தமும் உடையதாகத் திருமணத்தைச் செய்யலாம். களவு வாழ்வில் அலர் தோன்றியபோது கற்பு வாழ்க்கையை வற்புறுத்துகிறாள் தோழி. இதனால் இற்செறிக்கப்படுகிறாள் தலைவி. இற்செறிக்கப்பட்ட தலைவியை நாடி இரவுக்குறி வரும் தலைவனின் ஆற்றாமையை எண்ணித் தலைவி கலங்கி நிற்கிறாள். முன்னது தலைவிக்கு நேர்ந்த கட்டுப்பாட்டினால் அவள் கொள்ளும் காதல் மிகை. தலைவனின் கட்டுப்பாடு மீறிய வருகையில் தலைவி கொள்ளும் துயர்மிகை. இவ்விரு மிகைப்பட்ட தலைவியின் உணர்வுகளை உணர்ந்தபோது தோழி தலைவனை வரைவு கடாவுவதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவர். இற்செறிக்கப்பட்ட தலைவியைத் தலைவன் காணும்நேரம் இரவாதலின் இரவுக்குறிவரும் தலைவனிடம் வரைவு கடாதலைத் தொல்காப்பியர் வற்புறுத்துகிறார். வரைவு கடாதல் என்னும் இத்துறையில்தான் தோழியின் முழு ஆற்றல் வெளிப்படுகிறது. களவு வாழ்வில் தடைகள் அதிகம் இருப்பதாகத் தோழி கூறுகிறாள். இத்தடைகள் நீங்கத் தோழி மேற்கொள்ளும் முயற்சியே வரைவு கடாதல். இதனை

> **“வரைவு – திருமணம்**
> **கடாதல்–வன்மையாகச் சொல்லுதல், தலைவன் மனதில் தைக்குமாறு அறிவுரை கூறுதல்”**

என விளக்கம் தருகிறார் இராம. சண்முகம் “தலைவன் இருவகைக் குறிகளிலும் பலகாலும் வந்தொழுகும் இடத்து இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப்பாரோ என்றும் வழியாலும் பொழுதாலுந் தலைவற்கு ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று இவ்வொழுக்கம் நும் குடிப்பிறப்பிற்கும், சிறப்பிற்கும் பொருந்தாமையின் இனி நீவிர் இவளை மணந்துகொள்வதே தகுதியென்று தலைவனை வரைவுகடாவத் தொடங்குவாள்”[13] என்று இராகவையங்கார் விளக்கம் தருகிறார்.

> **“காணல் அல்கிய நங்கள் வகலப்**
> **பல்புரிந்த தியறல் உற்ற நல்வினை”** **(அகம் 400: 3-4)**

என்று தோழி கையாளும் உத்திகளைச் சூழ்ச்சியாகக் கூறுகிறாள்.

> **“அழியல் வாழி தோழி நன்னன்**
> **நறுமா கொன்று நாட்டிற் போகிய**
> **ஒன்று மொழிக் கோசர் போல**
> **வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே”** **(ஐங் : 308)**

என்று தோழி தலைவியை ஆற்றுவதுபோல் கூறி வரைவுகடாதலின் இன்றியமையாமையை விளக்குகிறாள். அக இலக்கியங்களில் வரைவுகடாவத் தோழி சுட்டும் காரணங்கள்

- அலர்மிகை
- வெறியாட்டு
- நொதுமலர்
- இற்செறிப்பு
- தலைவன் ஆற்றாமை
- தலைவியின் ஆற்றாமை

தலைவனின் மனதிற்கு ஏற்பப்பேசி அவனைத் தன்வழியில் திருப்பும் விருப்பம் தோழிக்கு இருத்தலின் அவனை வரைக என வேண்டுவதில்லை. மாறாகத் தானும் தலைவனின் புணர்விற்குத் துணைநிற்பவள் போல பகலில் வரும் தலைவனை இரவிலும், இரவில் வரும் தலைவனைப் பகலிலும் வருமாறு வேண்டுகிறாள். தலைவன் புணர்ந்து நீங்கும் நிலை, புணரவந்த நிலை, புணர்வு மறுக்கப்பட்ட நிலை எனத் தலைவனின் மூன்றுவித மனநிலைகளில் தோழி வரைவு கடாவுகிறாள். புணர்ந்து நீங்கும் தலைவனிடம் வரைவு வேண்டுதற்கும், புணர்விடத்து நிறுத்தித் தலைவனிடம் வரைவு வேண்டுதற்கும் முறையில் மெல்லிய வேறுபாடு காணப்படுகிறது. புணர்ந்து நீங்கும் தலைவன் முன் தலைவியின் அவலநிலை உள்ளத்தைத் தொடுமாறு உள்ளது. இதனை,

**“நின்னலது இல்லா இவள் சிறுநுதலே**
**வருவை யாகிய சின்னாள்”** (ஐங் : 179)

என்கிறது.

**“வாழாள் ஆதல் நற் கறிந்தனை செனமே**
**நொதுமலர் போலப் பிரியின் கதுமெனப்”** (நற் : 19)

என்கிறது.

**“பிறிதொன்று ஆகலும் அஞ்சுவல்**
**செல்மோ சேயிழை என்றனம்”** (அகம்: 300)

எனத் தலைவனை முழுவதுமாகச் சார்ந்து விளங்கும் தலைவியின் தற்சார்பற்ற மனநிலை முன்நிறுத்தப்படுகிறது. புணர்ந்து நீங்கும் தலைவனைத் தங்குமாறு வேண்டுவது போன்று புணர்விடத்துத் தலைவனைத் தோழி வேண்டுவதில்லை. பிரிவு தாங்காது துயருறும் தலைவியை ஆற்றுவித்துச் செல்லுமாறு அவனை நயந்து நிற்பதும் இல்லை மாறாக

**“பொலிக என வந்து**
**நின்நகர்ப் பிழைத்த தவறோ”** (அகம்: 156)

எனத் தலைவனோடு கொண்ட தொடர்பிற்காக வருந்துகிறாள். "மறைவொழுக்கத்தைச் சமுதாயப் பெருங்கண்கள் பார்த்துக் கொண்டிரா. சுற்றுப்புறக் குளவிகள் கொட்டாது விடா எண்ண ஊசிகள் துளையாது போகா. ஆதலின் காதல் கனவுக்கு, உலகில் புகலிடம் இல்லை. களவைக் கற்பாக்கினல்லது உலகுக்கு உறக்கம் இல்லை. என்றும் உலகிற்குத் திருமணமின்றேல் சமுதாயத்துக்கு வாழ்வில்லை. ஆதலின் அகத்திணை கண்ட தமிழ்ச்சான்றோர் வரைவுத் துறைகளாய் இருப்பதற்கும் திருமணமே சிறந்தது என்கின்றனர்"[14]. தலைவியின் நலன் உண்டு பின் தலைவியை நினையாத தலைவனின் செயல் தீம்பால் உண்டபின், பால் உண்ட கலசத்தைக் கவிழ்த்துச் செல்லும் இழிசெயலாகக் கருதப்படுகிறது. தலைவியின் துன்பம் நினையாது தன் இன்பம் ஒன்றையே நினைந்து வரும் தலைவனின் மனப்பாங்கு தலைவியுடன் இன்புற்று உரையும் கவலையின்றித் தன் ஊர் சென்றுவிடும் பொறுப்பின்மை களவைப் பலரும் அறிந்த பின்னும் அதனால் விளையும் பின்விளைவிற்கு நாணாமை ஆகிய பண்புகளால் வரைவுக்குட்படுகிறான் தலைவன். தலைவனின் இம்மனப்போக்கை உணர்ந்த தோழி தலைவனுக்கு அறநெறி உணர்த்துகிறாள். இதனை,

**"தலைவன் தெருளாததனைத் தெருட்டி**
**வரைவு கடாயது"** **(கலி-நெய்-16)**
**"தோழி செறிப்பறிஇ வரைவு கடாயது**
**தோழி அருகெடுத்தது"** **(நற் : 355)**

என்கிறது. மேலும் தலைவியைச் சந்திக்கத் தலைவன் இரவுக்குறியிலும், பகற்குறியிலும் வந்துற்றான் அவ்வாறு வரும் தலைவனை,

**"குயிலும் மயிலும் நிலவும் தென்றலும்**
**கோடிநாள் புலவர் கூறிடும் வார்த்தைகள்**
**குயில்மொழி மயில்நடம் குளிர்பந்த தென்றல்**
**குடும்பத் தானெக் கூறாய் தும்பி"**[15]

என்கிறார் கண்ணதாசன். தலைவியைப் பெறுவதற்குப் பொய்மை பாராட்டும் தலைவன் குயிலின் மொழி மயிலின் சாயல் குளிரும் தென்றலாகத் தலைவியுடையாள் என்கிறான்.

வரைவு கடாதலைத் தன் இன்ப நுகர்ச்சிக்கு மாறாகக் கருதி மாறுபடும் மனப்போக்குத் தலைவனிடம் இருத்தலை அக இலக்கியங்கள் சுட்டுகின்றன. வரைவு கடாதலை மங்கலமான 'வேங்கை மலராகத்' தோழியும் 'புலிப்பொறியாகத்' தலைவனும் கருதுகின்றனர். தனக்கு மங்கலமாகத் தோன்றும் வரைவு தலைவனுக்கு வருத்தத்தைத் தருகிறது என்கிறாள் தோழி.

வரைவு கடாததற்குத் தோழிக்கு அமைந்த பின்புலங்களாக அமைபவை தலைவியின் இற்செறிப்பு. தலைவனின் களவு நீட்டிப்பு இற்செறிப்பில் தோன்றும் அன்னையின் கண்காணிப்பும் களவு நீட்டிப்பில் தோன்றும் அலரும் தலைவியின் துயருக்குக் காரணமாக அமைகின்றன. "முறைப்படுத்தப்பட்ட மணம் இன்றிக் களவில்

கொள்ளும் உறவால் அலர் தோன்றுகிறது". தலைவி களவு வாழ்வில் துய்த்து வந்த இன்பத்திற்கு அலரும் இற்செறிப்பும் தடைகளை உருவாக்குகின்றன. "பெண்ணின் காதல் வளர்ச்சிக்குச் சமுதாயம் கடிவாளம் இடுகிறது போராடாமல் எதனையும் பெண்ணால் பெறமுடிவதில்லை என்பர் பிராய்டு"[16] என்பதற்கு ஏற்பத் தலைவியின் உடலை வருத்துவது இற்செறிப்பு மனதை வருத்துவது அலர் இவை இரண்டும் இணையும்போது உள்ளும் புறமும் தோன்றும் துயரினின்று விடுபடத் தோழிக்குத் தெரிந்த தீர்வு வரைவு கடாதல். தலைவன் வரையாது நெடுங்காலம் வந்தொழுகும்போது இன்பமும் அலரும் இணைந்து வருகின்றன. அவற்றில் புணர்ச்சி தலைவி விரும்பிபெற நினைப்பது. அலர் அவள் விரும்பாமல் வந்து சேர்வது. புணர்வின்பம் அலரின்மை ஆகிய இரண்டையும் ஒருங்கிணைப்பது வரைவு. அலரின்மையோடு கூடிய புணர்வின்பத்தை வரைவு தருதலின் வரைவினைத் தோழி வற்புறுத்துகிறாள். இச்சூழலில் தோழியின் வரைவு கடாதல்களைப் புணர்ச்சி விருப்பமின்மையால் கூறப்பட்டன அல்ல வரைவு வேண்டும் என்றும் பொருளுடையன என இளம்பூரணர் தோழியின் மனநிலையை உணர்த்துகிறார்.

தலைவியின் சிறிய உயிரில் பெரிய காமம் தங்கிக்கிடப்பதைச் சிறிய கொம்பில் தூங்கும் பெரும்பழத்துடன் உவமை கூறுகிறாள் தோழி. பழம் கனிந்தவழிக் கொம்பில் இருந்து இற்று வீழும் பழம் போலக் காமம் மிக்கவழி. தலைவியின் உயிர் சென்றுவிடும் என எச்சரிக்கிறாள் தோழி. புணர்ச்சியால் தோன்றும் மயக்கம் தலைவனின் பண்பை விளைநிலமாக்கிக் காட்டியதாகத் தோழி வருந்துவது பன்முகப்படுத்தப்படுகின்றன. இதனை,

**"யார்க்கு நொந்து உரைக்கோ யானே பன்னாள்**
**காமர் நனிசொல் சொல்லி**
**ஏமம் என்று அருளாய் நீமயங் கினமே"** **(நற்: 396)**

எனத் தலைவன் சொல்லை நம்பியதால் தோன்றிய துன்பத்தின் ஆழத்தைப் புரிந்துகொள்ள முடிகிறது. தலைவனின் பிரிவால் தோன்றியது பசலை, பசலை கண்டு தோன்றியது அலர். அலர் கேட்டு இற்செறித்தவள் அன்னை இங்ஙனம் பிரிவால் தலைவனும், இற்செறிப்பால் தலைவி, அலரால் ஏதிலாரும் எனத்தலைவி பன்முகத் தாக்குதலுக்கு உள்ளானபோது அத்துயர்க்கு வடிகாலாகத் தோழி தலைவனிடம் வேண்டுவதே வரைவு கடாதல்.

**அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் என்பது களவைக் கற்பாக்க முயல்வது களவு, கற்பு என்னும் இருகரைகளுக்குமிடையே ஒரு பாலம் போல் அமைந்தது. கற்பின் வழி நின்று களவு ஒழுக்கத்தைப் பெற்றோருக்குத் தெரிவிக்கும் நிலை அறத்தொடு நிற்றல் எனப்படும். தலைவியின் களவு வாழ்க்கையை அவள் தம் பெற்றோருக்கு வலியுறுத்துவதே தோழியின் நோக்கமாகக் கொள்ளப்படுகிறது. இவ்வறத்தொடு நிற்றலை,

"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி

அறத்தியல் மரபிலள் தோழி என்ப" (தொல்பொருள் - 203)

என்று தொல்காப்பியர் தலைவியின் உள்ளத்து உணர்வை உணர்த்தும் தோழி அறத்தொடு நிற்க வேண்டிய இடம் பற்றிக் குறிப்பிடுகிறார். இது வரைவு கடாதல் முதலிய வழிகளெல்லாம் கையாளப்பட்ட பிறகு அறத்தொடு நிற்றல் என்னும் இந்நெறியை மேற்கொள்வர். குழந்தை 'இறப்பினும் தாய்பிழைக்க' என்ற உலகவழக்கிற்கு ஏற்ப இதுவரை உயிரினும், சிறந்ததாகக் காத்துவந்த நாணத்தை விட்டேனும் கற்பைத் தலையாகப் போற்றி அறத்தொடு நின்று காதலைக் கற்பாக்க முயற்சிப்பது அறத்தொடு நிற்றலின் சிறப்பு. ஐந்திணை களவுத்துறைகளுள் அறத்தொடு நிற்றலின் சிறப்பினை உணர்த்த ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ்மொழியின் தனியிலக்கிய மதிப்பை அறிவுறுத்த விரும்பிய குறிஞ்சிக்கபிலர் இத்துறையில் 261 அடிகள் கொண்ட குறிஞ்சிப்பாட்டைச் செய்தருளினார். இதனைத் தொல்காப்பியர் குற்றமில் வகையாய்க் கூறும் 'புரைதீர் கிளவியென்று' உரைப்பர். இறையனார் களவியல் உரையும் 'மாறுகோளில்லா மொழி' (இறை சூ.14 ப-95) என்று அழகான விளக்கம் தருகிறது.

தோழி தன்னுடைய அறிவுத்திறன் முழுவதையும் பயன்படுத்திச் செயற்படுவதற்குரிய பருவம் அறத்தொடு நிற்றல். இதில் தலைவியின் தாய், தந்தையர் மனப்பாங்கையும், தலைவன் எண்ணத்தையும், பிறவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கும் திறன் தோழியிடம் மட்டும் உள்ளது. அதனால் தலைவியின் நலன் கருதிக் களவைக் கற்பாக்க விரைவில் திருமணத்திற்கு வற்புறுத்துகிறாள். இதனைப் 'பெண்மையின் மாசுபடாமல் மிகப்பத்திரமாகப் பாதுகாக்கும் முயற்சியை நோக்கும்போது சரக்குவண்டிகளில் கண்ணாடிப் பார்சலுக்கு வெளியே Glass – Handle with Care என்று எழுதப்பட்டிருப்பது நினைவுக்கு வருகிறது என்று ந. செயராமன் குறிப்பிடுகிறார். தலைவியின் நாணத்தை உணர்ந்து கூறியுள்ளார்'[17]. 'தலைவி தன் மனத்தால் விரும்பியவனையே மணம் புரிந்து கொள்வதுதான் அறவழியில் நிற்பதாகும். விவரம் அறியாத பெற்றோர் வேறு எவனுக்கும் திருமணம் பேசிவிடாமல் தடுத்து தலைவியின் காதல் உண்மையை அறிவித்து முதலில் சினம் கொண்டாலும் பிறகு பெற்றோரையும் ஒப்புக்கொள்ள வைத்து மனத்தால் ஏற்றுக்கொண்டவனைப் பாரறிய மணமேடையில் ஏற்றுக்கொள்ள வாழ்வியல் அறத்தில் நிற்றலால் வழி செய்தால்தான் இதற்கு அறத்தொடு நிற்றல் என்று பெயர்'[18] என்கிறார் தமிழண்ணல். அறம் எனப்படுவது பல பண்புகளைத் தழுவிய பொதுச்சொல். அது பெண்ணுக்குரிய பண்பான கற்பைக் குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோர்க்கு அறிவித்தல் அறத்தொடு நிற்றலின் பொருள். இதனைத் தோழி பெற்றோர்க்கு அறிவிப்பது. தலைவி ஏற்கனவே கற்பு நெறிப்பட்டுவிட்டாள் என்பதனை உணர்த்த அறத்தொடு நிற்றல் நுண்ணிய துறையமைப்பை உடையது. இதில் தலைவி, தோழி, செவிலி, நற்றாய், தந்தை என பலருக்கும் அறிவிப்பது. இதனை யார் யாருக்கு வெளிப்படுத்தலாம். வெளிப்படுத்தியபின் அவரவர் மனநிலை என்ன என்பதை,

**“அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட**
**என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்**
**அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்**
**தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி**
**இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று**
**தெருமந்து சாய்த்தார் தலை”** **(கலி: 39:20-25)**

என அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறது கலித்தொகை.

தலைவி தன் மனநிலையை வெளிப்படுத்தியபின்தான் செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக உறுதிகூறுகிறாள் தோழி. தோழி அறத்தொடு நிற்கும்போது அவளுடைய பொறுப்பு பெரிதாக உள்ளது. மாந்தர்தம் மனநிலையை அறிந்த அவள் அன்னையின் மனம் ஏற்குமாறு தன்னைத் தயார் செய்து கொள்கிறாள். தலைவியின் காதல் நோயை வெளிப்படுத்தாவிட்டால் அது வளர்ந்து அவளையே அழித்துவிடுமோ என்ற கவலை ஒருபுறமும் களவுநிலையை வெளிப்படுத்தினால் தாய் தன்னைச் சினப்பாளோ என்ற அச்சம் மறுபுறமும் தோழியை அலைக்கழிக்கிறது. இதனை அவள்,

**“இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்**
**வினையிடை நின்ற சான்றோர் போல”** **(குறுந் பா 27-29)**

தன் பொறுப்பை மறைமுகமாகச் சுட்டுகிறாள். மரபுவழி மணத்தின் பெருமையையும் தாங்கள் தேர்ந்த மணத்தின் சிறப்பையும் கூறுகிறாள்.

**“கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையும்**
**வண்ணமுந் துணையும் பொரிஇ யெண்ணாது”**

என்று பெற்றோர் செய்யும் திருமணத்தையும்,

**“மாதரு மடனு மோராங்குத் தனப்ப**
**நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி**
**இருவே மாயந்த மன்றல்”** **(குறுந்: 19-21)**

எனக் களவு மனத்தைத் தோழி குறிப்பிடுகிறாள்.

தோழியின் மனத்தில் அறத்தொடு நிலைக் கருக்கொள்ளும் பின்புலம்:-

- தலைவியின் வேறுபாட்டை அறிந்து செவிலி ஐயுறும் சூழல்
- தாய் வெறியாட்டு எடுக்கும் பின்புலம்
- நொதுமலர் வரைவுக்குத் தமர் உடன்படும் மனப் போக்கமைவு
- தலைவன் வரைவொடு வந்தபோது, அதனைத் தமர் மறுக்கும் காலம்
- தலைவி அறத்தொடு நின்று களவை அறிவிக்காமலேயே தோழியே அறிய முயலும் சூழலும், அதற்குத் தோழி கைக்கொள்ளும் அணுகுமுறைகளும்
- தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கத் தலைவியின் முன் இசைவினை வேண்டுதல்

- தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்குமுன் தலைவனை வரைவு வேண்டி நிற்கும் பின்புலம்

இவை தோழியின் மனத்தில் அறத்தொடு நிலைகருக்கொள்ளும் பின்னணி.

சங்க இலக்கியங்களில் உள்ள அறத்தொடு நிலைப்பாடல்கள் அறத்தொடு நிலைக்குத் தொல்காப்பியம் கூறும் இலக்கணத்தை விளக்கும் இலக்கியங்களாக விளங்குகின்றன. தொல்காப்பியத்தில் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல், தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் என்றும் இருபடிநிலைகளைக் குறிப்பிடப்படுகின்றார். செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல், நற்றாய் தமர்க்கு அறத்தொடு நிற்றல் என்னும் அடுத்த படிநிலைகள் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படுகின்றன. குறிஞ்சிக்கலியில் மட்டும் 'என் ஐயர்க்கு உய்த்து உரைத்தாய் யாய்' எனத் தாய், தந்தைக்கு அறத்தொடு நின்றதைக் கபிலர் சுட்டுகிறார். அப்பாடல் தோழி அன்னைக்கும், அன்னை தமக்கும் அறத்தொடு நின்றதைக் கூறி, அதனைத் திருமணத்தில் கொண்டுபோய் முடிக்கிறது. தொல்காப்பியம் அறத்தொடு நிலையின் வகைகளாகக் குறிப்பிட்ட ஏழனுள் ஆறினை விளக்குகிறது குறிஞ்சிப்பாட்டு. இதனால் அறத்தொடு நிலைப்பாடல்கள் இலக்கணம் கண்டதற்கு இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அறத்தொடு நிலையின் இலக்கணம் தொல்காப்பியத்துள் பொருளியலில் இடம் பெறுகிறது. அறத்தொடுநிலை தலைவியின் களவைத் தமர்க்கு வெளிப்படுத்துவதன் வாயிலாகக் கற்பின் தொடக்க நிலையாகவும் விளங்குகிறது. தொல்காப்பியர் அறத்தொடு நிற்கும் மரபும், வகையும் பற்றி,

> **"அறத்தொடு நிற்கும் காலத்தன்றி**
> **அறத்தொடு மரபிலள் தோழி என்ப"** **(தொல்-பொருள்-12)**

என்று அறத்தொடுநிலை கருக்கொள்ளும் காலமும், இடமும் சுட்டுகிறார். தலைவனது எளிமை, உயர்வு, வேட்கை, மிகுதி ஆகியவற்றைக் கூறி அறத்தொடு நிற்பது என்பதை

> **"எளித்தல் ஏத்தல் வேட்கை உரைத்தல்**
> **கூறுதல் உசாதல் ஏதீடு தலைப்பாடு**
> **உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ**
> **இவ்வெழு வகைய என்மனார் புலவர்"** **(தொல்-பொருள்-13)**

என்று அறத்தொடு நிற்கும் முறையைப் பற்றிக் கூறுகிறார்.

**1) எளித்தல்**

தலைவன் தம் குடும்பத்திற்கும், அழகிற்கும் ஏற்றவனா தலைவியின்பால் கொண்ட அன்பு மாறாமலிருப்பானா என்று நினைக்கும் தாய்க்குத்தோழி தலைவனின் குடிப்பெருமை, செல்வம், அழகு, வீரம், பண்புடைமை, அன்புடைமை ஆகியவற்றை எடுத்துக்கூறித் தாயின் விருப்பத்திற்கு ஏற்பத் தலைவி, தலைவனைத் தேர்ந்தெடுத்துள்ளாள் எனத் தலைவனின் பெருமையைப் புலப்படுத்துகிறாள்.

> **"அவனுந்தான் ஏனல் இதணத்து அகிற்புகைஉண்டு இயங்கும்**
> **வான்ஊர் மதியம் வரைசேரின் அவ்வரை**
> **தேனின் இறால் என ஏணி இழைத்திருக்கும்**

**கான் அகல் நாடன் மகன்''** **(கலி 39: 7-10)**

என்கிறது கலித்தொகை.

**2) ஏத்தல்**

தலைவன் பெருந்தகுதியும் சிறப்பையும் பெற்றிருந்தாலும் மிகவும் எளியனவாக உள்ளான். ஆபத்து என்று கேட்டவுடன் தானே வந்து உதவும் குணத்தை உடையவன். சிறுவர்களைப் போன்று சிற்றில் விளையாட்டில் விருந்துண்ண விரும்புவன் மணலில் இளைப்பாறுதல், நாங்கள் பேசாமலிருந்தாலும் எங்கள் சொல்லுக்காகக் காத்திருப்பவன் எனத் தலைவனின் எளிமையைச் செவிலிக்கு எடுத்துக்கூறி அவனை ஏற்குமாறு கூறுகிறாள் தோழி.

**''புலிபுலி என்னும் பூசல் தோன்ற**
**ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆய்இதழ்**
**ஊசி போகிய சூழ்செய் மாலையன்**
**பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்**
**குயம்கண்டு ஆகம் செஞ்சாந்து நீவி,**
**வரிபுனை வில்லன், ஒருகணை தெரிந்துகொண்டு,**
**யாதோ மற்றுஅம் மாதிறம் படர்? என**
**வினவி நிற்றந் தோனே''** **(அகம் 48: 7-14)**

என்று தலைவனின் பண்புநலன்களை எடுத்துரைக்கிறது அகம்.

**3) வேட்கையுரைத்தல்**

தலைவனைக் காண முடியாமையால் வேட்கை மிகுதியால் தலைவியின் உடலில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்கின்றன. தலைவி துன்பத்திற்குக் காரணம் அறியாமல் வருந்தும் செவிலியிடம் தலைவியின் நோய், நோயுற்ற காரணம், நோய்க்கேற்ற மருந்து ஆகியவற்றை அறிவிக்கும் மருத்துவராகத் தோழி செயல்படுகிறாள். தலைவியின் கண்ணழகைக் கூறி அக்கண்களில் வரும் கண்ணீரைத் துடைக்கத் தாயிடம் வேண்டுகிறாள் தோழி. இதனை

**''முயங்காது கழிந்த நாளிவள்**
**மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்''** **(ஐங் : 220:4-5)**

தலைவனும், தலைவியும் ஒருவர்மீது ஒருவர் வேட்கை கொண்டு களவில் திளைக்கும் நிலையை அறிந்தவள் தோழி,

**''மென்மையும் வன்மையும் எதிர்மறை – ஆயின்**
**மீதுறுங் காதலுக் இதுவே சுகமென**
**தொன்மையும் தூய்மையும் தோயுந் தமிழின்**
**சுகத்தை கூறாய்! கூறாய்! தும்பி''** **(கண்ணதாசன் கவிதை ப-49)**

என்கிறார் கண்ணதாசன். தலைவியின் மேனி பசத்தல், கண்கள் உறக்கமிழத்தல், உடல்நடுங்குதல் எனத் தலைவிநிலை கூறிச் செவிலிக்கு அறத்தொடு நிற்கிறாள்.

நோய் கூறியவள் நோய்க்கு மருந்து தலைவனின் மார்பில் உறங்குதல், அவர் குன்றத்தைக் காணல் என்பதை அறிவுறுத்துகிறாள் தோழி.

**4) கூறுதல் உசாதல்**

தலைவியின் வேறுபாடு கண்டதாய், தலைவியின் நோய்க்குக்காரணம் என்ன என்பதை அறிய கழங்கெடுத்தும் அகவன் மகளைக் கேட்டும், வேலனை வினவியும், முருகனை நோக்கி வெறியெடுத்தும் துன்புறுகிறாள். வேலனுக்கு அஞ்சி ஒழுகிய மகளிர் காதலில் கட்டுண்ட பிறகு முருகனையும், வேலனையும் எதிர்க்கும் போக்கு காணப்படுகிறது. கற்பு வாழ்வு மேற்கொண்ட நிலையில் பிற தெய்வம் தொழுதல் ஏற்றதன்று என்று கருதிய முறை புலப்படுகிறது. தாய் வெறியெடுக்குமிடத்து வேலன் வேண்ட வெறிமனை வந்த முருகனை மடவன் என்று எள்ளுகின்றாள் தோழி. இதனை

**“அருவி யின்னியத் தாடு நாடன்**
**மார்புதர வந்த படர்மனி யருநோய்**
**நின்னணங் கன்மை யறிந்தும் அண்ணாந்து**
**கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி**
**வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்**
**கடவுளாயினும் ஆக**
**மடவை மன்ற வாழிய முருகே”** **(நற் 34: 5-11)**

என்று வழிபடும் முருகனை எள்ளுகின்றனர் பெண்கள். வேலன் கொடுக்கும் பலியை ‘மாமலைச் சிலம்பனின் மார்பு உண்ணுமோ’ எனச் சிலேடையின் மூலம் செவிலியை உய்த்துணர வைக்கிறாள். அகவன் மகளிடம் தலைவனின் மலையைப் பற்றிய பாட்டைக் கேட்கும் வேட்கையைப் புலப்படுத்துவது போன்று குறிப்பாகச் செவிலிக்கு உண்மை உணர்த்துகிறாள்.

**“அகவன் மகளே யகவன் மகளே**
**மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்**
**அகவன் மகளே பாடுக பாட்டே**
**இன்னும் பாடுக பாட்டே, அவர்**
**நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே”** **(குறுந் 23: 1-5)**

தாய் அகவன் மகளை அழைத்துக் கட்டுக்கடங்காத விடத்து தோழி அறத்தொடு நிற்கிறாள்.

**5) ஏதீடு**

தலைவியின் உயிரைப் பெரிதாக நினைக்கும் செவிலியிடம் களிறு, புலி, நாய் முதலியவற்றினிடமிருந்து தலைவன் தலைவியைக் காத்தான் எனத் தலைவனின் வீரம் கூறியும் புனலிலிருந்து காத்தான் என அருள்கூறியும், பூ, தழை தந்தான் என்று அன்புகூறியும் அறத்தொடு நிற்கிறாள் தோழி. தலைவி தலைவன்பால் கொண்ட காதலுக்குக் காரணம் நன்றியுணர்வே என நிலையாட்டுகிறாள். தலைவியின் உயிரைக் காத்த தலைவனை ஏற்குமாறு செய்கிறாள்.

**6) தலைப்பாடு**

தலைவனும், தலைவியும தாமே எதிர்ப்பட்டு செய்த திருமணம் இது தனக்கு எதுவும் தெரியாதென்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள். கூறியதை உறுதிபடுத்தத் தெய்வத்தின்மேல் சூளுறைக்கிறாள். இதனால்,

> **"சாந்த மரத்த பூழில் எழுபுகை**
> **கூட்டுவரை கமழும் நாடன்"** **(ஐங் 212:1-2)**

என்கிறார்.

**7) உண்மை செப்பல்**

தலைவன், தலைவியின் காதல் நிகழ்ச்சியை உள்ளவாறே எடுத்துரைக்கிறாள் தோழி. இத்துறை இருவரின் காதல் நிகழ்ச்சியைக் கூறுவதாயினும் தோழி, செவிலியிடம் உரையாடும் போதுதான் உண்மை செப்பல் சிறப்பாக அமைகிறது.

தோழி பெரும்பாலும் தன் தாயாகிய செவிலியிடம் நேராகவே அறத்தொடு நிற்கிறாள். வெறியாட்டு போன்ற பிற நிலைகளில் தலைவியிடம் உரையாடுவது போன்று அவள் செவிலியும் தமரும் கேட்கும்படியாக அறத்தொடு நிற்கிறாள். செவிலி தலைவி நிலை அறிய வெறியெடுக்குமிடத்தும் அயலவர் மணம் பேசி வரும்போதும் தலைவனின் வரவைத் தாமே மறுக்கும்போதும் தலைவி ஆற்றாமையால் வருந்துமிடத்தும் தாய்க்கு உண்மையை அறிவுறுத்த விரும்பும் தோழி பல உத்திகளைக் கையாண்டு அறத்தொடு நிற்கிறாள்.

**8) உடன்போக்கு**

பிறப்பால் கட்டுப்பாடற்று விளங்கிய மனித சமுதாயத்தில் ஒவ்வொரு திருப்புமுனைகளிலும் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. சமுதாயம் கட்டமைப்புக் கருதிச் சில தடைகளையும், மரபுகளையும் திணிக்கிறது. அவை தனிமனிதனின் விடுதலை உணர்வுகளுக்கும் நேரிய ஆசைகளுக்கும் கால்விலங்கு இடும்போது அதை எதிர்த்து அவன் புதிய வேகத்துடன் செயல்படத் தொடங்குகிறான். தங்கள் ஆசைகளுக்கும் செயலாக்கங்களுக்கும் இடையே களவில் தோன்றும் தடைகளை முறிக்கத் தோழி முற்படுகிறாள். அதற்கு அவள் கையாளும் கருவி உடன்போக்கு. சமுதாய கட்டமைப்பிற்கும் தனிமனித விருப்பத்திற்கும் இடைப்பட்ட போராட்டத்தில் தனிமனித விருப்பம் வீறு பெரும்பொழுது உடன்போகும் துணிவு பிறக்கிறது.

"ஈடுபாடு தீவிரப்படுத்தப்படும்போது மனிதமனம் தான் பெற்று வந்த சலுகைகள் அனைத்தையும் புறக்கணித்து விட்டுத் தடைகளை மீறி வியக்கத்தக்க வேகத்துடன் செயல்படத் தொடங்குகிறது"[19] என்பர் ஆர்தர் சோனார். உடன்போக்கை ஓம்படைக்கிளவி என்கிறது தொல்காப்பியம். 'ஓம்பெடுத்தல்' 'பாதுகாத்தல்' என்று பொருள்படுகிறது. களவியலுரை, நம்பியகப்பொருள், இலக்கண விளக்கம், மாறன் அகப்பொருள் இலக்கண நூல்களில் உடன்போக்குச் சுட்டப்படுகிறது. களவியலில் தோழி கூற்றாக,

**“ஓம்படைக் கிளவிப்பாங்கின் கண்ணும்”** **(தொல்-பொருள் 112:25)**

என்கிறது தொல்காப்பியம். களவு வாழ்வில் தோன்றும் அன்னை பற்றிய அச்சமும் அலர்ப்பெருக்கமும் உடன்போக்கை ஊக்குவிக்கும் களங்கள் இச்சூழல்களிலும் உடன்போக்கை ஊக்குவிப்பவள் தோழி, உடன்போக்குச் செல்லத் தலைவன் தயங்குவதற்குத் தலைவியின் மென்மையும், சுரத்தன்மையும் காரணம் காட்டப்படுகின்றன. தலைவி கொள்ளும் தயக்கத்திற்கு நாண் அழிவு காரணம் காட்டப்படுகிறது. இருவர் மன ஊசலையும் ஒருநிலைப்படுத்தி உடன்போக்கும் பணியைத் தோழி மேற்கொள்கிறாள். பகல், இரவுக்குறிகளில் சந்திக்க முடியாமை, நொதுமலர் வரைவு, அன்னை அலைத்தல், கடுஞ்சொற்களைக் கூறல் ஊரவரின் அலர் இன்னும் சில காரணங்களால் தலைவியை உடன்போக்கு மேற்கொள்ளத் தோழி வற்புறுத்துகிறாள். அன்னையின் இற்செறிப்பிலிருந்தும், துன்புறுத்தலிலிருந்தும் தப்பித்து உடன்போக்கு மேற்கொள்ளப்படுவதற்காகச் சுட்டப்படுகிறது. இதனை,

**“ஊஉர் அலர்எழச் சேரி நல்லென**
**ஆனது அலைக்கும் அறனால் அன்னை**
**தானே இருக்கத் தன்மனை யானே”** **(குறுந்: 262)**

**“மறுகின் பெண்டிர் அம்பல் தூற்ற**
**சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப**
**நடுநாள் வருஉம் இயல்தேர்க் கொண்கனொடு**
**செலவயர்ந் திசினால் யானே”** **(நற் : 149)**

**“அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்**
**ஈரம் சேரா இயல்பின் பொய்மொழிச்**
**சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்”** **(அகம் : 65)**

என அலர்கண்ட அன்னையின் கடுமொழி உடன்போக்கினை ஊக்குவிக்கிறது. தலைவியின் காதல் உணர்ச்சிக்கும், பாதுகாப்பு உணர்ச்சிக்கும் இடையே நடைபெறும் மௌனப் போராட்டத்தில் தாயின் அலைப்பினின்று விடுபடத் தோழிக்கு உடன்போக்கே சிறந்த வழியாகத் தோன்றுகிறது. தலைவனுடன் உடன்போக்குக் கொண்டு இன்பம் கொள்ளத் துடிக்கும் காம உணர்வு ஒருபுறம். உடன் செல்லுதலால் வரும் பழிக்கு நாணும் நாணம் மறுபுறம். இவை இரண்டிற்கும் இடைநின்று ஊசலாடுவது தலைவியின் மனம். நாணம் தரும் தயக்கத்திற்கும், தோழி தரும் துணிவிற்கும் இடைநின்று தலைவியின் மனம் உடன்போக்கை மேற்கொள்கிறது. இந்நிலையில் தலைவன் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்ல இசைந்தமையைத் தோழி தலைவிக்கு உணர்த்துகிறாள். இதனை,

**“அத்தவாகை அமலை வால் நெற்று**
**அரிவூர் சிலம்பின், அரிசி ஆர்ப்பக்**
**கோடை தூக்கும் கானம்**
**செல்வாம் - தோழி – நல்கினார் நமரே”** **(குறுந் : 369)**

என்கிறது குறுந்தொகை. அன்னையின் கடுஞ்சொற்களைத் தாங்காத தலைவி உடன்போக்கு மேற்கொள்கிறாள். இதற்குத் தலைவி ஊரார் பேசுகின்ற பேச்சு எருவாகவும், என்தாய் அதற்காக என்னை இடித்துக்கூறும் சொற்கள் நீராகவும் என்னை இந்நிலைக்கு இடித்துத் தள்ளியது என்கிறாள். இதனை

**"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்**
**நீராக நீளும் இந்நோய்"** **(குறள் : 1147)**

என்கிறது திருக்குறள். அலரிலிருந்தும் அன்னை அலைப்பினின்றும் உடன்போக்கு விடுதலையளிப்பதாகக் கூறுகிறாள். தலைவி தனக்கு அஞ்சியே உடன்போனாள் என்கிறாள் தாய். இதனை,

**"வழுஇலள் அம்ம தானே குழிஇ**
**அம்பல் மூதூர் அலர் வாய்ப் பெண்டிர்**
**இன்னா இன்உரை கேட்ட சிலநாள்**
**அறியேன் போல உயிரேன்**
**நறிய நாறும் நின் கதுப்பு என்றேனே"** **(நற் : 143)**

எனத்தாய் தலைவியின் கூந்தலின் மணம் வினவியபோது பதில் சொல்லாமல் உடன்போக்குச் சென்றுவிட்டாள் என்கிறாள். 'இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர், வரைவு என்ற இன்னச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகமாட்டர். உடன்போனபின் அறத்தொடு நிற்பதில் பயனில்லை. இரண்டில் ஒன்றே களவு நாடகத்தின் இறுதிக்காட்சியாகும்'[20] என்கிறார் வ.சுப. மாணிக்கம். களவுத்தொடர்பை எனக்கு அறிவித்திருந்தால் சுற்றம் சூழ அவனுக்கே மணம் முடித்து கொடுத்திருப்பேன் என்கிறாள் நற்றாய். இதனை,

**"தன்னமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்**
**இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை**
**இனக்களிறு வழங்குஞ் சோலை**
**வயக்குறு வெள்வே வெற்புணர்ந்து செலவே"** **(ஐங் : 379)**

என்று நற்றாய் தன் மகள் உடன்போனதை அறிவித்த தோழியிடம் வருந்துகிறாள். முன்னரே அறத்தொடு நின்றிருந்தால் உடன்போக வேண்டியதில்லையே எனப் பரிந்து பேசுகின்றாள். தலைவன் தலைவி தன் இளமைப்பருவத்தை இன்பமாக நினைக்கின்றனர். இதனை நிறைவேற்ற உடன்போக்கை மேற்கொள்கின்றனர். இளமைப் பருவத்தில் இன்பநாட்டம் அடிக்கருவான பண்பாக உளது. இளைஞர்கள் மகிழ்வோடு இருக்க விரும்புகின்றனர். அவ்வின்பம் நிலைத்து நீடிக்க விரும்பினர். அதற்காக உடன்பாடு எதிர்மறை ஆகிய இரு அணுகுமுறைகள் கொண்டும் முயற்சிகளில் ஈடுபடுகின்றனர். துன்பத்தைத் தவிர்த்தல் இன்பத்தோய்வின் மிகைப்படுத்தல் என இருமருங்கும் முயற்சி செய்கின்றனர் என்பர். ப்ராய்டு இன்பநிலையில் அன்னையின் அலர் கடுமொழி ஆகியவற்றைத் தவிர்த்து தலைவி உடன்போதலை இன்பமாக

நினைக்கத் தோழி கையாளும் உத்திகள் அதற்கு அவள் அமைத்த பாதை உடன்போக்கு.

**செலவழுங்குவித்தல்**

பொருளுக்காகப் பிரிந்து செல்லும் தலைவனைப் பிரியவிடாமல் அவன் செலவினைத் தோழி தடுப்பது செலவழுங்குவித்தல் எனப்படுகிறது. தலைவன் களவில் வரைவு காரணமாகவும், கற்பில் பொருள், போர் காரணமாகவும் பிரிவது மரபு. தொல்காப்பியர் கற்பியலில் மட்டும் செலவழுங்குவித்ததைக் குறிப்பிடுகிறார். தலைவனின் பிரிவால் தலைவி பெறும் துன்பம், பொருள், இளமை, யாக்கை நிலையாமை உடன்போகத் தூண்டல் அறிவுரை கூறல் என்னும் முறையில் தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள் தோழி. தலைவன் தலைவியைப் பிரிவதற்கு எண்ணும்போது தோழி அவனைச் செலவழுங்குவிக்கக் கையாளும் உத்தி இறந்தகால நினைவுகளையும், எதிர்கால நிகழ்வுகளையும் காரண, காரிய இயைபுடன் விளக்குவது. தலைவனின் பிரிவைத் தோழி உணர்ந்தபோது தலைவியையும் உடன் அழைத்துச் செல்லுமாறு தலைவனை வேண்டுகிறாள். தலைவன் பொருள்தேடச் செல்வது தோழிக்கு வருத்தம் தரவில்லை. தலைவியைத் தனித்துவிட்டுச் செல்வதே செலவழுங்குவிக்கக் காரணம். இதனை

**“தலைவி தன்னையும், தன்மனந் தன்னையும்**
**அலமர லொழிந்தற் கழுங்குவ தல்லது**
**செல்வத் தோன்றல் சொல்லா னல்லன்”** **(அகப்பொருள் ப-47)**

என்கிறது அகப்பொருள். களவாகக் காதல் கொண்ட ஆணும், பெண்ணும் பிறகு மணம் செய்து கொண்டு இல்லறம் நடத்துகையில் தலைவன் தொழில் நிமித்தம் தலைவியைப் பிரிந்து வேற்றூருக்குப் போக விடை கேட்கிறான். தலைவி தான் பிரிந்திருக்கச் சகியாமை சொல்லுகிறாள். என்னைப் பிரிந்து போகாமல் இருப்பதென்றால் என்னிடம் சொல்லுங்கள், விரைவில் திரும்பி வருகிறேன் என்ற பேச்சை நீங்கள் திரும்பிவரும் வரை உயிரோடு இருக்கிறவர்களிடத்தில் சென்று சொல்லுங்கள் என்கிறாள்.

**“செல்லாமை உடல்மேல் எனக்குஉரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க்கு உரை.”** **(குறள் : 1151)**

என்கிறது குறள். பிரிவை எண்ணிய தலைவியின் பெருமூச்சு பலரைக் கரியாக்கக் கண்ட தலைவன் பிரியும் முன்னரே வேதனைப்படும் இவள் நாம் பிரிந்தால், உயிரை விடுவாள் என எண்ணிச் செலவைத் தள்ளிவைத்தான். தலைவனின் பிரிவைக் கேள்வியுற்றதுமே தலைவிக்கு வளைகழல்வதாகவும், நுதல் பசப்பதாகவும் தோழி எடுத்துரைக்கிறாள். பிரியும் முன்னரே நிலையழிந்து நிற்கும் தலைவி பிரிந்தால் உயிர்வாழாள் என்பதை உணர்த்த தோழி கையாளும் உத்தி இது.

**“கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி**
**உழையும் ஆகவும் இணைவாள்**
**பிழையலள் மாதோ பிரிதும் நாம் எனினே”** **(அகம் : 5)**

என்கிறாள். தலைவியின் மாறுபாட்டை உணர்ந்த தலைவன் குறையாத செல்வ வளமுடைய காவிரிப் பூம்பட்டினமே எனக்கு உரிமையாகக் கிட்டுவதாயினும் என் காதலியைத் துறந்து உன்னுடன் வருதல் இயலாது என்று தன் நெஞ்சிற்குக் கூறுகிறான்.

**“வார்இருங் கூந்தல் வயங்குஇழை ஒழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே”** **(பட்டினப் : 219-220)**

என்கிறது பட்டினப்பாலை.

**“புணரின் புணராது பொருளே; பொருள் வயிற்**
**பிரியின் புணராது புணர்வே; ஆயிடைச்**
**செல்லினும் செல்லாய்ஆயினும்; நல்லற்கு**
**உரியை வாழி என் நெஞ்சே”** **(நற் : 16:1-4)**

என்று தலைவன் தன் நெஞ்சிற்கு வலியுறுத்துகிறான்.

இளங்காதலர்களுக்குப் பிரிதல் என்பது கொடுஞ்செயல். அதனால் இளமை ஒரு பருவகாலம். அது கழிந்தால் திரும்பவராது. அதனால் துய்த்துக் கழிக்க வேண்டிய நிலைப்பொருள் இளமை என்கிறாள் தோழி. ‘செல்வத்துக்குக் காலம் இல்லை அது சகடக்கால் போல் மாறி வரக்கூடியது வேண்டும்போது நுகரத்தகும் வரவுப்பொருள்’[21] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

**“வளமையோ வைகலும் செயலாகும் மற்றவள்**
**முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த**
**இளமையும் தருவதோ இறந்த பின்னே”** **(கலி : 15)**

என்று தோழி தலைவனுக்குக் கடுமையான மொழிகளில் கூறுகிறாள். வெகுதூரம் சென்று பொருள் தேடினாலும் அடைய வேண்டிய இடம் வீடுதான் என்று தலைவியின் மனக்கவலையை மாற்றாமல் புறப்படுதல் கூடாது. ஆதலின் தலைவன் மேலும் சிலநாள் தங்கி அன்புதோன்ற அவளுடன் இருந்து பிரிவது கடமை எனக்கூறித் தேற்றிச் சென்றால் தலைவிக்கு வெள்ளம் தணிவது போன்ற ஆறுதலை அளிக்கும், இரவுபகல் போலப் புணர்வு பிரிவுகள் இயல்பு என்பதை உணர்ந்து தெரிவாள் என்பதை

**“செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே**
**வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும்”** **(தொல்: 1130)**

என்கிறது தொல்காப்பியம். பொருள் வேண்டிச் செல்வது தலைவனின் உள்ளம் அவன் அருள் வேண்டி நிற்பது தலைவியின் உள்ளம். இதனைத் தலைவி

**“ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரேயாயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை”** **(கலி-பாலைகலி-18)**

என்று இணைந்திருப்பதுதான் சுகம் என்கிறாள். இதனைச் சங்கச் சான்றோரும் குடும்பம் என்பது இளமையும் செல்வமும் நிறைந்த போர்க்களம் என்றனர்.

**ஆற்றுவித்தல்**

பெண்ணின் இதயம், ஆணின் அன்பையே நம்பிவாழ வேண்டும் என்று விரும்புகிறது. இது உலகியல் தன்மை. உலகைச் சுற்றிவரும் கணவன் பொருளிற்காகப் பிரியும்போது தன்னைவிடப் பொருள் முக்கியமா என்ற வினாவினை எழுப்பி ஏங்குகிறது, தலைவியினுள்ளம். இவ்வுள்ளத்தினை நன்கறிந்தவள் தோழி. இதனால் தலைவியை ஆற்றுவிப்பதற்குத் தோழி தலைவனின் அன்பையே முதல் கருவியாகக் கொள்கிறாள். “தலைவியும் தோழியும் ஈருடல் ஓருயிர் போன்ற நட்பினர் ஒத்தபருவமுடைய தோழியால் தலைவியின் உள்ளத்துணர்ச்சியை இயல்பாகவே தெள்ளத்தெளிய உணர்ந்துகொள்ள முடியும். அதனால் தலைவியின் மனத்துன்பத்தை அருகில் இருந்து தேற்றி ஆற்றுவிக்கும் பொறுப்பினைத் தோழியைத் தவிர வேறு எந்த அகப்பொருள் மாந்தராலும் ஆற்ற இயலாது. ஒருவரைத் தேற்றி உளமகிழச் செய்யும் ஆற்றல் உள்ளத்தோடு ஒன்றிய தூய அன்பினாலேதான் இயலும்’[22] என்பர் அ.சீனிவாசன். தலைவியின் களவைப் பிறர் அறியாத நிலையில் தோழி மட்டும் ஆற்றுவித்தலின் சிறப்பைக் கருதி அதைக்களவியலில் கூறுகிறார் தொல்காப்பியர். தலைவன் பரத்தமை மேற்கொள்ளும்போது ஆற்றுவித்தலைக் கற்பியலில் கூறுகிறார். ஆற்றுவித்தல் என்னும் இத்துறை களவு, கற்பு என்னும் இருகைக்கோளுக்கும் பொருந்துமாயினும் அவர் இதைக் களவிலேயே வைக்கிறார். கற்பில் தோழியைத் தவிரச் செவிலி போன்றோரும் ஆற்றுவிக்கலாம். தலைவன் களவில் வரைவிடை வைத்துப் பிரிந்தபோது ஆற்றும் தோழியின் கூற்றிற்கும் கற்பில் பிரிவிடை வைத்துப் பிரிந்தபோது ஆற்றும் கூற்றிற்கும் இடையே மெல்லிய வேறுபாடு காணப்படுகிறது. களவின்கண் தோழி ஆற்றுவிக்கும்போது பொதுவாகத் தலைவன் வரைவான் என்றும் கற்பில் ஆற்றுவிக்கும்போது தலைவன் விரைவில் வருவான் என்றும் ஆற்றுவிக்கிறாள். தோழியை அறிவுடையவளாகப் படைத்ததின் நோக்கமே தலைவியின் துயரைப் போக்குவதற்குத்தான் என்பர் தொல்காப்பியர்.

தலைவன் பிரிந்தபின் ஆற்ற இயலாத தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதாக இலக்கியங்கள் சுட்டுவன.

- ❖ களவில் வரைவிடை வைத்துப் பிரிந்த சூழல்
- ❖ கற்பில் பிரிவிடை ஆற்றாத சூழல்
- ❖ பருவம் கண்டு தலைவி ஆற்றாத சூழல்

தலைவி தன் துன்பத்தைக் கூறும் ஒரே பாத்திரமாகவும், அவள் துன்பத்தை நீக்கும் ஒரே பாத்திரமாகவும் தோழி விளங்குகிறாள். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியை ஆற்றுவித்தல் அவளுடன் சிறு வயதிலேயிருந்தே பழகிவந்த உளங்கலந்த தோழியைத் தவிர வேறுயாராலும் இயலாது. களவு வாழ்வில் ஊக்குவித்து வளர்த்துக் கற்பாக்க விரும்பும் தோழியைத் தவிர வேறு யாராலும் தலைவியின் உள்ளத்துன்பத்தை அறிய முடியாது. அதனால் களவு, கற்பு வாழ்வில் ஒன்றித் தோன்றும் தோழியே ஆற்றுவிக்கும் பொறுப்பினை முழுவதும் ஏற்கவேண்டியதாயிற்று. தோழி தன் அறிவு முழுவதையும் தலைவியை

ஆற்றுவித்தலுக்குப் பயன்படுத்துகிறாள். "இன்பம் வரும்போது துணை வாய்த்தால் அந்த இன்பம் இருமடங்காகும். துன்பம் வரும்போது துணை வாய்த்தால் அத்துன்பம் பாதியாய் குறையும்"[23] என்பர் மு. வரதராசன். இவ்வாறு சங்க இலக்கியத்தில் பொருள்வயிற் பிரிவில் விரிவாக இடம்பெற்றிருப்பது போலப் பிற்கால இலக்கியங்களில் இடம்பெறவில்லை.

தலைவன் வழியில் காணும் அன்புக்காட்சியைக் கூறித்தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவியை ஆற்றுவிக்க இயற்கையைப் பின்புலமாக்கும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.

**"அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்**
**வன்புறை யாகும் வருந்திய பொழுதே"** **(தொல்-பொருள்)**

என இலக்கணம் வகுப்பர் தொல்காப்பியர். ஒருவேளை தலைவன் பொருள் வேட்கையால் நீட்டிக்க விரும்பினாலும் அவன் செல்லும் வழியில் வற்றிய பாலையில் வற்றாப் பேரன்புக் காட்சிகள் அவனை மறக்க விடாது. அவற்றைக் கண்டபிறகும் அவன் அங்குத் தங்கமாட்டான். உன்னை நினைத்து வருவான் என ஆற்றுவிக்கிறாள் தோழி. அஃறிணை உயிர்களின் மென்மையான அன்புக்காட்சிகளை விவரித்துக்கூறி இக்காட்சிகளை அவர் காண்பர். கண்டதும் நின்னை நினைத்து வருவர் என ஆற்றுவிப்பது. தோழி கையாளும் உத்திகளுள் ஒன்று.

**"துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்**
**பிடியூட்டிப் பின்னுகண்ணுங் களிறெனவு முரைத்தனரே"**

என்றும்

**"அன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை**
**மென்சிறக லாற்றும் புறவெனவு முரைந்தனரே"**

என்றும்

**"இன்னிழை லின்மையான் வருந்திய மடப்பினைக்குத்**
**தன்னிழைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைந்தனரே"**

**(கலி 11:6-17)**

என்றும் அன்புத்தோழி வற்றிய பாலையிலும் வற்றாத பேரன்பைக் காட்டித் தலைவியை ஆற்றுவிக்கிறாள். அஃறிணையின் அன்பைக்காட்டி, உயர்திணையின் அன்பை நிலைநாட்டுகிறாள். அல்லலுறும் தலைவியைத் தோழி அவர் சென்ற வழியில் கொடிய மிருகங்கள் மட்டுமன்று அருளுடைய உயிர்களும் உள. அதனால் அவை நின் தலைவனுக்கு ஊறு செய்யா எனவும் கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. களவின்பத்திலேயே ஈடுபட்டு வரைவு நீட்டிக்கும் தலைவனுக்குத் தலைவியின் துன்பம் அறிய வாய்ப்பில்லை. களவு இடையூறுகளால் தலைவனைக் காணாதபோது வருந்தும் தலைவியைத் தலைவனின் குற்றம்கண்டு ஆற்றுமாறு கூறுகிறாள் தோழி. பகற்குறியில் காணும் பொழுதினும் காணாப்பொழுது பெரிது. அதனால், தலைவி ஆயத்தோடாடியும் தலைவன் இல்லாமையால் வருந்தும் தலைவியிடம் தலைவன் வந்து ஆறுதல் கூற

மாட்டாரா என ஏங்கும் தன் ஏக்கத்தைக் கூறியும் ஆற்றுவிக்கிறாள். வெந்த புண்ணில் வேலெறிவதைப் போலத் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியை ஊரவரின் அலர் மேலும் வருந்துகிறது. அந்நிலையில் நிலம்புடை பெயரினும் நீரும், தீயும் தத்தம் இயல்பு திரியினும் நட்புச் சிறப்புக் கூறி அலர் தூற்றினும் கேடில்லை என்று கூறுகிறாள்.

**"நிலம்புடை பெயரினு நீர்தீட் பிறழினும்**
**இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்**
**வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை யஞ்சிக்**
**கேடெவ னுடைத்தோ தோழி" (குறுந் 373:1-4)**

என்று தோழி தலைவனின் அன்புநிலை கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள். அலர் தூற்றும் பெண்டிரைப் பழித்தும் தோழி ஆற்றுவிக்கிறாள். தலைவன் ஒருவழித் தணந்து வரும்போது ஆற்றாத தலைவியை நெடுமணல் ஏறி அவன் நாட்டைக் காணலாம் வா என அழைக்கிறாள் தோழி. இதனை,

**"கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்**
**வானுயர் நெடுமண லெறி யாணாது**
**காண்கம் வம்மோ தோழி**
**செறிவளை நெகிழ்த்தோ னெறிகட னாடே" (ஐங் 199:3-4)**

என்று ஐங்குறுநூற்றுப் பாடலில் தோழி தலைவியை ஆற்றுவிக்கும் திறனை அறியமுடிகிறது.

**வாயில் மறுத்தலும், நேர்தலும்**

தோழி தலைவியின் மன உணர்வினையும் தலைவனின் புறஒழுக்க ஈடுபாட்டையும் மனதில் கொண்டு வாயில் நேர்தல் அல்லது மறுத்தல் என்ற முடிவினை எடுக்கிறாள். தலைவன் வாயில் வேண்டி இரந்து பின் நின்று தலைவியின் உறவுக்கு ஏங்கிநின்ற போது மனம் இரங்கிய தலைவியின் மனநிலை தோழி வாயில்நேரக் காரணமாகின்றது. ஊடல் தீராத தலைவியிடத்துக் களவுக்காலத்து நிகழ்ச்சிகளை நினைவூட்டுகிறான். தலைவியின் உள்ளம் பழங்கால நிகழ்ச்சிகளில் மூழ்கிப்போய்த் தலைவனிடம் அன்பு மயமாகி நிகழ்காலத்திற்கு வரும்போது அவன்பால் கொண்ட சினம் தணித்து வாயில் நேர்வதற்கு இவ்வுத்தியைக் கையாளுகிறாள் தோழி.

தொல்காப்பியர் குறிப்பிடும் வாயில்களுள் இலக்கியங்களில் பாணன், விறலி இருவர் மட்டும் வாயில் வேண்டத் தலைவனால் அனுப்பப்பெறுகின்றவர்கள். இவ்வாயில்கள் வாயில் வேண்டியபோது தோழி வாயில் மறுத்து நிற்கிறாள். வாயில் வேண்டும் தலைவனிடம் தோழி வாயில் மறுக்கும்போது, மறுப்பை வன்மையாக வெளியிடாது தலைவனின் நினைவே போதும் என்கிறாள் தலைவி. இந்நிலையில் தலைவியைப் பிரிந்து துயர்தந்த தலைவனுக்கு வாயில்நேர விரும்பும் தலைவியின் மனநிலையைத் தனக்கு இன்னா செய்த உழவனது வயலில் மீண்டும் பூத்த நெய்தலுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறான். தலைவி இரவலற்கு ஈதலையும்

விருந்தோம்பலையும் விரும்புவதைத் தோழி சுட்டித் தலைவனோடு இருந்து இல்லறம் நடத்துதலை விரும்பும் அவளது மனநிலையை எடுத்துரைத்து அதன் மூலம் வாயில் நேருகிறாள். தலைவன் மனம்திருந்தி தம்மனை திரும்பவேண்டும் என்பது தோழியின் எதிர்பார்ப்பாக இருப்பினும் தலைவன் தன் தவறை மறைத்துப் பணிந்துநின்ற நிலையில் அவனுக்கு வாயில் நேருவதற்கு மனவிருப்பம் இருத்தலை அகப்பாடல்கள் உணர்த்துகின்றன. இந்த நிலையில் தலைவனுக்கு அவனது தவறுகள் சுட்டிக் காட்டப்பட்டு வாயில் மறுக்கப்படுகிறது. இதில் முக்கியமாகப் பரத்தையர்க்குத் தலைவன் சொன்ன சூளுறவை எண்ணி வாயில் மறுக்கப்படுகிறது. இதனை,

**"புறம் விளையாட்டுப் புல்லியடி புகர்ச்சியும்"** **(தொல்-)**

என்கிறது தொல்காப்பியம். மேலும் வாயில் மறுத்தலுக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. தலைவன் தன் பரத்தமைக்கு நாணாமை, நெடிதுகாலம் பரத்தையிற் பிரிந்து இருந்தமை, அத்தவற்றிற்கு வருந்தாமை, அவனது அன்பு மாறுபட்டமை, பரத்தையிற் பிரிந்து மீளும் தலைவன் மனம் திருந்திவரவில்லை, பரத்தை ஊடி வாயில் மறுத்தலால் வேறு வழியின்றி வருகிறான், என அறிந்தமை, ஒரே காலத்தில் பல பரத்தையுடன் தொடர்புகொள்ளும் காமப்பெருக்கமும், நாளும் புதிய பரத்தையின் நலம்துய்க்கும் புதுமைநாட்டமும் தலைவன் கொண்டதாகத் தோழி உணர்ந்தமை, அஞ்சாது கொள்ளும் புறஒழுக்கம் தலைவனே அலரைப் பெரிதும் பரப்பி நின்றமை ஆகிய பின்புலங்கள் தோழி வாயில் மறுக்கக்காரணமாகின்றன. வாயில் மறுப்பதற்குப் பரத்தையரே காரணமாகின்றனர். இதனை,

**"புனல்மலி புதவிற் போஓர் கிழவோன்**
**பழையன் ஓக்கிய வேல்போற்**
**பிழையல கண்ணவன் நோக்கியோர் திறத்தே"** **(அகம் : 326)**

என்கிறது. பழையன் என்பவன் பகைவரை நோக்கி எய்யும் வேல் போன்ற கண்களையுடையவன். மேலும் இதில் பரத்தையின் கண்ணாற்றல் கூறப்படுகிறது. களவுக்காலத்து தலைவி வேம்பின் பைங்காய் தரினும் தேம்பூங்கட்டி என்ற தலைவனின் அன்பையும், கற்புக்காலத்துப் பாரியின் பனிச்சுனைத் தண்ணீர்தரினும் வெய்ய உவர்க்கும் என்ற தலைவனின் அன்பின்மையையும் தோழி குறிக்கிறாள். இதனை,

**"வேம்பின் பைங்காயென் றோழி தரினே**
**தேம்பூங் கட்டியென்றனி ரினியே**
**பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்**
**தைஇத் திங்கட் டண்ணிய தரினும்**
**வெய்ய அவர்க்கு மென்றனிர்**
**ஐய வற்றா லன்பின் னாலே"** **(குறுந் 196 : 1-6)**

என்று அழகான உவமைகளின் மூலம் தலைவனின் அன்பு மாறுபட்ட நிலையை விளக்குகிறாள் தோழி. களவில் விரும்பிய தலைவியின் தோளைக் கற்பில் வெறுக்கும் தலைவனின் மனப்போக்கையும் கூறித் தலைவனின் அன்பும், அன்பின்மையையும்

கூறுகிறாள் தோழி. தலைவியின் உடன்பாட்டைப் பெறாமலே தோழி வாயில் நேர்கிறாள். தலைவனை வாயில் நேர்ந்தப் பிறகும் தலைவி தலைவனை ஏற்றுக் கொள்ளாமல் ஊடல் கொள்கிறாள். இந்நிலையில் தோழியின் கூற்றுக்கள் வருந்தும் நிலையிலும் அறிவுரை கூறும் நிலையிலும் அமைகின்றன. பரத்தமை நீங்காத் தலைவனுக்கும், ஊடல் நீங்காத் தலைவிக்கும் இடையிலுள்ள தோழியின் நிலை இரங்கத்தக்கதாக உள்ளது. "இருபெரு வேந்தரான அன்னியும் திதியனும் போர் செய்தபோது பூவுடன்கூடிய புன்னைமரம் வெட்டப்பட்டவுடன் இருவரின் பகையும் ஒழிந்ததுபோலத் தலைவனும் தலைவியும் நான் ஒழிந்தவுடன் பகை நீங்குவர் போலும்" என்ற தோழியின் பேச்சிலிருந்து தோழியின் இடுக்கண்ணான நிலை தெரிகிறது. இதனை,

**"பலர்பெறல் நசைஇநம் இல்வா ரலனே**
**மாயோள், நலத்தைநம்பி விடலொல் லாளே**
**அன்னியும் பெரியன் அவனும் விழுமிய**
**இருபெரு வேந்தர் பொருளைத் தொழித்த**
**புன்னை விழுமம் போல**
**என்னொடு கழியுமிவ் விருவரது இகலே"** **(நற் 180: 4-9)**

என்னும் நற்றிணைப் பாடலிலிருந்து தோழியின் பொறுப்புணர்வை உணரமுடிகிறது. இவற்றிலிருந்து தோழியின் குணநலன்களை அறியமுடிகிறது. ஒவ்வொரு துறையிலும் சிறப்புப்பெறுகிறாள். தோழியின் குறைநயப்பித்தல் என்பது தலைவனின் மனக்குறிப்பைத், தலைவியின் மனம்படுமாறு சுட்டுவது. வரைவுகடாதல், செலவழுங்குவித்தல் என்பவை தலைவியின் மனக்குறிப்பைத் தலைவனுக்கு எடுத்துரைப்பவை. அறத்தொடுநிலை தலைவியின் மனநிலையைச் செவிலிக்கு விளக்குவது. வாயில் நேர்தலும் மறுத்தலும் அவளது மனவிருப்பத்தை உணர்ந்து செயல்படுபவை. உடன்போக்குத் தலைவன் தலைவியரின் மனவிருப்பத்தை அறிந்து செயல்படுவது. இங்ஙனம் அகமாந்தர்களின் உணர்வுகளை அமைதிப்படுத்துகின்ற, மடைமாற்றுகின்ற அல்லது அவற்றிற்குத் தீர்வு காண்கின்ற ஒரு தீர்வுக்களமாகக் களவு, கற்பு ஆகிய கைகோள்களின் கருவான திருப்பு முனைகளில் எல்லாம் முன்நிறுத்தப்படும் இலக்கியப் படைப்பாகத் தோழி விளங்குகிறாள்.

**தலைவி**

அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்புப்பாலம் தோழி எனில் அகத்திணை வட்டத்திற்கு அமைந்த மையப்புள்ளி தலைவி, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருள்களாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவை. தலைவியைத் தொல்காப்பியம் கிழவி, பெட்டை, பெடை, பெண்டிர், மகட்பால், மகடுஉ, கிழத்தி எனப் பல்வேறு சொற்களால் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியத்தில் தலைவனும், தலைவியும் ஒன்றுபட்ட மனத்தினை உடையவராகத் திகழ்கின்றனர். இருவரும் ஒருங்கே இணைந்து இல்லறக் கடமைகளை

ஆற்றுகின்றனர். அகப்பாடலில் தலைமை பெறும் தலைவி களவு வாழ்க்கையில் படும் துயர்கள் பல. தலைவனுக்கு நேரும் இடர்கள் குறித்து வருந்தும் தலைவி, தாய், செவிலி ஆகியோருக்குக் கட்டுப்பட்டு வாழ்கிறாள். கற்பு வாழ்க்கையில் இடம்பெறும் தலைவி தலைவனைப் பிரிந்து வருந்தும் நிலையிலும் தனது பணிகளைச் செம்மையாகச் செய்கின்றாள். தலைவனின் பிரிவு பரத்தையின் காரணமாக நிகழும்பொழுது தலைவி அடையும் மனத்துயர் மிகுதி. இதனை ‘அகத்திணை ஓர் பெண்ணிலக்கியம் அக மாந்தர்களுள் தலைமை தலைவிக்கே என்றும் பிற மாந்தர்கள் தலைவி வழிபட்டவர்கள் செவிலியும் அன்னையும் தலைவியின் நல் வாழ்விற்காக வாழ்பவர்கள் அகப்பாட்டிற்குத் தலைமையவள் தலைவி’$_{24}$ எனத் தலைவியின் சிறப்பைக் குறிக்கிறார் வ.சுப.மாணிக்கம் இவற்றில் பெண்களுக்கு உரிய பண்புகளாகத் தொல்காப்பியர்.

**“அச்சமும் நாணமும் மடனு முந்துறுத்த**
**நிச்சமும் பெண்பாற்குரிய என்ப”** **(தொல்-1045)**

என்று அச்சம், நாணம், மடம் போன்றவற்றை அணிகலனாகக் குறிப்பிடுகிறார். இவற்றை நீங்காதவளாகத் தலைவி இருந்ததை,

**“அனையன பல பாராட்டி பையென**
**வலைவர் போல சோர் பதன் ஒற்றி**
**புலையர் போல புன்கண் நோக்கி**
**தொழலும் தொழுதான் தொடலும் தொட்டான்**
**காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்”**

என்று இப்பாடலில் தலைவன் மெய்தொட்டுப் பழகுதல் முதலிய எட்டையும் செய்தும் நாணம் நீங்காதவளாக இருந்ததைக் கலித்தொகை குறிக்கிறது.

அகவொழுக்கத்தில் தலைவனுக்கு இன்பமும், துன்பமும் ஒரேநேரத்தில் நடைபெறும் இந்நிலையில் தலைவியின் கூற்றுநிகழும். இதனை,

- ❖ தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும் உடன்போக்கு கொள்ளுதலும்
- ❖ தலைவன் சிறைப்புறமாக இருக்கத் தலைவி வெளியிடும் மன உணர்வுகள்
- ❖ தலைவி கொள்ளும் பிரிவுத்துயர்
- ❖ தலைவனின் பரத்தையற் பிரிவில் தலைவி கொள்ளும் மனநிலை

தலைவியின் கூற்றானது இல்லறக் கடமைகளைத் தவறாமல் ஆற்றும்பொழுதும், தலைவனைப் பிரிந்து வருந்தும் காலத்து எழும் வேட்கை மிகுதியாலும் எனப் பல்வேறு நிலைகளில் தலைவனைக் காணும் ஆவல் தலைவிக்கு இருந்தது. இருந்தும் அவன் தவறை உணர்த்தும் அதே வேளையில் பிற பெண்கள் போல் அவன் செய்த தீங்கைப் பொறுத்துக் கொள்ளும் தன்மை தனக்கில்லை என்பதைக் கூறுகிறாள். இதனை,

**“நெடுங்கொடி நுடங்கு நறவுமலி பாக்கத்து**

**நாட்டுனற் பட்ட மோட்டிரு வராஅற்**
**றுடிக்கட் கொமுங்குறை நொடுத்துண்டாடி**
**வேட்டமறந்து துஞ்சும் கொழுநர்**
**நின்னலத் தகுவியை முயங்கிய மார்வே''** **(அகம் : 196)**

என்று தலைவன் கள் குடித்துத் தன் கடமையை மறந்த நிலையில் கூடத் தலைவி மனம் நோகாது உணவு பரிமாறுவாள். ஆனால் தலைவன் பரத்தையரிடம் சென்ற தவறைப் பொறுத்துக் கொள்ளமாட்டாள் என்கிறது அகம். மேலும் பிற பெண்கள் தீண்டிய தலைவன் மார்பைத் தான் இனி தீண்ட மாட்டேன் எனச் சூளுரைக்கின்றாள். சங்ககாலப் பெண்கள் வரலாற்றில் இ:.தோர் புதுமை. இதனை,

**''பெண்ணியலார் எல்லாரும் கண்ணின்பொது உண்பர்**
**நண்ணேன் பரத்தநின் மார்பு''** **(குறள் : 1311)**

என்கிறது குறள். வள்ளுவர் காட்டும் தலைவி பிற பெண்கள் தன் கணவனைக் கண்களால் பார்ப்பதையே தாங்கிக் கொள்ளாதவள். ஆகையால் பரத்தமை மிகுந்த உன் மார்பை இனிப் பொருந்த மாட்டேன் என்கிறாள். சில நேரங்களில் பரத்தையரிடமிருந்து திரும்பும் தலைவனைக் கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்ற உலகமொழிக்கு ஏற்ப ஏற்றுக் கொள்கிறாள் தலைவி. தலைவன்மீது எந்தத் தவறும் இல்லாதபொழுதும் ஊடுதல் என்பது இன்ப வாழ்விற்கான அன்பின் அடையாளங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது. மேலும் தலைவனோ, தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்றவன். பெண்களால் தாங்கிக்கொள்ள முடியாத தவறிழைத்தத் தன் தலைவன் பரத்தையரிடமிருந்து வீடு திரும்பியவனைக் கண்டும் அவன்மீது கோபம் கொள்ளவோ அல்லது ஊடல் கொள்ளவோ இல்லை. தலைவி அப்படியே அவனை ஏற்றுக்கொள்கிறான். அப்படி ஏற்றுக்கொண்டதற்கான சூழ்நிலையை விளக்குகின்றபொழுது 'காமம் பொருமையறியேன்' என்று குறிப்பிடுகிறாள்.

குடும்ப வாழ்வில் ஆண்களை மட்டுமே சார்ந்திருக்கும் பெண்களுக்கு ஏற்படும் துன்பத்தை உணர்ந்தவள் தலைவி இதனால் ஆட்டனத்தியைத் தேடியலைந்த ஆதிமந்தியைப் போலத் தலைவனைத் தேடி அலையாமல் தன் நாணத்தால் தலைவன் திரும்பி வரும்வரை காத்திருக்கிறாள். திரும்பி வரும் தலைவனின் தவறுகளைச் சுட்டிக்காட்டாது அவனை ஏற்றுக்கொண்டதுடன் இந்தப்பிறவி அல்லாது வேறு எத்தனைப் பிறவி வந்தாலும் நீதான் எனக்கு கணவன் நான்தான் உன்னுடைய நெஞ்சில் குடியிருப்பவள் என்கிறாள் தலைவி. இதனை

**''அணிற்பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து**
**மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப**
**இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கியரென் கணவனை**
**யானா கியர் நின் னெஞ்சு நேர் பவளே''** **(குறுந் : 49)**

என்கிறது குறுந்தொகை. களவு, கற்பு என்ற ஒழுக்கங்களில் துணைநிற்கும் முதன்மைக் கருவியாக விளங்குபவள் தலைவி. இத்தலைவி தன் மன உணர்வுகளைத்

தலைவனிடம் வெளிப்படுத்த இயலாத இடங்களில் அவளுக்கு உற்றவாளகத் தோழி இயங்குகிறாள். தலைவி இன்பத்திலும் துன்பத்திலும் தலைவனுடன் இணையாகப் பணியாற்றிக் ‘குடும்பம்’ என்ற அமைப்பை வழிநடத்திச் செல்லும் கற்பின் செல்வியாகத் திகழ்கிறான். வினை ஆடவர்க்கு உயிராதல் போல மகளிர்க்கு ஆடவர் உயிராக விளங்கும் தன்மையை இலக்கியங்கள் காட்டுகின்றன.

**கற்பின் செல்வி**

தலைவனைச் சுமந்த தலைவியின் மனது அவனை வரைந்து கொள்ளுவதிலேயே குறியாய் இருக்கிறது. ஒரு பெண்ணிற்குப் பலவழிகளிலிருந்து இன்பங்கள் பெருகினாலும் திருமண வாழ்க்கையைத் தவிர அவளுக்குப் பேரின்பம் வேறெதும் இல்லை. இந்நிலையை எதிர்பார்க்கும் தலைவியின் மனதில் குடும்பத்தின் தலைவி என்ற முறையில் மனைவி, இல்லாள் என்ற சொற்களுக்கு நிலைக்களனாக விளங்கும் தன்மையைக் கொண்டவளாகத் தலைவி விளங்குகிறாள். அகத்திணை நெறிகளிலிருந்து சிறிதும் விலகாது தற்காத்துத்தற்கொண்டாரைப் பேணிப்பாதுகாத்து அமையும் ஒழுக்கம் உடையவளாகத் தலைவி அக இலக்கியத்தில் படைக்கப்பட்டிருக்கிறாள். தலைவி இன்பத்திலும் துன்பத்திலும் தலைவனுடன் இணையாகப் பணியாற்றிக்குடும்பம் என்ற அமைப்பை வழிநடத்திச் செல்லும் கற்பின் செல்வியாகத் திகழ்கிறாள். ஒரு பெண்ணின் கற்பு வாழ்க்கையில் திண்மை என்கின்ற உறுதிநிலை இருக்க வேண்டும் அவ்வாறு அமைந்து விட்டால் பெண்ணை விடவும் பெருமையுடையது இவ்வுலகில் வெறெதுவும் இல்லை இதனை.

**“பெண்ணின் பெருந்தக்க யாவுன் கற்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்”** **(குறள் 54)**

என்கிறார் திருவள்ளுவர். நாணம் என்பது பெண்களுக்கென்றே இயற்கையாக அமைந்த பண்பாகும். நாணம் பெண்களுக்கு அழகை மட்டுமல்லாமல் நல்லொழுக்கத்தையும் தூய்மையான எண்ணங்களையும் அளிக்க வல்லது. நாணம் என்ற அணிகலன் பெண்ணிடத்தில் இல்லையானால் அப்பெண் ஒழுங்கங்கெட்டுச் சீர்குலைவாள் ஒழுக்கக் கேட்டிற்கு நாணமின்மை வெளிப்படையானதொரு அடையாளமாகும். இதையே தொல்காப்பியனார்.

**“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றென” (தொல்.பொருள் -III)**

என்று குறிப்பிடுகிறார். அகத்திணை மாந்தருள் எக்குறையும் இன்றிக் குடும்பத்தில் ஆட்சிபுரியும் வேந்து போன்றவள் தலைவி. தலைவி கற்பு என்னும் உன்னத அணிகலனைப் பூண்டவள், உயர்குடியில் பிறந்ததால் உயர்ந்த பண்புகளையும் பெற்றுள்ளாள். அத்தகைய தலைவியின் காதல் வாழ்க்கையில் வாயில் மறுத்தல் வாயில் நேர்தல் என்ற அகத்துறைகள் யாவும் கற்பின் செல்வியான தலைவியின் உரிமையில் பிறந்தவை. இதனை,

**“கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்**
**முகம்புகல் முறைமையிற் கிழவோற் குரைத்தல்**
**அகம்புகல் மரபின் வாயிட்கட் குரிய''** **(தொல்-பொருள் -150)**

என்று தலைவியின் குணநலன்களைத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. 'கற்பு என்பது கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம். காமம் என்பது அன்பு. நாற்பாலொழுக்கம் என்பது தன் குலத்திற்கு அற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம். மெல்லியற்பொறை என்பது மறைக்கக் கூடிய நெஞ்சு. வல்லிதின் விருந்து புறந்தருதல் என்பது வறுமையையோ, செல்வத்தையோ கருதாது இயன்ற வரை விருந்தினரைப் பாதுகாத்து அவர்களை மனம் மகிழ்வித்தல். சுற்றம் ஓம்பல் என்பது தொடர்புள்ள மக்களைப் பாதுகாத்து அவர்கள் உண்டபின் தான் உண்டல் என்று தலைவியின் பண்புகளை வரையறுக்கிறார். மேலும் வரையாது நின்று ஒழுகும் தலைவன் களவு வாழ்க்கையை நீடித்தலின் பொருட்டுச் சிறைப்புறமாக வந்து நிற்கிறான். அவன் தன்னை மணந்துகொள்ள மாட்டானோ என்ற அச்சம் இருந்தாலும் தலைவன் எந்நாளாவது ஒருநாள் வரைந்தே தீருவான் என்ற நம்பிக்கையோடு இருக்கிறாள். அதன் வெளிப்பாட்டை உணர்த்தும் வகையில்

**''நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரல்**
**கருங்கோற் குறிச்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாபினாகு நட்பு''** **(குறுந் : 3)**

என்று தலைவனின் நட்பானது நிலத்தைவிடப் பெரியதாகவும் வானத்தை விட உயர்ந்ததாகவும் கடலைவிட ஆழமானதாகவும் விளங்குகிற சூழல் அவளது கற்பின் தன்மையை உறுதி செய்கிறது.

**காதல் உள்ளம்**

தலைவி தலைவனிடத்துக் கொண்ட காதல் தாயன்பை ஒத்தது. தலைவி தலைவனைப் பிரிந்துதான் ஒருத்தியாதலையும் தன்னைப்பிரிந்து அவன் ஒருவனாதலையும் விரும்பாமல் தலைவன்பால் கொண்ட அன்பை மிக்க நயத்தோடு புலப்படுத்துகிறாள். தலைவி தன் காதலை மறைக்கும் முறை தனிச்சிறப்பு பெற்றது. இல்லறத்தை இனிமையாக நடத்திச் செல்கின்ற தலைவி பலவித வேலைகளுக்கிடையே தலைவன்பால் கொண்ட அன்பு மாறாதவளாக இருக்கிறாள். அன்பு என்ற சொல்லின் உள்ளீடாக விளங்கும் காதல் தலைவிக்குப் பிறப்பும் இறப்பும் எப்படி வாழ்வில் ஒருமுறையோ அதுபோல் ஒருதலைவன்பால் காதல் கொண்டு அவனை மணப்பதையே பெரும்பேறாகக் கருதுகிறாள். தலைவனைப் பிரிந்திருக்க இயலாத தலைவி பிரிவென்று வரும்பொழுது உயிரிழத்தலைச் துச்சமென நினைக்கிறாள். இதனை

**''விரிநீர்ச் சேர்ப்ப னீப்பி னொருளும்**
**இன்னுயி கல்லாது பிறிதென்**

**றெவனோ தோழி நாமிழுட் பதுவே''** **(நற் 334)**

என்று தலைவி தன் காதலின் தன்மையைப் புலப்படுத்துகிறாள். மேலும் தலைவி யாம் எம்முடைய காதலரைக் காணோமாயின் கரையிலுள்ள கற்களோடு உராய்ந்து செல்லும் நுரையைப்போல மெல்ல உயிர் தேய்ந்து இல்லையாவோம் என்கிறாள். தலைவி தலைவன் மீது கொண்ட காதல் 'அவிழ்தற்கரித்து' என்று காதலின் வலியைப் புலப்படுத்துகிறாள் இதனை,

**''பெருங்கடற் கரையது சிறுவென் காக்கை**
**நீத்து ரிருங்கழி பிரைதேர்த் துண்டு**
**பூக்கமழ் பொதும்பிற் சேக்குக் துறைவனொ**
**டியாத்தேம் யாத்தன்று நட்பே**
**அவிழ்தற் கரித்து முடிந்தமைந் தன்னே''** **(குறுந் : 313)**

என்கிறாள். உண்மையான காதல் நெஞ்சை உடைய தலைவி தலைவனிடத்தில் உனக்குத் துணையாக வருவதைவிட வேறு இன்பமெல்லாம் இன்பமாகாது என்கிறாள். இதனை

**''அன்பு அறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு**
**துன்பம் துணையாகா நாடின் அது அல்லது**
**இன்பமும் உண்டோ எமக்கு''** **(கலி 6:8-10)**

என்று தலைவியின் உள்ளத்தில் உள்ள காதலை வெளிப்படுத்துகிறது கலித்தொகை.

**ஊடல்**

குற்றமில்லாத பொழுது குற்றம் கண்டு பொய்யான குற்றத்தால் பொய்க்கோபம் கொள்ளுதல் ஊடல் எனப்படும்.

**''இல்லை தவறு அவர்களுக்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர் அளிக்குமாறு''** **(குறள் : 1321)**

என்று ஊடலுக்கு இலக்கணம் வகுக்கிறார் திருவள்ளுவர். தலைவி தன் குலதிற்கேயுரிய தன்மைகளை இழக்காது பணிகளைச் செவ்வனே ஆற்றுமிடத்தும், பரத்தையரிடம் சென்று மகிழ்வுடன் தங்கி இல்லம் திரும்பும் தலைவனை நோக்கியும், தனது புதல்வனைத் தூக்கி மகிழும் பரத்தையை நோக்கியும் தோழி தலைவனை இகழ்ந்து கூறுமிடத்தும் எனப்பல நிலைகளில் தலைவி ஊடல் கொள்கிறாள். தலைவி தலைவனுடன் ஊடுதலுக்கு முக்கிய காரணமாக அமைபவள் பரத்தை. தலைவியின் குடும்பவாழ்விற்கு இடையூராக வரும் பரத்தை அவளின் சினத்திற்கு ஆளாவது இயற்கை. இந்நிலையில் தலைவன் பரத்தையரோடு கூடி மகிழ்ந்த செய்தி அறிந்த தலைவி கோபம் கொள்கிறான். இச்சூழ்நிலையில் இல்லத்திற்குத் திரும்பிய தலைவன் அவள் ஊடலைத் தீர்க்கும்படி தோழியிடம் வேண்டுகிறான். அவன் செய்த தவறு பெரியது. அதனால் தலைவியின் ஊடலும் முடியாததாக உள்ளது என்று காரணம் கூறி வாயில் மறுக்கிறாள் தோழி.

**''புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துக்**

**சொல்லத்தகு கிளவி தோழிக்குரிய"** **(தொல்-பொருள்-58)**

என்று தலைவன் தலைவியையும் தோழியையும் வருத்தும் செய்கைளில் ஈடுபடும்பொழுது புலத்தலும் ஊடல் கொள்ளுதலும் பின் அவனுக்கேற்றச் சொல்லைப் பேசுதலும் தோழிக்கு உரியது என்கிறார் தொல்காப்பியர். மேலும் ஊடல் என்பதனை,

**"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்**
**கூடி முயங்கப் பெறின்"** **(குறள் : 1330)**

என்று காமத்துக்கு இன்பம் தருவது பிரிந்திருப்பது அப்படி பிரிந்திருப்பவர்கள் இன்பமடைவது இருவருக்கும் சமமான ஆசை உண்டான பின் புணர்வது என்று ஊடலைச் சிறப்பிக்கிறார் வள்ளுவர் தலைமகன் பரத்தையர் சேரியிலிருந்து திரும்பி வருகின்றான். தோழியிடத்து தலைவியின் கோபத்தைத் தணிக்கும்படி வேண்டுகிறான். அதற்குத் தோழி பரத்தையரின் மாயச் செய்கைகளை அவனுக்கு வஞ்சப் புகழ்ச்சியாக எடுத்துரைக்கின்றாள்.

**"பிழையல கண்ணவர் நோக்கியோர் திறத்தே"**

என்று பரத்தையின் இயல்பினைத் தலைவனைப் பார்த்து 'நீர் விரும்பும் பரத்தை இருக்கின்றாளே அவள் உன்னை மட்டுமே விரும்பியவள் என்று எண்ணிவிடாதே. வலைகளைப்போன்ற அவள் கண்வீச்சில் அகப்பட்டோர் பலர் அவருள் நீயும் ஒருவன் என உணர்த்தும் வகையில் கூறுகின்றாள் தோழி. மேலும் பரத்தையரின் தொடர்பு காரணமாகத் தலைவனுடன் ஊடல் கொண்டிருந்தாள் தலைவி. இதை அறிந்த தலைவன் வாயில் வேண்டுகிறான். இதற்குத் தோழி தலைவியின் தகுதியை எடுத்துக்கூறி வாயில் மறுப்பதோடு தலைவியிடம் பரத்தை சிறிதும் நாணமில்லாமல் நடந்து கொண்டதை எடுத்துரைக்கிறாள். இதனை,

**"பொய்கை நீர்நாய்ப் புலவிநாறு இரும்போத்து**
**வாளை நாளிரை தேரும் ஊரை**
**நாணினென பெரும யானே**
**மறையினள்**
**மெல்ல வந்து நல்ல கூறி**
**மையீர் ஓதி மடவோயீ யாறுநின்**
**சேரியனே அயலி லாட்டியேன்.**
**நங்கை யாகுவேன் நினக்கெனத் தன்கைத்**
**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர**
**நுதலும் கூந்தலும் நீவிப்**
**பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே"** **(அகம் : 386)**

என்று பரத்தையர் சேரியிலிருந்து மீண்டு வந்த தலைவனுக்குத் தோழி அவனது தீயொழுக்கத்தின் காரணமாகத் தலைவிக்கும் தனக்கும் ஏற்பட்ட துன்பமிகுதியை எடுத்துரைக்கிறாள். ஊடல் என்பது சில இடங்களில் பொய்யானதாகவும் பல நேரங்களில் மெய்யான ஒழுக்கக் கேட்டிற்காகவும் கொள்ளப்படுகிறது.

**பிரிவுத்துன்பம்**

களவில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும் போதும் கற்பில் பிரிவிடை வைத்துச் செல்லும் போதும் தலைவி பிரிவுத்துயரால் ஆற்றாது புலம்புகிறாள். இவ்விருவகைப் பிரிவுகளிலும் தலைவி கொள்ளும் துயரில் நுண்ணிய வேறுபாடுகள் காணப்படுகின்றன. உற்றார் உறவினர் இல்லாத ஊரில் குடியிருப்பது மனிதருக்கு மிகவும் துன்பமான வாழ்க்கை. அதைவிடத் துன்பம் தருவது தலைவி தலைவனைப் பிரிந்திருப்பது இதனை,

**“இன்னாது இனன்இல் ஊர்வாழ்தல் அதனினும்**
**இன்னாது இனியார்ப் பிரிவு”** (குறள் : 1158)

என்கிறார் திருவள்ளுவர். மேலும் பிரிவில் பிரிவிடை வைத்துச் செல்லும் தலைவன் திரும்பும் பருவத்தைச் சொல்லிப் பிரிவதும் வரைவிடை வைத்துப் பிரியும் தலைவன் சொல்லாது பிரிதலும் மரபாக உள்ளன. தலைவனின் பிரிவிடை வைத்துச் செல்லுதலைக் குறிப்பிடுவது.

1. போர் வயிற் பிரிவு
2. பொருள்வயிற் பிரிவு

போர் வயிற் பிரிந்த தலைவனின் வரவு கார்காலத்தும், பொருள்வயிற் பிரிந்த தலைவனின் வரவு இளவேனில் காலத்தும் பெரிதும் எதிர்பார்க்கப்படுகிறது. முன்னதில் கார் வந்தது அரசு பகை தணிந்து அனைவரும் திரும்பினர். தன் தலைவன் வரவில்லை எனப்போர்வயிற் பிரிவையும் கார்கால வரவையும் இணைத்துத் தலைவி புலம்புகிறாள். பின்னதில் வேனில் வந்தது பொருள் விரும்பி மலை இறந்தோர் வந்திலர் எனப் பொருளையும் வேனிலையும் இணைத்துத் தலைவி புலம்புகிறாள். போர் வயிற் பிரிவில் தலைவன் சென்ற இடம் தெரியுமாதலின் அங்குத் தூது அனுப்பும் முயற்சி தலைவியிடம் காணப்படுகிறது. பொருள் வயிற்பிரிவில் தலைவன் சென்ற இடம் தெரியாதாகலின் அவன் வரவு பற்றிய தூதை எதிர்நோக்கும் ஆர்வம் தலைவியிடம் காணப்படுகிறது.

தலைவி பிரிவை எண்ணிக் கலங்கவில்லை எனவும் தலைவன் பிரிந்துசென்ற வழியை எண்ணியே கலங்குவதாகவும் தோழியிடம் குறிப்பிடுகிறாள். தன் துயர்க்குத் தலைவனின் பிரிவு காரணமில்லை எனவும் தலைவனின் மேல் கொண்ட அன்பு காரணம் எனவும், அவளைத் தேற்றித் தன் கலக்கத்தைத் தோழிக்கு மறைத்துக் காட்டத் தலைவி கையாளும் உத்தி இது. தலைவி தலைவனுடைய பிரிவை எப்படித்தான் மறைக்க நினைத்தாலும் இயற்கையின் பாதிப்பிலிருந்து தப்பமுடியவில்லை. இதனை

**“யாரணங் குற்றனை கடலே பூழியர்**
**சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன**
**மீனார் குருகின் கானலம் பெருந்துறை**
**வெள்வீத் தாழை திரையலை**
**நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே”** (குறுந் : 163)

என்ற குறுந்தொகைப்பாடலில் தலைவி ஓயாமல் முழக்கமிடுகின்ற கடலை நோக்கி ஏ கடலே நீயும் என்னைப் போலவே நள்ளிரவிலும் உறக்கமில்லாமல் கதறுகின்றாயா, நீ எவரால் இவ்வாறு உறங்காமல் வருத்தமடைகிறாய் என்று கேட்கிறாள். தலைவி தன்னுடைய காமநோய்க்குக் காரணமான தலைவன் வந்து இந்தக் கொடிய காமத்தீயை அணைக்காமல் இருக்கிறான். மேலும் உலகமெல்லாம் உறங்குகின்ற நள்ளிரவிலே தலைவரின் நினைவில் அமிழ்ந்து உறங்காமல் அழிகின்றேன். என்னைப் போல கடலே நீயும் இந்த யாமத்திலே அரற்றுகின்றாயே யாராலே என்று பிரிவுத்துன்பத்தை உரைக்கிறாள். தலைவனைப் பிரியும் தலைவி பொருள்வயிற் பிரிவிலும், பரத்தையற் பிரிவிலும் பெருந்துன்பம் அடைகிறாள்.

**1) பொருள்வயிற் பிரிவு**

பொருள் இல்லாதவனுக்கு மண்ணுலகமும் அருள் இல்லாதவனுக்கு வானுலகமும் இல்லை என்பதை உணர்ந்த தலைவன் திருமண வாழ்க்கைக்காகக் குடும்பத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகப் பொருள் தேடித் தலைவியைப் பிரிந்து செல்கிறான். தலைவி தலைவனை விட்டுப் பிரிந்திருப்பதைவிட இருவரும் ஒன்றாக இருக்கும்பொழுதே உயிர்பிரிதல் சிறந்தது என்கிறாள். மனித வாழ்க்கையில் பிரிந்திருப்பது நோயைத் தருகின்றது. இந்நோய் போன்ற துன்பங்களைவிடத் தலைவன் தன்னைப் பிரிந்திருக்கும் கொடுமையைத் தாங்கவியலாதவளாகத் தலைவி காட்சியளிக்கிறாள். 'உடனிருந்து துய்க்கும் இன்பியல் வாழ்க்கை ஆண்டுக்கணக்காக நீடித்தற்கில்லை. கடமைகளைச் செய்து குடும்பம் நடத்துவதற்கும் பொருள் வேண்டும். அதனை வேற்றூர் சென்றும் வேற்றுநாடு சென்றும் ஈட்டுதற்குத் தலைவியைப் பிரிவான். தலைவன் இப்பிரிவு இன்றியமையாத உலகியல் அறமாகும்'[26] என்பர் உயிர்நூலார். எனினும் சமுதாயத்தில் ஆண்களுக்கு வகுக்கப்பட்டுள்ள புறக்கடமைகளுள் ஒன்று பொருள் மற்றும் புகழ். இவற்றை,

**"பெருமையும் உரனும் ஆடூஉ மேன"** **(தொல் 1043)**

என்கிறார். இவை ஆண்பாலுக்கு உரிய பண்புகள் என்கிறார் தொல்காப்பியர். நீண்டநாள் இன்பத்தில் திளைத்த தலைவனுக்கு கடமை தவறுவதும் வறுமையுறுவதும் பெருமையைத் தராது. பொருள் தேடுவது கடமையை எளிமைப்படுத்தும் கருவி இக்கருவியை ஈட்டுவதற்குத் தலைவன் தலைவியை விட்டுப் பொருள்வயிற் பிரிகிறான். தலைவியை விட்டுப் பொருள்வயிற் பிரியும் தலைவன் தலைவியின் இன்ப வாழ்க்கைக்குப் பொருள் மிகவும் அடிப்படை என்பதை உணர்த்துகிறான். பொருளின் தேவையையும், அவசியத்தையும் உணர்ந்த தலைவி பிரிய இடம் கொடுக்கிறாள்.

**"பிரிவுஉரைக்கும் வன்கண்ணார் ஆயின் அரிதுஅவர்**
**நல்குவர் என்னும் நசை"** **(குறள் : 1156)**

என்கிறார் திருவள்ளுவர். மேலும் பொருளை அருளாகக் கொள்ளும் தலைவன் களவு ஒழுக்கத்தை விரும்பி வரவை நீட்டிக்கும் தலைவன் கற்பு நிலைக்குச் செல்லும் மண வாழ்க்கையை விரைவில் விரும்பாத நிலை காணப்படுகிறது. தலைவன் தலைவியை விரைவில் மணந்து கொள்ளாமல் காலம் தாழ்த்துவதற்குப் பொருள் காரணமாக

அமைகிறது. தலைவன் திருமணத்திற்கு முன் மிகவும் சுதந்திரமானவனாகத் திகழ்கிறான். தலைவியைச் சந்திப்பதும் பிரிவதும் பின்னும் பிரிவதும் சந்திப்பதும் என்ற நிலையில் தலைவன் இன்பமாக இருக்கிறான். திருமணத்திற்குப் பின்பு கற்பு வாழ்வில் குடும்பத்தின் தேவைகளைக் கொண்டு பிரிகிறான். பொதுவாகத் தலைவனிடம் பொருள் வயிற்பிரிவு ஏற்படுவதற்கு அடிப்படை காரணமாக இருப்பது. 'கவலையற்று மனையாளொடு இன்பந்துய்த்தல், பிறரிடம் சென்று இரவாமை, தன்னிடம் வந்து இரந்தார்க்கு இல்லை என்று சொல்லாமை, சுற்றத்தார்க்கு உதவுதல், நண்பர் கூட்டத்தைப் பெருக்கிக் கொள்ளல், தக்கவர் தொண்டுக்கு உறுதுணையாதல், பகைவர் செருக்கை அடக்கல், அடங்காரை அழித்தல், அடங்கி வந்தார்க்குத் தண்ணளி செய்தல், எண்ணிய வினை முடித்தல், என்றிவையெல்லாம் ஆடவனுக்கு உரிய கட்டுப்பாடுகள். மனவுணர்ச்சியும், புகழ்பற்றும் இக்கடமைகளைச் செய் செய் என்று அவனைத் தூண்டும்'[27] என்கிறார் வ.சுப. மாணிக்கம். பொருளின் காரணமாகப் பிரியும் தலைவனை நினைத்துத் தலைவியின் மனம் வருந்துகிறது. தலைவியிடம் தலைவன் பிரிந்து போவேன் என்று அடிக்கடி சொல்லிக்கொண்டு அவளை விட்டுப் பிரியாமலிருந்தான். ஒருமுறை வழக்கமாகப் பட்டுவிடவே தலைவன் தன்னை விட்டுப் போகமாட்டான் என்று எண்ணி என்னை விட்டுப் போங்கள் என்று சொல்லிவிட்டாள். அதனால் தலைவன் பிரிந்துபோனான். எதிர்பாராமல் நிகழ்ந்த இப்பிரிவினால் தலைவி மிகவும் வருந்தினாள். இந்த வருத்தத்தின் மிகுதியினால் தலைவி விட்ட கண்ணீர் நாரைகள் மேயும் பெரிய குளம் போல ஆகிவிட்டது. இதனை,

**"சேறுஞ் சேறு மென்றலின் பண்டைத்தன்**
**மாயச் செலவாச் செத்து மருங்கற்று**
**மன்னிக் கழிகென் றேனே அன்னோ**
**ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ**
**கருங்கால் வெண்குருகு மேயும்**
**பெருங்குளம் ஆயிற்றென் இடைமுலை நிறைந்தே"** **(குறுந் : 325)**

என்று தலைவி வருந்துகிறாள். பொருள்வயிற் பிரிந்த தலைவன் பிரிந்து நெடுநாள் தங்கிவிட்டமையால் பொறுத்திருக்க இயலவில்லை. தலைவி தோழிக்குத் தன் துன்பங்களைச் சொல்லி தன் நெஞ்சிற்கு ஆறுதல் பெற முயல்கிறாள். இதனை

**"கான யானை தோயைத் துண்ட**
**பொரிதான் ஓமை வளிபொரு நெடுஞ்சினை**
**அலங்கல் உலகை யேறி ஒய்யெனப்**
**புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்**
**அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்ச்**
**சேந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்கு**
**ஒல்லேம் என்ற தப்பற்**
**சொல்லா தகறல் வல்லு வோரே"** **(குறுந் : 79)**

என்று தலைவனுடைய ஊரின் சிறப்புக்களைக்கூறி இக்காட்சியைக் காணும்போதுகூட அவருக்கு என் நினைவு வராமலா போய்விடும். நான் அவருக்கு ஏற்றவள் இல்லையென்றாலும் அவர் என்னை நினைத்து வருவார் என்றுதான் நம்புவதாக தோழியிடம் தலைவி வருந்துகிறாள். பொருள்வயிற் பிரிவு இருவருக்கும் பாதிப்பை ஏற்படுத்தினாலும், தலைவியிடம் மட்டுமே அது மிகவும் பாதிக்கப்பட்டதாகத் தெரிகிறது. நாடு காவல்பிரிவு, பகைவயிர் பிரிவு, தூதிற்பிரிவு, ஓதற்பிரிவு, பரத்தையர்பிரிவு எனப் பலபிரிவுகள் உள்ளன. இவற்றில் பொருள்வயிற் பிரிவு பரந்தது. எல்லோர்க்கும் உரியது களவிற்கும், கற்பிற்கும் பொதுவானது.

**தலைவியின் பண்புகள்**

அகத்தில் அன்புகொண்டு வாழ்வதுதான் மனிதவாழ்க்கை. அகத்தில் அன்பு இல்லாதவர் எலும்பு இல்லாத புழுவை ஒத்தவர்கள் என்ற வள்ளுவரின் கூற்றிற்கு ஏற்ப அன்பை மட்டும் முதன்மையாகக் கொண்டு வாழ்க்கையில் இன்பம், துன்பம் என எச்சூழ்நிலையிலும் தனித்தப் பண்புகளால் சிறப்புப் பெற்றவள் தலைவி. அக இலக்கியத்தில் அமையப்பெற்ற தலைவி மனிதச் சமுதாயத்திற்கு அறநூல்கள் காட்டும் அத்துணை நெறிமுறைகளையும் அறிந்தவளாக விளங்குகிறாள். தலைவன் சில நேரத்தில் செய்யும் தவறுகளையும், புறச்சூழலில் நடைபெறும் சிறுசிறு தவறுகளையும் மன்னிக்கிறாள் தலைவி. தலைவனை விடத் தலைவி வாழ்க்கை நிலைகளில் மிகவும் நுணுக்கமாகவும், ஆழமாகவும், அகலமாகவும் சிந்தித்து நல்லனவற்றை ஏற்றுக்கொண்டு தீமையைக் களைந்து இல்லறத்தை நடத்துபவளாக அமைவாள் என்பதை அக இலக்கியங்கள் காட்டும் தலைவியின் வாயிலாக உய்த்து உணராலம். “கற்புக்குக் காதலே அடிப்படை. கற்புள்ளவர்கள் உயிருள்ளவர்கள். எனவே காதலும் கற்பும் உயிருமுடையோர் கணவனும் உடையவரேயாவர். கணவன் பிரிந்திருந்தாலும் அவன் நலமாக இருக்கிறான் என்பதற்குக் கற்புடைய மனைவியின் காதலும் உயிருமே அடையாளமாகும்”[28] என்பதை உணர்ந்தவள் தலைவி. தலைவன் பிரிந்து இன்னல்களைத் தலைவிக்குத் தந்தாலும் அவற்றைப் பொறுத்துக் கொள்கிறாள். மேலும் அறத்தோடு நிற்கும் இடங்களானாலும், உடன்போக்கானாலும் வரைவு கடாதலனாலும் தன்பெருமை சான்ற நிலையை ஒவ்வொரு இடங்களிலும் காட்டி நிற்கிறாள்.

**தலைவன்**

அக இலக்கியங்கள் காட்டும் தலைவன் தன்னிகரில்லா தன்மையுடையவன் பழிக்கும்பாவத்திற்கும் அஞ்சும் தன்மையுடையவன். மேலும் அறிவுடையவனாக ஆண்மகனுக்கு இலக்கணம் காட்டுகிறார் தொல்காப்பியர். ‘மகன்’ என்ற சொல் வெறும் ஆண்மகனை மாத்திரம் குறிக்கும் சொல் அன்று. நல்லூழின் பெருக்கால் எய்தலாகும். எல்லா உயிர்களுக்கும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற பெருந்தகையை மட்டிலும் குறிப்பிடும் சொல் அது என்கிறார் ந. சுப்புரெட்டியார். களவு கற்பு என்னும் இரண்டு நிலைகளிலும் தலைவன் முதன்மை பெறுகிறான் தலைமக்களது தன்மைகளைத் தொல்காப்பியர்.

**“ஒன்றே வேறே என்றிரு பால்வாயின்**
**ஒன்றி யுயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோனோயினும் கடிவரையின்றே”** **(தொல்-பொருள்-94)**

என்று ஊழினது காரணமாக உள்ளப் புணர்ச்சி கொள்ளும் தலைமக்கள் ஒத்த தன்மை உடையவராய் இருப்பினும் ஒப்புமைக் கூறுகள் சிலவற்றில் தலைவன் உயர்ந்தவனாய் இருக்கிறான். மேலும் ஆணும் பெண்ணுமாய் வேறுபட்டு நிற்கும் இருபாலிடத்தும் மேலாண்மை செலுத்தக்கூடிய பாலே அஃதாவது ஒன்றி உயர்ந்த பாலது ஆணையே காதல் பிறக்கக் காரணமாவது. இக்காதல் உருவு நிறுத்த காமவாயிலை இலக்காகக் கொண்டது. பெண்ணைவிட ஆண் மிக்கோனாயினும் இக்காம உணர்வு தடையின்றிச் சென்றுசேரும் என்பது இத்தொல்காப்பிய நூற்பாவின் பொருள். தலைவனின் சொல் இல்லை என்பவருக்கு இரங்கும் தன்மை கொண்டிருக்கிறது. தலைவனின் தோற்றம் உலகத்தைக் காப்பவன் போல் மறத்தோற்றம் கொண்டதாக இருக்கிறது. அத்தகைய மறத்தோற்றம் கொண்டவனாக இருப்பினும் அடக்கமுடையவனாக உள்ளான். கொடுப்பதில் வள்ளல் தன்மை கொண்டவனாக இருப்பதை

**“ஒன்று இரப்பான் போல்எளி வந்தும் சொல்லும் உலகம்**
**புரப்பான் போல்வது ஓர் மதுகையும் உடையன்”** **(கலித். 67:19-21)**

என்கிறது கலித்தொகை. மேலும் “தலைவனது உணர்வு போராட்டங்களில் ஏமாற்றம், கலக்கம், ஆற்றாமை, ஏக்கம் ஆகியவை அடிப்படையாக இருக்கின்றன. தலைவியை அடைய வேண்டும் என்ற அவனுடைய எண்ணத்திற்கு இடையூறு நேர்ந்தால் ஏமாற்றம் ஏற்படுகின்றது. இதன் விளைவாக அவன் உள்ளத்தில் கலக்கம் ஏற்படுகின்றது. சில சூழ்நிலைகளில் இவை இரண்டும் சேர்ந்தும் தலைவன் உள்ளத்தில் உணர்வு போராட்டத்தை உருவாக்குகின்றன”[29]. அக இலக்கியத்தில் சுட்டப்பெறும் தலைவன் தொழிலை உயிரினும் மேலாகப் போற்றியவன் தம்முடைய முன்னோர் சேர்த்து வைத்த பொருளைப் பயன்படுத்தவில்லை. பிறரின் உழைப்பிலிருந்து வந்த பொருளைப் பயன்படுத்துவதை இழிவு என்று கருதினான். இதனை,

**“வினையே ஆடவர்க்கு உயிர்”** **(குறுந் : 135)**

என்கிறது குறுந்தொகை. தாமே தேடிய பொருளைக் கொண்டு இல்லறம் நடத்துவதையே வாழ்க்கைக் கொள்கையாக வகுத்துக் கொண்டனர். தலைவன் எந்தச் செயலைச் செய்தாலும் திறமையாகவும், செம்மையாகவும் செய்கின்ற மனவுறுதியைப் பெற்றிருக்கின்றான். இதனால் அவன் தலைவியிடம் கொண்டிருக்கும் காதல் உண்மையாகவும், உறுதியாகவும் இருந்தது. தலைவன் தலைவியின் இன்பவாழ்க்கையைக் குறிக்கோளாகவும், இனிய நினைவுகளை இன்ப ஊற்றாகவும் கொள்கிறான். இதனை

**“இன்பம் விழைவான் வினைவிழைவான் தன்கேளிர்**
**துன்பம் துடைத்தூன்றும் தூண்”** **(குறள்: 615)**

என்கிறது. தலைவியின் மேல் அன்புகொண்டு அவளது இன்ப வாழ்க்கையில் பங்கேற்றுச் சிறந்த வாழ்க்கை வரன்முறைகளை உலகிற்குக் காட்டுபவனாக விளங்குகிறான். தலைவன் எந்நாளும் முன்னோர் பொருளை வைத்து அதிலிருந்து இன்பத்தை அனுபவிக்காதவன் தன் உழைப்பிலிருந்து ஈட்டிய பொருளின் வழிதான் இன்பத்தைப்பெற நினைப்பவன் தன் உழைப்பின் பயனை உறவினர்கள் அனுபவித்து அவர்கள் துன்பத்தைத் துடைக்கின்ற பேருள்ளம் படைத்தவன் தலைவன்.

**தலைவன் உள்ளம்**

உள்ளப்புணர்ச்சியை விரும்பிநிற்கும் தலைவன் தலைவியின் தன்மைகளைப் பாராட்டுகிறான். தலைவியின் இளமையையும் அழகையும் கண்டு வியக்கிறான். இதனால் தலைவனின் உள்ளத்தில் தலைவியின் அழகும், அமைதியும் நுண்ணிய வேறுபாட்டை ஏற்படுத்தியது. இயற்கைப் புணர்வின்பொழுது தலைவியின் கூந்தலாகிய தலையணையில் இன்பமடைந்து நின்றவனாக அக்கூந்தலின் இயல்பினை நினைத்து இக்கூந்தலினால் பெற்ற இன்பத்தைத் தொடர்ந்து பெற இயலவில்லையே என்று நெஞ்சிற்குக் கூறுகிறான்.

**"யானயந் துறைவோள் தேம்பாய் கூந்தல்**
**வளங்கெழு சோழ ருறந்தைப் பெருந்துறை**
**நுன்மண லறல்வார்ந் தன்ன**
**நன்னெறி யவ்வே நறந்தண் ணியவே"** **(குறுந் : 116)**

என்று தலைவனால் காதலிக்கப்பட்ட தலைவயின் வண்டுகள் மொய்க்கின்ற கூந்தல் சோழ மன்னனின் உறையூரை ஒட்டிச்செல்லும் காவிரி மணலாகிய கருமணல் நீண்டு சரஞ்சரமாகப் படிந்திருப்பது போல மணம், குளிர்ச்சி உள்ளதாக அமைந்திருக்கிறது என்று தலைவியின் நீண்ட கூந்தலை தன்மனதில் நினைத்து நலம் பாராட்டுகிறான். தலைவன் தலைவியிடம் பெற்ற இன்பத்தை,

**"கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடி கண்ணே உள"** **(குறள் : 1101)**

என்கிறார் திருவள்ளுவர். மேலும் தலைவியைச் சேய்மையில் கண்டபோது தோற்றத்தால் இன்பத்தையும் நெருங்கும்போது மனதால் இன்பத்தையும், பேசும்போது பேரின்பத்தையும் தருகிறாள் என்கிறான். தலைவியைச் சந்திக்க முடியாத தலைவன் செல்வமற்ற ஏழையைப் போல உலக இன்பங்களையெல்லாம் அனுபவிக்க இயலாதவனாகப் புலம்புகிறான்.

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லென"** **(குறுந் : 63)**

என்கிறது குறுந்தொகை. இதனைத் திருவள்ளுவர்,

**"இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இன்மையும் இன்றி வரும்"** **(குறள் : 1042)**

என்கிறார். செல்வம் மிகவும் இன்பந்தரக்கூடியது. ஆனால் கிடைத்தற்கு அரிது அதைப்போலவே தலைவியும் பெறுவதற்கு மிகவும் அரியவளாக இருக்கிறாள்.

ஒருவனின் வாழ்க்கைக்குச் செல்வம் மிகவும் இன்றியமையாதது. அதை எவ்வழியிலும் பெற்று வாழ்க்கையை இன்பமாக்க வேண்டும் என்ற எண்ணம். எல்லா மானிடற்கும் பொதுவானது. தலைவியும் தலைவனின் வாழ்க்கைக்குச் செல்வத்தைவிட மிகவும் தேவையானவளாகக் கருதப்படுகிறாள். இதனை,

**“இல்லோ லின்பங் காமுற் றாஅங்**
**கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி**
**நல்ல ளாகுத லறிந்தாங்**
**கரிய ளாகுத லறிய தோயே”** (குறுந் : 120)

என்கிறது. மேலும் தலைவியை முதன்முதலாகப் பார்த்த அந்த நாள் தொடங்கி இன்றுவரை அவளைவிட்டுப் பிரிவு என்பதை அவன் மனதாலும் நினைக்கவில்லை. தலைவியை ஒருமுறை கூடுதல் இந்தப் பிறவிக்குரிய முழுப்பயனாக அமையும் என்கிறான். தலைவன் மேலும் அவளைக் கூடிய பிறகு அதன்காரணமாக உயிரை இழக்க நேரிட்டாலும் அதைப்பற்றித்தான் கவலையுறவில்லை என்கிறான். தலைவன் தலைவியைக் காணாது பல நாள்கள் உயிர்வாழ்வதைவிட அவளைக்கண்டு பேசி அடுத்த கணமே இறந்துவிடுதல் நன்று என்கிறான். தலைவியை மறந்து தன்னால் வாழ முடியாத நிலையைத் தன் நெஞ்சிற்கு உணர்த்துகிறான் தலைவன்.

**காதல்**

காதல் என்பதற்கு அன்பு, வேட்கை என்ற பொருள்களைத் தமிழ்ப்பேரகராதி தருகின்றது. எல்லா உயிர்களிடத்தும் கொள்ளும் அன்புணர்வைக் காதல் எனக் கொண்டாலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் ஏற்படும் அன்புணர்வே காதல் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது. மேலும் காதல் இயற்கையில் தோன்றும் உணர்வு அது தலைவனிடம் தலைவியைக் கண்டபொழுது வெளிப்படுகிறது. இதனை

**“உடம்பொடு உயரிடை என்னமற்று அன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு”** (குறள் : 1122)

என்று உடம்புக்கும் உயிருக்கும் எப்படிப்பட்ட உறவோ அப்படிப்பட்ட உறவே தலைவிக்கும் தனக்கும் உள்ள உறவு என்று தன் காதலைக் கூறுகிறான். தலைவன், தலைவியின் மீது வைத்திருக்கும் அன்பை உயிரினும் சிறந்ததென்றும் கிடைத்தற்கரிய தலைவியின் அன்பு கடல்சூழ்ந்த உலகத்தைப் பெற்று வாழ்வதைவிடப் பெரியது என்கிறான். இதனை,

**“கடல்சூழ் மண்டிலம் பெறினும்**
**விடல்சூ ழலனான் நின்னுடை நட்பே”** (குறுந் : 300)

என்று தலைவியின் மீதுள்ள காதலைப் புலப்படுத்துகிறான்.

தலைவனிடம் எப்பொழுதும் அன்புதான் தோன்றி நிற்க வேண்டும். அவ்வாறில்லாமல் காலை, பகல், மாலை, யாமம் விடியல் என்ற சிறுபொழுதுகளிடையே காமம் தோன்றுமாயின் அத்தகைய தலைவனின் காதல் பொய்யானது. அதனால், தலைவியைக் காமத்தின்வழி அல்லாமல் காதலின்

அடிப்படையில் விரும்பும் தலைவன் பிரிவு என்று வரும்போது உயிரோடு வாழ்வதைப் பழியென்று நினைக்கிறான். இதனை

**“காலையும் பகலும் கையறு மாலையும்**
**ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்**
**பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்**
**மாவென மடலொடு மருகிற் றோன்றித்**
**தெற்றெனத் தூற்றலும் பழியே**
**வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே”** **(குறுந் : 32)**

என்று உண்மையான காதலின்வழி தலைவியைப் பெற நினைத்துக் காதலென்பதை உயிரிலும் மேலானதாகக் கருதுகிறான். மேலும் அறிவுடையவர்கள் செல்வம் தீர்ந்து வறுமைநிலையில் வருத்தத்தைப் போக்க உறவினரிடத்தில் போய்க் குறையை வாய்விட்டுச் சொல்ல நினைத்துப் பின்பு வறுமையைச் சொல்லாமல் இருப்பதைப் போல் தலைவனும், தலைவியிடம் விருப்பத்தைச் சொல்லாமல் செல்கிறான்.

**“வளை முன்கை பற்றி நலிய தெரு மந்திட்டு**
**அன்னாய்! இவன் ஒருவன் செய்தது காண் என்றேனோ**
**அன்னை அலறிப் படர்தர தன்னை யான்**
**உண்ணு நீர் விக்கினான் என்றேனோ அன்னையும்**
**தன்னைப் புறம்பு அழித்து நீவ”** **(கலித் 51:2-4)**

என்று தலைவன் தலைவியைக் காணவேண்டும் என்ற ஆசையால் பகல்வேளையில் தலைவியின் இல்லத்திற்குச் சென்று குடிப்பதற்கு நீர் கேட்கிறான். தாயும், தலைவியிடம் கொடுத்தனுப்புகிறாள். வந்தவன் தலைவியின் வளையல் அணிந்த முன்கையைப் பற்றி இழுக்கத் தலைவியோ இவன் செய்த செயலைக் காண்பாய் என்று தாயை அழைக்கிறாள். தாய் வந்த நிலையில் விக்கல் எடுத்ததுபோல் செய்து தலைவன் கடைக்கண்ணால் பார்த்து மகிழ்ச்சி தரும் புன்முறுவலால் தன் உள்ளத்தில் புகுந்த காதலை வெளிப்படுத்திச் செல்கிறான்.

**மடலேறுதல்**

தலைவியைப் பெரும்பொருட்டுத் தலைவன் மேற்கொள்ளும் ஒருவகையான செயல் மடலூர்தல். தலைவனது திருமணத்திற்குக் களவுக்காலத்தில் எடுத்த முயற்சிகள் தோல்வியில் முடிந்த பின்னர் சான்றோர்களின் உதவியை நாடி ஊரார்க்குத் தன் காதலைத் தெரிவிக்கும் பொருட்டு உடம்பை வருத்திக் கொள்வது. தலைவனின் உடம்பெல்லாம் நீறுபூசித் தலைவியின் உருவம் பொறித்த கொடியினைத் தாங்கி எருக்கம்பூ மாலை அணிந்து பனங்கருக்கால் செய்த குதிரைக்கு மயிற்பீலி, பூளைப்பூ, ஆவாரம்பூ போன்றவற்றால் தொடுத்த மாலையைச் சூடியும், ஒலிக்கும் மணியைக் கட்டித் தலைவியைப் பெரும்பொருட்டு தலைவன் மேற்கொள்ளும் இச்செயல் மடலூர்தல் எனப்படும்.

**“மாவென மடலும் ஊர்ப பூவெனக்**
**குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப**

**மறுகின் ஆர்க்கவும் படுப**

**பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே''** (குறுந் : 71)

என்கிறது குறுந்தொகை. இலக்கண இலக்கிய மரபுப்படி மடலூர்தல் என்பது ஆண்களுக்கு மட்டும் உரித்தானது என்பதை,

**''எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்**

**பொற்புடை நெறிமை இன்மையான''** (தொல் : 981)

என்கிறது தொல்காப்பியம். மேலும் இதனைத் திருவள்ளுவரும்,

**''கடல் அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்**

**பெண்ணின் பெருந்தக்கது இல்''** (குறள் : 1137)

என்று காமம் மிகுதியாக இருந்தாலும் பெண் மடல் ஏறுவதில்லை என்று பெண்ணின் சிறப்பைச் சுட்டுகிறார்.

தலைவனுக்குக் குறை மறுக்கப்பட்டபோதும் காமநோய் மிகுந்து தலைவனுக்கு ஆற்றாமை தோன்றும்போதும் அவனுக்கு மடலேறும் எண்ணம் தோன்றுகிறது. மேலும் இதனைத் "தலைவன் தன் அன்பை வெளியிட முயல்வது மடலூர்தலின் நோக்கம்"[30] என்கிறார் என்று அ.ச. ஞானசம்பந்தன், "தன் உள்ளம் கவர்ந்தாளளை ஊரறிய வெளிப்படுத்துவது மடலூர்தலின் நோக்கம்"[31] என்கிறார் வ.சுப. மாணிக்கம். "தலைவியின் பெற்றோர்க்குத் தன் காதலின் உறுதியை உணர்த்தி வரைந்து அவர்களது இசைவைப் பெறுவது மடலூர்தலின் நோக்கம்"[32] என்று தலைவனின் மடலூர்வதற்கான எண்ணத்தைக் குறிப்பிடுகின்றனர் கே.கே. பிள்ளை.

தலைவன் மடலேறுவதற்குப் பூளைப்பூ, எருக்கம்பூ, ஆவாரம்பூ ஆகியவற்றை அணிந்து உலா வருகிறான். தலைவன் அணிகின்ற இவை யாரும் விரும்பிச் சூடாதவை பயன்படாதவை. இதனை,

**''வில்லாப் பூவின் கண்ணி சூடி**

**நல்ஏ முறுவல்எனப் பல்ஊர் திருத்ரு**

**நெடுமாப் பெண்ணை மடல்மா னோயே''** (நற் : 146:1-3)

என்று தலைவன், தலைவி தன்னை ஏற்காது போனால் யார்க்கும் பயன்படாத இந்தப் பூக்களைப் போல இறந்துபோவேன் என்று தன் முடிவை குறிப்பால் உணர்த்துகிறான். மேலும் மடலூர்வதற்குப் பனை மட்டைகளால் குதிரை வடிவில் வாகனம் செய்யப்பட்டிருக்கும் பனைமட்டையின் இரு பக்கங்களிலுமுள்ள முள் போன்ற கருக்குகள் எடுக்கப்படாமலேயே அக்குதிரைகள் செய்யப்பட்டிருக்கும். அதன்மீது தலைவன் அமர்ந்து இருக்கத் தோழன் அதனை இழுப்பான். அப்போது காதலனின் உடலைக் கருக்கு மட்டைகள் பதம்பார்க்கும். இதனை,

**''கண்டவி ரெல்லாங் கதுமென்வந்து ஆங்கே**

**பண்டறியா தீர்போல நோக்குவீர் கொண்டது**

**மாவெள் நுணர்மின் மடலன்று மற்றவை**

**பூவல்ல பூளை''** **(கலித்.)**

என்கிறது கலித்தொகை. மேலும் தலைவன் மடலூரும்போது மிகுதியான இரத்தம் வெளிப்பட்டால் அவனைக் கொன்றுவிடும் வழக்கமும் இருந்திருக்கிறது. இதனை,

**''ஊனா என் உயிரை உண்டு உயவுநோய் கைம்மிக**

**இளமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்**

**களைஞர் இல்நோய் செய்யும் கவின் அறிந்து அணிந்ததும்**

**வன்மையான் போத்தந்த நுமர் தவறுஇல் என்போய்'' (கலித் 58: 7-10)**

என்கிறது கலித்தொகை. மேலும் தலைவன் மடலூர்வதற்கு முன்பு தலைவியின் ஊரில் சென்று காதலை ஊரார்க்குப் புரியவைத்து, விரும்பிய பெண்ணைத் தனக்கே திருமணம் செய்து வைத்தால் அது அறமாகும் என்று வருந்திக் கேட்கிறான். இதனை,

**''என்கண் இடும்பை அறிஇயினென் நுங்கண்**

**தெருளுற நோக்கித் தெரியுங்கால் இன்ன**

**மருளுறு நோயோடு மம்மர் அகல**

**இருளுறு கூந்தலின் என்னை**

**அருளுறச் செயின் நமக்கறனுமா றதுவே''** **(குறுந் : )**

என்கிறது. மேலும் இதன்மூலம் தலைவன், தலைவி மீது கொண்ட காதலை ஊரார் அனைவருக்கும் அறிவிக்கும் பொருட்டும் அதனால் அவளை யாரும் திருமணம் செய்துகொள்ளக் கூடாது என்ற எண்ணத்தாலும் துணிச்சலாக மடலூர்கிறான். இவை தலைவன் மடலூர்வதற்கு மேற்கொள்ளும் உத்திகள்.

**இடைச்சுரத்து நிற்றல்**

இடைச்சுரத்து நின்ற தலைவனின் உணர்வுகள் புறவாழ்வில் விரும்பிய கடமையுணர்விற்கும், அகவாழ்வில் தலைவி மேல் கொண்ட காதலுக்கும் இடையே நடைபெறும் மனப்போராட்டத்தை விளக்கி நிற்கிறது. பொருள் தேடும் வேட்கை தலைவனை முன்னுக்கு இழுக்கிறது. தலைவியின் எழிலோடு உறவாடிப் பண்போடு பழகிய நினைவு தலைவனைப் பின்னால் இழுக்கிறது. தலைவன் கடமை உணர்வால் உந்தப்படுகிறான். தன் தனிப்பட்ட உணர்வை எண்ணும்போது காதல் உணர்வால் தடுக்கப்படுகிறான். இவ்விருவகை மன உணர்வுகளின் போர்க்களமாக அவன் நெஞ்சு அமைதலின் தலைவனின் மனதில் கடமை உணர்வும், காதல் நினைவும் சமநிலையில் நிற்கின்றன. இதனை,

**''இருதலைக் கொள்ளி இடைநின்று வருந்தி**

**ஒருதலைப்படா எறும்புடன்''** **(அகம் : 339)**

என்கிறது அகம். தலைவன் பொருளின் காரணமாக முன்னுக்குச் செல்வதற்கும் தலைவியின் மேல் கொண்ட காதலால் பின்னுக்குச் செல்வதற்கு இயற்கைக் காட்சிகள் காரணமாக அமைகின்றன. இதனை "மழையின்மையால் வறண்ட நெறிகள், புலியும் களிறும் பொருதுநிற்கும் வழிகள் ஆறலைகள்வரின் கொடுமைகள் எனப்பொருள் தேடும்

நாட்டத்தை வீறிழக்கச் செய்யும் சுரத்தின் இன்னாக் காட்சிகள் ஆண் உயிர்கள், பெண் உயிர்களைப் பிரிவுடன் பேணிநிற்கும் நிகழ்ச்சிகள் அல்லது இணைந்து இன்புறும் இன்பச் செயல்கள் எனத் தலைவியை நினைவூட்டித் திரும்புவதில் ஆர்வத்தைத் தூண்டும் இனிய காட்சிகள் ஆகிய இவ்விருவகை முரண்பட்ட காட்சிகளும் இடைச்சுரத் தலைவனைப் பின்வாங்கத் தூண்டுகின்றன. இன்னாக்காட்சிகள் ஊக்கத்தைக் கெடுக்கின்றன, இனிய காட்சிகள் மனக்கிளர்ச்சியை உண்டாக்க வினைத்தளர்ச்சியை உருவாக்குகின்றன"[33] பொருள்வயிற் பிரிந்த தலைவனின் நோக்கம் முழுமையும் பொருளிடத்தல்லாமல் தலைவியிடமும் திரும்புகிறது. பொருள்தேடச் செல்லும் வழியில் பூத்திருந்த வெட்சி மலர்கள் மணக்கின்ற போதெல்லாம் தலைவனுக்குத் தலைவியின் நினைவு வருகிறது. மேலும் இயற்கையில் இணைந்து நிற்கும் உயிர்கள் இடைச்சுரத்தலைவனுக்கு அவனது தனிமையை உணர வைக்கின்றன.

**"பசியட முயங்கிய பைங்கண் செந்நாய்**
**பொய்யா வேட்டம் போகிய கணவன்**
**பொய்யா மரபில் பிணவு நினைந்து இரங்கும்**
**விருந்தின்வெங் மரபில் பிணவு வருந்துதும் யாமே" (நற் : 103)**

என்று பெண்துணையுடன் பயிரும் காட்சியைக் கண்ட தலைவி தன்னை நினைத்து அழுதுகொண்டிருப்பாளோ என்ற எண்ணம் தலைவனின் மனதை வருத்துகிறது. இதனை,

**"சுரம் பல கடந்த நம்வயின் படர்ந்துநனி**
**பசலை பாய்ந்த மேனியள் நெடிதுநினைந்து" (அகம் : 169)**
**"நம்வயின் நினையும் நெஞ்சமொடு கைம்மிக" (நற் : 157)**

என்கிறது. தலைவியின் அன்புமிகுதி அவளது பண்பை நினைக்கச் செய்கிறது. அதனால் தலைவனுக்குத் தலைவியின் புறஅழகினும் அவளது அகஅழகு புலனாகிறது. இதனை,

**"வந்த நெஞ்சம் நீ நயந்தோள் பண்பே" (ஐங் : 323)**
**"தண்மை செய்தஇத் தகையோள் பண்பே" (ஐங் : 327)**

என்ற இடைச்சுரத்து நின்ற தலைவனுக்குத் தலைவியின் பண்பு சுட்டப்படுகிறது. தலைவன் தான் எய்திய பிரிவுத்துயரால் தலைவி கொள்ளும் துயரை முழுமையாக உணர்ந்து பொருளுக்கும் காதலுக்கும் இடையில் நின்று துன்புறுகிறான். இதனை,

**அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு (குறள் : 247)**

என்கிறது. இல்லறத்துக்குப் பொருள் முக்கியம். துறவறத்துக்கு அருள் முக்கியம் என்பதைப்போல தலைவனின் உள்ளம் இல்லறத்துக்குப் பொருளையும், காதலுக்குத் தலைவியையும் நினைத்து இடைச்சுரத்தில் நின்று வருந்துகின்றது.

**பாசறையில் இருத்தல்**

வேந்தர் போர் மேற்கொண்ட பொழுது பகைப்புலத்தில் நீண்ட நாட்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் 'பாசறை, கட்டூர்' என இலக்கியங்கள் சுட்டுகின்றன. பாசறை என்பது போருக்கு முன்னும் பின்னும் களிறும், மாவும், தேரும், படைவீரரும் தங்கியிருக்கும் பரந்த இடப்பகுதி, பாசறை பெரும்பாலும் ஊர்ப்புறத்தே இயற்கையாக அமைந்திருக்கும். அல்லது செயற்கையாக ஏற்படுத்தப்பட்டிருக்கும். இயற்கைச் சூழலில் மரம், செடி, கொடி, மலை முதலியவை சூழப்பெற்ற பரந்த இப்பகுதியைப் பாசறையாக ஏற்படுத்திக் கொள்ளுதல் பண்டை வேந்தர் மரபு. இயற்கையாக அமைந்த பாசறை பகைவர் கண்களுக்கு எளிதில் புலப்படாது. பார்வையிற் பாசறை (பதிற் 84:5) என்கிறது, பதிற்றுப்பத்து. பிறர் தம்மைக் காணாது தாம் பிறரைக் காணத்தக்க வகையில் போர்வீரர் இருந்து பகைவரைப் பார்க்கும் இடம் 'பார்வலெனப்படும்' என்பர் துரைசாமிப்பிள்ளை. மேலும்,

பார்வற் பாசறை – அரண்களையுடைய பாசறை என்கிறது பதிற்றுப்பத்தின் பழைய உரை. இங்கே அரண் எனக் குறிப்பிடுவது இயற்கை அரண்களாகிய மலை, மரம், செடி, கொடி முதலியவற்றையே உயரப் பறக்க வல்ல பருந்துகளும் பறக்கவியலாத உயிர்களையுடைய அரண்களையுடையதாகப் பாசறைகள் விளங்கின என்பதை,

- ❖ வேந்தனின் ஊர்ப்புறத்தே இயற்கையாய் அமைந்த அரண்களையுடையது
- ❖ பகைவர் கண்களுக்கு எளிதில் புலப்படாதது
- ❖ உள்ளேயிருப்போருக்குப் பகைவரைக் காட்டும் இயல்பினது
- ❖ களிறும், மாவும், தேரும் படைவீரரும் ஒருங்கே தங்கியிருக்குமளவிற்குப் பரந்த இடத்தினையுடையது.

வேந்தன் போர்வினைத் தணிய வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் தன் பிரிவுத்துயர் கெடத் தலைவியைக் கண்டு மகிழ வேண்டும் என்ற ஆர்வமும் பாசறையில் தங்கியிருக்கும் தலைவனனின் மனம் முழுவதும் நிறைந்திருக்கிறது. தலைவியை நினைத்து தான் அடையும் நோயினைத் தலைவி அறிய வேண்டும் என்கிறான். இதனை

**"யாமுறு துயரம் அவள் அறியினோ நன்றே"** **(ஐங் : 441)**

என்கிறது ஐங்குறுநூறு. மேலும் தலைவனின் வருத்தத்தை,

**"நம்நோய் தன்வயின் அறியாள்**
**எம்நொந்து புலக்கும்கொல்"** **(அகம் : 304)**

என்கிறது அகம். கார்காலத்தில் திரும்பவேண்டிய தலைவன் திரும்பாதது கண்டு கலங்கும் தலைவியின் கலக்கம் பற்றிய எண்ணமே பாசறைத் தலைவனை வருத்துகிறது. அரசனின் போர்த்தொழிலும் இயற்கையில் கார்வரவும் ஒருங்கு வந்தபோது தலைவியை மறந்து தலைவன் போர்த்தொழிலில் ஈடுபாடு காட்டுபவனாக் காட்டப்படவில்லை. கார் கண்டதும் தலைவனின் போர் ஈடுபாடு மறைகிறது.

தலைவியின் நினைவால் துயரும் தூக்கமின்மையும் எதிர்கொள்கின்றன. தலைவியை நினையாது போரில் ஈடுபட்ட தலைவனின் மன உணர்வுகள் புறத்திலும், வீரத்திலும் காதலுக்குச் சிறப்பிடம் தந்து காதலியை நினைந்துருகும் தலைவனின் மனவுணர்வுகள் வெளிப்படுத்தப்படுகின்றன. இதனை,

**"கடும்சின வேந்தன் தொழில்எதிர்ஞ் தனனே**
**பொங்கு பெயல் கனைத்துளி கார்எதிர்ந்தன்றே**
**அஞ்சில் ஓதியை உள்ளுதொறும்**
**துஞ்சாது அலமரல் நாம்எதிர்ந் தனமே"** **(ஐங் : 448)**

என்கிறது ஐங்குறுநூறு.

**"வேறுபுல வாடை அலைப்பத்**
**துணையிலேம் தனியேம் பாசறை யேமே"** **(நற் : 341)**

என்கிறது நற்றிணை. காரும் போரும் முன்நிற்கும் போது பாசறையில் இருந்து தலைவியை நினைத்துப் புலம்பும் தலைவனின் காதல்மனம் அகத்தில் இடம்பெறுவதை அறிய முடிகிறது.

**வினை முற்றி மீளுதல்**

வினை முற்றி மீளும் தலைவன் தலைவியைச் சந்திக்கப்போகும் போது தலைவியைக்கான அவனது உள்ளத்தில் தோன்றும் ஆர்வமும் வேட்டையும், பிரிவு உணர்ச்சியை அழித்து நிற்கின்றன. புணர்வு நம்பிக்கையை ஊட்டி நிற்கின்றது. தலைவனின் இம்மனநிலையில் தலைவனுக்கு இயற்கை உயிர்கள் கூட இணைந்தே காட்சியளிக்கின்றன. பெண்மான் துயிலும் இடத்தைக் காவல் செய்யும் ஆண்மானின் செயல், ஆண் உயிர்கள் பெடையை நோக்கி இரையோடு செல்லும் காட்சி எனத்தலைவனின் உள்ளக்கருத்தைப் பிரதிபலிக்கும் இயற்கை காட்சிகள் அவனது கண்ணுக்குத் தெரிகின்றன. தலைவனது மனதில் தலைவியைச் சந்திக்கப்போகிறோம் என்ற மகிழ்ச்சியும் விரைவில் சந்திக்க வேண்டும் என்ற வேகமும் மனம் முழுவதும் இடம்பிடித்து நிற்கிறது. இடத்தாலும் உடலாலும் உணர்வாலும் தலைவியைக்கண்டு மகிழப்போகும் எதிர்காலம் நோக்கிச் செல்கிறான்.

வினை முற்றி மீளும் தலைவனின் கூற்றை முல்லையாகவும் தலைவனின் வரவை எதிர்நோக்கும் தலைவியின் கூற்றைப் பிறதிணைகளாகவும் துறைக்குப் பாடலாசிரியர்கள் வகுத்துள்ளனர். இடத்தாலும் உடலாலும் பிரிந்திருக்கும் நிகழ்கால நினைவு இல்லை. நினைவாலும் உணர்வாலும் தலைவியை நினைத்து வருந்துகிறான் மேலும் தலைவியின் மிருதுவான தோள்களைத் தழுவிக்கொண்டு படுத்துறங்கும் இன்பத்தைப் போல் திருமால் உலகமாகிய வைகுந்தத்தில் சீவான்மா பரமான்மாவைத் தழுவுகின்ற ஆலிங்கனத்திலுங்கூட உண்டா என்று தலைவியை நினைத்து வியக்கிறாள்.

**"தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு"** **(குறள் : 1103)**

என்கிறது திருக்குறள். தலைவியை அணைக்க விரும்பும் தலைவனின் மன ஓட்டமும் போரினும், காதலுக்கு முதலிடம் தரும் அவனது மனநிலையும் புலனாகின்றது. இயற்கையையும் தலைவியின் நிலையையும் சுட்டிக் கார்காலத்தையும் மாலையையும் காட்டிக் காரும் மாலையும் தொடங்கின் தலைவியின் அழுகை தொடங்கும். அதனால் அக்காலத்திற்கு முன்பே தலைவியை அடைய நினைக்கிறான். 'தீண்ட வைமுள் தீண்டி' குதிரையை விரைவுபடுத்துமாறு பாகனை வேண்டும் தலைவனின் கூற்றில் தலைவியைச் சந்திக்க விரும்பும் வேகத்தை உணரமுடிகிறது. மேலும் தலைவன் வினையை முடித்துக் கொண்டு வீடு திரும்புகின்றான். வருகிற வழிகளெல்லாம் தலைவியின் நினைவாகவே தேர்மீது அமர்ந்திருக்கிறான். தலைவியைப் பிரிந்திருக்கும் நாட்கள் பயனற்றதாகக் கருதுகிறான். ஆதலால் தேர்பாகனிடம் விரைவாகச் சென்று அடையும்படி தேரைச் செலுத்துக என்றான். இதனை

**"எல்லா மெவனோ பதடி வைகல்**
**பாணர் படுமலை பண்ணிய எழாலின்**
**வானத் தெடுஞ்சுவர் நல்லிசை வீழும்**
**பெய்த புலத்துப் பூதத் முல்லைப்**
**பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்**
**அரிவை தோளினைத் துஞ்சிக்**
**கழிந்த நாளிவெண் வாழுநாளே"** **(குறுந் :323)**

என்கிறது குறுந்தொகை. தலைவன் தலைவியோடு இருக்கும் நாட்கள் சிறந்ததென்று அவளை அடைய வேண்டுமென்ற ஆர்வத்தைப் புலப்படுத்துகிறான். இவ்வார்வம் தலைவியின்பால் தலைவன் கொண்ட தீராக்காதலைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**நற்றாய் - செவிலி**

அகத்திணை மாந்தர்களுள் தலைவியின்தாய் நற்றாய் எனவும் தோழியின் தாய் செவிலி எனவும் அழைக்கப்படும் மரபினைத் தொல்காப்பியர் சுட்டுவர். தலைவனுக்கும், தலைவிக்கும் இடைப்பட்ட உணர்வுப் பரிமாற்றத்திற்கும் அமைந்த இணைப்புப் பாலமாகத் தோழி அமைதல் போன்றே தாய்க்குச் செவிலி விளங்குகிறாள். இலக்கணத்தில் செவிலி – நற்றாய் என அழைக்கப்படினும் இலக்கியத்தில் இருவரும் அன்னை என்றே அழைக்கப்படுகின்றனர். 'நற்றாயின் உடல்நலம் பாலூட்டும் காலத்தில் தாய்ப்பாலைத் தவிர்க்க வேண்டிய தனிக்காரணம் குழந்தையைத் தாயிடமிருந்து பிரிக்க வேண்டிய சூழ்நிலை. இவற்றில் ஒன்றின் காரணமாய் வளர்ப்புத்தாய் முறை ஏற்பட்டது' என்கிறார் சிங்காரவேலு. ஆனால் காலப் போக்கில் குழந்தைக்கும் வளர்ப்புத்தாய்க்கும் இடையில் இயற்கையான பாசம் வேரூன்றி உறுதிப்பட்டதனால் இலக்கண நூலார் செவிலி என்ற சொல்லுடன் தாய் என்பதை இணைத்துக் குடும்ப உறவுத்தொடரில் ஈனாத்தாய் என்ற மற்றுமோர் சொல்லை உருவாக்கினர். தலைவியால் நேர்முகமாகக் கூற இயலாத களவொழுகத்தைத் தோழி அறத்தோடு நின்று செவிலிக்கு உரைப்பது போன்று செவிலியும் தோழி கூற்றினை அறத்தோடு நின்று தாய்க்கு உரைக்கிறாள். தோழியிடம் தாயால் நேர்முகமாகக்

கேட்கமுடியாதவற்றைத் தோழி கூறும்போது கேட்டறியவும் அமைந்த ஓர் அகத்திணை மாந்தராகச் செவிலி படைக்கப்படுகிறாள்.

இலக்கியத்தில் உடன்போக்குச் சென்ற தலைவியை நினைந்து வருந்தும் தாயைப்போன்று செவிலியும் ஆற்றாது புலம்புவதாகவே காட்டப்படுகிறாள். உடன்போகிய தலைவியை நினைந்து மனையிலிருந்து புலம்புதல் தாய்க்குரியதாகவும், மனையிலிருந்து புலம்புதல் மட்டுமின்றிப் பின்சென்று தேடுதல் செவிலிக்குரியதாகவும் இவர்தம் செயல்கள் பிரித்து வைக்கப்பட்டுள்ளன. இதனைத் தொல்காப்பியர்,

**“ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்**
**தாமே செல்லும் தாயரும் ஊரே”** **(தொல் -37)**

என்னும் நுற்பாவில் தாயர் எனப்பன்மைப் படுத்திக் கூறியமை மனைப்புறத்துச் சென்று தேடிய தாயைச் செவிலி எனப் பாகுபடுத்தக் காரணமாய் இருந்திருக்கலாம்.

தொல்காப்பியர் களவில் நற்றாய்க்குக் கூற்று நிகழ்வதாகச் சுட்டவில்லை. செவிலிக்குப் பின்வரும் பதின்மூன்று சூழல்களில் கூற்று நிகழும் எனக் குறிப்பிடுகிறார்கள்.

1. தலைவியின் களவு புறத்தார்க்குப் புலனாகி அலர் தூற்றப்படும் போது
2. தலைவியின் காமம் மெய்க்கண் வெளிப்படும்போது
3. தலைவியின் உறுப்புக்கள் அளவால் மிகுதிப்படத் தோன்றும் போது
4. தலைவன் வரவு கண்டபோது தலைவி புறத்துப் போகும் போது
5. வெறியாட்டின் போது
6. வெறியாட்டின் பின் தலைவிக்கு வருத்தம் மிகும்போது
7. காதல் கைமிகுந்து தலைவி கனவில் அரற்றும் போது
8. தலைவியின் வேறுபாடு பற்றித் தோழியை வினவும்போது
9. களவை அறிந்த பின்னர் தெய்வத்தை வாழ்த்தும் போது
10. உடன்போக்கு அறிந்தபின் அதனைக் கற்பாக்க முனையும் போது
11. தலைவனின் பிரிவில் தலைவி வருந்தும் போது
12. உடன்போக்கிற்கு மகள் துணிந்த போது
13. அறத்தோடு நிற்கும் போது

இவற்றுள் முதல் எட்டும் களவைக் கண்டறிய செவிலி எடுத்த முயற்சிகள் இறுதி ஐந்தும் களவை அறிந்தபின் அதனைக் கற்பாக்க முனைந்த முயற்சிகள். இப்பதின்மூன்று சூழல்களிலும் செவிலியின் கூற்று நிகழ்ந்ததற்கு இலக்கியங்கியங்களில் சான்று இல்லை. தோழியின் கூற்றில்தான் செவிலியின் மன ஓட்டம் எடுத்துக்கூறப்பட்டு வரைவு கடாவும் போக்குக் காணப்படுகிறது.

**செவிலி**

தலைவியின் களவு வாழ்க்கையிலும் கற்பு வாழ்க்கையிலும் செவிலி அவளின் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குகிறாள். தன் மகளின் வாழ்வு மிகவும் சிறப்புடையதாக

இருக்க வேண்டுமென்று எல்லாத் தாயும் விரும்புவாள். இந்நிலை தந்தையை விடவும் மன எண்ணங்களின் அடிப்படையில் தாயின் மனநிலை மேலோங்கி நிற்கிறது. தலைவியின் மேல் செவிலி ஒவ்வொரு கட்டத்திலும் மிகுந்த ஈடுபாடு உடையவள். செவிலி "தலைவியைப் பழியோடு இல்லா நிலையில் காத்தல், நன்னெறியில் மேவும் காதல் கூட்டத்தை ஏற்றல், அவளை நற்றாய்க்கு உரைத்துப் போற்றல், உடன் போக்கில் தேடி அலைதல், தலைவியின் வரைவிற்கு ஆவண செய்தல் போன்றவற்றைத் தலைவியின் களவு நெறியில் இவள் மேற்கொள்ளும் பொறுப்புகளாகும்"$_{35}$, என்கிறார் ந.சுப்புரெட்டியார். செவிலி தலைவிக்கு எல்லா நிலைகளிலும் உதவியாக இருப்பதோடு அவளின் இன்பதுன்ப நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கிறாள். செவிலி கூற்றாக அமைந்த ஒவ்வொரு பாடலிலும் தலைவியின் குணங்கள் வெளிக்காட்டப்படுகின்றன. மகளும் மருமகனும் தனிக்குடித்தனம் நடத்தும் சிறப்பினைக் கண்ட செவிலி அதை நற்றாயிடம் கூறி மகிழ்கிறாள்.

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கக் கழாஅ நுடிஇக்**
**குவளை யுண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவ னுண்மலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன் றெண்ணுதல் முகனே" (குறுந் :167)**

என்று தலைவி கணவனுக்கு மோர்குழம்பு வைக்கக் கட்டித்தயிரைப் பிசைந்தாள். தயிரைப் பிசைந்த விரல்களைக் கழுவ நேரமில்லாத நிலையில் உடுத்தியிருந்த புடவையிலேயே துடைத்துக் கொண்டாள். பின் தயிரைத் தாளிக்கும் பொழுது எழுந்த 'குய்ப்' புகையினால் கண்களில் கண்ணீர் வடிய அதைத் தயிர்க்கையுடன் துடைத்தவளாய் கண் எரிச்சலுக்குக் கலங்காத தலைவி கணவன் வந்ததும் அதை அன்புணர்ச்சியுடன் ஆக்கிய உணவைப் பரிமாறினாள். அவனோ தன்னுடைய மனைவியின் சமையலை மெத்தப் புகழ்ந்தான். இந்த காட்சியைக் கண்ட செவிலித்தாய், நற்றாயிடம் மகள் குடும்பம் நடத்துவதைக் கூறி மெய்சிலிர்க்கிறாள். தலைவனும் தலைவியும் இல்லறத்தை நல்லறமாக எண்ணி நடத்துகின்ற மனைக்குச் சென்று வந்தாள், செவிலிதாய். கணவன் மனைவி நடத்தும் குடும்ப வாழ்க்கை செவிலித்தாயின் மனதைக் தொட்டது. இச்செய்தியை விரைந்து வந்து நற்றாயிடம் சொல்கிறாள் செவிலி.

**செவிலியின் உள்ளம்**

தலைவி, தலைவனுடன் களவு மணத்திலே வாழ்ந்து இணையற்ற அன்புள்ளம் கொண்டவளாக இருந்தாள். இதைத் தோழியின் வாயிலாக அறிந்தாள் செவிலி. தலைவியைக் குழந்தைப் பருவம் முதல்கொண்டு கண்ணும் கருத்துமாக வளர்த்தவள் செவிலி. ஆதலால் தலைவிக்காக மிகவும் வருந்தினாள் இச்செய்தியை அவள் நற்றாய்க்குத் தெரிவித்தாள். தலைவி மனம்கவர்ந்த காதலனையே மணந்து கொண்டாள். இதற்காக வருந்த வேண்டியதில்லை. இதனால் தலைவியின்

உறுதியான உள்ளத்தையும் நலமான கற்பையும் உலகத்தாருக்கு அவள் உணர்த்தி விட்டாள். நம் புதல்வியின் இச்சிறந்த செயலுக்காக மகிழ்ச்சியடைய வேண்டியதுதான் இதற்காக வருத்தமடைய வேண்டியதில்லை என்று தலைவியின்பால் கொண்ட அன்பினால் செவிலி நற்றாய்க்குக் கூறும்கூற்றில் செவிலியின் உயர்வான உள்ளம் புலப்படுகிறது. இதனை

**"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்**
**தாயெனப் படுவாள் செவிலி யாகும்"** **(தொல்-கள–122)**

என்று அகத்திணையில் செவிலியின் இடத்தைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். தலைவியின் களவு நெறியில் செவிலி ஆற்றும் பங்கு சிறப்புவாய்ந்தது. தலைவனுடன் சென்ற தலைவியின் இளமைத் தன்மையும் பாலையின் வெம்மையும் இணைத்து வருந்துகிறாள்.

**"பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்**
**விளையாடு ஆயமொடு அயர்வோ ளினியே**
**எளிதென உணர்ந்தனள் கொல்லோ முளிசினை**
**ஓமை குத்திய உயர்கோட் டொருத்தல்**
**வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்**
**முழை முழங்கு கடுங்குரல் ஓர்க்கும்**
**குழைதிரங் காரிடை அவனோடு செலவே"** **(குறுந் : 396)**

என்கிறது குறுந்தொகை. தலைவி தோழியரோடு இடைவிடாது விளையாடும் பூப்பந்தையும், விருப்பத்தோடு உண்ணும் பாலையும் விரும்பாமல் தலைவனுடன் சென்றுவிட்டாள். சிறுகுழந்தை முதல் வளர்த்த பெற்றோரை மறந்து தலைவனின் அன்பால் பிணைப்புண்டு பெற்றோரையும், தோழியையும் மறந்து தலைவன் ஒருவனே தனக்கு இனி எல்லாம் என்று உடன்போக்கு மேற்கொண்டுவிட்டாள். இச்சூழல் செவிலித்தாய்க்கு அதிர்ச்சியைத் தருகிறது. தலைவியைப் பிரிவதில் துன்பமும், அவள் காதலனுடன் உடன்போக்கில் கற்பு மணம் புரியப்போகிறாள் என்ற நிலையில் இன்பம் கொள்கிறாள் செவிலி.

**பரத்தை**

புலவர்கள் கற்பின் பெருமையை விண்ணுக்கு உயர்த்திப் பாடிய போதும் நடைமுறை வாழ்க்கையில் பரத்தமை என்ற அவலம் நிறைந்து இருப்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தலைவியின் குடும்பவாழ்விற்கு இடையூறாக வரும் பரத்தை அவளின் சினத்திற்கு ஆளாவதும் இயற்கை. "விருப்பு வெறுப்பின்றிக் கண்டவாறு பணத்திற்காகவோ பொருளுக்காகவோ உடலுறவு கொள்கின்ற செயல் பரத்தமை எனப்படுமென"[36] வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது. மேலும் பரத்தை என்பதற்கு "ஒருவனுக்கு முறையான மனைவியாக வாழாமல் ஒழுகுபவள்' 'பொதுமகள்' 'விபச்சாரி' 'விலைமகள்' 'ஒழுக்கக்கேடு அயன்மை பிறன்மனைச்சேரல்"[37] என்று அகராதியும், "பரத்தை', கணிகை, சூளை, பொதுப்பெண்"[38] எனச்சேந்தன்

திவாகர நிகண்டும் "விலைமகள், சூளை, வேசி, பரத்தை, கணிகை"[39] என்று பிங்கல நிகண்டும் பொருள் தருகின்றன. மேலும் பரத்தையர் பெறும் இடத்தை

**"பாணன், கூத்தன் விறலி பரத்தை**

**யானைஞ் சான்ற அறிவர் கண்டோர்"          (தொல்-பொருள் 491:1-2)**

என்று பரத்தையர். சமுதாயத்தில் பெற்றிருந்த இடத்தைத் தெளிவாகச் சுட்டுகிறது தொல்காப்பியம். மேலும் பரத்தை ஒழுக்கத்தை எப்போது மேற்கொள்ளலாம். மனைவியை எப்போது பிரியக் கூடாது என்பதற்கான காலத்தையும்,

**"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**

**நீத்தகன் றுரையார் என்மனார் புலவர்**

**பரத்தையிற் பிரிந்த காலை யான"          (தொல் : 175)**

என்று தொல்காப்பியம் சுட்டுகிறது. மனைவிக்கு மாதவிடாய் ஏற்பட்டபோது இவளை விட்டுத் தலைவன் பிரிதல் கூடாது. அது முதல் பன்னிரண்டு நாட்கள் மகப்பேறு கருதி அவளோடு உடனுறைதல் நலம் என்று கூறுகிறதேயொழிய பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்து தொல்காப்பியம் கூறவில்லை. எந்தக் காலத்தில் சேர்ந்திருக்க வேண்டும் அதன் பிறகு அவளைப் பிரிவது எந்தக்காலம் என்பதைத்தான் தொல்காப்பியம் சுட்டுகிறது. அக இலக்கியத்தில் பல ஆண்களின் காமப்பசி தீர்க்கும் பெண்களைப் பரத்தை என அழைத்தனர் அவர்களை

இற்பரத்தை

காதற் பரத்தை

காமக்கிழத்தி

சேரிப்பரத்தை

என நான்கு வகையாகப் பிரித்தனர். மேலும் பரத்தையர் பற்றி இளம்பூரணர் கற்பியல் உரையில் "பரத்தையவராவர் யாதெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லவராக அழகும் இனிமையும் காட்டி இன்பமும் பொருளும் வெ∴கி ஒருவர் மாட்டுந் தங்காதார்"[40] என்று குறிப்பிடுகிறார். மேலும் இற்பரத்தையாக விளங்குபவர் தலைவன் ஒருவனுக்கே அன்பு பூண்டு ஒழுகுபவளாகவும், சேரிப்பரத்தையர் பலரிடம் அன்பு கொள்பவளாகவும் விளங்குகின்றனர். இதனையே நம்பியகப்பொருள்

**"யாரையும் நயவா இயல்பிற் சிறந்த**

**சேரிப் பரத்தையர் மகளிராகிக்**

**காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்"**

**(அகப்பொருள் விளக்கம் நூ : 114)**

என்று காட்டுகிறது. இற்பரத்தையரைத் தலைவன் வரைந்து கொள்ளுதற்குரிய இடம் இருக்கிறது என்கிறது அகப்பொருள்

**"அவளும் வரைந்த குரியோர் உளரோ"     (அகப்பொருள் :115)**

என்கிறது. மேலும் பரத்தையரில் காதற் பரத்தையர் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்போடு இருந்திருக்கிறார் என்றும் சேரிப்பரத்தையர் அவ்வளவு மதிப்பிற்குரியராகக் கருதப்படவில்லை என்று ஆய்வாளர்கள் கருதினர். இத்தகைய பரத்தையர்

சங்ககாலத்தில் மிகுந்தமைக்கான காரணத்தை ஔவைதுரைசாமிப்பிள்ளை "அந்நாளைய அரசிற் சூழ்நிலை அடிக்கடி நிகழும் போர், சமுதாய அமைப்பு ஆகியவற்றால் ஆடவர் தொகையினும் மகளிர் தொகை குன்றியமையின் மிகைமகளிர் என்று உளராயினர்"[41] என்று கூறுகிறார். மேலும் "பரத்தையர் எதனை முக்கியமாகக் கொண்டனர் என்பதை டாக்டர் உ.வே.சா. 'இப்பரத்தையர் பிரிவு உலகியலையே கருதி அமைந்தது போலும்' என்று ஒருவகைத் தெளிவை உண்டாக்குகிறார்"[42] சங்க இலக்கியப் பாடல்களில் மருதத்திணையில் தான் அதிகமாகப் பரத்தமை ஒழுக்கம் பேசப்படுகிறது. இப்பரத்தையர்கள் "வீதிவழியாகத் திரியும் கீழ்மக்கள் அல்லர். பரத்தைக் குலத்தவளேனும் இல்லறத்தின் பகைத்திலன் சிலப்பதிகாரத்தின் மாதவி போன்று ஆடலும் பாடலும் சான்றவள் கலை பயின்றவள் பெரும்பாலான குடும்பப் பண்பு உடையவள். வள்ளுவர் கடியக் கூறும் பொருட்பெண்டு அல்லள்"43 எனச் சிறப்பிக்கிறார் வ.சுப. மாணிக்கம். இவர்கள் வாழ்க்கையில் பரத்தையராக இருப்பினும் பண்பால் மென்மை வாய்ந்தவளாக இருப்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தன்னுடைய தலைவனது சிறுவன் தெருவில் தேரோட்டி விளையாடும் காட்சியைக் கண்ட பரத்தை, அச்சிறுவனை அன்போடு அழைத்து அவனுக்கு ஆபரணங்கள் பூட்டி அழகு பார்த்து மகிழ்ந்ததை,

**"நீருள் அடைமறை ஆயிதழ்ப் போது போற்கொண்ட**
**இடைநிழல் தோன்றுநின் செம்மலைக் காணூஉ**
**இவன் மன்ற யானோவ உள்ளங் கொண்டுள்ள**
**செறுதக்கான் மன்ற பெரிது"** **(கலித் 84 : 10–19)**

என்ற அடிகளில் காட்டுகின்றது. மேலும் மனைவியை விடுத்துப் பரத்தையர்பால் சென்றான் தலைவன். அப்பரத்தையோ தலைவியின் இயல்பு கூறி மறுக்கும் உயர்ந்த மனப்பான்மையினை

**"என்னை நயந்தனன் என்று நின்**
**மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே"** **(ஐங் 81: 4-5)**

என்று சுட்டுகிறது. ஐங்குறுநூறு பரத்தையர் தலைமகனது பிள்ளையைக் கண்ட போது கொஞ்சும் இயல்பினையும் மேலும் தலைவனது முதன்மை நோக்கமாகக் கொள்ளாமல் அன்பு காட்டியே வாழ்ந்தனர். இக்காதற் பரத்தையரைத் தவிர இளம்பூரணர் குறிப்பிடுவது போன்று இன்பமும் பொருளும் வெ∴கி ஒருவர் மாட்டும் தாங்காத பரத்தையரும் வாழ்ந்தனர். இவர்களை விலைநலப் பெண்டிர் என்று புறநானூறும் பொதுமகளிர் என்று கலித்தொகையும் கூறுகிறது.

**காமக்கிழத்தி (காதற்பரத்தை) உருவாக்குதல்**

போரை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமூக அமைப்பில் போரில் ஈடுபடும் ஆண்கள் உயிர் நீக்கவும் முடமாக்கப்படவுமான சூழ்நிலை மிகுதி இந்நிலையில் ஆண்பெண் சமவிகிதத்தில் ஏற்படும் சரிவு சமூக அமைப்பைப் பாதிக்கக் கூடிய வகையில் அமைவதும் இயற்கை. மணமானவர்கள் தங்கள் கணவர்களை இழக்கவும்

மணப்பருவத்திற்கு உரிய இளம்பெண்கள் எதிர்கால வாழ்க்கைத் துணையை இழப்பதும் தவிர்க்க இயலாது. இந்நிலையில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு நடைமுறைக்கு உதவாமல் போய்விடுதலும் இயல்பு. போரை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமூக அமைப்பில் வீரர்களின் எண்ணிக்கைதான் ஒரு நாட்டுக்கு வெற்றியை மட்டுமல்லாது பாதுகாப்பையும் தருவதாகும் அந்த எண்ணிக்கையில் சரிவும் வீழ்ச்சியும் ஏற்படுகின்ற பொழுது ஈடுபட்ட புதிய வீரர்கள் அந்த இடத்தை இட்டு நிரப்ப வேண்டும்.

குடும்பம் என்ற நிறுவனம் தோன்றிக் குடும்பத்திற்கென்று தனிச்சொத்துக்கள் உருவாகி அந்தச் சொத்துக்களை நிருவகிக்கக்கூடிய தலைவனாக ஆண் வந்துவிட்ட நிலையில்தான் ஒருதார மணம் என்ற நிலை உருவாகிறது. சட்டப்படியாக மணந்த அல்லது சமூக அங்கீகாரம் பெற்ற திருமணத்திற்குரிய பெண்ணின் வாயிலாகப் பெறும் பிள்ளைகள் சொத்துக்களுக்கான வாரிசாகவும் வருவர். சுருங்கச் சொன்னால் வாரிசுக்கான பாதுகாப்பு முறைதான் ஒருதாரமணம். ஆனால் சமூகத்தில் போரினால் வாழ்க்கையைத் தொலைத்துவிட்ட பெண்களுக்கும் குடும்ப வாழ்க்கைக்கான வாய்ப்பைத் தரவேண்டியது அச்சமூகத்தின் கடமையாகிறது. அந்தச் சூழ்நிலையில் தான் ஆண்பெண் விகிதத்தில் ஆண்களை விடப்பலமடங்கு கூடுதலாக உடைய பெண்களைக் காதற்பரத்தையாகவோ, காமக் கிழத்தியாகவோ அல்லது வேறு வகையிலோ ஓர் ஆணுக்கு உரியவர்களாக உரிமை கொண்டவர்களாக மாற்றி அவர்களுக்கும் குடும்ப வாழ்வினை வாய்ப்பைத் தரவேண்டியது அச்சமூகத்தின் கடமையாகிறது. இப்படிப்பட்ட ஒரு சமூக அமைப்பு முறை நல்லதா? கெட்டதா? என்று ஆராயின் அ்.து ஒரு சமூகச் சூழல், அச்சூழலுக்கு ஏற்ப சமூகம் செய்து கொண்ட விதிமீறல் அல்லது விதியைத் தளத்திக் கொள்வது எனச் சொல்லலாம். சங்க இலக்கியத்திலும் சூழ்நிலையால் காமக்கிழத்தி ஆகும் நிலை சுட்டப்படுகிறது. இதனைத் தலைவனின் வேட்டை நாயைக் கண்டு அஞ்சியத் தலைவி குன்றக் குரவர்களால் விரட்டப்பட்டு வேகமாக ஓடிவரும் யானையைக் கண்டு ஒடுங்கி உயிரச்சம் கொண்டு என்ன நிகழ்கிறது. என்பதை அறியாதவனாய் தற்செயலாக அங்கு வந்து நின்ற தலைவனின் மார்பைப் புகலிடமாகக் கொள்கிறாள். அஞ்சா நெஞ்சனும் வேட்டையாடுவதற்காக வந்தவனுமாகிய தலைவன் யானையால் வரும் அச்சத்தைப் போக்கத் தன் வில்லில் அம்பு தொடுத்து யானையை விரட்டி விடுகிறான். யானையினால் வந்த அச்சம் நீங்கியதற்குப் பிறகும் அச்சம் தெளியாதவளாய் தலைவனது மார்பில் புதைந்திருந்தாலும் கூட அச்சம் அகலாதவளாய் நடுங்கிக் கொண்டிருக்கிறாள். யானையால் வந்த அச்சம் விலகிய நிலையில் முன்பின் அறியாத ஒரு ஆணின் மார்பில் மேலும் அலைக்கழிக்கிறது. உயிரினும் சிறந்தது, நாண் என்ற உண்மையை அறிந்த தலைவி தன்னை நாணமில்லாதவள் என்று சொல்லி விடுவார்களோ என அஞ்சிய அச்சம் அவளை மேலும் ஆட்கொள்கிறது. இச்சூழலில் தலைவியின் மன ஓட்டங்களை அறிந்த தலைவன் அவளின் அச்சத்தைப் போக்கக் கூடிய வகையில் அந்த மலையின் மீது இருக்கும் முருகன் முன்பாக அவளை மணப்பதாக உறுதி கூறுகிறான். அப்பகுதி,

**"மலை**

**மீ மிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது**

**துணை இயுமாலை துன்னுதல் காணூஉ**

**நேரிறை முன்கை பற்றி நுமர்தர**

**நாடறி நன்மண மயிர்கஞ் சின்னாள்**

**கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென**

**ஈர நன்மொழி தீரக் கூறித்**

**துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து**

**துஞ்சா முழவின் மூதூர் வாயில்**

**உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்" (குறிஞ்சிப் 125 : 327)**

என்று தலைவன் சூளுறவு செய்கிறான். தமிழ் அகத்திணை மரபில் இவ் அகப்பாடல் ஒரு புதிராகவும் விளங்குகிறது. தலைவன் தலைவிக்குச் சூளுரை செய்வதும். சூளுறவைக் காப்பேன் என உறுதி கூறுவதும் அகத்திணை மரபு. குறிஞ்சிப் பாட்டுத் தலைவன் சூளுறவு செய்ததைப் போல இங்கு மருத நிலத் தலைவனும் சூளுறவு செய்துள்ளான். ஆனால் இந்தச் சூளுறவிலே ஒரு மாற்றம் குறிஞ்சிப்பாட்டுடைத் தலைவனோ. மணமாகாத இளைஞன் ஆனால் மருதநிலத் தலைவனோ ஏற்கனவே மணம்புரிந்தவன். ஆனால் பாதிக்கப்பட்ட நிலையில் இருப்பவள் பெண். இவர்கள் காதற்பரத்தையாகவோ காமக்கிழத்தியாகவோ சித்தரிக்கப்படுகின்றனர். இவ்வாறு அறிந்தும் அறியாமலும் சூழ்நிலையால் மாற்றப்பட்டவர்களும் இருந்தனர். இச்சூழ்நிலை இன்றளவும் நிலவிவருகிறது.

**பரத்தையின் வஞ்சினம்**

தலைவி பரத்தையைப் பழித்துரைத்தாள் என்பதை அறிகின்ற பொழுது பரத்தை சினம் கொள்கிறாள். அவ்வழி தலைவியிடம் தலைவனை அவளிடமிருந்து முற்றிலுமாகப் பிரித்துக் கைகொள்வேன் எனச் சூளுரைக்கின்றாள் இதனை

**"புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்**

**இல்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்" (தொல்-பொருள்: 151)**

என்கிறது தொல்காப்பியம். இல்லத்திலிருந்து தலைவி பரத்தையைப் பழிந்துரைக்கப் பரத்தைப் பதிலாகச் சூளுரைக்கிறாள். மேலும் தலைவனை எந்நாளும் என்கைப்பொம்மையாக என்னால் ஆட்டிவைக்க முடியும் என்கிறாள். ஆற்றிலே புதுநீர் வந்துவிட்டது நான் என்னை அலங்கரித்துக் கொள்வேன் என் கூந்தலில் தாமரை மலரைச் சூடிக்கொள்வேன் நான் அவளின் தலைவனுடன் பெரிய நீர்த்துறையில் இறங்கி நீராடப் போகிறேன். இருவரும் பெரிய நீர்த்துறையில் இறங்கி நீராடப் போகிறோம். இருவரும் ஒன்று கலந்த உள்ளத்துடன் மகிழ்ச்சியுடன் நீராடப் போகிறோம். இப்படி அவள் தலைவன் அவளை விட்டுப் பிரிந்து என்னுடன் சேர்ந்து நீராடுவதைக் கண்டு அவள் அஞ்சினால் அவனைத் தலைவி தடுத்து நிறத்திவிடட்டும். அவள் படிந்த அவனுடைய மார்பிலே என்போன்ற பரத்தையர்கள் படியாமல்

பாதுகாக்கும் திறமையிருந்தால் பாதுகாக்கட்டும் என்று தலைவிக்குச் சூளுரைக்கின்றாள். இதனை,

**"கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்**
**பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி**
**யாம.ஃ. தயர்கம் சேறும் வெம்போர்**
**நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி**
**முனையான் பெருநிரை போலக்**
**கிளை யொடுங் காக்கதன் கொழுநன் மார்பே"** **(குறுந் :30)**

என்கிறது குறுந்தொகை. தலைவியின் கற்பு வாழ்க்கையில் குறுக்கிடும் பரத்தை, தலைவன் தன்னை நாடிவந்ததை, வாளை மீனை உணவாகப் பெறுவதற்கு நாரை மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்ததனை உள்ளுறையாக உரைக்கிறாள். தலைவன், தலைவியறியாமல் தன்னிடம் வந்தான் அதற்குத்தான் பழியுடையேன் அல்லேன் என்கிறாள் பரத்தை.

**அலர் குறித்து வருந்துதல்**

ஆண்கள் காம மிகுதி காரணமாகத் தலைவி மற்றும் பரத்தையருடன் உறவு கொண்டனர். பரத்தை திருமணம் என்ற கட்டுக்குள் அடங்காமல் பரத்தையர் குலமாக ஒதுக்கப்பட்டிருந்தனர். பொருளீட்டுதலை முக்கிய நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தனர். இதனால் பரத்தையர் குற்றமுடையவராகக் கருதப்பட்டனர். அத்தகைய பரத்தையுடன் தலைவன் உறவுகொண்டதால் தலைவி அவளைப்பற்றி ஊரெங்கும் பழிதூற்றுகிறாள். இதை அறிந்து வருத்தம் கொள்கிறாள் பரத்தை. தலைவனுடன் தான் கொண்ட நட்பைக் குறித்து தலைவியின் வீட்டருகில் சென்று உரைக்கிறாள். தலைவி தன்னைப் பிரிவுத்துயர் அழுத்தும் பொழுதெல்லாம் தன்னைப் பழிதூற்றுவதாக எண்ணி வருந்துகிறாள் பரத்தை. இதனை,

**"மீன் முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை**
**நீர்மிசை நிவந்த நெடுத்தாள் அகலிலை**
**இருங்கயம் துளங்கக் காலுறு தோறும்**
**பெருங் களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு**
**எழுந்த கௌவையோ பெரிதே"** **(அகம் : 136)**

என்கிறது அகம். தலைமக்களின் மகிழ்ச்சியான இல்லத்திற்குத் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் இடையூறு விளைவிக்கிறது.

தலைவனின் இவ்வொழுக்கத்தை அறியும் பொழுது எல்லாம் தலைவி தலைவனை விடுத்துப் பரத்தையை ஊரெல்லாம் தூற்றுகின்றாள். மேலும் பரத்தை தலைவனின் இயல்பினைக் கொறுக்கம் புல்லின் தண்டுகளை இணைத்துச் சேர்த்துக் கட்டி தெப்பமாகக் கொண்டு நீராடுவர், நீராடும் காலம் வரை மட்டுமே அதனைத் துணையாகக் கொள்வர். பின் அதனை விடுத்துச் செல்வர், என்பதுபோல தலைவன்

சிறிதுகாலம் உறவு கொண்டு தன்னைவிட்டுப் போயினான் இன்று வேறொருத்தியின் வீட்டில் இருக்கின்றான் என்கிறாள். இதனை,

**"இன்னும் பிறள்வயினானே மனையோள்**
**எம்யொடு புலக்கும் என்ப"** **(தொல்-பொருள்: 151)**

என வருந்துகிறாள்.

**"செறிவளை யுடைத்தலோ இலனே உரிதினின்**
**யாந்தன் பகையேம் அல்லேம் சேர்ந்தோர்**
**திருநுதல் பசப்ப நீங்கும்**
**கொலுநனுஞ் சாலுந்தன் உடனுறை பகையே"** **(தொல்-கற்:151)**

எனும் அடிகளில் தலைவன் செய்த கொடுமையால் அவனைப் பிரிந்தும் கைவளையல்களை உடைத்திலேன் என்கிறாள். நான் தலைவிக்குப் பகை கொண்டவள் இல்லை. அவளுடைய பகைவன் அவளருகிலேயே உள்ளான். அதை அறியாத தலைவி என்னைப் பழிதூற்றுவது அவளுடைய பேதைமையையேக் காட்டுகின்றது என்கிறாள் பரத்தை.

**பரத்தையர் ஒழுக்கம்**

பெண்களுக்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு எனக் குணநலன் வகுத்த தொல்காப்பியர் அவர்கள் போர்க்களம் புகுந்தால் இக்குண நலன்கள் மீறப்படும் என்பதனால் குடும்பப் பெண்கள் செல்வதைத் தவிர்த்தார். ஆனால் பரத்தையர் போர்க்களம் செல்வது பிழையல்ல என்று சொல்லியுள்ளார். தலைவன் பரத்தையரைப் போர்க்காலங்களிலும் பயன்படுத்தியுள்ளான். இதனை

**"புறத்தோ ராங்கன் புணர்வ தாகும்"** **(தொல் : 157)**

என்கிறார் தொல்காப்பியர். மேலும் பரத்தையரில் இற்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி என்போர் தலைவனைத்தவிர வேறு எவர் ஒருவரையும் விரும்பாமல் தலைவனை அன்பினால் கூடுகிறவர்கள். இவர்களில் சேரிப்பரத்தை மட்டும் ஒருவனுக்கு உரிமையாகாமல் பணத்திற்காகப் பலருடன் கூடி மகிழ்கிறாள். ஆதலால் அவளைப் பொதுமகள் என்றும் அழைத்தனர். அவள் பணம் தருபவன் எத்தகையவனாய் இருக்க வேண்டும் என்று வரையறை செய்யாமல் எல்லோரிடமும் உடற்புணர்வு கொள்பவள் சேரியிலுள்ள தன் வீட்டிலேயே இருந்ததால் சேரிப்பரத்தை என்று அழைக்கப்பட்டாள். இவர்கள் வறுமைநிலையில் இந்நிலைக்கு ஆளாகின்றனர். இதனை,

**"உன் போன்றோர் தோன்ற**
**எது காரணம்**
**செல்வத்தினை எச்சமும்**
**வறுமையின் உச்சமும்**
**ஜன்னல் இழுத் தடைத்து**
**தயாராகிறாள்**

**இன்னொரு பந்திக்கு**

**இலை கழுவ!''**44

என்ற வைரமுத்துவின் வரிகள் சேரிப்பரத்தையரின் இன்றைய வறுமைநிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. பரத்தை என்பது தவிர்க்கமுடியாத காரணங்களினால் உருவாக்கப்படுகிறது. இதில் சேரிப்பரத்தையை வறுமை ஆட்கொண்டுள்ளது. எது எவ்வாறு இருப்பினும் பரத்தமை என்பது எல்லோராலும் எக்காலத்திலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை இதனைப் 'பல்லிக்குப் புல்லிதழ் வாய்த்தாற் போலவும் மதிக்கு மறுவாய்த்தாற் போலவும் பரத்தையர் பிரிவென்னும் இழிந்த ஒழுக்கத்தினால் சமுதாயம் கலக்கமடைகிறது என்று சிற்றம்பலக்கோவையாரின் உரையில் பேராசிரியர் குறிப்பதாக உ.வே.சாமிநாதையர் குறித்துள்ளார்' மேலும் இவர் தலைவனின் பரத்தமை நெறியைக் கூறும்போது எவ்வாறாயினும் பரத்தையிற் பிரிவு நல்லொழுக்கத்திற்கு இழுக்கென்பதே சான்றோர் கொள்கையென்பதற்கு குறளிலுள்ள வரைவின் மகளிரென்ற அதிகாரமொன்றே போதியது என்கிறார். இவற்றின் மூலம் பரத்தையர் ஒழுக்கம் என்பது கடியப்படுவதை அறிய முடிகிறது.

**வாயில்கள்**

களவிலும், கற்பிலும் தலைவன் தலைவியர்க்குத் துணை நிற்பவர்கள் வாயில்கள் ஆவர். இவ்வாயில்கள் அகமாந்தர்களின் உணர்வு வெளியீட்டிற்கும், உறவு நிலைபேற்றுக்கும் வாயில் போன்று அமைந்து விளங்குபவர்கள். இவர்களைத் தொல்காப்பியர்,

**''தோழி, தாயே பார்ப்பான் பாங்கன்**
**பாணன் பாடினி இளையர் விருந்தினர்**
**கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்**
**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப''** **(தொல்-கற்-52)**

என்று வாயில்களாக இருப்பவர்களைத் தொகுத்து பன்னிருவர் என்று குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் இவ்வாயில்களின் நிரலில் புதல்வனைக் குறிப்பிடாது போயினும்,

**''இன்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு**
**புகினும்''** **(தொல்-கற்பு-31)**

எனத் தலைவியின் கூற்றிலும்,

**''இன்னகைப் புதல்வனைத் தழிஇ இழையணிந்து**
**பின்னர் வந்த வாயில் கண்ணும்''** **(தொல்-கற்-10)**

எனக் காமக்கிழத்தியின் கூற்றிலும் புதல்வன் வாயிலாக அமைந்து விளங்குதலைக் குறிப்பிடுவர்.

தலைவியின் மாண்புகளைத் தலைவனுக்கு உரைத்தல், தலைவன் பிரிவிடத்துச் சென்று தலைவியின் நிலைஉணர்த்தல், நல்லவை உரைத்தல், அல்லவை கடிதல் அறனெறி இதுவென எடுத்துரைத்தல், நிமித்தம் கூறல், ஊடல் தணிவித்தல், செலவழுங்குவித்தல் என்பன வாயில்களின் பணிகளுள் சிறந்தவை. வாயில்கள்

அகக்காட்சிகளில் ஒரு மாந்தராக ஒன்றி நிற்பது மட்டுமன்றித் தம்மைக் காட்சிகளுள் உட்படுத்திக் கொள்ளாது விலகி நின்று, அக்காட்சிகளை உற்றுநோக்கிக் கருத்துரை அளிப்பவர்களாகவும் விளங்குகின்றனர். தலைவனின் பிரிவில் தலைவியின் நிலைகூறல், தலைவன் வரவால் துன்பம் நீங்கும்நிலை கூறல் எனத் தகவல்களை அளிப்பவர்களாக விளங்குகின்றனர். தொல்காப்பியர் குறிப்பிடும் இவ்வாயில்களுள் பாடினி, விருந்தினர், விறலியர், அறிவர், கூத்தர், இளையோர் ஆகியோரின் கூற்றுக்கள் இலக்கியங்களில் இடம்பெறவில்லை. மேலும்,

- தோழி
- தாய்
- பார்ப்பன்
- பாங்கன்
- பாணன்
- கண்டோர்

போன்றோர் கூற்றுக்கள் இலக்கியங்களில் இடம்பெறுகின்றன. வரைவுகடாதல், வாயில் நேர்தல், செலவழுங்குவித்தல் ஆகிய துறைகளில் தலைவியின் மாண்புகளைத் தலைவனுக்கு உரைப்பது, களவில் அறநெறிப்படுத்துவது, அறத்தொடு நிற்பது, உடன்போக்கில் நல்லவை உரைத்தும், அல்லவை கடிந்தும் நெறிப்படுத்துவது கற்பில் ஊடலைத் தணிப்பது ஆகிய செயல்களால் அனைத்து வாயில்களுக்கும் கொடுக்கப்பட்ட பணிகளைத் தனதாக்கிக் கொள்வதால் இச்சூழல்களில் தோழி தவிர்த்த பிற வாயில்களின் கூற்றுக்கள் தோன்றாது போயிருக்கலாம்.

இவர்களுள் தோழி, தாய் ஆகியோர் ஏற்கனவே கூறப்பட்ட நிலையில்,

- பார்ப்பான் - புறப்பொருள் பற்றிக் கூறுகிறது. வாயில்கள் நேர்ந்ததாகக் குறிப்பில்லை.
- பாங்கன்
- பாணன்
- கண்டோர்

போன்றோர் கூற்றுக்கள் இடம்பெறுகின்றன.

**பாங்கன்**

தலைவிக்குத் தோழி உற்றதுணையாக அமைவதுபோல தலைவனுக்கும் பாங்கன் தோழனாக அமைகிறான். அக இலக்கியங்களில் பாங்கனை இடிக்கும் கேளீர் எனவும், ‘சிறாஅரமறு நண்பன் எனவும் தோழன் எனவும் அழைக்கப்படுகிறான். தலைமை நிலையுடைய தலைவனும் இடித்துரைக்கும் பாங்கனை உடையவனென்னும் செய்தி நட்பின் உயர்வைச் சான்றோர் அறிந்திருந்ததைப் புலப்படுத்துகிறது. பாங்கன் வேதத்தை அறிந்தவன். அவ்வேதத்தில் தலைவியை அடையும் தன்மை உண்டா என்று கேட்கிறான் தலைவன். பாங்கனோ இடித்துரைத்தல் தலைவனின் காமநோய் நீங்கும் என்று எண்ணுகிற நிலை நட்பின் கேண்மையை விளக்குவதோடு பாங்கன் தலைவனுக்கு வாயிலாக விளங்குவதையும் காட்டுகிறது.

தலைவனின் உடல், மனம் போன்றவற்றில் பல்வேறு மாற்றம் நிகழ்கிறது. இவ்வேறுபாட்டை அறிந்துகொண்ட பாங்கன் தலைவனிடம் வினவினான். அதற்குத் தலைமகன் ஒரு குறமகளின் மேல் யான் கொண்ட காமத்தால் இந்நிலையானேன் என்று கூறுகிறான்.

**"மால்வரை யழிதருந் தூவெள் ளருவி**
**கண்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரல்**
**சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்**
**நீரோ ரன்ன சாயல்**
**தீயோ ரன்னவன் வரவித் தன்றே"** **(குறுந் : 95)**

என்கிறான். இதனைத் திருவள்ளுவரும்

**"ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்குமென் பீடு"** **(குறள் : 1088)**

என்கிறார். தலைவனின் காதல் உள்ளத்தை அறிந்துகொண்ட பாங்கன் உயிர்த் தோழனுக்குக் காதலின் பேதமையை உணர்த்த எண்ணினான். காதல் என்பது கண்மூடித்தனமாக இல்லாமல் பகுத்தறிவு நிரம்பியதாக இருக்க வேண்டுமென்று நினைக்கிறான் பாங்கன். "தலைவியானவளைப் பாங்கன் நேர்நின்று காணுவதும் முன்னின்று மொழிதலும், தமிழ் அகத்திணைக்கு ஒவ்வா தமிழகம் பெற்ற மகளிர் நாணத்துக்கு தலைவி வந்து நிற்கின்றாளா? என்பதைப் பார்த்துச் சொல்லும் ஒரு அறிவிப்பாளனே பாங்கன் ஆவான்"[45] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

பாங்கனால் இடித்துரைக்கப்பட்ட தலைவனின் ஆற்றாமை மிகுதியையும், தலைவியது இன்றியாமையையும் தெரிவித்தபின் பாங்கன் உண்மை தெளிந்து தலைவனது நிலைகுறித்து இரங்குகிறான். தலைவனது செயல்பாடுகளை உற்றுநோக்கும் பாங்கன் அவனுக்கு அறிவிப்பாளனாகப் பயன்படுவதோடு மட்டுமல்லாமல் அறிவுறுத்துபவனாகவும் விளங்குகிறான். பாங்கனின் தன்மை குறித்து தொல்காப்பியர்,

**"மொழிஎதிர் மொழிதல் பாங்கற் குறித்தே"** **(தொல்-180)**

என்கிறார். தலைவன் காமம் இயல்பாகவே ஒருவரிடம் உரிய காலத்தில் வெளிப்படும் என்று பாங்கனிடம் உரைத்தபோது அதற்குப் பாங்கன் பேரறிவுடைய நீ இக்காம நோயை அடைதல் நல்லதா என்று இடித்துரைக்கிறான். இதனை

**"காமங் காம மென்ப காமம்**
**அணங்கும் பிணியு மன்றே நினைப்பின்**
**முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புல்**
**மூதா தைவந் தாங்கு**
**விருந்தே காமம் பெருந்தோ ளோயே"** **(குறுந் : 209)**

என்கிறது குறுந்தொகை. இதனையே,

**"இடிப்பாரை இல்லாத ஏமாரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்"** **(குறள் : 448)**

என்று இடித்துரைக்கும் தன்மையையும், அதனால் விளையும் பயனையும் விளக்குகிறார். மேலும் பாங்கன் தலைவனுடன் அன்புகொண்டதோடு மட்டுமல்லாமல் அவன் செல்கின்ற வழியெல்லாம் நிழல்போலத் தொடரும் வழக்கமுடையவனாக அகப்பாடல்களில் காட்டப்படுகிறான். தலைவனின் உணர்ச்சியையும், உறவையும் புரிந்துகொண்டு அவனது காதல் வாழ்க்கைக்குத் துணைபுரிபவனாகவும் விளங்குகிறான் பாங்கன்.

**பாணன்**

பண் இசைப்போன் பாணன் என்று அழைக்கப்பட்டான். இப்பாணன் கலைத்துறையில் ஈடுபட்டவுடன் இவனை குறுநில மன்னர்களும், வள்ளல்களும் ஆதரித்தனர். இவன்தம் கலைத்திறனால் பொன்னும், பொருளும் பெற்றாலும் அவற்றைத் தமக்கெனப் பாதுகாக்காது எல்லோருக்கும் வழங்கி வாழ்வித்தான். இப்பாணன் இல்லற வாழ்வில் இணையாதிருக்கும் தலைவன் தலைவிக்குத் தூதாகச் செல்கிறான். இவற்றில் தலைவியது ஆற்றாமைக் கண்டு தோழி தூதுவிடல் பருவவரவின்கண் தலைவனின் தூதாக வருதல். தலைவனின் வரவு உணர்த்துதல். தலைவிக்கு அருளுமாறு தலைவனைப் பாணன் வேண்டுதல். இவை பாணன் தலைவனுக்கு உணர்த்தும் வாயில்கள். இல்லற வாழ்க்கை இனிதே நடைபெறத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் குறித்த காலத்தில் திரும்ப வராதபோது அவர்களிடம் தூது சென்று தலைவியின் ஆற்றாமையைப் பாணர் எடுத்துரைப்பதும் தலைவனை விரைந்து வினைமுடித்து வரும்படி வற்புறுத்துவதும் பாணனின் பணியாகும். மேலும் பாசறையில் தங்கியிருக்கும் தலைவனிடம் சென்று அவனை விரைந்து வருமாறு சொல்வதும் பாணனின் கடமையாகும். இதனை,

**"நிலம்பெயர்ந் துரைத்தல் வரைநிலை உரைத்தல்**
**கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய"** **(தொல் : 1115)**

என்கிறது தொல்காப்பியம். மேலும் இதனை

**"நினக்கு யாம் பாணரேம் அல்லேம்; எமக்கு**
**நீயும் குரிசிலை அல்லை மாதோ**
**நின் வெம் காதலி தன் மனைப் புலம்பி**
**ஈர் இதழ் உண்கண் உகுத்த**
**பூசல் கேட்டும் அருளா தோயே!"** **(ஐங் : 480)**

என்று பாசறையில் இருக்கும் தலைவனிடம் தூதாகச் சென்றதைக் குறிப்பிடுகிறது. மேலும், தலைவனுக்குப் பாணன் அறத்தை உணர்த்த வேண்டும் என்பது தோழியின் எதிர்பார்ப்பு. மேலும் பாணனை உறவு வளர்க்கும் இணைப்புப் பாலமாகத் தோழி மதித்தமை புலனாகிறது. பாணன் தலைவனுக்கு அறம் அறமின்மை எனப்பாகுபடுத்தி நோக்காது அனைத்து நிலைகளிலும் தலைவனின் உறவை அவன் விரும்பும் இடத்தில்

இணைத்து நிற்கும் இணைப்புப் பாலமாக அக இலக்கியங்கள் புனைகின்றன. தலைவியோடு மட்டுமன்றிப் பரத்தையோடும் தலைவனின் உறவை இணைப்பதில் பாணன் சமநிலை கொண்டு விளங்குகிறான். தனக்கென அறக்கோட்பாடுகளை வரையறுத்து அதன்படி ஒழுகாத பாணன் தலைவி தோழியால் பழிக்கப்படுகிறான்.

**கண்டோர்**

களவுக்காலத்தில் பெற்றோர் தலைவியின் காதலை உணர்ந்து வேறு ஒருவனுக்கு நிச்சயம் செய்யும்போது தலைவி தலைவனுடன் சென்று அவன் மனையில் வரைந்து கொள்ளும் நோக்குடன் செல்லும்போது காட்டுவழியில் காண்போர் 'கண்டோர்' எனப்படுவர். இவர்கள் தாயைக் காணும்போது கூற்று நிகழும். இவை உடன்போகும் தலைவன் தலைவியரைக் கண்டு இரங்குவது. உடன்போய் இவர்களைப் பின் சென்று தேடும் தாயை ஆற்றுப்படுத்துவது, அல்லது அமைதிப்படுத்தித் திரும்பச் செய்வது உடன்போகிய இவர்கள் திரும்பியதைத் தாய்க்கு உரைப்பது ஆகியவை கண்டோர் கூற்று நிகழும் இடங்கள்.

உடன்போகும் தலைவன் தலைவியரைக் கண்டு உடன் இணைத்து வைத்த விதியை வாழ்த்துவது, ஆறலைப்போர் நடமாடும் சுரத்தில் இரவில் செல்லற்க என நெறிப்படுத்துவது, சாந்தம், முத்து ஆகிய பொருள்கள் பிறந்த இடத்திற்குப் பயன்படாமல் துய்ப்பார்க்குத் துணைநிற்பதை எடுத்துரைத்து தலைவி தலைவனுக்குத் துணைநிற்பதே முறை என்பதைத் தாய்க்குக் கூறி அவளைத் தேற்றுவது, தலைவனைச் சிறந்தவனாகச் சுட்டி தலைவி உடன் சென்றது பற்றித் துயர்உறாமல் இருக்கச் செய்வது ஆகியன கண்டோர் ஆற்றும் பணிகள்.

தலைவி, காதலனுடன் சுரநெறியில் சென்றபொழுது இடைப்பட்டதோர் ஊரில் இளைப்பாறினர். அவர்கள் வரவு கண்ட ஊரில் ஆரவாரம் எழுந்தது. இக்காட்சியைக் கண்ட மக்கள், பெண்ணைப்பெற்ற தாயாரின் துன்பம் பெரிதாகவே இருக்கும் என வருந்தினர். இதனை,

> **"புள் ஒலிக்கு அமர்ந்த கண்ணள், வெள்வேல்**
> **திருந்து கழற் காளையொடு அருஞ்சுரம் கழிவோன்,**
> **எல்லிடை அசைந்த கல்லென் சீறூர்ப்**
> **புனை இழை மகளிர்ப் பயந்த**
> **மனைகழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே"** **(ஐங் : 382)**

என்கிறது. தனித்து விடப்பட்ட தலைவன் தலைவியின் நிலைகண்டு இரங்கும் மனம் ஒருபுறம் அவர்தம் மகிழ்வு கண்டு மகிழும் மனம் மறுபுறம் இவை கண்டோர் மனதில் எழுந்தவை.

கண்டோர் இரக்க உணர்வோடு இருந்தாலும் அவர்களது கண்காணிப்பு அலர் எழ வழிவகுத்தது. தலைவனும், தலைவியும் உடன்போகிய நிலையில் செல்லும்

வழியில் பகலில் சிறிது இளைப்பாறத் தங்கிய நிலையில் ஆரவாரம் எழுந்தது. இவ்வாறு பகலில் தோன்றும் அலரும் அலரால் தோன்றும் அச்சமும் இரவில் செல்லுமாறும் ஆள் இல்லாத காட்டுவழியாகச் செல்லத் தலைவன் தலைவியரைத் தூண்டியிருக்கலாம் என்பர்.

**தொகுப்புரை**

சங்க அக இலக்கியம் இனிமையானது. கற்பாரைக் கற்பனையில் ஆழ்த்துவது விரிந்த இலக்கிய பரப்பில் குறுகிய அடிகளைக் கொண்டு மிக உயர்ந்த கோட்பாட்டை நயமாக விரித்துரைக்கிறது. மலைகளைத் தழுவிய மரநிழல்களிலும் மாற்றாரின் தொல்லையேதும் இல்லாத முல்லை நிலங்களிலும், சேற்றுமணம் வீசுகின்ற ஆற்றங்கரை ஓரத்திலும் கடலோரக் கவிச்சையோடு அலைவீச நெளியும் மணல் வெளிகளிலும், காலையரும்பி மாலைவரை வெயில் நீளும் பாலைவனங்களிலும் நிகழ்ந்திருந்த காதல் சங்கக்காதல். அக்காதல் நிறைந்திருப்பது அக இலக்கியம். அவ்வக இலக்கியங்களில் இடம்பெறும் மாந்தர்கள் பற்றி விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

அகத்திணை மாந்தர்களில் தோழி இலலையேல் காதல் இல்லை அகப்பொருளும் இல்லை என்று சுட்டும் அளவிற்குச் சிறப்பு பெற்றவள் தோழி. தலைவிக்கு உற்ற துணையாக விளங்குபவள் அவள் கொண்ட காதலுக்கு உதவியாகக் களவு வாழ்வை நீட்டிக்க விரும்பும் தலைவனின் மனநிலையைத் தலைவிக்கு எடுத்துக்கூறிக் குறைநயப்பிக்கிறாள். தலைவியின் நிலையையும், சுற்றுப்புறத்தையும் எடுத்துக்கூறித் தலைவனிடம் விரைவில் மணம் புரியுமாறு வரைவுகடாதல் செய்கிறாள். தலைவியின் களவு வாழ்வைப் பெற்றோரிடம் கூறிக் கற்பாக்க முற்படுகிறாள். களவு, கற்பு என இருநிலைகளிலும் தலைவியைத் தலைவன் பிரியாமல் இருக்கச் செலவழுங்குவிக்கிறாள். அப்படியும் தலைவன் பொருள் காரணமாகவோ பரத்தையர் காரணமாகவோ பிரியும் நிலையில் தலைவியை ஆற்றுவிக்கிறாள். திரும்பி வந்த தலைவனைத் தலைவியுடன் சேராமல் இருப்பதற்கும் வாயிலாக இருப்பது என முக்கியமான முதன்மைப் பாத்திரமாக விளங்கும் தோழியின் அறிவாற்றல் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

அகத்திணை இலக்கியத்திற்கு மையப்புள்ளியாக விளங்கும் தலைவியின் களவு, கற்பு வாழ்க்கை பற்றியும், தலைவனிடத்துக் கொண்ட காதல், காதலின் மிகுதியால் வரும் ஊடல், தலைவனைப் பிரியும் பிரிவுத்துன்பம் தலைவனை உயிராகக் கருதும் தலைவியின் கற்பு வாழ்க்கை போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

தன்னிகரில்லாத் தலைவனின் அகவாழ்வில் தலைவியின் மேல் கொண்ட காதல் அக்காதலின் காரணமாகத் தலைவன் மடலேறும் நிலை. உடன்போகும் நிலை, தலைவியைப் பிரிந்து பாசறையில் துயருறும் நிலை வினை முடித்துத் திரும்பி வரும்போது தலைவி மீது கொண்ட காதலால் விரைந்து வரும் மனநிலை ஆகியவற்றில் தலைவனின் பண்புகள் நிறைந்திருப்பது ஆராயப்பட்டுள்ளன.

அகத்திணை மாந்தர்களில் தலைவி மீது மாறாத அன்பு கொண்டவர்கள். நற்றாயும் - செவிலித்தாயும் இவர்கள் தலைவி பிறந்தது முதல் சிறப்பு செய்தவர்கள். கற்பு வாழ்வில் தலைவியைப் பிரிந்தபோதும் அவள் தலைவனுடன் இல்லறம் நடத்தும் நிலையைக் கண்டு மகிழ்ந்தவர்கள்.

அக இலக்கியத்தின் மையப்புள்ளி தலைவி என்றால் கரும்புள்ளி பரத்தை. இப்பரத்தையர் தோன்றுவதனால் தலைவியின் வாழ்வில் ஏற்படும் துன்பங்கள், இப்பரத்தையர் தோன்றக் காரணமாக அமைந்த சமுதாய நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அவர்களிடம் நல்ல பண்பும், மனமும் நிறைந்திருந்தாலும் அவர்கள் தலைவியாக வாழ்வதற்கும், குழந்தை பெறுவதற்கும் மறுக்கப்படுகின்ற நிலை விளக்கப்பட்டுள்ளன.

அகமாந்தர்களான தலைவனும், தலைவியும் களவு வாழ்விலிருந்து கற்பு நிலைக்கு வருவதற்கு வாழ்வில் வாயிலாக இருந்தவர்கள் பலர் அவர்களில் பாங்கன், பாணன், கண்டோர் ஆகியோரின் பண்புகள் விளக்கப்பட்டுள்ளன.

அகமாந்தர்கள் மன உணர்வுகளை வெளியிடக் கையாளும் அணுகுமுறைகளும், அவர்களின் வாழ்க்கைப் பின்புலங்களும் விளக்கப்பட்டுள்ளன. புற இலக்கியங்களில் மாற்றங்கள் ஏற்பட்டாலும் அக இலக்கியங்களில் மாற்றங்கள் ஏற்படவில்லை அகப்பாடல்கள் காதலர்களுக்கு இன்பத்தை ஊட்டுவனவாக அமைந்துள்ளன. அத்தகைய காதலர்களின்

காதல் வாழ்க்கை நிலத்தினும் பெரிது!
காதல் வாழ்க்கை வானினும் உயர்ந்தது!
காதல் வாழ்க்கை நீரினும் ஆழமானது!

## அடிக்குறிப்புகள்

1. பாரதிதாசன் கவிதைகள், ப.30
2. Robert Button The Anatomy of Melacholy, J.M. Denk
3. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப-221
4. தொல்-பொருள் இளம்பூரணர் உரை, ப-3
5. தொல்-பொருள் நச்சினார்க்கினியர் உரை ப-3
6. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக்கொள்கை ப-18
7. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப-353
8. ஈ.கே. பாஸ்கரதாஸ், சங்க இலக்கியத்தில் அகம் ப-9
9. திருமகள் கழுத்தில் வைரமாலை பா-36
10. சுன்னாகம் குமாராசாமிப் புலவர், புறப்பொருள் விளக்கம் ப-50
11. இரா. இளங்குமரன், உரையாசிரியர் கண்ட நுண்பொருள் விளக்கம், ப-141
12. இராம பெரியகருப்பன், குறிஞ்சிப்பாட்டு இலக்கியத்திறனாய்வு விளக்கம் ப-55
13. மு. இராகவையங்கார், தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி, ப-71
14. இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ப-53
15. கண்ணதாசன் கவிதைகள், தொகுதி முதலிரண்டு ப-49
16. G. Lewes Dickinsen, Plato and his dialogue, Penquin Books Ltd., Edinburgh P-137
17. ந. செயராமன், தமிழ் இலக்கிய நெறிகள், ப-79
18. தமிழண்ணல், இலக்கியக் கொள்கை ப-40
19. Arthur Schopehauer ep cit Vol-III p-337
20. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப-71
21. மேலது ப-52
22. அ. சீனிவாசன், முல்லை ப-10
23. மு. வரதராசன், குறுந்தொகை செல்வம் ப-68
24. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப-463
25. ந. சுப்பரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள் ப-322
26. வ.சுப. மாணிக்கம் தமிழ்க்காதல் ப-79
27. மேலது ப-80
28. சுமதி கனகசபை, குறுந்தொகை காட்டும் வாழ்க்கை ப-33
29. மேலது ப-63
30. அ.ச. ஞானசம்பந்தன், அகமும் புறமும், அகம் ப-20
31. வ.சுப. மாணிக்கம் Op.cit. P-237
32. K.K. Pillai, A social history of the Tamils Vol-I, P-356
33. ஆ. இராமகிருட்டிணன், அகத்திணைமாந்தர் ஓர் ஆய்வு ப-179
34. S. Singaravelu, Social Life of Tamils P-184

35. ந. சுப்புரெட்டியார் அகத்திணைக் கொள்கைகள் பக்.353, 354
36. வாழ்வியல் களஞ்சியம் ப-10
37. தமிழகராதி, ப-222, 583, 682
38. சேந்தன் திவாகர நிகண்டு ப-14
39. பிங்கல நிகண்டு ப-200
40. தொல், பொருள், கற்பியல் இளம்பூரணர் உரை ப-295
41. ஔவை துரைசாமிப்பிள்ளை ஐங்குறுநூறு ஆராய்ச்சி ப-2
42. உ.வே.சா. குறுந்தொகை ப-76
43. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப-281
44. வைரமுத்து, கவிதை தொகுதி ப-770
45. வ.சுப. மாணிக்கம் தமிழ்க்காதல் ப-330

## இயல் - 4

# தொழில்கள்

**முன்னுரை**

கல்தோன்றி மண்தோன்றிய காலத்தில் தோன்றிய மனிதன் இயற்கையில் கிடைத்த உணவுகளான காய்கள், பழங்கள், கிழங்குகள் போன்றவற்றை உண்டு வாழ்ந்து வந்தான். அவன்தன் வாழ்விடமாக மரப்பொந்துகளையும், மரக்கிளைகளையும் விலங்குகள் தங்கும் குகைகளையும் அமைத்துக் கொண்டான். அதன்பின்னர் உணவின் பொருட்டு வேட்டைத்தொழிலை மேற்கொண்டான். அத்தொழில் வாழும் நிலத்திற்கு ஏற்ப அமைந்தது. அவற்றில் குறிஞ்சிநிலப்பகுதி மலைப் பகுதியானதால் வேட்டைத்தொழிலையும் முல்லை நிலப்பகுதி காடுகளானதால் உழவுத்தொழிலையும் நெய்தல் நிலப்பகுதி கடல்பகுதியானதால் மீன்பிடித்தொழிலையும் செய்தனர். இத்தொழிலில் தேவைக்கு அதிகமான பொருட்கள் கிடைத்ததால் அவற்றை வேறு இடங்களுக்குக் கொண்டு செல்ல வசதியாக நெய்தல் நிலமும் பாலையும் அமைந்தன. இந்நிலத்தின் வழியாக வணிகத்தை மேற்கொண்டனர். அதன்பின்னர் சமூகத்தில் தொழில் அடிப்படையில் அரசர், அந்தணர், வணிகர் வேளாளர் என நான்கு பிரிவினர் இருந்தனர். இவர்களைத் தவிரச் சமூகத்தின் நல்வாழ்வுக்கு உதவும் தொழில்களைச் செய்த பல்வேறு தொழில் பிரிவினரும் இருந்துள்ளனர். இவர்கள் தச்சர், கொல்லர், குயவர், வண்ணார் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். இவர்கள் செய்த தச்சுத்தொழில், கொல்லுத்தொழில், மட்பாண்டத்தொழில், சலவைத்தொழில் ஆகியன குலத்தொழில்களாக அமைந்தன. மனிதன் செய்த தொழிலுக்கு ஏற்ப அவனுடைய பெயரும் தொழிலும் சிறப்புப் பெற்றன. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உழவுத்தொழில் செய்து வந்தவரை வேளாளர் எனவும், கொண்டு கொடுத்து வந்தவரை அரசர் எனவும், ஒழுக்கநெறி கற்பித்து வந்தவரை அந்தணர் எனவும் வழங்கினர். எத்தொழிலுக்கும் தூண்டுகோளாய் அமையும் அறிவும் ஒழுக்கமும் இன்றியமையாச் சிறப்புடையன. தனிமனிதனின் வளர்ச்சி சமுதாய வளர்ச்சிக்கு வழிவகுத்தன. நல்வித்துக்களாக விதைக்கப்பட்ட ஒவ்வொரு தொழிலும் ஆல்போல் தழைத்தது. உணவினை அதிகமாக விளைவிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் உழவர்கள். இவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான ஏனைய பொருள்கள் எல்லாவற்றையும் ஆக்கித் தரவல்லவர்கள் பிறதொழிலாளர்கள். இத்தொழிலாளர்கள் பற்றி ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**உழவுத்தொழில்**

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. உணவு இல்லை என்றால் பண்பாடும் பழம்பெருமையும் சிதைந்துவிடும். ஆதலின் உணவுப்பொருளின்

இன்றியமையாமையை உணர்ந்து அவற்றைப் பெருக்குவதற்கு உழவுத்தொழில் உயிர்த்தொழிலாகப் போற்றப்பட்டது. உழவு என்னும் பெயர் உழத்தல் காரணமாகத் தோன்றியது. உழத்தல் என்பது இடைவிடாது முயலும் முயற்சியைக் குறிக்கிறது. மழை, பனி, வெயில் என்னும் கால வேறுபாட்டால் உடம்பில் உருவாகும் தொல்லைகளைச் சிறிதும் பொருட்படுத்தாது நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த இடைவிடாது உழைக்கும் முயற்சி இத்தொழிலுக்கு வேண்டப்படுதலின் இத்தொழில் 'உழவு' என்று அழைக்கப்படுகிறது. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் உழவு பிற தொழில்களைவிட முதன்மையானதாகப் போற்றப்பட்டது. இத்தொழிலைச் செய்வதற்கு அக்கால மக்கள் மழையை நம்பி வாழ்ந்தனர். மழைத்துளியின்றிப் பசும்புல்லும் தலைகாட்டாது என்பதை,

**"விசும்பின் துளிவீழின் அல்லால்மாற்று ஆங்கே**
**பசும்புல் தலைகாண்பு அரிது"** **(குறள்: 16)**

என்ற குறள் உணர்த்துகின்றது. உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடுகளும் நிறைந்த பழந்தமிழ்நாட்டில் வானம் பொய்க்காமல் காலமழை பொழிந்துவந்தது. குறித்த பருவகாலத்தில் ஆறுகள் பெருக்கெடுத்து ஏரிகளையும், குளங்களையும் நிரப்பின. இதனால் அக்காலமக்களின் முழுக்கவனமும் உழவுத்தொழில் செய்வதிலே நிரம்பியிருந்தன என்பதைத் தொல்காப்பியம்,

**"வேளாண் மாந்தர்க் உழுதூண் அல்லது**
**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"** **(தொல். மரபு நூ : 81)**

எனக் குறிப்பிடுகிறது. உழவுத்தொழில் செழித்து உணவுப்பண்டங்கள் குறைவின்றிக் கிடைத்துவந்தன. நிலவளமும், நீர்வளமும் உணவைத் தடையின்றி உருவாக்கித் தந்து மனிதகுலத்தின் பசியைப் போக்கி உயிர்வாழ்வை உறுதிபடச் செய்தமையை

**"உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே"** **(புறம் 18:21)**

என்கிறது புறம். பண்டைத் தமிழ் மக்கள் இயற்கை அமைப்பிற்கு ஏற்ப வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொண்டனர். "குடியிருக்கும் மக்கள்வாழ் பகுதிகளின் எல்லைப்புறங்களில் வேளாண்மை வளர்ச்சிக்கு ஆதரவு இருக்குமாயின் மக்கள்தொகை நெருக்கமுடையதாகவும், செல்வச்செழிப்புடையதாகவும் மாற இயலும்"[1] என்பதற்கேற்பப் பழந்தமிழ்மக்கள் உணவு திரட்டி உண்ணும் நிலையிலிருந்து உணவை உற்பத்தி செய்யும் நிலைக்கு மாறிப் பல பண்டங்களை உற்பத்தி செய்து செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர்.

**உழவர்**

உழவுத்தொழிலை மேற்கொள்பவர் உழவர் எனப்பட்டனர். உழவர் பெருமக்கள் நிலத்தைப் பண்படுத்தும் தொழிலில் ஈடுபட்டனர். உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாதது உணவு. அதனால் யார் எத்தொழிலைச் செய்து பொருளீட்டினும் உணவின் பொருட்டு உழவர்களிடம் செல்ல வேண்டியவராக இருக்கின்றனர்.

எனவேதான் பண்டைத்தமிழர் எல்லாத்தொழிலினும் முதன்மையாகப் போற்றப்படும் உழவுத்தொழிலைச் செய்யும் உழவரைப் போற்றினர். உழவர்கள் உலக மக்களடங்கிய தேருக்குக் கடையாணி போன்ற காப்பாளர். உணவு உற்பத்தி செய்யாமல் சமுதாயத்தின் மேற்பகுதியிலுள்ள மற்ற எல்லார்க்கும் உணவளித்து அவர்களைத் தாங்கிக் கொண்டிருப்பவர்கள் என்பதால்,

**"உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅ∴து ஆற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து"** **(குறள் : 1033)**

என்கிறது திருக்குறள். உழவர்கள் நிரம்பவளம் பெற்றவர்கள் என்பதைக் 'குடிநிறை வல்சி' (பெரும்:196) என்ற தொடரால் குறிப்பிட்டு அப்படி இருப்பினும் அவர்கள் செய்யும் உழவுத்தொழிலைச் சிறப்பாகச் செய்வர் என்பதைக் குறிப்பிடச் 'செஞ்சால் உழவர்' (பெரும்: 196) என்றனர். உழவர்கள் நிலத்தை ஒருமுறை உழுதலை ஒருசாலுழவு என்றும், இருமுறை உழுதலை இருசாலுழவு என்றும், குறிப்பிடுவர். இங்கு செஞ்சால் என்பது பலமுறை உழப்பட்டதைக் குறிப்பிடுகிறது. மேலும் நிலத்தை உழும்பொழுது இரண்டு எருதுகளும் ஓடாமலும், மெல்லப் போகாமலும் ஒத்துநடத்தலே பயன்தரும் என்பதை 'நன்னடை பயின்ற நடைநவில் எருதுகள்' என்றும், சிறிய எருதுகளின் உழவால் நிலம் நன்கு பண்படாது என்பதைக் கூறுவதோடு அகல உழுவதைவிட ஆழஉழ வேண்டும் என்பதை 'உடுப்புமுக முழுக்கொடு மூழ்கஊன்றி' (பெரும்: 199) என்று கூறி உழவர்கள் நிலத்தை ஆழஉழுதலின் சிறப்பைக் கூறியுள்ளனர். உழவர்கள் உழவுத்தொழிலோடு மேய்ச்சல் தொழிலையும் செய்தனர் என்பதை,

**"விதையர் கொன்ற முதையல் பூழி**
**இடுமுறை நிரப்பிய ஈர்இலை வரகின்"** **(நற்றி. : 12)**

என்ற பாடலில் 'விதையர்' மற்றும் 'முதையல்' என்ற சொற்கள் மேய்ச்சல்காரர்களே உழவர்களாக விளங்கினார்கள் என்பதையும், அவர்கள் முன்னரே பயிரிடப்பட்ட நிலங்களில் பயிரிட்டனர் என்பதையும் தெரிவிக்கின்றன. தோட்ட உழவினைக் காக்கும் மேய்ச்சல்காரர்களே கொல்லைக்கோவலர் என்றழைக்கப்பட்ட குறிப்பு நற்றிணையில் காணப்படுகிறது. உழவர்கள் விழாவெடுத்துத் தங்கள் தொழிலை மேற்கொண்டனர் என்பதை இளங்கோவடிகள்,

**"தொடுப்போர் உழவ ரோதைப் பாணியும்"** **(சிலம்பு : 9:5)**

என்று குறிப்பிடுகிறார்.

**உழத்தியர்**

உழவருக்கு இணையாக உழத்தியரும் மருத நிலத்தில் உழைப்பைத் தந்துள்ளனர். இவர்கள் நீர்வளம் மிக்க மருத நிலப்பரப்பில் வாழும் வாழ்க்கையை உடையவர்கள். இவர்கள் 'கடைசியர்' எனச் சுட்டப்படுகின்றனர். வேளாண்மை

இவர்களது முதன்மையான தொழில் ஆகும். உழுது விளைவிக்கும் உழவர்க்குத் துணையாக உழத்தியர் பல்வேறு பணிகளைச் செய்தனர். உழவர்கள் ஏர்களைக் கொண்டு நிலத்தை உழுவர். மகளிர் அவர்களுக்கு உதவியாக நெல்நாற்றுக்களை நடும்முன் கால்களால் சேற்றை மிதிப்பர். பின்நெல் நாற்றுக்களை நடுவர். களைப் பறித்து நெல் முற்றியபின் அறுவடை செய்த நெல்லைத் தலையில் சுமந்துவந்து களத்தில் சேர்ப்பர். நெல்லடித்தப் பின்பு முறத்தைக் கொண்டு காற்றிலே நெல்லைத் தூற்றி எடுப்பர். இத்தன்மையில் உழத்தியரின் தொழில் அமைந்திருக்கும். கொண்டை முடித்துத் தழையுடை அணிந்த உழத்தியர் வயலில் களைகளைக் களைந்த காட்சியைப் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.

**"கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்**
**சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்**
**மலங்கு மிளிர் செறு"** **(புறம்: 61:1-3)**

நெல்லறுக்கும் உழத்தியர் வயலில் உண்ணவரும் நாரைக் கூட்டத்தை ஓம்புதலையும், ஆம்பலோடும் நெய்தல் பூவோடும் நெல்லை அறுத்துவந்த செய்தியைப் பதிற்றுப்பத்து காட்சிப்படுத்துகிறது. வயல் வேலைகள் செய்வதோடு வீதிகள்தோறும் சென்று பல்வகை மலர்களை விற்றும், மீன்களை விற்றும், பொருள் சேர்த்துள்ளனர். நீர்வளம் மிகுந்த மருதநிலத்திலுள்ள ஆறு, குளம், ஏரி போன்ற நீர்நிலைகளில் தூண்டில் கொண்டும் வலையின்துணை கொண்டும் பிடித்த மீன்களை மருதநில வாழ் உழத்தியர் விற்றனர் என்பதை

**"முள்ளயிற்றுப் பாணமகள் இன்கெடிறு சொரிந்த**
**அகன்பெரு வட்டி நிறைய மனையோள்**
**அரிகால் பெரும் பயிறு நிறைக்கும்"** **(ஐங்.: 47:1-3)**

என்கிறது.

**விளைநிலம்**

பண்டைத்தமிழர் நிலத்தினை இயற்கை அமைப்பிற்கு ஏற்ப ஐந்து வகைகளாக முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பிரித்தனர். குறிஞ்சிநிலம் சிறுசிறு குன்றுகளும் மண்ணும் கலந்த பகுதியாக இருக்கும். இந்நிலத்தில் பயிர்த்தொழிலுக்காகப் பயன்படுத்தப்பட்ட நிலப்பகுதிகளின் வெவ்வேறு இயல்பு கருதித் தனித்தனியான பெயர்கள் வழங்கப்பட்டன. குறிஞ்சி நிலத்துப் புன்செய் நிலத்தைத் 'துடவை' என்றும், மரங்களை அழித்து விளைநிலமாக்கப்படும் புதிய நிலத்தை 'இதை' என்றும் பழமையான விளைநிலத்தை 'முதைபுனம்' என்றும் குறித்தனர்.

முல்லைநிலம் செம்மண் பரப்பை உடையது இம்முல்லை நிலத்தில் பயிரின்றித் தரிசாய்க் கிடந்த இடத்தைக் 'கொல்லை' என்றும், மரங்கள் நிறைந்த முல்லைப் பகுதியைப் 'புறவுகானம்' என்ற சொற்களாலும் குறிப்பிட்டனர்.

மருதநிலம் நீர்வளம் நிறைந்த பகுதியாகும் வான் பொய்ப்பினுந் தான்பொய்யாக் காவிரி பாயும் நிலவளஞ்சான்ற கழனிகள் மருதநிலத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும் மருதநிலப் பகுதிகள் கழனி, பழனம், வயல், செறு என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றுள் 'கழனி' என்பது நெல் வயலைக் குறிக்கும். மேலும் மருதநில விளைநிலங்களை 'வயல்' என்ற சொல்லால் குறித்தனர்.

நெய்தல் நிலத்தில் மழை பெய்தால் நெல்விளையும், மழைபொய்ப்பின் உப்பு விளையும் என்பதை நற்றிணை குறிப்பிடுகிறது. இந்நான்கு நிலங்களிலும் மண்வளமும், நீர்வளமும் குறைந்த பகுதியை 'வன்புலம்' என்பர். இதற்கு மாறாக மண்வளமும், நீர்வளமும் நிறைந்த இடத்தை 'மென்புலம்' என்பர்.

**"வன்புலக் கேளிர்க்கு வருவிருந்து அயரும்**
**மென்புல வைப்பின் நன்நாட்டுப் பொருந"** **(புறம் 42: 17-18)**

என்கிறது புறம். முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை நிலம் ஆவதால் அந்நிலத்தில் எதுவும் விளைவிக்கப்படவில்லை. திணை, வரகு முதலிய புன்செய் பயிர்விளையும் நிலங்களையும் விதைத்துவிட்டு வான்நோக்கும் வறட்சியான நிலங்களைப் 'புன்புலம்' என்றனர்.

**"வித்தி வான்நோக்கும் புன்புலம்!"** **(புறம் : 18)**

என்ற அடிகளால் குறிப்பிடுகிறது. இவ்வாறாகப் பயிர்த்தொழிலுக்கு ஏற்ற நிலப்பகுதிகள் அல்லாமல் விடப்பட்ட நிலப்பகுதியைக் கால்நடைகளின் மேய்ச்சலுக்கென விடுவர். இவ்வாறு விடப்பட்ட நிலம் 'விடுநிலம்' எனப்பட்டது. வேளாண்மைக்குப் பயன்பட்ட இடங்களுக்கு ஏற்றவாறு பெயரிட்டழைத்தனர். பயன்படா நிலங்களைக் 'கரம்மைமுரம்பு' என்ற பெயர்களால் குறிப்பிட்டுள்ளனர். பயிர்த்தொழிலுக்குப் பயன்படாத புல்வகை வளர்ந்து கால்நடை மேயுமாறு விடப்பட்ட கரம்புநிலம் 'விடுநிலக்கரம்பு' (பதிற்று: 28:7) என்று அழைக்கப்பட்டது.

**உழுதல்**

உழவுத்தொழிலின் இன்றியமையாத தொடக்கக்கூறு உழுதல் ஆகும். உழுதல் என்றால் நிலத்தின் மேற்பரப்பில் காணப்படும் கடினத்தன்மை கொண்ட மண்ணை மென்மைத்தன்மை உடையதாக ஆக்குகின்ற வகையில் மேலும் கீழுமாகப் புரட்டுவது. நிலத்தைக் கிளரும் பகுதி கொழு எனப்படும். இச்செயலைச் செய்வதற்குப் பயன்பட்ட கருவி கலப்பை இதனை 'நாஞ்சில்' என்ற சொல்லால் குறித்தனர். இந்நாஞ்சிலின் அமைப்பைப் பெண் யானையின் வாயை ஒத்து வளைந்தும், அதில் பொருத்தப்பட்டுள்ள பெருங்கொழு உடும்பின் முகம்போன்று தோற்றமுடையது என்பதை 'நாஞ்சில் ஆடிய கொழுவரி மருங்கின்' (பதிற்று: 28) என்கிறது பதிற்றுப்பத்து. இக்கலப்பையினால் மிகக் கடினமாக உள்ள நிலப்பகுதியை உழுவதில் இடையூறு

ஏற்பட்டது. எனவே கொழுவுடன்கூடிய ஊர்க்கலப்பையைப் பயன்படுத்தினர். கொல்லையில் உழவர்கள் ஏர்கொண்டு உழுதது ஊனைக் கிழித்தாற் போன்று இருந்தது என்பதை,

**"ஊன்கிழித்தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்**
**வித்திய மருங்கின் விதைபல நாறி" (அகம் 194: 4-5)**

என்கிறது. சேற்று உழவு செய்வதற்குக் கூரிய இரும்புத்தகடு அல்லது இரும்புத்துண்டினால் ஆன கொழுவுடன்கூடிய கலப்பைகளைப் பயன்படுத்தியதோடு எருதுகளையும், எருமைகளையும் பயன்படுத்தினர். பலமுறை உழுதபின்னர் 'தளம்பு' என்ற கருவிகொண்டு வயலிலுள்ள மேடுபள்ளங்களைச் சமன்படுத்துவர் என்பதை,

**"மலங்குமிளிர் செறுவின் தளம்பு தடிந்திட்ட" (புறம் 61:3)**

என்ற பாடலடி விளக்குகின்றது. பண்டைக் காலத்தில் பிறநாடுகளிலும் பயிர்த்தொழிலுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் சிறப்புச் செய்தனர். பாரசீக மக்கள் மரத்தாலான கலப்பையை உழவுக்குப் பயன்படுத்தினர். அதன் கொழு உலோகத்தால் செய்யப்பட்டிருந்தது. இவர்கள் எருதுகளைக் கலப்பையில் பூட்டி நிலங்களை உழுதனர் என்கிறது பண்டைக்கால வரலாறு.

**விதைத்தல்**

நிலத்தை நன்கு உழவு செய்து பண்படுத்தியபிறகு விதை விதைப்பர். விதைப்பதற்கு உரிய வித்துக்களைப் பழந்தமிழர் நன்கு காயவைத்து விதைக்கும் இடத்திற்குச் சிறிய கூடைகளில் விதைகளை எடுத்துச் சென்றனர். நெல் விதைத்தல் வரகு விதைத்தல், சாமை விதைத்தல் முதலியவை முல்லை மற்றும் மருதநில மக்களின் தொழில்களாகும். இக்காலத்தைப் போன்றே பண்டைய காலத்தில் புழுதிவிதை, சேற்றுவிதை என விதைப்பு முறைகளை இருவகைப்படுத்தினர். 'புழுதிவிதை' என்பது நிலத்தை நன்கு உழுது உலரவிட்டுப் பின் நீர்ப்பாய்ச்சி விதைகளைத் தெளிப்பர். இது பெரும்பாலும் கோடைக்காலங்களில் அல்லது நீர்த்தட்டுப்பாடு உள்ள காலங்களில் நடைபெறும். செம்மண் நிலத்தின் இருபுறமும் புழுதிகீழ் மேலாகப் புரண்டு விழுந்து காயுமாறு கொல்லை உழவர்கள் ஏர்கொண்டு உழுதனர். ஊனைக் கிழித்தாற்போன்ற சிவந்த மேட்டு நிலத்தைப் பிளந்து சென்ற நெடிய உழவுச்சாலிடத்து விதைத்த விதைகள் முளைத்து வளர்ந்தன என்பதை,

**"ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்**
**வித்திய மருங்கின் விதைபல நாறி" (அகம் 194:4-5)**

என்ற உவமையால் விளக்குகிறது. சேற்றுவிதை நிலத்தில் நீர்பாய்ச்சி நன்கு உழுது சேறாக்கித் தண்ணீர் நிரப்பிய பிறகு சேற்றுவிதைகளைத் தெளிப்பர். இது பெரும்பாலும் நீர்த்தட்டுப்பாடற்ற காலங்களிலும் மழைக்காலங்களிலும் நடைபெறும். நீர்நிறைந்த பள்ளத்தில் விதைத்த வித்து நீரின்மையால் சாவாது கரும்புபோலத் தழைக்கும் என்பதைப் புறப்பாடல் சுட்டுகின்றது.

**"கயத்து இட்ட வித்து வறத்தின் சாவாது**

**கழைக் கரும்பின் ஒலிக்குந்து''** **(புறம்: 137:5-6)**

இவ்வாறு புழுதியிலும் சேற்றிலும் விதைத்த விதைகள் கடும்மழை வெள்ளம் போன்றவற்றால் பாதிக்கப்பட்டிருந்தது. விதைகளைத் தெளித்த ஓரிருநாட்களில் கடும்மழை பெய்து பரவலாக உள்ள விதைகளைக் குவித்து விடுவது உண்டு. உழவர்கள் விதைத்த விதைகளை உடைய நாற்றங்கால் வெள்ளத்தால் அடித்து வரப்பட்ட வண்டல் மண்மூடி மேடாகிப் போயிற்று. அவற்றை,

**"வித்து இடுபுலம் மேடு ஆயிற்றென"** **(பரி : 7:35)**

எனப் பரிபாடல் சுட்டுகிறது. இவ்வாறு மூடப்பட்ட விதைகளை அழித்து மறுபடியும் விதைவிதைத்தனர்.

**நடுதல்**

சேற்று நிலத்தில் நாற்றுக்களைப் பரவலாக ஊன்றும் செயலை நடுதல் என்பர். நடவு செய்வோரை 'நடுநர்' என்று நற்றிணை குறிப்பிடுகிறது. பலமுறை நன்றாக உழப்பட்டுக், களைக்கு உரமிட்டு நீர்பாய்ச்சப்பெற்ற வயல்களில் நாற்றுக்களை அழுந்த நடுவர் அதனை,

**"நீர்உறு செறுவின் நாறுமுடி அழுத்த**
**நடுந ரொடு சேறி ஆயின்''** **(நற். 60:7-8)**

என்கிறது நற்றிணை. நடவு செய்தல் குறித்த செய்தி பெரும்பாண் ஆற்றுப்படையில் 'முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்' (பெரும்:212) என்று சுட்டப்படுகிறது. நட்டியபயிர் நன்கு பருத்து முதிர்வதற்கு நல்ல காற்று இன்றியமையாதது. அதனால் நாற்று நடும்போதே நான்கு பக்கமும் காற்று ஊடறுத்துச் செல்லுமாறு இடைவெளி விட்டு நட்டனர். அவ்விடைவெளியினால் பயிர்கள் செழித்து வளர்ந்தன. நெல்லின் அரிசி முதிர்வதற்கு முன்னர்ப் பால் உருவத்தே இருத்தல் இயல்பு. இப்பால் மிகுதியாக இருந்தால் நெல் பருத்துச் செழித்து வளர்ந்திருக்கும் என்பதை,

**"பால்வார்பு கெழிஇப் பல்கவர் விளிபோழ்வு**
**வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்''** **(மலைபடு: 114-115)**

என்ற பாடலடிகளால் உணர்த்தப்படுகிறது.

**நீர்ப்பாய்ச்சுதல்**

வேளாண்மையின் வெற்றி நீர்ப்பாசனத்தைப் பொறுத்து அமைகிறது. நீரின்றி அமையா உலகு என்பதை நீரின்றி அமையா உழவு என்று கூறுவது மிகையாகாது என்பதனால் நீரின் முக்கியத்துவம் உழவர்களுக்கு உணர்த்தப்படுகிறது. பயிர் விளைவதற்கு நீர் இன்றியமையாதது என்பதை அன்னையின் கடுஞ்சொல்லை நீராகக் கொண்டு 'காமநோய்' என்ற பயிர் வளர்ந்தது என்பதை ஒப்பிட்டு, 'அன்னைசொல் நீராக நீளும் இந்நோய்' என்று உவமை நயம்பட வள்ளுவர் குறிப்பிடுகிறார். பாசனத்துக்குத் தேவையான ஆற்றுநீர் வாய்க்கால் வழியாக ஓடி வயல்களில் பாய்ச்சப்படுகின்ற அறிவுத்திறம் பழந்தமிழர்களுக்கு உரியது என்பதை 'நெல்லுக்கு இறைத்த நீர்

வாய்க்கால் வழி ஓடி' என்ற ஔவையாரின் வாக்குப் புலப்படுத்துகிறது. இவ்வாறு வாய்க்கால் வழியாக ஓடுகின்ற நீரைச் சேமிப்பதற்குக் காஞ்சி மரத்தின் சிறு துண்டுகளை நட்டு இனிய சுவைமிக்கக் கரும்பின் சிறந்த பல கழிகளைக் குறுக்கே நெருக்கமாக வைத்து அடைத்து அணையாகக் கோலி அப்பள்ளங்களில் நீரைத் தேக்கப் பாய்ச்சுவர் இக்காட்சி.

**"கலிமகிழ் உழவர்**
**காஞ்சியும் குறுந்தறி குத்தி தீம்சுவை**
**மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து**
**பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி**
**வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை**
**மீதுஅழி கடுநீர் நோக்கி!"** **(அகம்: 346: 5-10)**

என்று அகநானூற்றில் அழகுறக் காட்டப்பட்டுள்ளது. நன்செய் நெல்வயல்களில் பரவலாக நீர்நிறைந்து இருக்கும்படி பாய்ச்சுவர். இதனை 'நீர்பரந்த செறுவில்' என்கிறது புறம். வயல்களுக்குக் குளத்திலிருந்தும் கிணற்றிலிருந்தும் நீரிறைத்துப் பாய்ச்சப்பெற்றது. நீரிறைப்போர் பாடிக்கொண்டே இறைப்பர். நீரினை முகத்திரைக்கின்றவர் வரிசையாக நின்று இறைக்கின்றனர் என்பதை,

**"நீர்ந்தெவ்வு நிறைத்தொழுவர்**
**பாடுசிலம்பு மிசையேற்றத்**

**தோடுவழங்கும் அகலாம்பயிற்**
**கயல் அகைய வயல்நிரைக்கும்"** **(மதுரை 89-92)**

என்கிறது மதுரைக்காஞ்சி.

**எருவிடுதல்**

உழவுத்தொழிலின் அடிப்படைச் செயல்களுள் ஒன்று எருவிடுதல் ஆகும். விளைநிலங்களில் நல்ல உரமிட்டால் நல்ல விளைச்சலைப் பெறலாம் என்பதை உழவர்கள் உணர்ந்திருந்தனர். அக்காலத்தில் எருவாகப் பயன்படுத்தப்பட்டவை கால்நடைகளின் சாணம் உலர்ந்து விழுந்த இலைதழைகள். இவற்றில் சாணத்தைத் 'தாதொரு' (கலித் 108:60) என்றழைத்தனர். எருக்களைக் கொட்டி வைப்பதற்கென்றே விடப்பட்ட மன்றங்களில் அவற்றைச் சேர்த்து வைப்பர். எருவிடுதல் விளைச்சலைப் பெருக்கும் வகையிலும், மண்வளத்தைக் காக்கும் வகையிலும் அமைகிறது. பழந்தமிழர்கள் இயற்கை உரங்களை மட்டும் பயன்படுத்தினர். எருவிடுதலின் இன்றியமையாமையை 'ஏரினும் நன்றால் எருவிடுதல்' (குறள்: 1038) என்கிறார் வள்ளுவர். வயல்களில் கால்நடைகளின் கழிவுப்பொருள்களான தொழு உரத்தையும், இலை தழைகளாகிய பசுந்தாள் உரத்தையும் பயன்படுத்தினர். ஆடு, மாடு, கோழி முதலானவற்றின் கழிவுப்பொருள்கள் மற்றும் குப்பைக்கூளங்கள் ஆகியவற்றைக்

குப்பைக்குழிகளில் இட்டு மக்கச்செய்து அவற்றை வயல்களுக்கு உரமாகப் பயன்படுத்துவர். இந்நடைமுறையை இன்றும் சில உழவர்களிடையே காணமுடிகிறது. இதில் கால்நடைகளின் கழிவுகள் முக்கியத்துவம் பெறுகின்றன. சில வேளைகளில் ஆடு, மாடுகளை இரவுநேரத்தில் வயல்களில் மந்தையாகத் தங்கச் செய்வர். இவ்வாறு செய்வதைக் கிடைகட்டுதல் என்பர். கிடைகட்டுகின்ற இச்செயலைத்

**"தொறுத்த வயல் ஆரல் பிறழ்வும்"** **(பதிற்று: 13:1)**

என்கிறது பதிற்றுப்பத்து. தொறுத்தவயல் என்பதற்கு ஆட்டுக்கிடை கட்டப்பட்ட வயல் என்பர் உரையாசிரியர்.

**களையெடுத்தல்**

வேளாண் தொழிலில் பயிர்களுக்குத் தீங்கு செய்யும் தாவரங்கள் அப்பயிர்களினூடே வளர்வதுண்டு. அவை விளை பயிர்களுக்குக் கிடைக்கும் நீர் உரம் போன்றவற்றை எடுத்துக்கொண்டு வளர்கின்றன. இவற்றைக் களைகள் என்பர். வயலில் வளரும் களைகளைக் கையால் பிடுங்கி எறிவர். ஈரமின்றிக் காய்ந்துவிட்ட களைகளைத் 'துளர்' என்ற கருவியால் களைவர். இக்களைகளை நீக்குவது மிகவும் அவசியமானதாகும். இல்லையெனில் விளைச்சல் குறையும் தினைப்புனத்தில் வளர்ந்த களைகளைக் கொட்டினால் பறித்துத் தினைப்புனத்தைத் தூய்மை செய்ததைக்

**"களைகால் கழிஇய பெரும்புன வரகின்!"** **(அகம் 194:9)**

என்கிறது அகம். நன்செய் நிலத்தில் கோரை, நெய்தல் பூ போன்றவை களைகளாக வளரும் அவற்றை உழத்தியர் நீக்குவர்.

**அறுவடை**

நெற்கதிர்கள் நன்றாக வளைந்து பின்னிப்பிணைந்து வரப்பை உரசிக்கொண்டு கிடக்கின்றன. அவற்றை அறுவடை செய்வதற்குமுன் வயல்களில் கூடமைத்து வாழும் பறவைகளை ஓட்டும் வகையில் தண்ணுமை எனப்பட்ட ஒருவகை இசைக்கருவியை முழக்குவர். அதன்பின் நெல்லை அறுத்துவந்து போராகக் களத்தில் குவித்து கடாக்களை விட்டு நெல்லைப் பிரித்தெடுப்பர். நெல்லினின்றும் வைக்கோலையும், கூளத்தையும் நீக்கி உலரவைப்பர். அவை உலர்ந்தபின்னர் மேல்காற்றிலே தூற்றி நெல்லைக் குவிப்பர். தூய்மை செய்யப்பட்ட நெல்லை நெற்கூடுகளில் இட்டுவைப்பர். இந்நெற்கூடுகள் ஏணிக்கும் எட்டாத அளவு மிகநெடிய வடிவுடன் மேல்பகுதி திறந்து நெல்லைக் கொட்டுவதற்கு ஏற்றாற்போல் இருக்கும் அக்கூடுகள் பிரிசுற்றியும் சுற்றாமலும் மலைபோல் அமைக்கப்படும் கூடுகள் உள்ள நெல்லின் அளவைக் குறிக்கப் புள்ளிகள் இடுவர் இதனை,

**"செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை**
**விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்**
**பிண்ட நெல்"** **(நற். 26:2-4)**

என்கிறது நெல் அறிவாளைக் 'குயம்' என்றும், அறுவடை செய்வோரைத் 'துமித்தவினைஞர்' (பெரும் 230-231) என்றும் அழைத்தனர்.

**நெசவுத்தொழில்**

மனிதனுக்கு உணவினை அடுத்து இன்றியமையாத சிறப்புப்பெற்று விளங்குவது ஆடை. விலங்குகளைப் போலன்றி உடலை மறைத்தற்குரிய உடையினை அணிந்து மானத்துடன் வாழும் முறை மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பு. நாகரிகம் வளராத மிகப் பழங்காலத்தில் மக்கள் இலைதழையான ஆடைகளையும், மரப்பட்டைகளையும் மான், புலி முதலியவற்றின் தோலினையும் உடுத்தி வாழ்ந்தனர். நாளடைவில் அந்நிலை மாறியதும் மக்கள் அறிவின் திறத்தால் பருத்தியின் பஞ்சியினை நூலாக நூற்று ஆடையாக அணியத்தொடங்கினர். அம்முயற்சியின் விளைவால் தொடங்கிய தொழில்தான் நெசவு. இத்தொழில் செய்வோரைக் 'கம்மியர்' என்றழைத்தனர். நெசவுத் தொழிலுக்குப் பருத்தி மிகவும் இன்றியமையாத மூலப்பொருளாக விளங்கியது. இப்பருத்தி அன்றி இலவமரம், கோங்குமரம் முதலிய மரங்களிலிருந்து வேண்டிய பஞ்சைச் சேகரித்தனர். சேகரிக்கப்பட்ட பஞ்சை அதனுடைய கொட்டையிலிருந்து பிரித்தெடுத்தனர். அவற்றைப் பிரித்தெடுப்பதற்கு வில்லினைப் பயன்படுத்தினர். பருத்தியிலிருந்து கொட்டையை நீக்கித் தூய்மை செய்யும்போது பஞ்சின் புறத்தோலினையும் கொட்டையையும் தூசி நீக்குவதற்கு நன்றாகப் புடைத்தெடுப்பர். தூய்மை செய்யப்பட்ட பஞ்சினை நுண்ணிய நூலாக நூற்பதில் கைத்திறம் பெற்று விளங்கினர் பெண்கள். இவர்கள் 'பருத்திப்பெண்டிர்' (புறம் 326:4-5) என்றழைக்கப்பட்டனர். மேலும் கணவரை இழந்த பெண்கள் இத்தொழிலில் அதிகமாக ஈடுபட்டிருந்தனர் என்பதை

> **"ஆளில் பெண்டிர் தாளில் செய்த**
> **நுணங்கு நுண் பனுவல்"** **(நற்.: 353:1-2)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பெண்கள் இரவுநேரத்திலும் நூல்நூற்றனர் என்பது 'பருத்திப்பெண்டின் சிறுநீ விளக்கத்து' (புறம் 326:4-5) என்ற அடியால் புலப்படுகிறது. பெண்கள் நூற்று இழைத்துத் தந்த நூலைப் பாவாக விரித்துத் தறியில் நெய்து ஆடையாகக் கொடுக்கும் கடமை ஆடவர் தொழிலாய் அமைந்தது.

**ஆடைநெய்தல்**

நாகரிகம் வளர்ந்தநிலையில் பலவகையான ஆடைகள் நெய்யப்பட்டன. அவை கோசீகம், பீதகம், நுண்துகில், சித்திரக்கம்பி, பொன்னெழுத்து முதலிய ஆடைகளுக்குப் பாம்பின் தோல், புகை பனி முதலியவை உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன. இழை ஓடிய வழி இன்னது என்று பார்வைக்குத் தெரியாதவாறு அத்துணை நுண்மை உடையனவாக ஆடைகள் செய்யப்பட்டன. நூலாடைகளைக் கலிங்கம், சிதார், மடி என வழங்குவர். இவற்றில் மிக உயர்ந்த மெல்லிதான துணிகளும் நெய்யப்பட்டன. அவற்றைத் துகில் என்ற பெயரும் நெய்த உடையினைச் சுருக்கமின்றி மடித்து விற்று வந்தமையால் மடி என்ற பெயரும் வழங்குவதாயிற்று.

நீண்ட அளவினதாக நெய்யப்பட்ட ஆடை தனித்தனியாக அறுக்கப்பட்டதால் ‘அறுவை’ என்றும் பெயர் பெற்றிருந்தது. அவர்கள் வாழும் தெருக்கள் ‘அறுவையர் தெரு’ என்றழைக்கப்பட்டது. ஆடைகளுக்குப் பூத்தொழில் செய்யும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதை,

**“நீலக்கச்சைப் பூவார் ஆடை”** **(புறம் : 274)**

என்கிறது புறம். வன்புலக்காடுகளில் இல்லங்களை அடுத்து வேலி போல் பருத்தி பயிரிடப்பட்டன. இதன் பூவை ‘பாரம்’ என்பர். முதிர்ந்து வெடித்த பருத்திக்காயிலிருந்து கிடைக்கும் பஞ்சை வில்லால் அடித்து சுத்தம் செய்து நூலாக்கிப் பின்னர் இராட்டினத்திலிட்டுத் தகுந்த முறையில் நூற்பர். இதனை எடுத்து நீளமாக விரிப்பர். பசையிட்டுத் தோய்த்த பின்னர் ஊடுநூல் துணையுடன் ஆடை நெய்வர். இவ்வாறு நூல் மிக நெருக்கமாக இழைக்கப்படுவதை

**“இழை மருங்கறிய நுழைநூற் கலிங்கம்”** **(மலைபடு : 52)**

**“ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்”** **(பெரும்: 464)**

என்ற பாடலடிகளால் விளக்கப்படுகின்றன. பண்டைத்தமிழர் பருத்தி மற்றும் மரநார், தழை, பட்டு ஆகியன கொண்டு நெய்யப்பட்ட ஆடைகளைப் பயன்படுத்தினர். இவற்றுள் பருத்தியும் பட்டும் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன. பருத்தியிலிருந்து பஞ்சு எடுத்தல் முதல் ஆடை நெய்து முடியும் வரை இத்தொழிலுக்குப் பலவகையான கருவிகள் பயன்படுத்தப்பட்டன. ஆடை நெய்வதற்கு வேண்டிய நூலைப் பெரும்பாலும் கைம்மை நோன்பை மேற்கொண்டிருந்த பெண்கள் நூற்றனர். இவர்கள் உடுத்தியிருந்த ‘புடவை’ என்பது ஆடைக்கு மறுபெயராகும். இச்சொல்லானது ஆடவர், மகளிர், ஆகிய இருதிறத்தாரது ஆடையையும் குறிக்கும். இதனைச் சமணச் சமயத்தைத் தழுவியிருந்த மருள்நீக்கியார் சூலை நோயால் பாதிக்கப்பட்டிருந்தபோதும், தான் முன்பு அணிந்திருந்த ஆடைகளைக் களைந்துவிட்டு வெண்புடவை மெய்சூழ்ந்து தம் தமக்கையைக் காண வந்தார் என்று பெரியபுராணம் குறிப்பிடுவதிலிருந்து புடவை என்பது அக்காலத்தில் சிறப்புற்றிருந்ததை அறிய முடிகிறது. மேலும் ‘கலிங்கம்’ என்ற சொல்லும் ஆடையைக் குறிப்பதாகும். சங்ககாலத்தில் பஞ்சைப் பயன்படுத்தி நெய்த ஆடைகள் அல்லாமல் பட்டுநூலைப் பயன்படுத்திப் பட்டாடை நெய்தனர் என்பதோடு பொன் இழைகளாலும் ஆடைகள் நெய்யப்பட்டன என்பதைப் பரிபாடல் சுட்டுகிறது. பட்டு உடைகளின் கரைகளில் திரள முடிந்த முடிகள் அழகுற அமைக்கப்பட்டன என்பதைக் ‘கொட்டைகரை பட்டுடை’ (பெரும்: 155) என்கிறது பொருநராற்றுப்படை. மேலும் இயற்கையில் அமைந்த மரப்பட்டையில் உள்ள நாரினை எடுத்துப் பின்னி மலைவாழ் குறவர் ஆடையாகப் பயன்படுத்தினர் என்பதை,

**“மரனாருடுக்கை மலையுறை குறவர்”** **(நற்.64:4)**

என்ற பாடலடியால் அறியலாம்.

**தையல்தொழில்**

“கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்” என்பதற்கு ஏற்ப நெசவைக் கைத்தொழிலாகக் கற்றுக்கொண்ட மக்கள், தையல் தொழிலையும் கற்றிருந்தனர் என்பதன்மூலம் பூவேலைப்பாடுகள் செய்யப்பட்ட ஆடைகளைத் தைப்பதற்குத் தையல்காரர்கள் இருந்தனர் எனலாம். அவர்கள் அரசியல் அலுவலருக்கும் உயர்குடிப் பெண்களுக்கும் சட்டையும் கச்சும் தைத்துக் கொடுத்தனர். அவற்றை அவர்கள் அணிந்திருந்தனர் என்பதை,

**“........... படம்புக்குப்**
**பொருகனை தொலைச்சிய புண்தீர் மார்பன்**
**விரவுவரிக் கச்சின்”** **(பெரும்: 69-71)**

என்கிறது பெரும்பாண் ஆற்றுப்படை. அக்காலத்தில் ஆடைகள் தைத்ததோடு உயர்குடி மக்கள் மெத்தெனப் படுப்பதற்கு மெத்தைகள் தைத்தும் கொடுத்தனர் என்பதை

**“மெல்லிதின் விரிந்த சேர்க்கை மேம்படத்**
**துணைபுணர் அன்னத் தூநிறத் தூவி**
**இணையிணை மேம்படப் பாயினையிட்டு”** **(நெடுநெல்: 131-133)**

என்று அக்காலத்தில் மெத்தைகளும், தலையணைகளும் தைக்கும் தையல்தொழில் உயர்நிலையில் இருந்ததைப் புலப்படுத்துகிறது.

**தச்சுத்தொழில்**

இயற்கை தந்த செல்வம் மரங்கள் அவற்றில் தகுதியுள்ள மரங்களை அறுத்து வீடமைத்தற்கும் வண்டி, தேர் செய்வதற்கும் பயன்படுத்திய பெருமை ‘தச்சர்’ என்னும் தொழிலாளர்க்கே உரியது. மக்கள் சுமந்து சென்ற சுமையை எளிதில் வண்டிகளில் ஏற்றிச் செல்வதற்கும் விரைந்து செல்லக்கூடிய தேர் முதலிய ஊர்திகளை மரத்தினால் உண்டாக்கினர். தச்சு என்பது ஒன்றையும் மற்றொன்றையும் இணைப்பது. இத்தச்சுத் தொழில் செய்வோர் ‘தச்சர்’, ‘கம்மாளர்’ என்று அழைக்கப்பட்டனர். மரத்தொழில் செய்துவாழ்ந்த தச்சன் சங்ககாலத்து இலக்கிய வழக்கில் ‘மரங்கொல் தச்சன்’ என அழைக்கப்பட்டான். மரங்கொல் என்பது மரத்தை வெட்டுதல் எனப் பொருள்படும். இவர்கள் தச்சுத் தொழிலைக் குலத்தொழிலாகக் கொண்டனர். இத்தச்சர்கள் தம் மக்களை இளம் வயதிலேயே தொழிலில் நன்கு பழக்கி வைத்தனர். பொம்மைத்தேர் செய்து விளையாடியவர்கள் பின்னர் பெருந்தச்சர்களாகினர் என்பதை,

**“மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத்து”** **(புறம் 206: 11-12)**

என்கிறது புறம். தச்சர்கள், மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைச் செய்து கொடுத்தனர். இத்தச்சர்கள் தொழில் சிறக்கத் திருமுளைச் சார்த்துதல், ஐயவி தூவுதல் போன்ற சடங்கு முறைகளைச் செய்தனர். சிற்பநூல் அறிந்த தச்சர்களால் செய்யப்பட்ட நிலைகளில் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கையுடன் அந்நிலைகளுக்கு நெய்யும் ஐயவியும் பூசினர் என்பதை,

**“தொல்வலி நிலைஇய அனங்குடை நெடுநிலை**
**நெய்படக் கரிந்தகுண் போர்க் கதவின்**
**மழையாடு மாடம்”** **(மதுரை: 353-355)**

என்கிறது மதுரைக்காஞ்சி.

**மரங்கொல் தச்சர்**

மரங்கொல் தச்சர் எனப்பட்ட இவர்கள் திறமையோடு கலைநுணுக்கம் தெரிந்தவர்களாகவும் இருந்தனர். மக்களுக்குத் தேவையான வண்டிகளையும், தேர்களையும் மரத்தினால் செய்து கொடுத்தனர். நால்வகைப் படைகளில் தேர்ப்படையும் ஒன்றாக இருந்ததால் தேர் செய்வது அன்றைய தச்சர்களின் தலையாய கடமையாக இருந்தது. “செந்தமிழும் நாப்பழக்கமும்” என்பதுபோல தேர்களைப் பெருமளவு செய்து அதில் சிறந்த தேர்களைச் செய்யவல்ல தச்சர்கள் இருந்தனர் என்பதை.

**“வைகல் எண்தேர் செய்யும் தச்சன்”** **(புறம்: 87:2-3)**

என்ற பாடலடியால் அறியலாம். கண்ணைக் கவரும் வண்ணம் நேர்த்தியான தேர்கள் செய்தனர் என்பதை,

**“கண்ணோக் கொழிக்கும்**
**பண்ணமை நெடுந்தேர்”** **(அகம்: 234:8)**

என்ற அகநானூற்றுப் பாடல்அடிகள் புலப்படுத்துகின்றன.

**இணை மாண்டு தச்சர்**

தச்சர்கள் தேர் செய்வதோடு அரண்மனை மதில்கதவு, வாயிலின் நிலைக்கால் அமைப்பு வாயில் நெடுநிலை, ஆகியவற்றைச் செய்தனர். அவற்றில் நிலைக்கால் கதவு செய்வது சிறப்புப் பெற்றிருந்தது. மிகப்பெரிய அரண்மனை வாயிற்கதவுகளைச் செய்வதற்குக் கைத்தொழிலில் சிறந்த தச்சர்கள் மரத்தால் ஆகிய கதவுக்குச் செவ்வரக்குப் பூசி மேடுபள்ளங்களைச் சரிசெய்தனர். இக்கதவுகளை ஒன்றோடு ஒன்று இணைக்கும்போது சேர்க்குமிடம் தெரியாமல் ஒரே மரத்தில் செய்தாற் போன்று நேர்த்தியாக அழகுற இணைத்தனர். அவற்றை ‘இணைமாண்டு’ என்றனர். இவ்வாறு செய்யப்பட்ட கதவினைப் போன்று மற்றொன்றும் சேர்த்து நிலைக்கால்களில் அரும்பு மலர்கின்றது போன்ற குவளைப்பூவின் உருவமும் புதுமையாகச் செதுக்கிய பெண்யானையின் வடிவத்தையும் செய்து அவற்றைப் பூட்டும் தாழோடும் சேர்த்துப் பொருத்தினர்.

**“ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரப்பில்**
**பருஇரும்பு பிணித்துச் செவ்வரக் குரிஇ**
**துணைமாண் கதவம் பொருத்தி இணைமாண்டு**
**நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்**
**போதவிழ் குவளைப் புதுப்படி காலமைத்துத்**
**தாளொடு குயின்ற போரமை புணர்ப்பிற்**

**கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து**

**ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை''** **(நெடுநல்: 79-86)**

என்ற பாலடிகளால் தச்சர்களின் தொழில்திறன் புலப்படுகின்றன.

**வாணிபத்தச்சர்**

சங்ககாலத்தில் பொருளாதார நலனைப் பெருக்கும் வகையில் வாணிபம் சிறந்த நிலையில் இருந்தது. இவ்வாணிபத்திற்குத் தேவையான படகுகள் கப்பல் கட்டும் தொழிலில் தச்சர்கள் சிறந்து விளங்கினர். மேகத்தால் சூழப்பட்டு மலைபோலக் கடலால் சூழப்பட்டு அசையும் இயல்பினையுடைய கப்பல் செய்தனர் என்பதை,

**''ஆடியிற் பெருநாவாய்**

**மழை முற்றிய மலைபுரை''** **(மதுரை : 83-84)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் தச்சர்களின் கலைநுணுக்கத்தோடு கூடிய தொழில்திறனும் வெளிப்படுகின்றன.

**ஓவியத்தொழில்**

ஓவியம் என்பது சுவர், மரம், துணி, உலோகம், தோல் போன்ற ஏதாவது ஒன்றின்மேல் கோடுகளால் நிறத்தால் உருவங்களை எழுதும் தொழிலாகும். அதனைப் பழந்தமிழா் அனுபவித்த இயற்கை இன்பத்தை ஓவியமாகத் தீட்டி மகிழ்ந்தனர். ஒன்றினைப் போலச் செய்தல் என்ற எண்ணம் இவர்களைத் தம் உள்ளங்கவர்ந்த ஓவியங்களை வரையத் தூண்டின. வண்ணமலர்கள், மரஞ்செடி கொடிகள், பறவைகள் விலங்குகள் போன்றவற்றின் உருவங்களை வரைந்தனர். மொழியினை அறியாத மக்கள் தங்கள் கருத்துக்களை ஓவியத்தின் வாயிலாகவே பகிர்ந்து கொண்டனர். எண்ணங்களை எண்ணங்களின் எழுச்சியைப் பல வண்ணங்களின் துணைகொண்டு துகிலிகையால் படைக்கப்பட்ட கண்கவர் ஓவியம், ஓவம், சித்திரம், படம், வட்டிகை எனப்பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. ஓவியம் என்பதற்கு ஓவி, ஓவம் எனப்பல சொற்கள் காணப்படுகின்றன. இதனை,

**''ஓவுக் கண்டன்ன!''** **(மதுரை : 365)**

**''ஓவச் செய்தியின்!''** **(அகம் : 5:20)**

**''ஓவியம் கருப்ப!''** **(நெடுநெல் : 147)**

என்ற பாடலடிகளால் உணர்த்தப்படுகின்றன. ஓவியத்தை வரைவோர் வித்தகர், கண்ணுள் வினைஞர், ஓவியப்புலவன், ஓவாக்கள் எனப்படுவர். இவர்கள் வரைந்த ஓவியம் சிறப்பாக அமைய ஓவியனுக்கென்று சில தகுதிகள் இருக்க வேண்டும். அவை உலகப்பொருள்களைக் கூர்ந்துநோக்கும் திறன், கற்பனை உள்ளம், அளவுகள் பற்றிய அறிவு உள்ளமும் கையும், ஒன்றிச் செல்லும் பயிற்சி, வண்ணக்கலவையிலும், தூரிகை அமைப்பிலும் தேர்ந்த தெளிவு, நல்லொழுக்கம் நூற்புலமையுடன் அமைந்த கலையீடுபாடு, மெய்ப்பாட்டுணர்வு, முதலியன ஓவியப்புலவனுக்கு அமைந்துவிடின் தெய்வீக ஓவியங்களை உருவாக்கி விடுவான்''[2] என்பதற்கு ஏற்ப மதுரைக்காஞ்சியில் கண்ணுள் வினைஞர் நுண்மையான அறிவுடையவராக இருந்தனர்.

**“எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்**
**கண்ணுள் வினைஞரும் பிறருங்கூடி”** **(மதுரை: 510-51)**

என்று பொருளின் இயல்புகளை நுணுகிநோக்கும் திறனைப் பெற்றிருந்தனர். இவர்கள் பலவகைப்பட்ட தொழில்களையும் ஒப்புக்காட்டி நுட்பமாக உணர்ந்த கூர்மையான தொழிலாளர்கள். இவர்கள் “கண்ணுள் வினைஞர்” எனப் போற்றப்பட்ட ஓவியம் தம் உள்ளத்தை ஈர்த்த காட்சியை அப்படியே உயிருடையதுபோலத் தோன்றும்படி தம் கலையாற்றலால் ஓவியமாக வரையும் திறம் பெற்றிருந்தனர். இதனை

**“புலனுடை மாந்தர்**
**தாவுயிர் செய்த பாவை போல”** **(கலித்: 22:4-5)**

என்கிறது கலித்தொகை. பண்டைத்தமிழர் கண்டு மகிழ்ந்த காட்சிகளைச் சுவர்களிலும் கிழிகளிலும், தோலிலும், ஓவியங்களாகத் தீட்டினர். ஓவியக்கலையில் சிறப்புற்றிருந்த பெண்கள் சந்தனம் போன்ற நறுமணக் கலவையால் மகளிரின் நெற்றியில், தோள்களில், மார்பில் இலை, கொடி, மலர் போன்ற ஓவியங்களை அழகுற வரைவர். இக்கலை ‘தொய்யில் எழுதுதல்’ என்று சொல்லப்படுகிறது. இதனை,

**“பெருந்தோள் தொய்யில் விரித்தும்”** **(அகம் 389:6)**

என்கிறது அகம். மேலும் பெண்கள் விரல் நகங்களில், கன்னங்களில், பாதங்களில் அழகிற்காக வர்ணம் பூசிக்கொண்டனர். அக்காலத்தில் இளம்பெண்கள் தங்களது இயற்கை அழகிற்கு மேலும் அழகூட்டும் வகையில் ஒப்பனை செய்து கொண்டனர். அழகு செய்வதற்குப் பாதிரி மலரையொத்த தூரிகையைப் பயன்படுத்தினர். இதனை,

**“ஓவமாக்கள் உள்ளரக்கு ஊட்டிய**
**துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதி”** **(நற். 118:7-8)**

என்கிறது நற்றிணை. ஓவியம் வரையப்பட்ட இடம் எழுத்துக்கலை மண்டபம், எழுதொழில், அம்பலம், சித்திரமாடம் எனப்படுகிறது.

**எழுத்துநிலை மண்டபம்**

தமிழர் நிலவுலகில் கண்டு மகிழ்ந்த இயற்கைக் காட்சிகளை ஓவியமாகத் தீட்டி மகிழ்ந்ததோடு தாம் வாழ்ந்த காலத்து வழக்கிலிருந்த தெய்வங்களையும் ஓவியமாக வரைந்து மகிழ்ந்தனர். அத்தகைய ஓவியங்கள் வரையப்பட்ட மண்டபங்கள் எழுத்துநிலை மண்டபம், ‘எழுதொழில் அம்பலம்’ எனக் குறிப்பிடப்பட்டது. இங்கு ‘எழுத்து’ என்ற சொல் ஓவியத்தையும், ‘எழுது’ என்ற சொல் வரைதலையும் குறிக்கிறது. மக்கள் தத்தமக்கேற்ற ஆடை அணிகலன் பூண்டு முருகக்கடவுள் உறையும் திருப்பரங்குன்றம் நோக்கிச் செல்கின்றனர். அவர்கள் சிலர் அக்குன்றத்துள்ள சித்திரைச்சாலைகளிற் சென்று அங்குள்ள சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்தனர். அவர்களுள் சிலர் துருவச்சக்கரத்தைப் பொருந்தி வரும் சூரியன் முதலிய கிரகங்களின் நிலையை விளக்கும் சித்திரத்தைக் கண்டனர். தம் மனைவியர் சில சித்திரங்களைக் காட்டி கேள்வி கேட்கக் கணவர்கள் இவள் ரதி இவன் காமன் என்று

விடை கூறினர். வேறொரு இடத்திலுள்ள சித்திரத்தைப் பார்த்து இவ்வுருவம் பூனை உருவெடுத்த இந்திரன் அகலிகையைப் புணர்ந்ததால் கௌதமன் சாபத்தால் அகலிகை கல்லுருவானாள் என்று சிலர் கூறினர். இங்ஙனம் திருப்பரங்குன்றத்தில் முருகனின் திருக்கோயிலின் பக்கத்திலுள்ள இடம் பல சித்திரச் சாலைகளை உடையதாய் அழகோடு விளங்கியது என்பதை,

**"என்றூழ் உறவரும் இரு சுடர் நேமி**
**ஒன்றிய சுடர்நிலை உள்படுவோரும்;**
**'இரதி காமன்' இவள் இவன் எனாஅ**
**விரகியர் வினவ வினா இறுப்போரும்**
**இந்திரன் பூசை இவள் அகலிகை; இவன்**
**சென்ற கவுதமன்; சிவன் உறக்கல் உரு**
**ஒன்றிய படி இது என்று உரை செய்குவோரும்**
**இன்ன பல பல எழுத்துநிலை மண்டபம்"** **(பரி. 19: 46-53)**

என்று பல சித்திரம் நிற்றலையுடைய மண்டபம் என்ற பொருள்பட எழுத்துநிலை மண்டபம் எனக் கூறப்பட்டுள்ளது. சித்திரமாடங்கள் நகரங்களில் தனியே சிறப்புற்று விளங்கியதோடு மன்னரது அரண்மனைகளிலும் செல்வந்தர் இல்லங்களிலும் சுவர்களில் கண்கவர் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. நெடுநல்வாடையில் அரசமாதேவியின் கருப்பகிரகத்தின் தோற்றம் நக்கீரரால் வருணிக்கப்படுகிறது. அதில் காட்சிக்கினிய அந்த இல்லின் நெடுஞ்சுவர் செம்பினால் செய்தது போன்ற தொழில்திறன் அமைந்தது. அச்சுவரில் வடிவழகினை உடையதாகிய பலபூக்களையுடைய ஒப்பில்லாத பூங்கொடியை ஓவியமாக எழுதியிருந்தது என்பதை,

**"செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்**
**உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ**
**கருவொழு பெயரிய காண்பின் நல்லில்!"** **(நெடுநல்: 112-114)**

என்கிறது நெடுநல்வாடை. மாடங்களில் கருத்தமைந்த கண்கவர் ஓவியங்கள் வரைந்து அழகுபடுத்துவது அந்நாளில் இன்றியமையாத ஒன்றாய் இருந்தது. இவற்றோடு ஓவியத்தை மணலிலும், சுவரிலும், துணிகளிலும் தீட்டி மகிழ்ந்தனர். பெண்கள் கலைத்திறனோடு மணலில் ஓவியம் வரைந்து விளையாடினர் என்பதை

**"திணிமணல்**
**செய்வுறு பாவைக்கக் கொய்பூத் தைஇத்**
**தண்கய மாடு மகளிரொடு"** **(புறம் 234:1-3)**

என்கிறது புறம் சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டும் என்னும் பழமொழிக்கு ஏற்பச் சுவர்களில் தெளிவான ஓவியங்கள் வரையப்பட்டன. சுவரோவியங்கள் நெய்யோவியங்களாகவும், சுதையோவியங்களாகவும் செய்வதுண்டு. சுதை ஓவியம் என்பது சுவரில் சுதை பூசி அது உலராமல் ஈரமாயிருக்கும்போதே ஓவியம் தீட்டுவதாகும். சுவரோவியங்கள் சித்திரமாடங்கள் என்று பெயர்பெற்றன. எவ்வகையிலும் குற்றங்காண முடியாத அளவிற்குத் தெளிவான ஓவியம் சுவரில் எழுதப்பட்டுள்ளதை,

**“புனைசுவர்ப்**

**பாவையன்ன பழிதீர் காட்சி”** **(நற். 252: 6-7)**

என்கிறது நற்றிணை. இவ்வாறாகச் சங்கத்தமிழர் கோவில், அரண்மனை மாடமாளிகை, இல்லம் எனப்பல இடங்களில் தாம் வாழும் இடங்களில் உள்ளத்தைக் கவரும் வகையில் ஓவியம் வரைந்து அழகுபடுத்துவதில் ஆர்வம் கொண்டிருந்தனர் என்பதை இதன்மூலம் அறியமுடிகிறது.

**சிற்பத்தொழில்**

உயிரோட்டமுள்ள சிற்பம் வடிப்பதில் தமிழர் தேர்ச்சி பெற்றிருந்தனர். சிற்பத்தொழில் செய்வோர் சிற்பி என்று அழைக்கப்பட்டனர். இவர் உயிரில்லாப் பொருளுக்கு உருவம் கொடுத்துக் காண்பவர் கண்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறார். சிற்பி செதுக்கும் சித்திரம் கல், மரம், உலோகம் போன்ற பொருள்களின் மீது உருவங்களைப் பதிக்கிறது. உலோகத்தில் செதுக்குவாராயின் சித்திரத்தைக் ‘குடைவாக்கிச்’ செதுக்கி அதைச் சுற்றியுள்ள பகுதி குடைவாகச் செதுக்கப்படும். செதுக்கப்படும் சிற்பத் தொழிலின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் அடிப்படையாய் அமைவது நடுகற்கள், நடுகல் என்பது போரிலே உயிர்கொடுத்துப் புகழ்கொண்ட, மறவரின் பீடும் பெயரும் உலகத்தாற் அறியும் பொருட்டுக் கல்லிலே எழுதி நடுவர் இதனை,

**“அணிமயிற் பீலிசூட்டிப் பெயர்பொறித்**

**தினி நட்டனரே கல்லும்”** **(புறம் 204: 3-4)**

என்கிறது புறம் அக்காலத்தில் சிற்பநூல் இருந்ததாகச் சிலப்பதிகாரத்து அரங்கேற்றுக் காதையில், உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுகிறார். சிற்பநூல் அறிந்த தச்சர். நுட்பமாக நூலைப் படித்துத் திசைகளைக் குறித்துக்கொண்டு மதில்வாயிற் கதவுகளையும் நிலைகளையும் அமைத்தார்கள். கதவு நிலைக்கு மேல் குவளை மலர்களையும், பெண்யானைகளையும், திருமகளையும் சிற்ப வடிவில் அழகுற அமைத்தார்கள் என்று நெடுநல்வாடை சுட்டுகிறது. சிற்பக்கலை நுட்பம் வாய்ந்ததாகவும் அழகு நிறைந்ததாகவும் இருந்துள்ளது. அந்நாளில் மக்களிடையே வழிபடும் கடவுளருக்கு உருவம் அமைத்து வழிபடும் பழக்கமிருந்தது என்பதை,

**“வல்லோன் தைஇய வரிப்புனை பாவை**

**முருகியன் றன்ன உருவினை யாகி”** **(மதுரை 723-724)**

எனவரும் பாடலடிகளில் ‘வல்லோன்’ என்ற சொல் சிற்பத்துறை வல்ல கலைஞனைக் குறிக்கிறது. பாவை என்பது முருகனுக்குரிய திருவுருவைக் குறிக்கிறது. யானைத் தந்தத்தைச் செதுக்கியும் கடைந்தும் பல்வேறு கைத்தொழில் பொருள்களைச் செய்தனர். புலவர் நக்கீரர் அரசமாதேவியின் கட்டிலை வர்ணிக்கையில் அழகிற்காகத் தந்தத்தால் ஆன இலைகளைச் செய்தனர் என்று நெடுநல்வாடையில் தெளிவாக விளக்குகின்றார். யானையின் தந்தத்தைக் கொண்டு தொழில் திறமைமிக்கவர் கலைத்திறனோடு பல்வேறு பொருட்களைச் செய்தனர் என்பதை,

**“கோடு கடைந்தன்ன கொள்ளை வான்பூ”** **(அகம் 331:2)**

என்கிறது அகம்.

**கட்டிடத்தொழில்**

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவையாகக் கருதப்படுபவை உணவு, உடை, இருப்பிடம் என்பவை மனிதன் பாதுகாப்புடன் வாழத் தனக்கொரு இருப்பிடம் அமைக்க எண்ணிய எண்ணம் கட்டடக்கலையின் தோற்றத்திற்கு வித்திட்டது. பண்டைநாளில் ஆற்றங்கரையோரத்தில் வாழ்ந்த மனிதன் தனக்கென வீடு அமைத்து வாழத்தொடங்கினான். இவ்வீடுகளின் அமைப்பு அவரவர் வாழ்ந்த நிலத்திற்கு ஏற்ற வகையில் அமைந்தன. இவை நாளடைவில் ஒவ்வொரு குடும்பத்திற்கு ஏற்றவகையில், கட்டடங்களாக உருவெடுத்தன. மக்கள் அவரவர் செல்வநிலைக்கு ஏற்றவகையில் அமைந்த இல்லங்களில் வாழ்ந்தனர். தலைவர்களும் அரசர்களும் மாடமாளிகைகளிலும், அரண்மனைகளிலும் வாழ்ந்தனர். இவர்கள் வாழ்வதற்கு ஏற்ற அரண்மனைகள், மாளிகைகள், மாடங்கள், மன்றங்கள் கோவில்கள் கட்டடத் தொழிலாளியின் கைத்திறனால் உருவாக்கப்பட்டன. வைக்கோல் முதலிய சிறுபுல்லால் வேயப்பட்ட சிறுகுடில் முதலாக அண்ணாந்து நோக்க இயலாதபடி உயர்ந்து தோன்றும் எழுநிலை மாடம் முடிய பல கட்டிடங்களையும் திறம்பட அமைக்கும் கட்டிடத் தொழிலில் சங்ககால மக்கள் சிறந்து விளங்கினர். அக்காலத்தில் செங்கல் கட்டிடங்கள் சிறந்து விளங்கின. செங்கலால் கட்டிய கோயிலை ‘சுடுமண் ஓங்கிய நெடுநிலைக்கோட்டம்’ எனக் குறிப்பிடுகிறது. முல்லைநில ஆயர்கள் வாழ்ந்த இருப்பிடம் ‘கழிகளால்’ கட்டப்பட்ட சிறிய குடிலாக இருந்தது. அவை ஆடுகள் தின்னும் பொருட்டுத் தழைகளைக் கட்டிய குறிய கால்களையுடைய குடில்களாக இருந்தன. அவற்றை வரகு வைக்கோல் கற்றையால் வேய்ந்திருப்பர். இதனை

**“முரண்தலை கழிந்த பினறை மறிய**
**குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பை**
**செற்றை வாயில், செறிகழிக் கதவின்,**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**
**அதளோன் துஞ்சும் காப்பின் உதள,**
**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்**
**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்”** **(பெரும்பாண் : 147-154)**

என்கிறது பெரும்பாண் ஆற்றுப்படை மேலும் மலையை ஒத்த பெரிய இல்லங்கள் கட்டித் தமிழ் மக்கள் வாழ்ந்தனர் என்பதை

**“குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன**
**பருத்திருந்து உகக்கும் பன்மாண் நல்லல்”** **(மதுரை: 501-502)**

என்று குறிப்பிடுகிறது. இத்தகைய பெரிய இல்லங்கள் ஒன்றற்கொன்று தொடுக்கப்பட்ட படிகளையுடைய நெடிய ஏணிகள் சாத்தப்பட்ட சுற்றுத்திண்ணைகளையும்,

பலகட்டுகளையும், சிறுவாயிலையும், பெரிய வாயிலையும் நீண்ட இடைகழிகளையும் உடைய இடத்தில் மேகம் தவழும்படி மேன்மாடங்கள் அமைக்கப்பட்டன என்பதை

> **"குறுந்தொடை நெடும்படிக்கால்**
> **கொடுந்திண்ணை ப.்.றகைப்பில்**
> **புழைவாயில் போகிடை கழி**
> **மழை தோயும் உயர்மாடத்து"** **(பட்டினப்.: 142-144)**

எனக் குறிப்பிடுகிறது. இத்தகைய மேன்மாடத்தில் தென்றல்காற்று வரும் வகையில் சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதனை, 'வளிநுழையும் வாய்' (நெடுநல்.11-12) என்றனர். இதனோடு மன்னன் தன் தலைநகரை நாற்புரம் நோக்கவும் தொலைவில் பகைவர் வரவைக்காணவும் பகைவர் முற்றுகையிட்டு உழிஞைப்போரை நடத்துங்கால் நொச்சிப்போரைக் கண்காணிக்கவும் தக்க வகையில் அவன் அரண்மனையில் எழுநிலை கொண்ட ஓர் உயர்ந்த தேர் போன்ற கட்டிடம் கட்டப்படுவதுண்டு. அதற்குப் 'புரம்' என்பது பெயர் புரம் என்பது உயர்ந்த கட்டடமான மேல்மாடம் என்று பொருள் குறிக்கும். இதன்மூலம் பண்டைத்தமிழர் எளிய அமைப்பினை உடைய குடில்கள் முதலாகக் கலைத்திறனோடு விளங்கும் வானளாவிய எழுநிலைமாடம் ஈறாகப் பல்வேறு அமைப்புகளைக் கொண்ட கட்டடங்கள் கட்டுவதில் கைதேர்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**மட்கலத்தொழில்**

சங்ககாலத்தில் உணவுப்பொருள்களைச் சேமித்து வைப்பதற்கு மண்பாண்டங்களைச் செய்தனர். இவர்களுக்கு முன் வாழ்ந்த மக்கள் விலங்குகளின் தோலினாலாகிய பைகள், தாவரங்களின் ஓடுகள் போன்றவற்றைப் பயன்படுத்தினர். மட்பாண்டங்கள் தண்ணீர் உணவுப்பொருள்கள் முதலியவற்றைச் சேமித்து வைக்கவும், உணவு சமைக்கவும் சாப்பிடவும் உதவின. இவை மரம்தோல் முதலிய பொருள்களால் செய்த பண்டங்களைவிடத் தூய்மையாகவும், நெருப்பில் அழியாமலும் தண்ணீரில், கரையாமலும் இருந்ததனால் மக்கள் அதிகமாகப் பயன்படுத்தினர். மட்பாண்டங்கள் முதலில் 'சுரை ஓடுகள்' கூடைகள் முதலியவற்றைப் பார்த்துச் செய்யப்பட்டன. பல ஆதிவாசிகள் மட்பாண்டங்கள் செய்வதற்குக் கூடைகளை அச்சாகப் பயன்படுத்தினர். பல பழைய மட்பாண்டங்களில் கூடைகளின் அடையாளங்கள் காணப்படுகின்றன. மட்கலத்தொழில் செய்வோர் 'கலஞ்செய்கோ' எனப்பட்டனர் இதனை,

> **"நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே"** **(புறம் 228:2-4)**

என்கிறது புறம். மேலும் இவர்கள் 'வேட்கோ' எனவும் 'வேட்கோச்சிறார்' எனவும் அழைக்கப்பட்டனர்.

> **"வேட்கோச் சிறார் தேர்க்கால் வைத்த"** **(புறம் 32: 8)**

என்ற அடி புலப்படுத்துகிறது. அதிக அளவில் மண்பாத்திரங்கள் செய்ய சக்கரங்கள் பயன்படுத்தப்பட்டன. குயவனுடைய வனையும் மட்கலத்தின் சக்கரம் போல மதகுகள் வழியாகக் குமிழ்த்துச் சுழன்று வரைந்த செலவினையுடையதாகச் சேயாறு ஒழிவின்றி

ஓடிவரும் என்பது குயவன் மட்கலஞ் செய்யும் உருளையின் சுழற்சிக்கு உவமையாகக் கூறப்படுகிறது இதனை,

**"வனைகலம் திகிரியின் குமிழி சுழலும்**

**துணைசெலல் தலைவாய் ஓவிறந்து விரிக்கும்" (மலைபடு : 474-475)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. மட்கலஞ்செய்யும் பொழுது முழுக்கவனுத்துடன் அதில் ஈடுபட்டனர். மட்கலங்களைச் சுட அமைக்கப்பட்ட பெரிய சூளைகளிலிருந்து மிகுந்த புகை எழுந்தது. வீடுகளில் பயன்படும் சிறிய 'கலன்களோடு' இறந்தோரை வைத்துப் புதைக்கும் 'தாழிகளும்' இவர்களால் செய்யப்பட்டன என்பதை

**"தாழிக் குவளை வாடுமலர் சூட்டி" (அகம் 165:11)**

என்று உவமையால் உணர்த்தப்படுகின்றது.

**மண்பானைகளின் வகைகள்**

பலவகையான மண்பானைகள் குயவர்களால் செய்யப்பட்டன. அவை

குழிசி – கயிறு பிணிக் குழிசி (அகம் 77:7)

சாடி – நனைமுதிர்ச்சாடி (புறம் 297:6)

கலன் – பெருங்கன், குறுமுயல், கருங்கலன் (புறம் 322:5)

கன்னல்– தொகுவாய்க் கன்னல் (நெடுநல்: 63)

தசும்பு – சுடுமண் தசும்பின் (நற். 84:6)

மண்டை– கவிழ்ந்த மண்டை (புறம் 103:3)

இவ்வாறு செய்யப்பட்ட பல்வேறு விதமான மண்பானைகள் மக்களது விருப்பத்திற்கு ஏற்றவாறு செந்நிறமாகவும், கருநிறமாகவும் செய்யப்பட்டன என்பதை,

**"செந்தாழிக் குவிபுறத் திருந்த" (புறம் 238:1)**

**"பெருங்கட் குறுமுயல் கருங்கலன்" (புறம் 322:5)**

என்ற புறநானூற்று வரிகள் புலப்படுத்துகின்றன.

**தசும்பு**

முல்லைநில மக்கள் பால், தயிர், வைக்க மண்ணால் ஆன பானைகளைப் அதிகமாகப் பயன்படுத்தினர். தசும்பு எனப்பட்ட மட்கலம் பால், தயிர் வைப்பதற்கன்றிக் கள் நிறைத்து வைப்பதற்கும் பயன்படுத்தப்பட்டது. கள் நிறைத்து வைக்கும் தசும்புகளை மலர்மாலையாலும் இஞ்சி மாலையாலும் அலங்கரித்து மண்மேல் வைப்பர். இப்பானைகளின் மேற்புறத்தைச் சந்தனத்தால் பூசி வைத்ததை

**"இஞ்சீவி விராய பைந்தார் பூட்டிச்**

**சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் இருக்கை**

**தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்" (பதிற் : 42:10-12)**

என்கிறது பதிற்றுப்பத்து.

**பழக்கத்திலிருந்த பாத்திரங்கள்**

மக்கள் உணவைச் சேமிப்பதற்கும் சமைப்பதற்கும் பலவகையான மண்பாண்டங்களைப் பயன்படுத்தினர் புளியங்காய், நெல்லிக்காய் முதலிய ஊறுகாய்கள் வைக்கப்பட்ட பாத்திரம் 'மிடா காடி வைத்த கலன்' எனப்பட்டது. உணவுப்பண்டமான அப்பம் சுடுவதற்கு மண்ணலாகிய சட்டி பயன்படுத்தப்பட்டது. இது 'அகல்' எனப்பட்டது. நீண்ட உருவமும் சிறுத்த வாயையும் உடையதாய்ச் செய்யப்பட்ட கலன் 'குப்பி' எனப்பட்டது. குவிந்த வாயையுடைய நீருண்ணும்பாத்திரம் 'தொகுவாய்க் கன்னல்' என்று பெயர்பெற்றது. நாழிகை வட்டிலில் நீரிட்டு ஒரு சிறுதுளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு அந்நீரினை அளந்து காணும் கருவியைக் 'குறுநீர்க்கன்னல்' என்றனர். கூதிர் காலத்தில் குளிரைப் போக்க விரிந்த வாயையுடைய பெருந்தாழிகளில் நெருப்பை வளர்த்து அதன் வெம்மையை நுகர்வர். இதற்குப் பயன்படுத்தப்பட்ட மட்கலம் 'தடவு' எனப்பட்டது. இதனை,

**"பகுவாய்த் தடவிற் செந்நெருப்பயர"** **(நெடுநல் : 66)**

என்கிறது. இவ்வாறு பல்வேறு நிலைகளிலும் தேவைக்கேற்ற வகையில் மண்பாத்திரங்கள் பழக்கத்திலிருந்தமையை அறியும்பொழுது பண்டைத்தமிழர் மட்கலத் தொழிலில் திறமையுடையவராய் இருந்ததை அறிய முடிகிறது.

**கொல்லுத்தொழில்**

தமிழர் உலோகத்தொழிலில் மேம்பட்டிருந்தனர். மேலும் கொல்லுத்தொழிலை ஒருவகையில் தச்சுத்தொழிலின் ஒரு பகுதியாகக் கருதலாம். சங்ககாலப் பொருளியல் வாழ்வில் கொல்லரும் தச்சரும் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தனர். மேலும் பயிர்த்தொழிலுக்கு வேண்டிய கருவிகளைச் செய்தனர். ஓர் அரசனுக்குத் துணையாய் அமைபவர் படைவீரர்கள், அவர்கள் ஆற்றலை வெளிப்படுத்தத் துணைபுரிவன போர்க்கருவிகள், இக்கருவிகளை வடித்துத் தருபவர் கொல்லர்கள் ஆவர். இவர்கள் 'இரும்புசெய் கொல்லர்கள்' எனச் சிறப்பிக்கப்படுகின்றனர். போருக்குரிய கருவிகளை வடித்துத் தருவதும் களிறுகளின் கொம்புகளுக்குப் 'பூண்' அமைப்பதும் யானைகளைக் கட்டுவதற்குரிய சங்கிலிகளைச் செய்வதும் இவர்களுடைய பணியாகும். கொல்லன் தொழில்புரிந்த இடத்தைப் புறப்பாடல் 'கொற்றுரை' எனக் குறிக்கிறது. அதற்கு உ.வே.சாமிநாதையர் அவர்கள் உரை எழுதும்பொழுது 'பணிக்களரி' ஆகிய 'குறியகொட்டில்' என்றுக்குறிப்பிடுகிறார். ஒடிந்தது மழுங்கியது ஆகிய போர்க்கருவிகளைச் செப்பனிட்டதோடு புதிய கருவிகளும் இங்கு செய்யப்பட்டன. ஏழு ஊர்களில் உள்ள மக்கட்குச் செய்யவேண்டிய பொதுவான கொல்லுத்தொழிலுக்கு 'ஓர்கொட்டில்' இருந்த நிலையைக் குறுந்தொகை.

**"ஏழுர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த**
**உலைவாங்கு மிதிதோல்"** **(குறுந் 172: 5-6)**

எனக் குறிப்பிட்டுள்ளது. கொல்லர்கள் ஊர்தோறும் உழவர் முதலியோர்க்கு வேண்டிய கருவிகளை அவ்வப்போது செய்து கொடுத்து ஆண்டு முடிவில் ஊதியம் பெற்றனர்.

ஏழுர்க்குத் கருவிகள் பொதுவில் செய்யவேண்டிய கொல்லுலையில் துருத்தி இடையறாது இரவு பகல் இயங்கியது. அந்நாளில் போர்ப்படைக்குப் பயன்படும் வேல் முதலிய கருவிகளைத் திருத்தமாக வடித்துத் தருதல் கொல்லனின் தலையாய கடமையாகக் கருதப்பட்டதை

**"வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"** **(புறம் : 312:3)**

என்கிறது. அதிகாலையில் வேலைசெய்யத் தொடங்கும் கொல்லனின் இரும்படித்த ஓசைகேட்டு மாடத்து உறங்கிய புறவின் சேவல் அஞ்சி உறக்கத்திலிருந்து விழித்தது இத்தகைய காட்சியை,

**"கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறித்த**
**கூடத் திண்ணிசை வெரிஇ மாடத்து**
**இறையுறை புறவின் செங்காற் சேவல்**
**இன்துயில் இரியும்"** **(பெரும்பாண் 437-440)**

என்கிறது பெரும்பாணாற்றுப்படை. கொல்லர்கள் தோலிலான துருத்தியைக் காலால் மிதித்துத் தீயுண்டாக்கினர். அவர்கள் கருங்கல் அல்லுவதற்குப் 'குறட்டினைப்' பயன்படுத்தினர் இக்கொல்லர்கள் இரும்பைக் காய்ச்சிச் சம்மட்டியால் அடித்தனர்.

**உலைக்களக்காட்சி**

கொல்லன் உலைக்களத்தில் இரும்பைச் சம்மட்டியால் அடிக்கும்பொழுது தீப்பொறிச் சிதறுவது, மழைக்காலத்து இரவில் மின்மினி மொய்த்த புற்றினைக் கரடி ஒன்று அடித்து உடைக்க அப்பொழுது மின்மினிப் பூச்சிகள் சிதறி ஓடுவதுபோலக் காணப்படுகிறது என்பதை,

**"பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்**
**குறும்பி கொண்டும் பெருங்கை ஏற்றை**
**இரும்புசெய் கொல்லெனத் தோன்றும் நாடன்"** **(அகம் : 27)**

என்கிறது அகநானூறு.

**இரும்பாலான பொருட்கள்**

குயம் (அரிவாள்) இரும்புத்தகடு, கவைமுட்கருவி, மத்திகை (சம்மட்டி) நில அகழும் உளி, வளைவுக்கத்தி, தொடலைவாள், ஊசிகள், படைக்கலக்கருவிகள் போன்ற பல்வேறு வகையான இரும்பாலான பொருட்கள் அக்காலத்து நிலவிய கொல்லர் தொழிலை நன்கு விளக்குகின்றன. இரும்பைப் பொருளாகக் கொண்டு தொழில் செய்த மக்கள் 'கருங்கைக் கொல்லர்' என்று பல பாடல்களில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளனர். கடினமான தொழில் செய்வராதலின் இவ்வாறு குறிப்பிடப் பெற்றிருக்கலாம்.

**உலோகத்தொழில்**

இரும்புபொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு தொழில் செய்யும் கொல்லர்கள் இருந்ததுபோலவே வெண்கலம், செம்பு முதலிய உலோகங்களை உருக்கும் திறம் பெற்று அவற்றால் மக்கள் பயன்படுத்தக்கூடிய பலவகையான பொருட்களையும் செய்யவல்ல உலோகத்தொழிலாளர்கள் இருந்தனர். அவர்கள் ஊர்தோறும் தங்களுக்குரிய தொழில் வகைகளைப் பெருக்கி இருந்தனர். வெண்கலத்தை உருக்கிக் கலங்கள் செய்பவர் 'கஞ்சக்காரர்' என்றும் செம்பினால் கலம் செய்பவர் செம்புகொட்டிகள் என்றும் அழைக்கப்பட்டனர். இவர்கள் செய்த பானை செம்பினால் ஆனது என்பதை,

**"கம்மியர் செம்புசொரி பானை"** **(நற். 153:2)**

என்கிறது நற்றிணை. மேலும் மதுரை புறஞ்சேரியில் இருந்த சமணப்பள்ளியின் சுவர்கள் செம்பினால் செய்தாற் போன்று உறுதிபெற்றிருந்தன. மதுரையில் செம்பின் விலை மிக குறைவாக இருந்ததனால் செம்பு நிறுத்துவாங்கப்பட்டது. பாண்டியன் அரண்மனையின் அந்தப்புரச் சுவர்கள் செம்பினால் செய்தாற் போன்று உறுதியும் வேலைப்பாடும் பெற்றிருந்தன என்பதை

**"செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்"** **(நெடுநெல்: 112)**

என்ற பாடலடி உணர்த்துகிறது.

**உண்கலன்**

செல்வந்தர் இல்லங்களில் அன்றாடத் தேவைக்குப் பொன்னாலும், வெள்ளியாலும் ஆன பாத்திரங்களைப் பயன்படுத்தினர். 'வயிரக்கற்கள்' இழைத்த கலன்களும் வழக்கில் இருந்தன. கரிகாலன் அரண்மனையில் இருந்த பணிப்பெண்கள் அரசனுக்கும், அவனுடைய விருந்தினர்க்கும் 'பொன்னாலான கிண்ணத்தில்' கள்ளை ஊற்றிக் கொடுத்தனர். அதோடு பாண்டியன் 'பொலங்கலத்தில் மணங்கமழ் தேறலைப்' பருகினான் என்றும் அரண்மனையில் பாணர் போன்ற விருந்தினர்க்கும் பொற்கலம் உண்கலமாகப் பயன்பட்டது. மேலும் பல்வேறு சுவையுடைய உணவு வகைகளைக் கோள்கள் சூழ இருந்த இளஞாயிற்றை இகழும் தோற்றமுடைய பொன்னாலியன்ற உண்கலன்களில் இட்டு வழங்கினர் என்பதை,

**"................ பல்வேறு அடிசில்**
**வாணிற் விசும்பல் கோண்மீன் சூழந்த**
**இளங்கதிர் ஞாயிறு எள்ளுந் தோற்றத்து**
**விளங்குபொற் கலத்தில் விசும்புவன பேணி"** **(சிறுபாண் 241-244)**

என்ற பாடல் மூலம் உணர்த்தப்படுகிறது. வெள்ளியிலான கலம் உண்கலமாகப் பயன்பட்டது. சிறிய வெள்ளிக்கலன்கள் குழந்தைகள் உண்ணவும் பெரிய வெள்ளிக்கலன்கள் அனைவரும் உண்ணவும் பயன்பட்டன. வயிரக்கற்கள் இழைத்த கலன்கள் இருந்தமையை

**"மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி"** **(அகம் : 110)**

என்கிறது அகம். பண்டைத்தமிழர் பலவகையான உலோகங்களைப் பயன்படுத்தித் தேவையான பொருட்களைச் செய்தனர். அவை செம்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு செய்து சிறப்புடன் வாழ்ந்தனர்.

**அணிகலத்தொழில்**

அழகுக்கு அழகு செய்வன அணிகலன்கள். சங்க இலக்கியத்தின் தொடக்கக்காலத்தில் இயற்கையோடு இலை, தழைகளை ஆடையாக அணிந்த மக்கள் வண்ணமலர்கள் கொடி, இலை ஆகியவற்றை அணிகளாக அணிந்து தம்மை அழகுபடுத்தினர் என்பதை,

**"ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்" (கலித் )**

என்கிறது. நெய்தல் நிலக்கரைகளில் கிடைத்த கிளிஞ்சல்கள், கடலில் கிடைத்த முத்து, பவளம், சங்கு முதலியன அணிகளாகப் பயன்படுத்தப்பட்டன. அதற்கு அடுத்தநிலையில் வெள்ளி, பொன் முதலிய உலோகத்தால் ஆன அணிகளை அணிந்தனர். கல் இழைத்த பொன் அணிகளைச் செய்யத் தொடங்கினர். படிப்படியாக அணிகலத்தொழில் வளர்ந்து தமிழரின் கைத்திறன்களைக் கவரும் வகையில் சிறப்புற்றது. மக்கள் வாழும் நிலை, சூழல் ஆகியவற்றிற்கு ஏற்றவாறு அணிகள் செய்யப்பட்டன. மலர் அணியும் வழக்கம், குறிஞ்சி நிலத்திலும், முத்து பவளம் அணியும் வழக்கம், நெய்தல் நிலத்திலும் இருந்தது. மேலும் மிளகுமாலை மண்ணால்செய்த உருண்டை மணிமாலை போன்றவைகளும் பளிங்கு போன்ற பல வண்ணக்கற்கள் கோத்த மாலைகளும் காப்புடை தாலி போன்ற அணிகள் அணியும் வழக்கம் மருதநிலத்தில் இருந்தது. பழங்காலச் சமுதாயத்தில் பொதுமக்கள் அணிந்த அணிகளிலும் அரசாண்ட மன்னனது முடி மிகநுண்ணிய வேலைப்பாடுடன் செய்யப்பட்டிருந்தது. அரசமாதேவியின் அணிந்த அணிகலன்களும் சிறந்த வேலைப்பாடுடன் செய்யப்பட்டிருந்தன. வாணிகப் பெருமக்கள் வீடுகளிலும சிறந்த விலையுயர்ந்த அணிகலன்கள் பயன்படுத்தப்பட்டன. 'பொற்கொல்லர்' அணிகள் செய்ய 'அரம்' என்ற கருவியைப் பயன்படுத்தினர் என்பதை,

**"அரம்போழ்ந் தறுந்த இலங்குவளை" (மதுரை : 316)**

என்கிறது மதுரைக்காஞ்சி. அணிகலன் உடைந்துவிட்டால் அதனைப் பொற்கொல்லனிடம் கொடுத்துப் புதுப்பிக்கும் முறையும் அக்காலத்தில் வழக்கத்தில் இருந்தது. அதோடு ஒருபொருளை அழித்து மற்றொரு அணிகலன் செய்யும் வழக்கமும் இருந்தது. போரில் வெற்றிபெற்ற மன்னன் தன்பகை மன்னர்களின் மணிமுடியை அழித்து அப்பொன்னைக் கொண்டு அணிகலன் செய்தான். மேலும் பகைமன்னர்களது ஏழு முடிகளை அழித்துச் சேரமன்னன் பொன்னாலாகிய மாலை செய்து கொண்டான் என்பதை

**"ஏழுமுடி கெழிஇய திருஞெம ரகலத்து" (பதிற்: 16-17)**

என்கிறது பதிற்றுப்பத்து. பண்டைத்தமிழர் முடிமுதல் அடிவரை எல்லா உறுப்புகளிலும் அணிகள் பல அணிந்தனர். அவர்கள் தாம் தேடிக்குவித்த பொன்னையும்,

பொருளையும் பல்வகை அணிகலன்களைச் செய்து அணிந்தனர். ஆண்களும், பெண்களைப் போலவே அணிகள் பல அணிந்திருந்தனர்.

**தலையணி**

இக்காலத்தில் பெண்கள் கூந்தல் அலங்காரத்தைச் செய்வதைப்போன்றே சங்ககாலத்தில் பெண்கள் கூந்தலில் பலவகை அணிகலன்களை அணிந்தனர். வாடும் மலர்மாலையை அணிந்ததோடு வாடாத பொன்னாலான மாலைகளையும் கூந்தலில் சூடினர். தலைக்கு அலங்காரமாகப் பயன்பட்ட அணி 'தலைக்கோலம்' என்றழைக்கப்பட்டது. தலைக்கோலம் பலவகையான வடிவங்களில் செய்யப்பட்டன. அவற்றில் தொய்யகம் என்பது ஒரு தலைக்கோலம் இதனை

**"தொய்யகம் தாழ்ந்த கதுப்புப் போல" (கலி 28:6)**

என்கிறது கலித்தொகை. 'தெய்வவுத்தி' என்பது இன்னொரு தலைக்கோலம். இதனைச் 'சீதேவியார்' என்றும் அழைப்பர்.

**"தெய்வவுத்தியோடு வலம்புரி வியன் வைத்து" (திருமுருகு : 23)**

என்ற பாடலடி இதனை உணர்த்துகிறது. 'சுரிதகம்' என்பது மற்றொரு தலைக்கோலம் அதன் வடிவத்தில் வெளிவட்டம் பெரிதாகவும் அதற்கு உள்ளடங்கிய வட்டங்கள் அதனினும் சிறிது சிறிதாக வந்து ஒரு 'செம்மணிக் கல்லில்' முடிவது போல அமைந்ததனால் சுரிதகம் எனப்பெயர் பெற்றது. 'முஞ்சம்பிறை' என்பது சிறுவர்கள் அணியும் தலையணி.

**"புதல்வர்**
**கயந்தலை முச்சிய முஞ்சமொடு தமிஇ" (பரி 16:7-8)**

என்கிறது பரிபாடல்.

**கழுத்தணி**

பண்டைத் தமிழகப் பெண்கள் கழுத்தணிகள் பல அணிந்தனர். அவை நுட்பமான வேலைத்திறனுடன் பொன்னால் செய்த அணிகலனில் வைரங்கள் இழைக்கப்பெற்றிருந்தன என்பதை,

**"திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்**
**வயங்குகதிர் வயிரமொ டுறழ்ந்து பூண்சுடர் வர" (பதிற். 16:15-16)**

என்கிறது பதிற்றுப்பத்து.

**கையணி**

அக்காலத்தில் ஆண்கள், பெண்கள், சிறுவர் யாவரும் கைகளில் 'கடகம் தொடி' என்னும் அணிகளை அணிந்தனர். 'ஏழை முதல் அரசகுலப்பெண்டிர்' வரை சங்கு வளையல்களை அணிந்தனர். இவ்வளையல்களை முன்கையில் அணிவர்.

**"வாளரம் பொருத கோணேர் எல்வளை**
**அகன்தொடி செறித்த முன்கை" (நற்.77: 9-10)**

தொடி, கடகம் என்ற அணிகலன்களை முன்கையில் அணிவர். இவர்கள் வெள்ளியினாலும், முத்தினாலும் அழுத்திச் செய்த வளையலை அணிந்தனர். இவ்வளையல் பல நுண்ணிய வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டிருந்தன.

**விரலணி**

கைவிரல்களில் மோதிரம் அணியும் வழக்கம் இருந்தது. மோதிரத்தை ஆண்கள், பெண்கள் இருவரும் அணிந்தனர். இதனால் பலவடிவமுடைய மோதிரங்கள் தோன்றின. இவற்றில் மீன் வாய் திறப்பது போன்ற வடிவமுடைய மோதிரம் 'முடக்குமோதிரம்' என்றழைக்கப்படும். மேலும், 'சுறாமீன்' வடிவத்திலும் மோதிரம் அணிந்திருந்தனர். 'மோசை' என்பது கைவிரலில் அணியும் மற்றோர் அணி. இது முன்கை வளையோடு சங்கிலியால் பிணைக்கப்பட்டிருக்கும் என்பதை

> **"ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத் தொடுஉம்**
> **மெல்விரல் மோசை" (நற்.188:3-4)**

என்கிறது நற்றிணை.

**இடையணி**

இக்காலத்தில் பெண்கள் திருமணத்தின்போது அணியும் ஒட்டியானத்தைப் போன்றே சங்ககாலத்திலும் இடையில் மேகலை, காஞ்சி என்ற இடையணியை அணிந்திருந்தனர். இவை பல முத்துவடங்கள் தொடங்கவிடப்பட்டுப் பட்டையாக அமைக்கப்பட்டுள்ளன. கைத்தொழிலாலே பொலிவுபெற்ற பொன்மணிகள் இடையிடையே அமைக்கப்பட்ட மேகலைகள் அணிந்திருந்தனர். அதனோடு பவளவடமும் அமைந்த மேகலையும் அணிந்திருந்தனர் என்பதை,

> **"கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேல்**
> **மையில் செந்துகிர்க் கோவை அவற்றின்மேல்" (கலி 85:3-4)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. மேகலையோடு 'பாண்டில்' என்பது பொன்னால் வட்டமாகச் செய்யப்பட்ட அணிவகை. இதனைச் சுற்றி மணிக் கொத்து மேகலையோடு அணிதல் பண்டை மரபு.

**காலணிகள்**

இன்றைய பெண்கள் கால்களில் கொலுசு அணிவது போன்று சங்ககாலத்தில் 'சிலம்பு', 'கிண்கிணி' என்ற இருவகை காலணிகளை அணிந்திருந்தனர். அவை வெள்ளியாலும், பொன்னாலும் செய்யப்பட்டது. சிலம்பினுள் இரத்தினக் கற்களையும் முத்துக்களையும் பரவலாக இட்டுச் செய்வர். பெண்கள் காலில் அணியும் மற்றோர் அணி 'கிண்கிணி' இது 'அங்காந்த' (தேரையின்) தவளையின்வாய் வடிவத்தில் செய்யப்பட்டிருந்தது. இவை தவிர 'பாடகம்', 'பரியகம்' என்னும் காலணிகளையும் அணிந்திருந்தனர். போரில் வென்ற பகைமன்னரது முடிகளை அழித்து அப்பொன்னால் கழல் செய்தணிதல் வேந்தர் இயல்பு என்பதை,

**“முடிபுனைந்த பசும் பொன்னின்**

**அடியொலியக் கழல்தைஇய வல்லாளனை”                    (புறம்40:3-4)**

எனும் அடிகளால் காட்டுவர்.

**தோல் தொழில்**

தமிழர் தோலின் பயனறிந்து வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களைத் தோலைப் பதப்படுத்திப் பயன்படுத்தியுள்ளனர். அவற்றில் அதள், பச்சை, உரிவை, உரி, சருமம் போன்ற பெயர்கள் தோலுக்கு மாற்றாக வழங்கப்பட்ட பெயர்கள். போர்மேற் செல்பவர்கள் பகைவர்களின் தாக்குதலினின்று தங்களைக் காத்துக்கொள்வதற்குத் தோலால் ஆகிய கேடகத்தை மிகுதியாகக் கொண்டு செல்வர். போரில் ஈடுபடும் வீரர்கள் தேர் செலுத்துவோர் ஆகியோர் கைவியர்த்தலால் ஏந்திய படை நெகிழாமல் இருக்கும் பொருட்டுக் கைச்சரடு அணிவர். இது உடும்பின் தோலால் செய்யப்பட்டது. தங்கள் உடலை வாள், வேல் ஆகியவற்றின் தாக்குதலினின்றும் காத்துக்கொள்ளக் கவசம் அணிவர். இக்கவசத்தை ‘மெய்புதைஅரணம்’ என்றும் சொல்வர் இது இரும்பினால் செய்யப்படும் அல்லது புலித்தோலால் செய்யப்படும் என்பதை,

**“புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய**

**எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பன்”                    (புறம்13:2-3)**

என்ற புறநானூற்றுப் பாடல்களால் அறியமுடிகிறது. புலிநிறக்கவசம் என்பது புலித்தோலால் செய்யப்பட்ட ‘மெய்புகுகருவி’ என்றும் புலித்தோலில் உள்ள வரியுடன் இணைப்பும் கலந்து அழகு செய்தலின் அதனைப் ‘பூம்பொறி’ என்றும் புலிநிறக் கவசத்தைப் புலிப்பொறிப் போர்வை என்றும் கூறுவர். போரினை முறைப்படி வழிநடத்திச் செல்லப் போர்முரசு மிக இன்றியமையாத ஒன்றாகும். இப்போர் முரசு வன்மையான மயிர் நீக்கப்படாத தோல்களால் செய்யப்பட்டது. இதையொத்த பிற இசைக்கருவிகளும் நன்றாகத் தோல்வார்களால் இழுத்துக் கட்டப்பட்டன. இதனை ‘விதித்து வினைமாண்ட மயிர்க்கண் முரசம்’ (புறம் 63:7) என்கிறது. கொல்லன் பட்டறையில் பயன்படுத்தப்பட்ட ஊதுலைக்கருவி மெல்லிய தோலால் செய்யப்பட்டது என்பதை

**“மென்தோல் மிதியுலை”                    (பெரும் 206:7)**

என்கிறது பெரும்பாணாற்றுப்படை.

**செருப்புத் தைக்கும் தொழில்**

சங்ககால மக்களிடையே தோலால் செருப்புத் தைக்கும் பழக்கம் இருந்தது. நிழலின் அருமை வெயிலில் தெரியும் என்பதை உணர்ந்த அக்கால மக்கள் செருப்பைத் தோலால் தைத்துக்காலில் அணிந்தனர். செருப்பு என்ற காலணி தொடுதோல், அடிபுதை, அரணம், அடையல் என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்காலமக்கள் செருப்புத் தைக்கும் முறையை வகைப்படுத்தினர். அவற்றில் முதல்நிலையாகத் தைப்பதற்கென அமைந்த தோலை மென்மைத்தன்மையோடு செந்நிறமாக மாறும்வரை ‘துவர்’ நீர்த்துறையில் முழுவதும் மறையும்படி

அழுத்திப்பதப்படுத்தினர். பின்னர் பதப்படுத்தப்பட்ட தோல் பல்வேறு வண்ணத்தாலும் வடிவத்தாலும் அளவால் பொருந்தக் கூடிய வகையில் வடிவமைத்தனர். அதன் மேற்புறத்தில் மயிற்பீலின் பிளவினை வைத்துத்தைத்து அழகுப்படுத்தினர். இவ்வாறு செருப்புத் தைக்கும் தொழில் முறைப்படுத்தப்பட்டது என்பதை

**"தைப்பமை சருமத்தில் தாளியை தாமரை**
**துப்புமை துவர்நீர்த் துறைமறை அழுத்திய**
**வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த**
**வரிமலி யரவுரி வள்புகண் டன்ன**
**புரிமென் பீலிம் போழ்புனை அடையல்" (பரி 21:2-7)**

என்கிறது பரிபாடல்.

**கால்நடைப் பாதுகாத்தல்**

முல்லை நில மக்கள் நீர்வளமும் நிலவளமும் குறைந்த புன்செய் நிலப்பகுதியில் மக்கள் ஆடு, மாடு வளர்ப்பதைப் பெருந் தொழிலாகக் கொண்டிருந்தனர். அந்நாளில் பசுக்கள் வளர்ப்பது பெருஞ்செல்வமாகக் கருதப்பட்டது. பசுமாடு இருந்தால் 'பசியாமல் சாப்பிடலாம்' என்ற பழமொழி அதன் அடிப்படையிலேயே தோன்றியது மக்கள் பயிர்கள் விளைவிப்பது மட்டுமின்றிக் கால்நடைகளைப் பேணிக்காப்பதிலும் கவனம் செலுத்தினர். நிரைகளை மேய்ப்பதற்கு அதிகாலையில் கன்றுகளைத் தொழுவத்தில் நிறுத்திவிட்டு நிரைகளை ஒட்டிக்கொண்டுச் செல்வர். ஆடு மாடுகள் மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட மக்கள் ஆயர் கோவலர் இடையர் என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். இவர்கள் இத்தொழில் அல்லாமல் வேறுதொழில் அறியாதவர்கள் அதனால் 'கல்லாக்கோவலர்' எனப்பட்டனர். இக்கோவலர் கால்நடைகளை மேய்க்கச் செல்லும்போது 'உறியுடன் தீக்கடைக்கோல்' முதலிய கருவிகளை இட்டு வைத்த தோற்பையை ஒருசேரச்சுருக்கிட்டுப் பனையோலைப் பாயோடு முதுகில்கட்டி எடுத்துச்செல்வர் பின் நிரைகளைப் புல் மிகுதியாக உள்ள பரந்த நிலத்தில் மேயவிடுவர் நிறைகள் வேறிடம் செல்லாமல் அவ்விடத்திலேயே தங்குவதற்கு 'விளை' எனப்படுகிற வாயைக் குவித்தூதும் குறிப்பொலியை எழுப்புவர். இதனை இக்காலத்தில் 'விசில்' என்பர். இவ்வாறு அழைக்கப்பட்ட ஆநிரைகளைக் குழிதோண்டி அக்குழியில் நீர் அருந்தச் செய்வர் இதனைக் 'கோலிற்தோண்டிய வானீர்பத்தல்' என்கிறது ஐங்குறுநூறு. கடுங்குளிர் வாட்டும் குளிர்காலமாக இருந்தாலும் இடையர்கள் தம்நிரைகளை மேய்க்கும் தொழிலைத் தவறாது செய்தனர். மழையால் ஏற்பட்ட வெள்ளத்தை வெறுத்த இடையர்கள் எருது, ஆடு, போன்ற நிரைகளைத் தாம் இருந்த பள்ளமான இடத்தைவிட்டு மேடாக இருக்கும் நிலப்பகுதியில் மேயவிடுவர் என்பதை

**"மெய்க்கொள் பெரும்பணி நலியப் பலருடன்**
**கைக்கொள் கொள்ளியர் கடவுள்புடையூஉ நடுங்க" (நெடுநல் : 3-6)**

என்கிறது நெடுநல்வாடை. இவ்வாறு மேய்க்கப்பட்ட ஆநிரைகளை மாலைநேரம் வரும்பொழுது வீடு நோக்கிச் செலுத்துவர் இக்காட்சி,

**"தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்**
**கனையலங் குரல் காற்பிரி பயிற்றிப்**
**படுமணி மிடற்ற பயிரிரை யாயம்**
**கொடுமடி யுடையர் கோற்றைக் காவலர்**
**கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க**
**மனைமனை படரும் நனைதகு மாலை"** **(அகம் 54:7-12)**

எனச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**வேட்டையாடுதல்**

தொடக்ககாலத்தில் மனிதன் விலங்கொடு விலங்காக வாழ்ந்த காலத்தில் விலங்கை வேட்டையாடி வாழ முற்பட்டான். அந்நிலையில் வேட்டைத்தொழில் தோன்றி இருத்தல் வேண்டும். வேட்டைக்குச் செல்வோர் தனித்துச் செல்லாது பலர் சேர்ந்து வேட்டை நாயுடன் செல்வதே வழக்கம். அவ்வாறு சென்று வேட்டையாடும் பொழுது அவர்கள் பிரிந்து சென்று வேட்டையாடுதலுண்டு பிரிந்து சென்றவர் ஒன்றுசேரும்போது வேட்டை நாயை அழைப்பதற்கு 'ஊதுகொம்பினை' ஊதுதல் வழக்கம் இதனை.

**"ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டோடு**
**வேய்பலில் அழுவத்துப் பிரிந்தநின்**
**நாய்பயிர் குறிநினை கொண்டகோடே"** **(அகம் 318:13-15)**

என்னும் அகநானூற்றுப் பாடலடிகளால் அறியமுடிகிறது. விலங்குகளின் உயிர்நிலை அறிந்து அதன்மேல் அம்பெய்து கொல்லுதல் வேடர் இயல்பு. வேட்டையாடுவதற்குத் தேவையான கருவிகளுடன் செல்லுதல், காட்டில் எல்லாத்திசைகளிலும் அலைந்து வேட்டையாடுவதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதல், சரியான இடமறிந்து வலை விரித்தல், பதுங்கிய இடத்திலிருந்து விலங்கை வெளிப்படச் செய்தல், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பாய்ந்து தாக்குதல் போன்றவை வேட்டைத் தொழிலின் சிறப்பு.

**ஆறலைக்கள்வர்**

பாலை நிலத்தில் வாழ்ந்தவர்கள் எயினர் எனப்பட்டனர். இங்கு வாழ்ந்தவர்கள் கொலைக்கு அஞ்சாத வழிப்பறிக் கொள்ளையர்களாக இருந்தனர். அவர்கள் ஆநிரைகளைத் திருடுவர் பாலைநிலம் வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களிடமிருந்து உடைமைகளைப் பறித்து அவர்களது துன்பங்களைக் கண்டு மகிழ்வர். இச்செயல்களைத் தொழிலாகக் கொண்டவர்கள் 'ஆறலைக்கள்வர்' எனப்பட்டனர். இவர்கள் வழிப்போக்கர்களைத் தாக்கிக்கொன்று அவர்களிடமுள்ள பொருட்களைக் கவர்ந்து செல்வர். இவ்வாறு எயினமறவர் கொன்றமையால் இறந்தவர் தசையைப்பருந்து விரும்பி உண்ணும். சில சமயம் பாலைநிலத்தில் செல்வாரை அந்நிலத்திலுள்ள ஆறலைக்கள்வர் கொன்று அவர்கள் உடல்களைத்

'தழைக்குவியலால்' மூடி விடுதல் வழக்கம். பாலை நிலத்தில் செல்லும் வணிகர் கூட்டத்தை எதிர்த்து அவரது பொருளைக் கைக்கொள்வர் அப்பொழுது தண்ணுமை என்னும் கருவியை முழக்குவர் என்பதை

**"வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட்**

**செக்கோ ளறையுந் தண்ணுமை"** **(அகம் 63:17-18)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**கணந்துள் பறவை**

கொடிய பாலை நிலத்தின் வழியே செல்கையில் வழிப்போவார்க்குக் 'கணந்துள்பறவை' ஆறலைக்கள்வரின் வருகையை அறிந்து ஒலிக்கும் அதை உணர்ந்து வழிப்போவார் தன்னைக்காத்துக் கொண்டனர் என்பதை,

**"ஆற்றுஅயல் இருந்த இருங்கோட்டு அம்சிறை**

**நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறிஇ**

**ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்"** **(குறுந்350: 4-6)**

என்று குறிப்பிடுகிறது குறுந்தொகை.

**மீன் வேட்டம்**

நெய்தல் நிலப் பரதவமக்கள் கடலில் மீன்பிடித்தலைத் தலையாய தொழிலாகக் கொண்டிருந்தனர். எனினும் முத்துச்சிற்ப்பிகள் நிறைந்த கடற்பகுதிகளையொட்டி வாழ்ந்தவர்கள் முத்துக்குளிக்கும் தொழிலிலும் சங்கெடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். இப்பரதவர்கள் மீன்வேட்டையாடுவதாலும் உப்புவிளைவிப்பதாலும் வரும் பொருளைக் கொண்டே வாழ்க்கை நடத்தினர். பரதவர் தூண்டிலில் சிறியமீன்களை இறையாகக் குத்திக் 'கடலிலும் கழியிலும்' எறிந்து மீன்பிடித்தனர். கடலில் சென்று மீன்பிடிக்கத் திமில், அம்பி, தோனி ஆகியவற்றைப் பயன்படுத்தினர். கொடுஞ்சுறா மீன்களை வேட்டையாடிப் பிடிப்பதில் அஞ்சா நெஞ்சமும் ஆர்வமும் கொண்ட பரதவர்களின் வலையை முதல்நாள் அறுத்தால் மீன்வேட்டம் நடைபெறாது. அதனால் மறுநாள் கூரிய முனையுள்ள 'அறியுளி' என்னும் கருவியைப் பயன்படுத்திச் சுறாமீன்கள் மேல் குறிவைத்து வீசி எறிந்து பிடித்து வருவர் இதனை

**"கொடுமுடி அவ்வலைப் பரியப்போகிய**

**கோட்சுறாக் குறித்த முன்போடு**

**வேட்டம் வாயாது எமர்வா ரலரே"** **(நற் 215:10-12)**

என்கிறது. இதனின்று பரதவர் தம்தொழிலில் விடாமுயற்சியை உடையவர் என்பதைப் அறியமுடிகிறது. விடாமுயற்சியுடன் பிடித்த மீன்களை நெற்களத்தில் அறுவடை செய்த உழவர்களைப் போன்று வேண்டுவோர்க்கெல்லாம் தேவைக்கும் மிகுதியாகக் கொடுத்து பின்னர் எஞ்சியவற்றைத் தங்களுக்குள் பங்கிட்டு விலைகூறி விற்று வாழ்ந்தனர்.

**உப்புவிளைவித்தல்**

நெய்தல் நிலமக்கள் கடற்கரையில் உள்ள உவர்நிலத்தில் ஒழுங்காகப் பிரிக்கப்பட்ட நிலத்தில் சிறுசிறு பாத்திகள் அமைத்து அவற்றில் கடல் நீரினைப் பாய்ச்சுவர். பின்னர் சூரியனது வெம்மையால் நீர்வற்றி உப்பு விளையும். இவ்வாறு விளையும் உப்பை விற்று வாழ்ந்தவர்கள் 'உமணர்' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் மழையினை எதிர்பார்க்காமல் ஏர்பூட்டி உழாமல் உப்பு விளைவித்தலைத் தொழிலாகக் கொண்டு சிறுகுடிகளில் வாழ்ந்தனர் என்பதை,

**"நேர்கட் சிறுதடி நீரின் மாற்றி**
**வானம் வேண்டா உழவின்எம்**
**கானலஞ் சிறுகுடி"** **(நற்றி 254:10-12)**

என்கிறது நற்றிணை உமணர்கள் தாம் விளைவித்த உப்பினைப் பக்கத்திலுள்ள ஊர்களுக்கும் வெளியூர்களுக்கும் சென்று விற்பனை செய்தனர். அவ்வாறு விற்பனை செய்வதற்கு வண்டிகளில் எருதுகளைப் பூட்டி அதன் மீது உப்பினை ஏற்றித்தானும் ஏறிச்சென்றனர். வண்டி செல்வதற்குத் தாற்றுக்கோலினைப் பயன்படுத்தினர் என்பதை 'இதழ்கோல் உமணர்' என்கிறது அகப்பாடல்.

**முத்துக்குளித்தல்**

தமிழகத்து முத்துக்களில் பாண்டிய நாட்டு முத்து உலகப்புகழ் பெற்றதாகும். தமிழகத் கடற்துறைகளில் முத்து மூழ்கி எடுக்கப்படுகிறது. முத்து என்பதை வடமொழியில் 'மௌத்திக் – மோத்தி' என்று அழைத்தனர் பாண்டியனின் துறைமுகமான கொற்கையின் முத்து வெண்மை நிறமும் மன்னார்வளைகுடாவின் முத்து சிவப்பு நிறமும் உடையது என்பர்.

**"முத்துடை வான்கோடு"** **(திருமுரு : 308)**
**"தென்கடல் முத்து"** **(பட்டினப் : 189)**
**"முத்தப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை"** **(நற் : 23:6)**
**"மறப்போர்ப் பாண்டிய நறத்திற் காக்குங்**
**கொற்கையம் வருந்துறை முத்தினன்ன**
**நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்**
**முத்துலிங்கப் பண்டு"** **(அகம் 27:8-10)**

என்று கொற்கை முத்துக்கள் மிகுந்த ஒளியுடையனவென்றும், அவற்றின் ஒளியானது சிறந்த நகைப்பொலிவுக்கு ஈடானது என்றும், மதுரைக் கணக்காயனார் கூறியுள்ளார்.

நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் மீன்பிடித்தலோடு முத்துக்குளிக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். முத்தெடுப்போர் ஆழ்கடலில் மூழ்கி முத்தெடுக்கும்போது தமக்குப் பாதிப்பு ஏற்படாவண்ணம் கொல்லுந்தன்மையுள்ள சுறாக்களை விலக்கிச் செல்வர். இயற்யைாகவே கடலில் முத்துக்கள் மிகுதியாய் இருக்கும் பகுதிகளில் அலைகள் அவற்றை அள்ளிக் கரையில் வீசும் அவ்வாறு வீசப்பட்ட முத்துக்கள் ஒளிசிந்தியதை

**"அலங்கு இதழ் நெய்தல் கொற்கை முன்துறை**
**இலங்கு முத்து"** **(ஐங் 185:1-2)**

என்ற பாடல் உணர்த்துகிறது. முத்து நவரத்தினங்களில் ஒன்றாக மதிக்கப்பட்டது. அம்முத்து அதிக விலைமதிப்புள்ளது. அரசர்கள் 'ஏகவடம்' என்னும் முத்துமாலைகளை அணிந்தனர். ஏகவடம் அரசர்களுக்குரிய அடையாள அணிகளில் ஒன்று. செல்வர் வீட்டுப் பெண்களும் அரச குமாரிகளும் இராணிகளும் முத்துமாலைகளை அணிந்தனர். முத்தெடுக்கப்போகும் முன் பரதவர்கள் தங்களது படகுகளிலிருந்து சங்குகளை ஒலிக்கின்றனர். அதனுடைய ஒலி எங்கும் கேட்கிறது. அதனால் தீயன அகலுதல் வேண்டிச் சங்கொலி எழுப்புதல் பண்டைத் தமிழரின் மரபாக இருந்தது. அதனடிப்படையில் முத்தெடுக்க மூழ்கும் முன் சங்கொலி எழுப்பினர் என்பதை அகநானூறும், மதுரைக்காஞ்சியும் விளக்குகின்றன.

**"இலங்கிரும் பரப்பி ன்எறிசுறா நீக்கி**
**வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்**
**ஒலி தலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லென**
**கலிகெழு கொற்கை யெதிர்கொள வழிதரும்"** **(அகம் 350:10-13)**

என்றும்,

**"சீருடைய விழுச்சிறப்பின்**
**விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்**
**இலங்கு வளை இருந்சேரிக்**
**கள் கொண்டிக் குடிபோக்கத்து**
**நற் கொற்கையோர் நசைப்பொருக"** **(மதுரை 134-138)**

என்றும் பாடியுள்ளததனை அறியமுடிகிறது. மேலும் புகார் துறைமுகத்தில் கிடைத்த முத்தைக் கௌடில்யரின் அர்த்தசாத்திரம் 'தாம்பர்ணகிம்' என்று கூறுகின்றது. மகளிர் கால்களில் அணிகின்ற சிலம்பு என்னும் அணியின் உள்ளே சிறுசிறு கற்களைப் பரல் கற்களாக இடுவது வழக்கமாகும். கொற்கையில் முத்து அதிகமாகக் கிடைத்தப்படியால் பாண்டிய மன்னனின் மனைவி அணிந்த சிலம்புகளில் முத்துக்களைப் பரல்களாக இட்டிருந்தனர் என்று சிலப்பதிகாரம் சுட்டிக்காட்டுகின்றது.

கடலில் விளையும் முத்துக்கள், சங்குகள், மீன்கள் எனக்கடல் வளம் மனித வாழ்வின் மேம்பாட்டிற்காகப் பயன்பட்டது. இவற்றில் மீன்களின் பயன்பாடு உள்ளூர்தேவைகளை நிறைவு செய்தது. சங்கும், முத்தும் வணிகத்தில் பயன்பட்டது. முத்து அதன் சிறப்பு வாய்ந்த தன்மையின் காரணமாக வணிகத்தில் தனி இடத்தைப் பிடித்துக்கொண்டது. முத்து என்பது தமிழ்ச்சொல் இப்பகுதியை ஒட்டியே பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. 'பரல்' என்பது ஒருவகை முத்தின் பெயரே. ஆங்கிலத்தில் 'பெர்ல்' என்றாயிற்று முத்துக்குளித்தல் தொழில் தமிழகத்தில் கொற்கையை மையமாகக் கொண்டு நடைபெற்றது என்பதை

**"தத்துநீர் வரைப்பின் கொற்கை"** **(சிறுபாண் : 62)**

என்பதனால் அறியமுடிகிறது.

**சங்கெடுத்தல்**

சங்கின் தமிழ்ப்பெயர் 'வளை' என்பதாகும். தமிழகத்தின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருப்பதால் சங்கு அதிகமாகக் கிடைக்கின்றது. சங்குகளில் இடம்புரிச்சங்கு, வலம்புரிச்சங்கு என இரண்டு வகைகள் உள்ளன. அவற்றில் வலம்புரிச் சங்கு கிடைப்பது மிகவும் அரியதாகும். அதனால் வலம்புரிச் சங்கின் விலை அதிகமாக இருந்தது. மேலும் சங்குகளை வளைகளாக அறுத்து வளையல் செய்தனர். அக்காலத்தில் பெண்கள் எல்லோரும் சங்கு வளையல்களைக் கையில் அணிந்திருந்தனர். அவர்கள் கண்ணாடி வளையல் அணிவது கிடையாது. சங்கு வளையணிவது மங்கலமாகக் கருதப்பட்டது. அன்று அரண்மனையில் வாழ்ந்த அரசகுமாரிகள் முதல் குடில்களில் வாழ்ந்த ஏழைப்பெண்கள் வரையில் எல்லோரும் சங்கு வளையல்களை அணிந்திருந்தனர். ஆகவே சங்குகளை வளையல்களாக அறுக்கும் தொழில் அக்காலத்தில் சிறப்பாக நடைபெற்றது.

கொற்கைக்கடல் மட்டுமன்று பல கடலில் இருந்தும் சரக்குகள் எடுக்கப்பட்டன. சங்குகளைச் சிறு வாளினால் அறுத்து 'அறத்தினால் அராவி' அழகான வளையல்களைச் செய்தனர் என்று நற்றிணை கூறுகிறது.

**"வல்லோன்**

**வாளரம் பொருத கோள் நேர் எல்வளை"** **(நற் 77:8-9)**

என்கிறது. சங்கு வளையல்களில் கொடிகள், பூக்கள், வரிக்கோடுகள், முதலியவை அமைத்து அழகாகச் செய்தனர். வளையல் அறுக்கும் தொழில் தமிழகத்தில் ஆங்காங்கே நடைபெற்றது என்பதைச் சங்கப்பாடல்கள் கூறுகின்றன.

**"அறம்போழ் அல்வளை"** **(ஐங் 106.)**

**"கடற்கோடு அறுத்த அரம்போல் அல்வளை ஐங்**

**கோபீ எல்வளை"** **(நற் 79:9)**

**"கோபீ இலங்குவளை"** **(குறுந் 31:5)**

சங்ககாலத்துப் பெண்கள் சங்கு வளையல்கள் அணிவதை நாகரிகமாகக் கருதினர். கைம்பெண்கள் தவிர ஏனைய சுமங்கலிப் பெண்கள் எல்லோரும் இச்சங்கு வளையல்களை அணிந்தனர் என்று இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன.

**"அணிவளை முன்கை ஆயிழை மடந்தை"** **(அகம் 361:4)**

**"சின்னிரை வால் வளைக் குறுமகள்"** **(குறுந் 189:6)**

**"வளைக்கை விறலி"** **(புறம் 135:4)**

என்கின்றன. இதே போன்று இறைவனாகிய சொக்கப்பெருமாள் வளையல்கள் விற்றதாகத் திருவிளையாடல் புராணம் கூறுகிறது. இடம்புரிச் சங்கினால் செய்த வளையல்களைச் சாதாரண நிலையில் உள்ள பெண்கள் அணிந்தனர். ஆனால்

வலம்புரிச் சங்கின் விலை அதிகமாக இருந்ததால் செல்வச்சீமாட்டிகளும், இராணிகளும் மட்டுமே அணிந்தனர். பின் செல்வ மகளிர் பொன் வளையல் அணிந்து அதனுடன் வலம்புரிச்சங்கு வளையலையும் அணிந்திருந்தனர் என்பதை

**"பொலந் தொடி நின்ற மயிர்வார் முன்கை**
**வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து" (நெடுநல் 141:142)**

என்பதால் அறிய முடிகின்றது. காவிரிப்பூம்பட்டினத்தில் செல்வச் சீமானாக இருந்த மாநாய்கன் மகளான கண்ணகியும் வலம்புரிச்சங்கு அணிந்திருந்தாள். மதுரையில் கோவலனை இழந்து கைம்பெண் ஆனபோது அவள் தன் கைகளில் அணிந்திருந்த சங்கு வளையைக் கொற்றவைக் கோயிலின் முன்பு உடைத்தாள் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

**"கொற்றவை வாயிலில் பொற்றொடி தகர்த்து" (சிலம்பு 23:181)**

என்கிறது. பண்டைக்காலத்தில் மணமகன் தான் மணக்கவிருக்கும் மணமக்களுக்கும் சங்கு வளை கொடுப்பது பழக்கமாகும். அப்பழக்கம் தமிழகத்தில் மடடுமல்லாமல் பாரத நாடு முழுவதிலும் இருந்துள்ளது என்பர். அன்று சங்கு முழங்குவது மங்கலமாகக் கருதப்பட்டுள்ளது. ஆனால் சங்கு கோயில்களிலும் அரண்மனைகளிலும் ஊதுவது வழக்கமாகும். அரண்மனைகளில் காலை வேளையில் முரசுகொட்டியும், சங்கு முழங்கியும் அரசனைத் துயிலெழுப்பினர் அரண்மனைகளில் வலம்புரிச்சங்கு காலையில் முழங்கியது என்பதை

**"தூக்கணங் குரீஇத் தூங்கு கூடேய்ப**
**ஒரு சிறைக் கொளிஇய திரிவாய் வலம்புரி**
**ஞாலங் காவலர் கடைத்தலைக்**
**காலைத் தோன்றினும் நோகோ யானே" (புறம் 225:11-14)**

என்றும்

**"மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்**
**வால் வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய**
**காலை முரசங் கனைகுரல் இயம்பு" (சிலம்பு 14: 12-14)**

என்றும் கூறுவதன் மூலம் அறியலாம். பல நூற்றாண்டுகளாக மகளிர் சங்கு வளையல் அணியும் வழக்கம் இருந்துள்ளது. சங்க மகளிர் சங்குவளை அணிவதும் காதுகளில் 'சங்குக் குழை' அணிவதும் விரல்களில் சங்கு மோதிரம் அணிவதும் அன்றைய வழக்கமாக இருந்துள்ளது. என்று மயிலை சீனி வேங்கசாமி தன் நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

**ஓலைத்தொழில்**

பண்டைத் தமிழர் பனை, தென்னைமர ஓலைகளைக் கொண்டு அன்றாடத் தேவைக்குரிய பலவிதமான பொருட்களைச் செய்தனர். அவற்றில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பொருட்களைக் கொண்டு செல்லப்பயன்படும் கூடைவகைகள் மற்றும் படுத்துக் கொள்ளப்பயன்படும் பாய்கள் மற்றும் வெயில், மழை இவற்றினின்றும்

பாதுகாப்புத்தரும் வகையில் குடைகள் போன்றவற்றையும் ஓலையில் செய்தனர். மேலும் ஓலைகளைப் பயன்படுத்தி அக்காலத்தில் பலவிதமான கூடைகள் செய்தனர் அவை 'வட்டி', 'புட்டில்', 'குடை' எனப்பட்டன. ஓலைகொண்டு செய்யப்பட்ட இக்கூடைகள் கலைத்திறனோடு அழகுபடுத்தப்பட்டன. கூடை என்பதற்குக் 'கொட்டம்' என்று பெயர். கொட்டம் என்பது 'ஈந்து' முதலியவற்றின் ஓலையால் பின்னப்பட்ட சிறுபெட்டியைக் குறிக்கும் சங்கப் பாடல்கள் செல்வர் மனைகளிலும் அரண்மனைகளிலும் பஞ்சனைகள் பயன்படுத்தப்பட்டதாகக் கூறினும் எளியமக்கள் ஓலையால் பின்னப்பட்ட பாயைப் பயன்படுத்தியமையைக் குறிப்பிடுகின்றது. ஆயர்குலத்தவர் ஓலைப்பாயை அதிகமாகப் பயன்படுத்தினர் என்பதை

**"பறிப்புற இடையன"** **(அகம் 94:4)**

என்ற பாடலடி இடையர்கள் பயன்படுத்திய 'பறிப்பாயைக்' குறிக்கிறது. மழை, வெயில், இவற்றினின்றும் பாதுகாப்புத்தரவும், படுத்துறங்கவும் பாய் பயன்பட்டது. இவற்றினால் ஓலைத்தொழில் எளியமக்களுக்குப் பயன்படும் வகையில் அமைந்ததை அறியமுடிகிறது.

**கயிறு திரித்தல்**

பழந்தமிழர் பொருட்களைக் கட்டுவதற்குக் கயிற்றினைப் பயன்படுத்தினர். முல்லைநில மக்கள் தயிரைக் கடைவதற்குக் கயிற்றினைப் பயன்படுத்தினர். ஆயர்குலத்தவர் பால், தயிர், வெண்ணெய் நிரம்பிய மட்குடங்களை வைப்பதற்குக் கயிற்றினை வலைபோல் பின்னி வீட்டுக் கூரையில் தொங்கவிடுவர் இது 'உறி' என்று அழைக்கப்படுகிறது. கழைக் கூத்தர்கள் மூங்கிலின் மேல் கட்டிய கயிற்றின் மேல் நின்றாடியதை

**"யார்கொல் அளியர் தாமே ஆரியர்**
**கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி"** **(குறுந் 7:3-4)**

என்கிறது குறுந்தொகை. இதனின்று கயிற்றில் நின்றாடக் கூடிய அளவிற்குத் திண்மையும் உறுதியும் வாய்ந்த கயிறுதிரிப்பதில் வல்லவராய் இருந்ததை அறியமுடிகிறது. அதுமட்டுமின்றிக் கடலில் மீன்களைப் பிடிப்பதற்கு வலைகளும் மற்றும் விலங்கு பறவைகளைப் பிடித்தற்கேற்ற வலைகளும் பயன்படுத்தப்பட்டன. அவற்றைப் பின்னுவதற்கான கயிறுகளையும் திரித்தனர்.

**கள் தயாரிக்கும் தொழில்**

குடி குடியைக் கெடுக்கும் என்கின்றனர் அறிஞர் பலர். அக்காலத்தில் ஆண், பெண், அரசர், புலவர், எனப்பலரும் உடல் ஆரோக்கியத்திற்காகவும் மகிழ்ச்சிக்காகவும் 'கள்' குடித்தனர். உடல் உழைப்பினை மேற்கொண்ட கடின உழைப்பாளிகள் கள்ளினை அருந்துவதால் புத்துணர்ச்சி பெறுவதாகவும் உழைப்பின் களைப்பு குறைவதாகவும் கருதுகின்றனர். தென்னை, பனை போன்ற மரத்திலிருந்து கள் இறக்கப்பட்டதோடு சில பொருட்களைக் காய்ச்சியும் கள் உருவாக்கப்பட்டது. இத்தகைய கள்ளினை வெம்கள், நறவு, தேறல், பிழி, அரியல் போன்ற பெயர்களால்

அழைக்கின்றனர். இக்கள்ளின் இனிமை கருதி 'தேக்கட்தேறல்' என்றனர். இக்கள்ளினைத் தயாரிப்பதற்குக் குற்றாத கொழியல் அரிசியைக் கூழாகச் சமைத்து அதனை அகன்ற பாத்திரத்தில் ஊற்றிக் குளிரவைப்பர். பின்னர் கள்ளின் இனிமை மிகும் பொருட்டு இரண்டு இரவும் இரண்டு பகலும் உறுதியாகவுள்ள அகல்வாய்ச் சாடியை மண்ணில் புதைந்து வைப்பர். பின்னர் இக்கள்ளானது முதிர்ந்த நிலையில் வெந்நீரில் வேகவைத்து நெய்யரியால் விரலால் பதமாய் அழைத்துப் பிழிந்தெடுப்பர் அது 'நறும்பிழி' என்றழைக்கப்படுகிறது இதனை

**"அவையா அரிசி அம்களிம் துழவை**
**மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றிப்**
**பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்**
**பூம்புற நல்லடை யனைஇத் தேம்பட**
**எல்லையு மிரவு இருமுறை கழிப்பி**
**வல்லாய்ச் சாடியான் வழைச்சற விளைந்த**
**வெந்நீர் அரியல் விரலலை நறும்பிழி"** **(பெரும்பாண் 275:281)**

என்ற இப்பாடல் கள் தயாரிக்கும் முறையை உணர்த்துகிறது. கள்ளானது அரிக்கப்படுதலால் 'அரியல்' என்றும் விரலால் அழைத்துப் பிழியப்படுதலால் 'பிழி' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது இவ்வாறு தயாரிக்கப்பட்ட கள் நிறைந்திருக்கும் குடத்திற்கு இஞ்சியும் நறும்பூவுமாகக் கலந்து தொடுத்த மாலையைக் கட்டியிருப்பர். கள்ளின் நாற்றத்தை மாற்றப் பூவும் கள் குடிப்பதற்குக் கடித்துக்கொள்ள இஞ்சியும் பயன்படுத்தப்பட்டன. களிப்பு மிகுதியால் கள்ளின் முதிர்ச்சியால் கள்குடம் அசைந்தது என்பதை

**"இஞ்சி விராய பைந்தர் பூட்டி**
**சாந்து புறத்து எறிந்த தசும்பு துளங்குஇருக்கை**
**தீம் சேறு விளைந்த மணிநிற மட்டம்"** **(பதிற்று: 42:10-12)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் 'மூங்கிற் குழாயில்' தேனை நிரப்பி முதிர்வித்துக் கள் தயாரித்ததைத் 'தோப்பி' என்றழைத்தனர். இவ்வாறு தயாரிக்கப்பட்ட கள் விற்பதற்கு என்று தனி இடம் ஒதுக்கப்பட்டு அவ்விடத்தில் கொடி நட்டியதை 'கள்ளின் களி நவில்கொடி' என்றனர். கள் உண்பார் பலர் வந்தாலும் கள் இல்லை என்று சொல்லாமல் எல்லோருக்கும் வழங்குவதை 'முட்டில்வாயில்' என்றனர். பழந்தமிழர் சமுதாயத்தில் கள் விரும்பி உண்ணப்பட்டதால் இத்தொழிலில் பலரும் ஈடுபட்டிருந்தனர்.

**சலவைத்தொழில்**

கூழானாலும் குளித்துக்குடி கந்தையானாலும் கசக்கிக்கட்டு என்னும் பழமொழிக்கு ஏற்பச் சங்ககால மக்கள் வெளுத்த தூய்மையான ஆடை அணிவதை விரும்பினர். அந்த ஆடையை வெளுப்பதற்கு என்று தனியான மக்கள் கூட்டம் இருந்தது. அவர்கள் 'காழியர்' எனப்பட்டனர். இத்தொழிலில் ஆண்களுக்கு உதவியாகப்

பெண்களும் ஈடுபட்டனர். அவர்கள் 'புலத்தியர்' என்றழைக்கப்பட்டனர். இவர்கள் ஆடையை ஒருவகை மணலைப் பயன்படுத்தி வெளுத்துள்ளனர். அம்மண் உவர்மண் எனப்பட்டது.

**"காழியர்**
**கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிய**
**களரி பரந்த கல்நெடு மருங்கின்" (அகம் 89: 7-9)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. களர்நிலத்தில் ஊறும் 'உவர்நீர்' ஆடையிலுள்ள அழுக்குகளைப் போக்கும் இயல்புடையது. அதனால் புலத்தியர் அன்றாடம் உவர்நீர் கிடைக்கும் கிணற்றிலிருந்து நீரெடுத்து ஆடைகளைத் துவைத்தனர். மேலும் பூ வேலைப்பாடுகளுடன் நெய்த ஆடைகளை உவர்மண்ணில் ஊறவைத்துத் துவைத்ததோடு கஞ்சியிட்டு உலர்த்தியதை

**"வறனில் புலைத்தி எல்லில் தோய்த்த**
**புகாப் புகர் கொண்ட பூன்பூங்கலிங்கம்" (நற். 90:3-4)**

என்கிறது நற்றிணை. பகல்பொழுதில் ஆடையை உலர்த்தினால் சூரியன் ஒளிபட்டு ஆடையின் பொலிவு குன்றிவிடும் என்பதை உணர்ந்து இரவில் உலரவிட்டனர். இவ்வாறு வெளுத்துக்காய வைத்து மடித்துவரும் ஆடைகளுக்கு நறும்புகை ஊட்டினர் இதனை

**"மென்நூற் கலிங்கம் நறும்புகை மடுப்ப" (மதுரை: 233)**

என்கிறது மதுரைக்காஞ்சி.

**அட்டில் தொழில்**

தமிழரின் சிறந்த பண்பு விருந்தோம்பல். அத்தகைய விருந்தோம்பலில் முன்னர் வாழ்ந்து முடித்தவர்களின் வாழ்க்கை தற்போது வாழ்பவர்களுக்கு இலக்கணமாகும். அவ்வகையில் சங்ககால மக்கள் கடைபிடித்து வந்த விருந்தோம்பல் தற்கால மக்களின் வாழ்வுக்கு இலக்கணமாக விளங்குகிறது. நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் மனித உறவு வலுப்படவும் பசி, பட்டினி, என்றும் இல்லாமல் இருக்கப் பலர் விருந்தோம்பலோடு சமையல் தொழிலும் ஈடுபட்டிருந்தனர். உயிர்வாழ்வதற்கு இன்றியமையாத உணவு சமைக்கும் தொழில் அட்டில்தொழில் என்றழைக்கப்பட்டது. ஏழை எளிய மக்கள் தங்களுக்கு ஏற்றவாறு செல்வர், வள்ளல், மன்னர் என அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு உணவை வழங்கினர் என்பதை

**"அமிழ்த்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்**
**வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை" (புறம் 10:7-8)**

என்கிறது. மன்னர்கள் இம்மைக்குப் புகழ்பெற மறுமைக்குப் புண்ணியம் கிடைக்க அட்டிற்சாலைகள் அமைத்தனர். அவற்றின் மூலம் இடையறாது மக்களுக்கு உணவை வழங்கிக் கொண்டிருந்தனர். இடைவிடாமல் உணவு சமைப்பதால் சோறுவடிக்கும் கஞ்சிநீர் ஆறுபோலத் தெருவில் ஓடும் அத்தகைய நீரைப் பருகுவதற்கு வரும் எருதுகள் தம்முள் மோதுவதால் அக்கஞ்சி சேறாக மாறும் அவ்வழியே பல தேர்கள்

செல்லுவதால் அக்கஞ்சியின் சேறு காய்ந்து துகளாகப் பரவும். பின்னர் அக்கஞ்சியின் துகள் தொழில் தரமுடைய ஓவியங்கள் தீட்டப்பட்ட வெண்ணிற மாடங்களின் மேல் படியும். அம்மாடங்கள் புழுதியைத் தன்மேல் பூசிக்கொண்ட யானைபோலக் காட்சியளிக்கும். அக்காலத்து அட்டிற்சாலைகள் இவ்வாறிருந்தது என்பதை.

**"சோறு வாக்கிய கொழுங் கஞ்சி**
**யாறு போலப் பரந்து ஒழுகி.**
**ஏறு பொரச் சேறாகி**
**தேர் ஓடத் துகள் கெழுமி**
**நீறு ஆடிய களிறு போல**
**வேறு பட்ட வினை ஒவத்து**
**வெண் கோயில் மாசு ஊட்டும்"** **(பட்டினம்: 44–50)**

என்கிறது பட்டினப்பாலை. அக்காலத்தில் வழங்கப்படும் அட்டிற்சாலை இன்றைய சூழ்நிலையில் அன்னதானம், அசனம் என்ற பெயர்களில் வழங்கப்படுகிறது.

**கூவலர்**

பண்டைத்தமிழர் சிற்பக்கலை, கட்டிடக்கலை என்று எல்லாக் கலைகளையும் அறிந்திருந்தது போலவே பயிர்களுக்கு வேண்டிய நீர்பாசனத்திற்காகவும் மக்களுக்கு வேண்டிய குடிநீருக்காகவும் கிணறு வெட்டுவோர் இருந்தனர். அவர்கள் கூவலர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் திண்மையான நிலத்தில் இரும்பினால் செய்த கோடரியால் கற்களை உடைத்து மேலே அகழ்வது 'கூவல்' என்றும் அதனுள் குறுகிய வாயுடையதாய் ஆழமாய்த் தோண்டப்படுவதைப் 'பத்தல்' என்றும் அழைத்தனர். அக்காலத்தில் நீர்நிலைகள் அமைத்தல் மன்னனது கடமைகளுள் ஒன்றாய் அமைந்தது என்பதைக் குளந்தொட்டு வளம்பெருக்கி என்ற பட்டினப்பாலையின் பாடலடிகளால் அறியமுடிகிறது. கூவல் என்றசொல் கிணறு என்ற பொருளில் வருவதை.

**"கூவலன்ன விடரகம் புகுமின்"** **(மலைபடு :366)**

என்கிறது. பழந்தமிழர் வழிப்போக்கர்களுக்கும் கால்நடைகளுக்கும் உதவும்பொருட்டு ஆங்காங்கே கூவல் தோண்டினர். ஆநிரை நீர் உண்ண ஆயர்கள் பயிர்செய்யாது விடப்படும் தரிசு நிலத்தில் கற்களை உடைத்துத் தோண்டி நீர் ஊறுகின்ற ஊற்றுக்கண்களை உடைய கிணற்றினை அமைப்பர் என்பதனை

**"விடுநிலம் உடைத்த கலுழ்கட் கூவல்"** **(அகம் 321:8)**

என்கிறது அகம். இவ்வாறு கிணறு தோண்டப்பட்ட இடத்தில் நீர் ஊறவில்லை என்றால் வெட்டப்பட்ட இடத்தில் தழைகளை நிறைத்து மூடிவிடுவர் என்பதை

**"பரல்மண் சுவல முரணிலம் உடைத்த**
**வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவலர்**
**ஊறாதிட்ட உவலைக் கூவல்"** **(அகம் 21:23)**

என்ற பாடலடிகள் கிணறு தோண்டப்பட்டு மூடுவதைக் காட்டுகிறது. கற்பாறை நிறைந்த நிலத்தில் தோண்டப்படும் கிணற்றில் ஊறும் நீர் உவர்நீராய் இருக்கும் அதனால்

இந்நிலத்தில் ஆடை வெளுக்கும் தொழில் செய்யும் புலத்தி 'களர்' நிலத்தில் ஊறும் உவர்நீர் ஆடையிலுள்ள அழுக்கைப் போக்கும் இயல்புடையது ஆதலின் களர்நிலத்தை அகழ்ந்து ஆடை வெளுப்பாள்

**"களர்படு கூவல் தோண்டி நாளும்**

**புலைத்தி கழிஇய தூவெள் அறுவை"** **(புறம்: 311)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் தலைவிக்குத் தன் வீட்டில் உண்ட தேன் கலந்த பாலைவிடத் தன் காதலன் நாட்டில் மானுண்டு எஞ்சிய கூவல்நீர் இனிதாக இருந்தது என்பதை

**"உவலைக் கூவற்கீழ்**

**மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே"** **(ஐங்: 203:3–4)**

என்கிறது ஐங்குறுநூறு.

**அந்தணர் தொழில்**

வேதங்களை அவற்றின் பொருள் எல்லோருக்கும் புரியும்படி ஓதி அவை கூறிய ஒழுக்கங்களைக் மேற்கொண்டு இந்நிலவுலகத்தில் இன்பம் கைவரப்பெற்றவராய் அறத்தினின்றும் தவறாது எல்லா உயிர்களிடத்தும் அருள் நிரம்பியவர் அந்தணர் எனப்பட்டனர். இவர்கள் இயல்பிலே மன அமைதி பெற்றவர்களாகவும் தந்நலம் துறந்தவர்களாகவும் மன்னன் முதல் மக்கள் வரை எல்லோராலும் மதிக்கப்படுபவர்களாகவும் உள்ளனர். அவர்களை அறவோர், அருளாளர், ஆன்றோர், சான்றோர், மறையோர் என்று பலரும் புகழ்ந்துள்ளனர். இவர்கள் ஓதல், வேட்டல், ஈதல், ஏற்றல் எனப்பட்ட ஆறு தொழிலையும் செய்தனர். அந்தணர்க்குரிய அறுதொழிலினும் ஓதல் தலைசிறந்ததாகக் கருதப்படுவதால் இவர்கள் ஓதல்அந்தணர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் வைகறைப் பொழுதில் வேதம் ஓதுவர். இவர்கள் ஆறு தொழிலையும் சிறப்பாக செய்தனர் என்பதை

**"ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்**

**ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந் தொழுகும்**

**அறம்புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுக"** **(பதிற்றுப் 24:6-8)**

என்கிறது பதிற்றுப்பத்து இவர்கள் ஓரிடத்தில் தங்கியிராமல் புலவர்கள் போன்று ஊர்தோறும் சென்று நாட்டு மக்களுக்கு நல்லறத்தைப் புகட்டினர். இவ்வாறு ஊர்தோறும் செல்வதற்கு 'ஊன்றுகோல்', 'தண்ணீர் கமண்டலம்', 'ஆசனம்' போன்றவற்றை உடன் எடுத்துச் சென்றனர் இதனை

**"நூலே கரகம் முக்கோல் மனையே**

**ஆயுங் காலை அந்தணர்க்குரிய"** **(தொல் - மரபு – நூ-70)**

என்கிறார் தொல்காப்பியர் அந்தணர்களின் முக்கியமான தொழில் உலகமக்களின் துன்பங்களைப் போக்கி அருள் சுரந்து ஓம்புவதாகும். இவற்றைத் தவிர இடையில் மன்னனின் வேண்டுகோளுக்கிணங்க மன்னன் நாட்டை விட்டு செல்லும்போது நாடாளும் தொழில் அந்தணர்க்கு உரியதாகும் இதனை.

**"அந்தணாளர்க் அரசுவிரை இன்றே"** **(தொல் - மரபு – நூ 83)**

என்பதைத் தெளிவுபடுத்துகிறார். மேலும் அந்தணர்கள் என்போர் சாந்தத்தின் நிலையமானவர்கள் அவர்கள் தர்மம் தவறாது எல்லா உயிர்களிடத்தும் அன்புகாட்டினர் என்பதை

**"அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டு ஒழுகலான்"** **(குறள் : 30)**

என்கிறார் திருவள்ளுவர். இவர்கள் தீயை வழிபட்டனர் என்பதை

**"அறுதொழில் அந்தணர் அறம்புரிந் தெடுக்க**
**தீயொடு விளங்கும்"** **(புறம் 397: 20–21)**

என்கிறது புறம். இவர்கள் வளர்க்கும் தீ மூன்று வகைப்படும். அவை 'ஆகவனியம்' 'தக்கிணாக்கினி', 'காருகபத்தியம்' அவை வேதத்தை வழங்குதலையும் வேதம் ஒதுவார்க்குத் தக்கிணாக்கினி அளித்தலையும் பூவுலகைக் காத்தலையும் குறிக்கிறது. இவர்கள் நாட்டுநலம் கருதி மக்கள் நலங்கருதி வேதங்களை ஓதியும் வேதநூல்களில் முறைப்படி வேள்வியும் செய்தனர் என்பதை

**"கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்"** **(புறம் 361:4)**

என்கிறது புறம்.

**அரசர்**

அரசனது தொழில் உலகுக்கு அளி செய்தலாகும். அதற்கு மன்னன் மயக்கந் தீர்ந்த அறிவும் நடுவு நிலையையும், முறை வேண்டுபவர்க்கும் குறைவேண்டுபவர்க்கும் எளிதாகவும் இனிதாகவும் நீதி வழங்கும் பண்பும், உதவும் உள்ளமும் பெற்றிருத்தல் வேண்டும். அரசன் தன்னை மதியாத வேற்றரசரை வீரத்தால் அஞ்சச் செய்தல் வேண்டும். தன்னை மதிக்கும் நட்பரசை மேன்மேலும் தனது அன்பினால் தழுவிச் செல்ல வேண்டும். இங்ஙனம் அரசன் வீரமும் அருளும் உடையனவாய் ஆட்சி செய்தால் நாட்டில் எப்பொழுதும் அமைதி நிலைபெற்றிருக்கும். மன்னனது வெற்றிக்குக் காரணம் அவனது வலிமை அல்லாமல் 'அறமுறைமையே' சிறப்புச் செய்கிறது. அறம் என்பது நடுநிலைமை அதாவது நம்மவரென்று ஒருவரது தீமைக்கு ஆக்கமும் அடுத்தவரென்று நன்முயற்சிக்கு அழிவும் ஏற்படாதிருத்தல் வேண்டும். மன்னனது தொழில் வீரமும் மென்மையும் கொடையும் உரிய இடங்களில் புலப்படுத்தி நாடு வளம்பெறப் பாடுபடுவது என்பதை

**"அறநெறி முதற்றே அரசின் கொற்றம் அதனால்**
**நமரெனக் கோல்கோடாது**
**பிறரெனக் குணங்கொல்லாது**
**ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத் தன்ன வண்மையும் மூன்றும்**
**உடைய யாகி இல்லார் கையற"** **(புறம் : 35)**

என்கிறது. மேலும் அரசன் குடிமக்களுக்கு வளம் உண்டாக்கிக் கொடுத்து அதன்மூலம் அரசன் அவர்களிடம் அன்புடன் திரைபெறுதல் வேண்டும். மேலும் மக்கள் தமது திரைப்பொருளைத் தாமே அன்புடன் செலுத்தும்படி இடங்கொடுக்க வேண்டும். தன்நாட்டு மக்கள் மேன்மேலும் வளமாகவும் நலமாகவும் வாழ்வதற்கு நல்ல வசதிகளை அவர்களுக்கு உருவாக்கிக் கொடுக்க வேண்டும் என்பதை

**"அறிவுடை வேந்தன் நெறிஅறிந்து கொளினே**

**கோடியாத்து நாடுபெரிது நந்தும்"** **(புறம் 184:5–6)**

என்கிறது. இவ்வாறு அறிவுடை வேந்தன் மேற்காட்டியபடி முறையறிந்து கொண்டால் குடிமக்கள் கோடி கோடியாகத் திரைப்பொருளை உண்டாக்கிக் கொடுத்து தாமும் உயர்வர். மக்கள் உயர்வதற்கு அரசன் 'அத்தாணி மண்டபத்தில்' அமைச்சர் முதலிய அரசியல் சுற்றங்களின் நடுவே இருந்து ஆட்சி புரிந்தான்.

**"கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து**

**உரும்பில் சுற்றமொடு இருந்தோன்"** **(பெரும்பாண் : 49–47)**

என்று அரசன் கடமையைச் சுற்றத்தோடு இருந்து செய்த காட்சியைப் பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது.

**அமைச்சர்**

அரசனுக்கு நேர்மையான வழியைக் காட்டுபவர் அமைச்சர். நாட்டில் மன்னன் புகழுற வேண்டுமெனில் அமைச்சர் தேவை. அக்காலத்தில் மந்திரியை அமைச்சர் என்பர். இச்சொல் 'அமாத்ய' என்னும் வடசொல்லிருந்து பெறப்பட்டது என்பர் க.ந.சுப்பிரமணியன். நாட்டையாளும் மன்னனின் அருகிலேயே எப்போதும் இருப்போராக உள்ளவர்கள் அமைச்சரும் படைத்தலைவரும் ஆவர். இவர்களுள்ளும் அமைச்சரே அரசனுக்கு முதன்மைத் துணையாக உள்ளனர். இவர்கள் பொய் என்பதை அறியாமல் இருப்பதால் புகழ்பெற்றனர். இம்மண்ணுலகம் பிறர்க்கும் பொதுவானது என்று சொல்லுதல் இல்லாதபடி மண்ணுலகம் முழுவதையும் ஆளும் பேரரசர்களுக்கு அறிவாகிய சொல்லைச் சொல்லுதலை இயல்பாக உடையோர் அமைச்சர்கள் என்பதை

**"பொதுமொழி பிறர்க்கு முழுது ஆளும் செல்பவர்க்கு**

**மதிமொழி இடல்மாலை வினைவர்போல் வல்லவர்"** **(கலி 68 : 1-2)**

எனக் கூறுகிறது. அமைச்சர் தொழில் மேற்கொள்வார்க்குச் சில தகுதிகள் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் இயற்கை நுண்ணறிவும் ஆன்ற நல்லொழுக்கமும் நூற்பயிற்சி முறையும் உலகியல் உணர்வும் நன்கு அமையக்கூடும். இயற்கையாகப் பெற்ற நுண்ணறிவோடும் நூலறிவும் அமையப்பெற்று நல்ல அறவொழுக்கமும் உடையவராகவும் அமைச்சர் இருத்தல் வேண்டும். அரசர்குரிய அறங்களை அறிந்தவராகவும் தாம் கற்ற கல்வித் திறத்தால் திறமைபெற்ற சொற்களை உடையவராகவும் எக்காலத்திலும் செயல்படக்கூடிய திறம் வாய்ந்தவராகவும் அமைச்சர் இருத்தல் வேண்டும். மன்னன் நாட்டைவிட்டு வெளியிடங்களுக்குச் செல்ல வேண்டிய காலங்களில் மன்னனுடைய ஆணைப்படி நாட்டை ஆளும் திறமையும்,

அறமுறையும், போர்த்திறனும் உடையவராய் இருத்தலோடு மனத்திண்மையும் உடல்வலிமையும் உள்ளவராய் அமைச்சர் இருத்தல் வேண்டும் என்பதை

**“தம்முயிர்க்குருதி எண்ணார் தலைமகன் வெகுண்டபோதும்**
**வெம்மையைத் தாங்கநீதி விடாதுநின் நுரைக்கும்வீரர்**
**செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் தெரியும்காலம்**
**மும்மையும் உணரவல்லார் ஒருமையும் மொழியும் நீரார்”**

**(கம்பராமாயணம்)**

என்று ஓர் அமைச்சருக்குரிய இயல்புகளாகக் கம்பர் குறிப்பிடுகிறார். அமைச்சருக்குரிய தகுதிகளைத் திருவள்ளுவர் அமைச்சு என்னும் அதிகாரத்தில் தொகுத்துக் கூறுகிறார் இவற்றில்

**“படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு”** **(குறள்: 381)**

என்று சேனையின் வலிமை, குடி, செல்வச்சிறப்பு, அயல்நாட்டவர்களின் நல்லுறவு கோட்டை, கொத்தளம், பாதுகாப்புகள் ஆகியவற்றோடு நல்ல அமைச்சரும் அமையப்பெற்ற அரசனே சிறப்புக்குரியவன் என்கிறார். அக்காலத்தில் இன்னது செய்தால் நலம் பயக்கும் என்று ஆராய்ந்து அரசனிடம் சொல்லிச் செய்வதே அமைச்சரின் தலையாயக் கடமை. இவர்கள் அரசனிடம் உள்ள நல்ல குணங்களையும், தீய குணங்களையும் ஆராய்ந்து அவனை நன்னெறியில் நடக்கச் செய்வர். அரசனைக் குடிகளிடம் அன்புடன் ஒழுகச் செய்வர். நீதியை அறநெறியினின்றும் பிறழாமல் காப்பர். தாமும் பழிக்கு இடமான செயல்களைச் செய்யார் போற்றத்தக்க நல்ல செயல்களைச் செய்வர். சிறந்த புகழையும் பெறுவர். இத்தகைய சிறப்புடைய அமைச்சர்கள் ‘காவிதி’ எனும் பட்டத்தைப் பெற்றனர் என்பதை

**“நன்றும் தீதும் கண்டாய்ந் தடக்கி**
**அன்பும் அறனும் ஒழியாது காத்துப்**
**பழிஒரிஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த**
**செம்மை சான்ற காவிதி மாக்களும்”** **(மதுரை : 496–499)**

என்கிறது மதுரைக்காஞ்சி. அக்காலத்தில் காவிதிப்பட்டம் பெற்றமைக்கு அறிகுறியாகக் ‘காவிதிப்பூ’ என்னும் ‘பொற்பூ’ வழங்குதல் மரபாக இருந்தது.

**ஒற்றர்**

பிறர் ஐயுறா வண்ணம் அஞ்சாத தன்மையுடன் எது நடந்தாலும் தன் கருத்தைப் பிறருக்கு வெளிப்படுத்தாத இயல்புடையவர். இவர் வேடர், சாரணர் என்றும் அழைக்கப்பட்டனர். அரசர்களுக்கு மக்களின் கருத்துக்களை அறிவதற்கும் பகைவரின் படைவலிமைகளை அறிவதற்கும் ஒற்றர்கள் பயன்படுத்தப்பெற்றனர். ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் ஒற்றர்களாகச் செயல்பட்டுள்ளனர் அரசர்கள் வேவு பார்ப்போரைப் பெரிய எண்ணிக்கையில் ஏவல் கொண்டனர். அவர்கள் தொழில் ‘ஒற்று’

அல்லது ‘வேய்’ எனப்பட்டது. வேய் என்பது ஒற்றர் பகைவருடைய இடத்திற்குச் சென்று ஆநிரை நின்ற இடத்தில் ஒற்றறிவது இதனை

**“பற்றார் தம்முனைப் படுமணி யாயத்**

**தொற்றா ராய்ந்த வகையுரைத் தன்று”** **(புறப்பொருள் : 5)**

என்கிறது புறப்பொருள் ஒற்றர்கள் முன்பே தங்களுக்குள் பேசிக்கொண்டபடி ஒலியால் செய்தியனுப்புவர். மேலும் மற்றவர்களுக்குக் கேட்கா வண்ணம் ஒடுங்கிய குரலிலும் பேசுவர்.

**“ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல்”** **(அகம் : 313:15)**

என்கிறது. நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் ஒற்றர்கள் இருந்தனர். அரசன் தன் நாட்டு நிலையை அமைச்சர் வாயிலாகவும் பிறநாட்டு நிலையைத் தூதர் வாயிலாகவும் இவ்விரு நாடுகளின் நிலையை ஒற்றர்கள் வாயிலாகவும் அறிந்து கொள்கின்றான். ஒற்றர்கள் ஒருவன் கூற்றை அவனறியாது இன்னொரு ஒற்றன் கூற்றோடு ஒப்பு நோக்க வேண்டும். மேலும் ஒற்றர் ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளா வண்ணம் ஒற்றாடல் செய்ய வேண்டும் இதனை ஒற்றொற்றுணராமை ஆள்க’ என்று திருவள்ளுவர் வலியுறுத்துகிறார்.

பிறநாடுகளிலும் ஒற்றாடச் செல்வோர் பிறர் அறியாவண்ணம் உடை உடுத்தியும் பேசியும் நடித்து வந்தாலும் சிலநேரங்களில் பிறரால் அறியப்படுவதுண்டு. இந்நிலையில் துன்பத்தைத் தாங்கிக்கொள்ளத் துணிந்தும் உயிரைவிடத்துணிந்தும் ஒற்றர்கள் தம் தொழிலைச் செய்பவர்களாக உள்ளனர். போர் தொடங்குமுன் பகைவரின் நிலையை ஒற்றர்கள் மூலம் அறிந்து கொள்ளும் முறையைப் ‘புடைகெட ஒற்றின் ஆகிய வேயே’ என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். வள்ளுவரும் ஒற்றாடல் என்னும் அதிகாரத்தில் ஒற்றின் இன்றியமையாமையையும் ஒற்றர்களின் தன்மையினையும் விளக்கியுள்ளார். ஒற்றர் தமக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்று அரசினர், நண்பர் என்று அனைவரிடமும் ஒற்றறிதல் வேண்டும். ஒற்றர்கள் துறவி தவஒழுக்கமுடையவர் போன்றவர்போல் மாற்றுஉருவுடன் சென்றும் செய்திகளைச் சேகரிப்பர் இதனால் புலவர்களையும் ஒற்றறிய வந்தவர்கள் என்று சந்தேகப்படும் நிலை இருந்துள்ளது. சோழன் நெடுங்கிள்ளி, இளந்தத்தன் என்ற புலவர் மீது சந்தேகப்பட்டு அப்புலவரைக் கொல்ல முனைந்தான் அப்பொழுது கோவூர்கிழார்

**“வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை**

**பிறர்க்குத் தீதறித் தன்றோ இன்றே”** **(புறம் 47: 6–7)**

என்று கூறி அக்கொலையைத் தடுத்தார் சிலப்பதிகாரத்தில் கோவலனது ஊழ்வினையைக் கூறவந்த இளங்கோவடிகள் அவன் முற்பிறப்பில் சங்கமன் என்பவன் மீது ஒற்றன் என்று பொய்குற்றஞ்சாட்டி அவன் கொலைக்குக் காரணமாயிருந்தமையைக் கூறுகின்றார். இவ்வாறு பழந்தமிழக அரசுகள் ஆட்சி நிலைபெறப் பகைவரது ஆட்சி நிலையை அறிய ஒற்றாடலைப் பயன்படுத்தியது போன்று இந்நூற்றாண்டிலும் அனைத்து நாடுகளின் அரசியலிலும் ஒற்றாடல் தொடர்ந்து வருகிறது. பிறநாடுகளின் செய்திகளை அறியப் பெரிதும் துணை செய்வது நாட்டின் உளவு அல்லது துப்பறியும்

இலாகாவாகும். இது ராணுவ ஒற்றர் இலாகா என்றழைக்கப்படும். மேலும் ஒற்றர்கள் சண்டைக் காலங்களிலும் எதிரிகளிடமிருந்து செய்திகளைத் திரட்டச் சண்டையிடும் ஒற்றர்கள், வேவு பார்க்கும் ஒற்றர்கள், காவல் ஒற்றர்கள் என்று பலவகையாகப் பிரித்துள்ளனர். எனவே இன்றும் சிறந்த அரசியலமைப்பிற்கு உற்ற துணையாக ஒற்றர்கள் செயல்பட்டு வருகின்றனர்.

**தூதுவர்**

தூது என்பது ஒருவர்தம் கருத்தைப் பிறர்க்கு அறிவிப்பதற்காகத் தோன்றியது இத்தூது என்னுந் தொழில் மிகவும் நல்லியல்புடைய தொழிலாகும். ஒரு வேந்தனின் சார்பாளாராக மற்றொரு வேந்தனின் அரசவையில் செயல்பட்டவர் தூதர் எனப்பட்டார். தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் தூதினை மூவகைப் பிரிவினுள் ஒன்றாகக் குறிப்பிடுகிறது. இதனை,

**“ஓதல் பகையே தூதிவை பிரிவே”** **(தொல் - பொருள் - 971)**

என்கிறது பண்டைய முடிமன்னர்களின் அரசவை வளர்த்த செய்தொழில்களுள் ஒன்று தூது. இத்தூது செல்பவர்கள் சிறந்த தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும் என்பதை

**“அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்**
**பண்புடைமை தூதுரைப்பான் பண்பு”** **(குறள் : 681)**

என்கிறது மகாபாரதத்தில் கிருஷ்ணரும் இராமயணத்தில் அனுமனும் சிறந்த தூதுவர். அனுமன் சுக்கரிவன் பொருட்டு இராமனிடத்தும் இராமன் பொருட்டாகச் சீதையிடத்து, தூது செல்கிறான். அனுமன் தூதாகச் சென்று திரும்பி வந்து கண்டனன் கற்பினுக்கணியை எனக்கூறும் பகுதி தூதுவனின் பண்பையும், ஆற்றலையும் காட்டுகிறது. அக்காலத்தில் தலைமகன் தலைமகளிடையே கருத்து வேறுபாடு நிகழுங்காலத்தில் தூது அனுப்பப்பட்டது. இவ்வாறு தூது செல்வதற்கு உரியவராகத் தொல்காப்பியர் பன்னிருவரைக் குறிப்பிடுகிறார். இவைமட்டுமின்றி இருநாடுகளுக்கிடையில் பகை உண்டாகிவிடுமானால் உயிர்கட்கும் பொருளுக்கும் பெருத்த அழிவு உண்டாதல் இயல்பு. அந்த அழிவை நீக்கச் சான்றோர். இருநாட்டு மன்னர்களிடமும் தூது செல்வர் அவை அறநெறியில் அறிவுரை கூறி இருமன்னர்களையும் சமாதனப்படுத்தி அமைதியான முறையில் நாடுகளைக் காவல் புரியச் செய்வர். தூதனாக இருப்பவன் அரசனிடமும் மற்றவரிடமும் அன்பு கொண்டு அரசனுக்கு நன்மையானவற்றை ஆராய்ந்து அறியும் அறிவினையும், வேற்று அரசரிடம் சென்று தூது சொல்லும் காலத்தில் ஆராய்ந்து முறைப்படி சொல்லும் சொல்வன்மையினையும் பெற்றிருத்தல் வேண்டும். இதனை அறிந்தவர் ஔவையார். தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் என்பான் அதியமான்பால் பகைமை கொண்டான். தன்னிடத்து படைவலிமை மிக்கிருப்பதாக எண்ணி அவ்வேந்தன் செருக்குற்றான். அவனது அறியாமையை அறிந்த அதியமான் போரின் கொடுமையையும் அதனால் நாட்டுக்கும் நாட்டு மக்கட்கும் நேரும் கேட்டையும் தெரிந்துகொள்ளுமாறு அறிவித்தற்கு ஔவையார் என்னும் தன் மதிப்பிற்குரிய புலவரை

அவன்பால் தூது விட்டான். ஔவையார் அவனிடம் சென்றபோது தொண்டைமான் தன் படைக்கலக்கொட்டிலுக்கு அழைத்துச் சென்று காட்டினான். அவன் கருத்தறிந்த ஔவையார் அதியமான் படைக்கலங்களைப் பழிப்பது போலப் புகழ்ந்தும் தொண்டைமான் படைக்கலங்களைப் புகழ்வது போலப் பழித்தும் பாடியுள்ளார் இதனை

**"இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தநெய் அணிந்து**
**கடியுடைய வியநகர் அவ்வே யவ்வே**
**பகைவர்க் குத்தி கோடு, நுதி சிதைந்தும்**
**கொல் துறைக் குற்றிலமாதோ" (புறம் 95: 1-5)**

என்கிறது. தூதாகச் செல்லுந் தொழில் விழுந்தொழில் என்று குறிப்பிடப்பட்டது. விழுந்தொழில் என்பது தூது போதலைக் குறிக்கிறது. இத்தொழிலின் சிறப்புக்கருதி

**"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன" (தொல் - அகம் - நூ 972)**

என்கிறார் தொல்காப்பியர். அரசன் மேற்கொண்ட போர்தொழில் நிகழாவண்ணம் மழை பெய்யத் தொடங்கியது. இதனால் வேந்துவிடு விழுத்தொழிலாகிய தூது சொல்லுதல் கைவிடப்பட்டது.

**"வந்துவிடு விழுத் தொழில் ஒழிய**
**யான் தொடங்கினால் நிற் புறத்தரவே" (ஐங். : 428)**

என்கிறது. தூதுவரைச் சிறந்த வலிமையுள்ளவர், உயர்ந்த ஆற்றலுடையவர் என்றும் குறிப்பிடுவர். இல்வாழ்க்கை அளவில் நலம்புரிய அமைந்த தூதே நாடுகளுக்கிடையில் நன்மையை ஏற்படுத்துகிறது. அகவாழ்வில் பிரிந்தவரைச் சேர்க்கவும் புறவாழ்வில் பகைமைக்கொண்ட நாடுகளை இணைக்கவும் அமைந்த ஒரே தொழில் தூது.

**காவலர்**

காக்கும் தொழிலைச் செய்பவர் காவலர் எனப்பட்டனர். காத்தல் தொழிலை அடிப்படையாகக் கொண்டு அரசனுக்குக் காவலன் என்ற பெயரும் வழங்கப்பட்டது. கொலை, களவு முதலியவற்றிலிருந்து மக்களைக் காத்தல், ஆட்சிப் பொறுப்பிலிருக்கும் அரசனின் கடமையாகும். அரசன் மக்களை இவற்றிலிருந்து காக்காவிட்டால் நாட்டின் செல்வமாகக் கருதப்பட்ட பசுக்களில் பால் குறையும் அறிஞர்கள் தங்கள் கடமைகளை மறப்பர் என்பதை

**"ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவலன் எனின்" (குறள் : 560)**

என்று அரசனின் கடமையைச் சுட்டுகிறது. நாடு, ஊர், நகர் மக்கள் இவற்றைக் காக்கும் பொறுப்பு அரசனது கடமையாக இருந்தது. அவற்றைக் காக்கத் தவறினால் நாட்டில் கல்வி கற்றல், பொதுநல வேள்வி செய்தல், கொடுப்பது, வாங்குவது ஆகிய ஆறு தொழில்களும் இல்லாது போகும் என்பதை

**"காவலர்ப் பழிக்குமிக் கண்ணகல் ஞாலம் (புறம் : 35:29)**
**"காவலர் வழிமொழிந்து ஒழுக" (புறம் : 8:1)**

என்ற பாடிலடிகள் அரசனது காக்கும் பொறுப்பைச் சுட்டுகின்றன. மேலும் 'திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் காணலாம்' என்று எண்ணும் வகையில் மன்னன் மக்களைக் காவல் செய்ய வேண்டும் பண்டைய மன்னர்கள் நகரையும், ஊரையும் தெருக்களையும் காவல்புரிவதற்கென்று காவல்படைகள் அமைத்திருந்தனர். அக்காவல்காரர்கள் காவல் செய்தலையும், ஒற்றறிதலையும் முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

**நகரக்காவலர்**

நகரைக் காவல் செய்வதும் ஒற்றறிந்து உரைப்பதும் நகரக்காவலரின் தொழிலாகும். இவர்கள் தூக்கம் என்பதை அறியாதவர்கள் இவர்கள் நள்ளிரவில் கரிய துடியின் தோலைப் போன்று கருநிறத்து கல்லையும், மரத்தையும் அறுக்கும் கூர்மையான 'உளியும்' 'நூலேணியும்' வைத்திருப்பர். இடையில் வாள்தொங்கும் நுண்ணிய வேலைப்பாடுமிக்க ஆடை அணிந்திருப்பர். இரவில் கள்வரைப் பிடிப்பதற்குக் காவலர் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் துயில் கொள்ளாத கண்களை உடையவராக இருந்தனர். மேலும் சிறந்த விற்பயிற்சி உடையவர் காவலர். இப்படிப்பட்ட காவலர் தேரோடும் நகரவீதிகளில் மழைபெய்து ஓய்ந்துபோன நள்ளிரவிலும் உறங்காது கடமையாற்றும் திறத்தை

**"கண்மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி**
**வயக் களிறு பார்க்கும் வயப்புலி போல**
**துஞ்சாக் கண்ணீர் அஞ்சாக் கொள்ளையர்" (மதுரை: 642-644)**

என்கிறது. நகரக்காவலர் களிறு பார்க்கும் புலிபோல ஒற்று அறியச்செல்வர். இவர்கள் துஞ்சாமை அஞ்சாமை அறிந்தோர் புகழும் ஆண்மையைப் பெற்றவர் என்பதை

**"நிலம் அகழ் உளியின் நீலத் தானையன்**
**கலன் நசைஇ வேட்கையின் கடும்புலி போன்று" (புறம் 20:3-4)**

என்று காவலரின் வீரத்தைச் சிறப்பிக்கிறது.

**ஊர்க்காவலர்**

பழந்தமிழர் இரவுப்பொழுதில் தூங்காமல் ஊரைச் சுற்றிக் காவல்புரிந்தனர் இவர்கள் நள்ளிரவில் 'சூலம்' ஏந்திய கையுடன் திரிவர் என்பதை

**"யாமங் கொள்பவர் சுழர்நிழல்" (புறம் 37:9)**

என்கிறது புறம். இக்காவலர்கள் ஊரைச்சுற்றி வரும்போது மக்களை எச்சரிக்கும்பொருட்டு மணிகளை ஒலிக்கச் செய்வர். ஊர்க்காவலர் சிறிதும் சோர்விலாதவர் இரவில் உறங்காமல் காவல்காப்பர்.

**மெய்க்காப்பாளர்**

காவலர் நகரையும், ஊரையும் காவல் செய்ததோடு நாடுகாக்கும் மன்னனுக்கு எந்த நேரத்திலும் எந்தவிதமான தீங்கும் நேரிடாதவாறு உறுதுணையாய் உடனிருந்து காக்கும் பொறுப்பையும் மேற்கொண்டனர். இவர்கள் மெய்க்காப்பாளர்

என்றழைக்கப்பட்டனர். மன்னனுக்கு மெய்க்காப்பாளராக இருப்பவர்கள் அவன் நம்பிக்கைக்கு உரியவராய் நல்லொழுக்கம் உடையராய் விளங்கவேண்டும். எனவே நீண்டநாள் தம்மிடம் பணியாற்றியவரையே மெய்க்காப்பாளராக அரசர் நியமிப்பார். அதனால் மெய்க்காப்பாளர் முதிர்ந்த வயதை உடையவராய் இருந்தனர்.

**“நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்**
**அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்**
**சிதர்வால் அசைவளிக்கு அசைவந் தாங்கு**
**துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்**
**பெருமூ தாளர் ஏமம் சூழ”** **(முல்லைப். : 50-54)**

என்கிறது முல்லைப்பாட்டு.

**அறங்கூறவையத்தார்**

மக்களின் வாழ்க்கை நலனைக் கருத்தில்கொண்டு நடுவுநிலை பிறழாமல் நன்கு ஆராய்ந்து உண்மைத்தெரிந்து தீர்ப்புக்கூறும் இடம் இருந்தது. அது அறங்கூறவையம் என்றழைக்கப்பட்டது இதனை

**“சிறந்த கொள்கை அறங்கூ றவையம்!”** **(மதுரை: 489)**

என்கிறது. இந்த அவையத்தில் இருந்தோர் கல்வி கேள்வி ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்த அறவோராகவும், நடுவுநிலைமை கொண்டவராகவும் இருந்தனர் என்பதை

**“சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்ததொருபாற்**
**கோடாமை சான்றோர்க் கணி”** **(குறள் : 118)**

என்ற வள்ளுவரின் வாக்கிற்குச் சான்றாய்த் திகழ்ந்தவர் அறங்கூறவையத்தார். பயத்தையும், துன்பத்தையும் ஆசையையும் விட்டவர்கள். ஒரு பக்கத்தாரிடம் கோபத்தையும், மற்றொரு பக்கத்தாரிடமும் மகிழ்ச்சியையும் காட்டாமல் தம் உள்ளத்தை நடுவு நிலையிலே நிறுத்திக்கொண்டு துலாக்கோலைப்போல் நடுநிலையில் நிற்பார்கள். இவர்கள் சிறந்த ஒழுக்கமுடையவராய் நீதிபதியாய் வீற்றிருந்து நீதி வழங்குகின்ற அவையம் அறங்கூறவையம் என்பதை

**“அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**
**ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்**
**சிறந்த கொள்கை அறங்கூர் அவையமும்”** **(மதுரை : 489-492)**

என நீதிபதிகளின் நேர்மையைச் சுட்டுகிறது மதுரைக்காஞ்சி. இவை சிற்றூர்களில் ஏற்படும் சிக்கல்கள் உடனுக்குடன் தீர்க்கப்படவும் வேந்தனின் வேலைப்பளுவைக் குறைப்பதற்காகவும் இவ்வறங்கூறவையம் ஏற்படுத்தப்பட்டிருக்கக்கூடும். இவ்அவையம் அக்கால ஆட்சி முறைக்குப் பெருந்துணை புரிந்தது.

**அறிவர்**

அறிவர் என்பவரைக் கணிவன் எனவும் அழைப்பர். இவர் இல்லற வாழ்க்கையில் கணவன் மனைவிக்குள் ஊடல் முதலியவை நிகழ்ந்தால் அவர்களுக்கு

அறிவுரைகூறி இல்லறநெறியில் நிறுத்துவார். இவர் திருமணம் நடத்தக்கூடிய நாளைக் கணித்துக் கூறுவார்.

**“நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவினை முந்துற்இத்**

**தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவர்” (கலி : 39)**

என்கிறது. இவரைக் குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் அறிபவன் என்கிறார் இளம்பூரணர்.

**“மறுவில் செய்தி மூவகைக் காலமும்**

**நெறியின் ஆற்றிய அறிவன் தேயம்” (தொல்-புறம் நூ-11)**

என்று அறிவர் பண்புகளைச் சுட்டுகிறது தொல்காப்பியம்.

**ஆசிரியர்**

கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பர். அத்தகைய சிறப்பான கல்வியாளரை உருவாக்குவது ஆசிரியரின் தொழிலாகும். நல்ல நூல்களையும் நல்ல மாணவர்களையும் உருவாக்குபவர் சிறந்த ஆசிரியர் ஆவார். அவர்தாம் கற்றதனால் பெற்ற இன்பத்தை எல்லோர்க்கும் அறிவிப்பதற்காகக் கல்வியைக் கற்பிக்கிறார் இதனை

**“தொல்லாணை நல்லாசிரியர்**

**புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்” (மதுரைக்.: 761-762)**

என்கிறது மதுரைக்காஞ்சி. கல்லாதவர்க்குத் தம்கைப்பொருளைக் கைமாறாகக் கொடுத்து நூலைக் கற்பித்தனர். ‘கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகிர்ந்துண்ணும் விச்சைக்கண்’ என்கிறது கலித்தொகை அக்காலத்தில் கற்றோர்க்கிடையே விவாதமும் பட்டிமன்றமும் நடந்துள்ளது. அங்கு வாதிட்டோர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினர். விவாதம் நடக்கும் இடத்தில் கொடியை நட்டிக் கல்வியின் சிறப்பை நிலைநாட்டினர்.

**“பல்கேள்வித் துறைபோகிய**

**தொல்லாணை நல்லாசிரியர்**

**உறழ்குறித் தெடுத்த உருகெழு கொடியும்” (பட்டினப். 169-171)**

என்கிறது பட்டினப்பாலை. கல்வி கேள்விகளில் சிறந்தவர் அல்லாதார்க்கு இக்கொடி அச்சம் விளைவித்தலின் ‘உருகெழுகொடி’ எனப்பட்டது. இவற்றின் மூலம் பூம்புகாரில் பட்டிமண்டபம் இருந்ததையும் அங்கு வாதிட்டோர் பலகேள்வித் துறைபோகிய தொல்லாணை நல்லாசிரியராக இருந்ததையும் உணர்த்துகிறது.

**கணியன்**

கணியன் என்றால் நாள்கோள் நிலையைக்கண்டு வருங்கால நன்மை தீமைகளைக் கணிப்பவன் என்பது பொருள் சோதிடத்தைப் பண்டைத்தமிழர் ‘கணியம்’ என்றும் அத்தொழில்புரிந்தாரைக் ‘கணியர்’ என்றும் அழைத்தனர். சோதிடம் என்பது

நாள்கோள் நிலைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றால் ஏற்படக்கூடிய இன்ப, துன்பங்களை முற்படக் கணித்துக் கூறுவதாகும்.

கணியன் பூங்குன்றனார் என்பவர் சங்ககாலத்து வாழ்ந்த சிறந்த புலவர். இவர் தமது வானநூற் புலமையினைக் கொண்டு செய்துவந்த தொழில் கணிதத்தொழிலாகும். கணிதத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தாலும் கவியும் புனைந்து இருவகைக் கலைகளையும் இனிது பேணினார். சங்ககால அரசவையில் இன்றியமையாத அலுவலர்களில் சோதிடரும் ஒருவராக இருந்தார். அக்கால அரசர்கள் நற்சகுனங்களில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவராய் இருந்தனர். அதனால் அரசர்கள் சோதிடர்களைத் தமது அவையில் நிரந்தரமாக வைத்திருந்தனர். சோதிடரைக் ‘கணி’ என்றும் தலைமைச் சோதிடரைப் பெருங்கணி என்றும் கூறுவர். அரச காரியங்களைச் செய்வதற்குப் பொருத்தமான காலத்தைக் கணித்துக் கூறுவது இவர்களது பணி ஒருநாளில் அமையும்பொழுதைக் கணக்கிட்டுக் கூறுபவர் நாழிகைக்கணக்கர் எனப்பட்டனர். இவர்களை,

**“பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள்”** **(முல்லைப்.: 55)**

என்கிறது முல்லைப்பாட்டு இருள்நிறைந்த இரவுப்பொழுதிலும் பொழுதை நன்கு அறிவர். இவ்வாறு பொழுதைக் கணிப்பதற்கு ‘நாழிகை’ ‘வட்டில்’ பயன்படுத்தப்பட்டன. இவற்றின் மூலம் பொழுதை அறிவதற்கு ஒரு பாத்திரத்தில் நீரைப் பரப்புவர். அவற்றில் ஒரு சிறு துளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு அந்நீரினை அளந்துகாணும் கருவியாகலின் ‘நாழிகை வட்டில்’ ‘குறுநீர்க்கன்னல்’ எனப்பட்டது. இதனை

**“குறுநீர்க் கன்னல் எண்ணுதல் அல்லது**
**கதிர்மருங் கறியா தஞ்சுவரட் பாஅய்”** **(அகம் 43:6-7)**

எனக் குறிப்பிடுகின்றது. பண்டைத் தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனால் ஏற்படும் பருவகாலங்களையும் சந்திரனால் உண்டாகும் பருவகாலங்களையும் பொறுத்து அமைவனவாக இருந்தன. கூடலூர் கிழார் என்னும் புலவர் ஒருவிண்மீன் வெள்ளியைக் கண்டு சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இன்னநாளில் இறப்பான் என்று கணித்தறிந்து கூறியபடி மன்னன் இறந்துள்ளான். இதனை

**“ஆடியல் அழற்குட்டத்து**
**ஆரிருள் அரையரவில்**
**முடப்பனையத்து வேர்முதலாக்**
**மேலோர் உலகம் எய்தினன்”** **(புறம் : 229)**

என்கிறது புறம் கடியலூர் உருத்திரங் கண்ணனார் காவிரி ஆற்றின் தனிச்சிறப்பினைக் கூறும்போது உலகம் வானத்தில் தொடங்கி அதன்மூலமாக விண்மீன்கள் நிலையையும் உலகம் நிலைபெறுவதற்குக் காரணம் மழை என்பதனையும் அம்மழை வரவினை அறிவிக்கின்ற வெள்ளி மீனாகிய சுக்கிரவன் தென்திசை நோக்கிச் செல்லுமானால் மழைவளம் குறையும் என்பதைக் கணித்திருக்கிறார்.

**“வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**

**திசை திரிந்து தெற்கு ஏகினும்”** **(பட்டினப் : 1-2)**

என்கிறது பட்டினப்பாலை. பண்டைத் தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனால் ஏற்படும் பருவ காலங்களையும் சந்திரனால் உண்டாகும் பருவகாலங்களையும் பொறுத்து அமைவனாக இருந்தன.

**புலவர்**

மக்களையும் மன்னனையும் நல்வழிப்படுத்துதல் புலவர்களது தொழில். இவர்கள் கல்வி, கேள்வி ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்து விளங்கினர். கொடை வள்ளல்களும் அரசர்களும் புலவர்கள் கூறும் அறிவுரை கேட்டு அதன்வழி நடந்தனர். புலவர் வேந்தனைப் பாடிப் பரிசில் பெறுவதைத் தொழிலாகக் கொள்ளாமல் அவர்கள் தவறு செய்தவிடத்து அஞ்சாது அவர்களைக் கண்டித்து அறநெறியில் வழிநடத்தும் இயல்புடையவராக விளங்கினர். அக்காலத்தில் புலவர்கள் அரசியலில் தலையிட்டு மன்னனுக்கு அறிவுரை கூறியும் அரசரின் போக்கைத் திருத்தும் உரிமையும் பெற்றிருந்தனர். அரசர் குறுநில மன்னர் ஆகியோரின் குடும்ப வாழ்விலும் புலவர் தலையிட்டு அறிவுரை கூறும் ஆர்வம் கொண்டிருந்தனர் என்கிறார் மு. வரதராசனார் இதனை

**“இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**

**கெடுப்பா ரிலானுங் கெடும்”** **(குறள் : 448)**

எனக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். பரிசில் பெற்ற புலவர் மன்னனிடம் தவறு கண்டபொழுது தமக்குப் பரிசுகிடைத்ததை நினைத்துத் தாழ்ந்துவிடாமல் அவன் தவறை அறிவுறுத்துவர். அரசர்கள் புலவர்களைப் பெரும் புலமையாளராகவும், சான்றோராகவும் கருதிப் போற்றினர். வேந்தர் புலவர் தொடர்பு உயிர் ஒத்த நட்பாக இருந்தது. வேந்தன் உயிர்துறக்கும்பொழுது தாமும் உடனிருந்து உயிர்துறக்கும் அளவிற்கு நட்புக் கொண்டிருந்தனர். தன்னுடன் புலவர் பலர் வடக்கிருக்க உயிர் நீங்குமளவிற்கு அவர்தம் பேரன்பைப் பெற்றிருந்தனர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கும்போது தனக்கு அருகில் பிசிராந்தையாருக்கு ஓர் இடம் ஒதுக்குமாறு கூறினான். அருகில் இருந்தோர் தங்களை நேரில் ஒருநாளும் காணாத பிசிராந்தையார் எங்ஙனம் வருவார் எனக்கேட்டனர். அதற்கு

**“செல்வக்காலை நிற்பினும்**

**அல்லற் காலை நில்லலன் மன்னே”** **(புறம் 217:1)**

என உறுதியாகச் சோழன் கூறினான். அவன் கூற்றுப் பொய்க்காதவாறு பிசிராந்தையார் வருகை தந்து அவனுடன் உயிர்துறந்தது புலவரின் நட்பின் மிகுதியைக் காட்டுகிறது. இதனை

**“நினைக்குங்காலை மருட்கை உடைத்தே”** **(புறம் 215:8)**

எனப்புலவர் பொத்தியார் வியந்து போற்றுகிறார். பாடிப்பரிசில் பெறும் புலவர் தமக்குப் பரிசில் வழங்கிய மன்னனை வாழ்த்துதல் இயல்பு. ஆனால் தனக்குப்பரிசில்

கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை என மன்னனின் தவறை இடித்துரைத்து நல்லாட்சி புரிவதற்கு ஆலோசனை வழங்கும் புலவர்கள் பலர் இருந்தனர். அவர்கள் அவைக்களப் புலவராக விளங்கினர்.

**தொகுப்புரை**

தனிமனிதத் தேவை அவன்வாழும் சமுதாயத்தேவையாகின்றது. இந்த அடிப்படையில் அரும்பி மலர்ந்து பயன்தருவது தொழில் சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் என்றார் வள்ளுவர், உணவினை நிறைய விளைவிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் உழவர்கள். அவ்வுழவர்கள் உழுதல், விதைத்தல், நீர்ப்பாய்ச்சுதல், அறுவடை செய்தல் போன்ற தொழில்களைச் செய்து உலகைக் காத்தனர்.

பயிர்த்தொழிலோடு அறிவுக்கும் ஆற்றலுக்கும் வாழும் சூழலுக்கும் ஏற்றவாறு தொழில்கள் செய்து வாழ்ந்தனர். அவற்றில் நெசவு, தச்சு, ஓவியம், சிற்பம், கட்டடம் போன்ற தொழில்களை நுட்பத்துடன் செய்தனர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

அக்காலத்தில் கைத்தொழில் வல்லவர் குறைந்த மூலதனத்தைக் கொண்டு எளிய கருவிகளையும் திறனையும் பயன்படுத்தித் தத்தம் இருப்பிடத்திலேயே தொழில் செய்தனர். தொழிலில் ஏற்படும் உயர்வுக்கும், தாழ்வுக்கும் தொழிலாளியே பொறுப்பாவான். அதை உணர்ந்து உலோகத்தொழில், அணிகலத்தொழில், தோல்தொழில் இவற்றோடு செருப்புத்தைக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

காலப்போக்கில் மனிதனின் தேவைகள் அதிகமானதால் பொருட்களை உற்பத்தி செய்து வாழ்ந்தனர். அவற்றிற்காகக் கால்நடைப்பேணல், உப்பு விளைவித்தல், மீன்வேட்டம், முத்தெடுத்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களில் ஆர்வமுடன் ஈடுபட்டனர்.

நாட்டில் எந்த முயற்சி சமுதாயத்தின் தேவையை நிறைவு செய்கிறதோ நல்ல பண்பாட்டினை உருவாக்குகிறதோ அது ஆக்கவளமுள்ள உழைப்பாகக் கொள்ளப்படுகிறது. அதனால் வளர்ச்சிப்பாதையில் அந்தணர், அரசர், அமைச்சர், ஒற்றர், தூதுவர், காவலர் போன்றோரின் தொழில்கள் அமைந்துள்ளன.

அறிவுத்துறையில் ஈடுபட்டு உழைப்பவர் அறிவர், ஆசிரியர், கணியர், புலவர் போன்றோர். இவர்கள் கற்றுவல்ல கலைத்திறத்தால் மக்களுடைய மனப்பண்புகளை வளர்ப்பதைத் தம்முடைய நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தனர்.

தொழிலாளர்களின் வாழ்வில் தொழில்கள் சிறப்புப் பெற்றுச் செய்யும் தொழிலே தெய்வம் என வாழ்ந்தநிலையைக் காட்டுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. அ. கோகிலா, தமிழ் இலக்கியங்களில் வேளாண்மை தொழில்நுட்பசார் கருத்தரங்கம், ப-3
2. செ. வைத்தியலிங்கம், அழகுக்கலைத்திறன், ப: 70-71

# இயல் - 5

# வாழ்வியல் முறை

**முன்னுரை**

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழினத்தின் சிந்தனைக் கொடியில் பூத்த சங்கப்பனுவல்களைக் கொண்ட மொழி தமிழ்மொழி, மற்ற மொழிகளில் எழுத்து, சொல், யாப்பு, அணி ஆகியவற்றிற்கு இலக்கணங்கள் உள்ளன. ஆனால் வாழ்வுக்குரிய பொருள் இலக்கணம் இல்லை. அது நம் தமிழ் இலக்கணத்தில் நிறைந்திருக்கிறது. இந்த வாழ்விலக்கணத்திற்கு இலக்கியமாகச் சங்கப் படைப்புகள் உள்ளன. இப்படைப்புகள் தோன்றிய காலத்தில் வாழ்ந்த பழந்தமிழர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். வாழ்வில் இடம்பெற்ற இயற்கையை இலக்கியத்திலும் அமைத்தனர். இயற்கை அழகு சங்க இலக்கியங்களில் கண்ணுக்கினிய காட்சியாகத் தீட்டப்பெற்றிருக்கின்றன. இயற்கையோடு இணைந்த தம் அனுபவ உணர்ச்சியை இலக்கியமாகப் படைத்துக் காட்டியிருப்பதால் சங்க இலக்கியங்கள் உயிரோட்டம் பெறுகின்றன. அவை மனித வாழ்க்கையோடு தொடர்பு பெறுகின்றன. இயற்கையோடு ஒன்றாத வாழ்க்கை அழகற்றது, உணர்வற்றது என்ற உண்மையை உணர்த்துகின்றன. "இலக்கியம் என்பது வாழ்க்கையிலிருந்து பிறக்கிறது. வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது. வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது என்றும், மொழியை ஊடகமாகக் கொண்டு வெளிவரும் வாழ்க்கை ஆய்வே இலக்கியம் என்றும், மனிதனை மனிதநேயப் பண்புடன் நேசிக்க வழிமுறைகளை வகுத்துத்தருவது வாழ்வியல் என்கின்றனர்" அறிஞர். இலக்கியம் மனித வாழ்வின் இலக்குகளை இயம்புவது இலக்குகளை மனிதமனம் ஏற்றுக் கொள்ளும்படி அழகாகச் சொல்லும்போது இலக்கியம் வெற்றிபெறுகிறது.

சங்ககால மக்கள் தங்களுக்குப் பிடித்தமான நிலத்தைத் தேர்ந்தெடுத்து வாழத் தலைபட்டனர். வாழிடம் காடாக, மலையாக, கடற்கரையாக வயல்சூழ்ப்பகுதியாக இருந்தது. அவற்றை நாகரிகத்திற்கு ஏற்றாற்போல் மாற்றி அமைத்தனர். ஆனால் இயற்கையை அழிக்கவில்லை. புவி என்பது நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பதை அக்கால மக்கள் உணர்ந்திருந்தனர்.

**"மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**

**தீ முரணிய நீரு மென்றாங்கு**
**ஐம்பெரு பூதத்து இயற்கைபோல"** **(புறம் 2:1-6)**

என்று கூறுவதன் மூலம் அவர்களின் உலகம் பற்றிய பரந்த அறிவு புலனாகிறது. அக்கால மக்கள் தொழில்நுட்பத்தோடும், அழகியல் உணர்வோடும் வாழ்ந்தனர். அவர்களின் வாழ்வியல் முறை இயற்கையோடு இயைந்ததாக இருந்தது. நிலம் பொழுது தட்ப வெப்பத்திற்கு ஏற்றவாறு வாழ்வியல் முறையை அமைத்துக் கொண்டனர். அத்தகைய மக்களின் உணவு, உடை, கல்வி, நட்பு, ஈகை, நம்பிக்கை, பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**வைகறையில் துயில் எழுதல்**

பண்டையத் தமிழக மக்கள் கதிரவன் உதயமாவதற்கு முன்பு துயிலெழுந்தனர். அதிகாலைப் பொழுதை அறிவிப்பதற்குச் சேவலின் கூவலும் பிற பறவைகளின் ஒலியும் துணை செய்தன என்பதை 'ஒண்பொறாச் சேவல் எழுப்ப ஏற்றெழுந்து' என்கிறது. அந்தணர் மந்திரம் ஓதும் ஒலியும் யாழோர் எழுப்பும் இசையொலியும் மன்னனுடைய அரண்மனையில் ஒலிக்கும் காலை முரசும், அரசனை எழுப்புவோரின் பாடல்களும் மக்களைத் தூக்கத்தில் இருந்து எழுப்புகின்றன என்பதை,

**"நான்மறைக் கேள்வி நவில் குரல் எழுப்ப**
**ஏம இன் துயில் எழுதல் அல்லதை**
**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**
**கோழியின் எழாது எம்பேர் ஊர் துயிலே"** **(பரி: 8)**

என்கிறது. பொய்கை மலரின் இன்னொலி செய்யும் வண்டைப்போல அந்தணர் வேதம்பாடத் தொடங்குகின்றனர். ஏனைய இடங்களில் கோழி போன்ற பறவைகளின் ஒலியும் மக்களைத் துயில் எழுப்புகின்றன. ஆனால் மதுரை மாநகரில் மறை ஒலியால் மக்கள் துயில் எழுகின்றனர் என்பதைப் பரிபாடல் உணர்த்துகிறது. இதனைப் போன்றே விடியற்காலைப் பொழுதில் மதுரைமாநகரின் காட்சியையும், அப்பொழுது நடைபெறும் செயல்களையும் மதுரைக்காஞ்சி வருணிக்கிறது.

**"ஓதல் அந்தணர் வேதம் பாட**
**சீர் இனிது கொண்டு நரம்பு இனிது இயக்கி**
**யாழோர் மருதம் பண்ண காழோர்**
**பணைநிலைப் புரவி புல் உணாத் தெவிட்ட**
**தருமணல் முற்றத்து அரி ஞமிறு ஆர்ப்ப**
**மென் பூஞ் செம்மலொடு நன்கலம் சீப்ப**
**இரவுத் தலைப் பெயரும் ஏம வைகறை"** **(மதுரை 656-660, 685-686)**

என்கிறது. 'வைகறையில் துயில் எழு' என்ற ஔவையின் வாக்கிற்கு இணங்க விடியற்காலைப் பொழுதில் விழித்தெழப் பழகுதல் வேண்டும். இப்பழக்கத்தை வழக்கமாக்கினால் வாழ்வில் நிறைய நன்மைகள் வந்து சேரும் என்பதை ஆசாரக்கோவை வலியுறுத்துகிறது. அதிகாலையில் பெண்கள் சேவல் கூவுவதற்கு முன்பே எழுந்து தம் கடமைகளைச் செய்தனர் என்பதை

**"அமைதியில் ஒளி அரும்பும் அதிகாலை – மிக**

**அழகான இருட்சோலை தனில்**
**இமை திறந்தே தலைவி கேட்டாள் சேவல்**
**எழுந்திருப்பீர் என்று''**[1]

என்கிறது. அமைதியான காலைப்பொழுதில் இருள் விலகுவதற்கு முன்பே எழுந்து தலைவி இல்லறக்கடமைகளைச் செய்து தலைவனை எழுப்புவதற்கு முன்பு கூவும் சேவலை எழுப்புகிறாள். இதன்மூலம் பின்தூங்கி முன் எழும் தலைவியின் காலைப்பொழுதை வருணிக்கிறார் பாரதிதாசன். பெரும்பாலும் அதிகாலையில் மனிதன் எழுந்து தம் கடமைகளை் செய்ய முற்படும்போது நிறைய நன்மைகள் விளைகின்றன. உடலில் ஆரோக்கியமும், மனதில் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. அன்றையபொழுது அருள் நிறைந்ததாக அமைகிறது.

**நீராடுதல்**

மனதிற்கும் உடலுக்கும் புத்துணர்ச்சியைத் தருவது நீராடல். உடலைச் சுத்தம் செய்வதற்குக் குளத்திலும், ஆற்றிலும் நீராடினர். மனதைச் சுத்தம் செய்வதற்கு வழிபாட்டை மேற்கொண்டனர். நீராடுதல் தமிழரிடம் தொன்று தொட்டுத் தொடர்ந்து வரும் பழக்கம். நீராடல் இன்று வரையிலும் முக்கியத்துவம் பொருந்திய ஒன்றாகக் கருதப்படுகிறது. நீராடுதல் குறித்து பழந்தமிழரிடம் பல சொற்கள் காணப்படுகின்றன. அவை அருவியாடுதல், சுனையாடுதல், புனலாடுதல், துறையாடுதல், புதுநீர் ஆடுதல், புதுப்புனலாடுதல், இலவந்திகை, கடல்விளையாட்டு குளநீராடுதல் எனப் பலவகைப்படும். இவை தமிழர் நீராடிய நீர்நிலைகளைக் காட்டுவன. அக்கால மக்கள் நீராடுவதற்கென்று தனியான ஆடை, அணிகலன்களை அணிந்தனர். அவற்றில் 'நீரணி' என்ற சொல் நீராடுதலுக்குப் பொருத்தமான அணிகலன்களைக் குறித்தது. பெண்கள் அலங்காரமான ஆடை, அணிகலன்களை அணிந்து நீராடினர். சிலர் பொன்னால் செய்த பூக்களை அணிந்தனர். சிலர் முன்னர் அணிந்திருந்த சந்தனச் சாந்தினை மாற்றிவிட்டு துகில் புகையினலாகிய சாந்தினை தம் உடம்பில் மிகுதியாகப் பூசிப் புடவை அணிந்து நீராடினர் என்பதை,

**''மின் அவிர் ஒளி இழை வேயுமோரும்**
**பொன் அடர்ப் பூம் புனை திருத்துவோரும்**
**அகில்கெழு சாந்தும் மாற்றி ஆற்றப்**
**புகைகெழு சாந்தம் பூசுவோரும்**
**கார் கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்**
**வேர் பிணி பலர் மலர் வேயுமோரும்**
**புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்''** **(பரி 12:11-17)**

என்கிறது பரிபாடல். மேலும் நீராடலைத் தீர்த்தமாடுதல் எனவும் குறிப்பர். தீமை செய்தோர் தங்களது பாவச்செயலுக்குக் கழுவாயாகக் கடலிலோ அல்லது ஆற்றுநீரிலோ குளித்துப் பாவங்களைப் போக்கிக்கொண்டனர். இதனைப் பட்டினப் பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பரதவர் சினைச்சுறவின் கோட்டினை நட்டு

வழிபட்டுப் பின்னர் புகார்முகத்தே காவிரி கடலோடு கலக்குமிடத்தில் தங்களது பழவினை நீங்கக் கடலாடியதை

**“தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகூடற்**
**றீது நீங்கக் கடலாடியும்**
**மாசுபோகப் புனல்படிந்தும்”** **(பட்டி. 97-100)**

என்கிறார். பாவம் செய்தோர் பாவங்கள் நீங்கக் குமரியில் நீராடுவதனை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை இரட்டைக் காப்பியங்களின் கதைமாந்தரின் செயலால் உணரமுடிகின்றது. சிலம்பில் மாடலன் குமரியம் பெருந்துறையில் நீராடியமை கொண்டும் கங்கையில் நீராடத் தேவந்தியின் கணவன் நீங்கியமை கொண்டும், நீராடிப் பாவம் தொலைந்தமை புலப்படுகிறது. மணிமேகலையில் சுதமதி தன்தீவினை போக்கக் கன்னியாகுமரியில் கடலாடியதை,

**“பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து**
**கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்**
**தென்றிசைக் குமரியாடிய வருவோன்”** **(மணி 13: 5-7)**

எனச் சாத்தனார் சுட்டுகின்றார். மேற்சுட்டிய சான்றுகள் கடலில் நீராடிப் பாவம்போக்கும் அக்கால நம்பிக்கை வயப்பட்ட செயலைத் தெரிவிக்கின்றன. பண்டைய மக்கள் பாவத்தைப் போக்குவதற்கு நீராடியதோடு அழுக்கைப் போக்குவதற்கும் நீராடினர். உடம்பின் அழுக்கைப் போக்குவதற்குச் சீகைக்காய், அரைப்பு, மற்றும் வாசனைப் பொருள்களைப் பயன்படுத்திக் குளித்தனர். அவற்றில் குளிப்பு ‘நீராட்டு’ என்றும், தலைமுழுக்கு நெய்யாட்டு என்றும் சொல்லப்பெறும் தலைமுழுக்கு அன்று தலையில் எண்ணெய் போவதற்கும் உடம்பில் அழுக்குப் போக்குவதற்கும் அரைப்பு, சீயக்காய் முதலியவற்றைப் பயன்படுத்தினர் என்பதை

**“மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப”** **(மதுரை : 685)**

என்கிறது மதுரைக்காஞ்சி. பெண்கள் தலையில் தடவிய எண்ணெய் நீங்குவதற்காக நுண்ணிய அரைப்புத்தூளைத் தேய்த்தனர் என்பதை ‘எண்ணெய் கழல இலை துகள பிசைவார்’ என்கிறது பரிபாடல். மேலும் அரண்மனையில் வாழும் அரச மகளிரும், மாளிகையில் வாழும் செல்வப்பெண்டிரும் நாடகக் கணிகையரும், கோட்டம், துருக்கம் என்னும் ஐவகை நறுமணப் பொருள்களையும், நாவல் பூவந்தி என்னும் 32 வகை ஓமாலிகையையும் ஊறவைத்து நன்னீரில் குளித்து வந்தனர். இதனை

**“பத்துத் துவரினும் ஐந்து வரையினும்**
**முப்பத் திருவகை ஓமாலிகையினும்**
**ஊறிய நன்னீர் உரைத்தநெய்வாசம்**
**நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டி”** **(சிலம்பு 6: 76-80)**

என்கிறது சிலப்பதிகாரம். மேலும் எப்பொழுதெல்லாம் நீராட வேண்டும் என்பதை ஆசாரக்கோவை வகைப்படுத்துகிறது. கடவுளை வணங்குமுன், கெட்டகனா கண்டபின்,

தூய்மைகெட்டபோது, நீண்டநேரம் தூங்கி எழுந்தபோது, கூடிப்புணர்ந்தபின், மலம் சிறுநீர் கழித்தபின் நீராடி உடல்தூய்மை செய்தல் மிகவும் அவசியம் என்பதை,

**“தேவர் வழிபாடு தீக்கனா வாலாமை**
**உண்டது கான்றல் மயிர்களைதல் ஊண்பொழுது**
**வெகு துயலொடு இனை வழைச்சு கீழ்மக்கள்**
**மெய்யுறல் ஏனை”** **(ஆசாரக் : 10)**

என்கிறது. அக்காலத்தில் போருக்குப் புறப்படும்பொழுதும், பெற்றெடுத்த தாய்மார்களுக்குக் குறிப்பிட்ட சில நாள்கள் கழித்தபிறகும் எண்ணெய் நீராட்டுதல் சிறப்புமிக்க வழக்கமாகும். எண்ணெய் தேய்த்துக் குளித்த இளம்பெண்கள் சோர்வினாலும், களைப்பினாலும் மயக்குற்று உறங்குவர். இதனை நெய்யணி மயக்கம் என்பர்.

**“புதல்வன் பயந்த புனிறு தீர்பொழுதின்**
**நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி**
**ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்**
**செய்பெருஞ் சிறப்பொடு”** **(தொல் : 1092)**

என்கிறது தொல்காப்பியம். பெண்கள் குளித்து முடித்தபின் கூந்தலில் உள்ள நீரைப் பிழிந்து கூந்தலை உலரவிட்டனர் என்பதை,

**‘பின் இருங் கூந்தல் பிழிவன் துவரி’**

என்கிறது மதுரைக்காஞ்சி குளித்த பின்னர் வெளுத்த தூய்மையான ஆடையை அணிந்தனர். இவ்வாறு நீராடல் உடலைச் சுத்தப்படுத்துவதற்கு மட்டுமல்லாது பிற பயன்கருதியும் மேற்கொள்ளப்பட்டது.

தைநீராடல் மணமாகாத இளம் கன்னிப்பெண்கள் மார்கழி மாதம் முழுமதி நாள் தொடங்கி தைமாதம் முழுமதி நாள் வரை நீராடி நோன்பு இருப்பர். இதனைத் தைநீராடல் என்றும், அம்பா ஆடல் என்றும் கூறுவர். தைநீராடும் கன்னிப்பெண்கள் தாம் விரும்பிய கணவனை அடைவதற்கு மரத்தால் பாவை அமைத்து நோன்பிருப்பர். இதனை,

**“தையல் நீராடி தவம் தலைப்படுவாயோ”** **(கலித் 59: 13)**

**“உண்டியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்கவோம்**
**அன்னவர எங்கணவ ராவர்”** **(திருவெம்பாவை : 29)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் நோன்பிருக்கும் பெண்கள் தங்கள் தாயாருடன் முதுபார்ப்பனப் பெண்டிர்களிடம் சென்று சடங்கு முறைகளை அறிந்ததைத் தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல் (பரி 11:91) என்கிறது. நோன்பிருக்கும் பெண்கள் நீரில் மட்டுமன்றி நெருப்பிலும் நின்று தவம் புரியும் அளவிற்கு முற்பிறவியில் தவம் மேற்கொண்டமையால் இப்பிறவியில் தைந்நீராடும் தவத்தைப் பெற்றிருக்கின்றனர் என்பதை,

**“தீ எரிப் பாடலும் செறி தவம் முன் பற்றியோ”** **(பரி : 11)**

என்கிறது பரிபாடல்.

'நீரின்றி அமையாது உலகு' என்ற பொய்யமொழிப்புலவர் வாக்கிற்கு ஏற்ப உலக மக்களும் ஏனைய உயிர்களும் பசியும் பிணியுமின்றி வாழ மழை இன்றியமையாதது. அம்மழை அதிகமாகப் பெய்து வையை ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அதனால் புதுப்புனல் வெள்ளத்தில் நீராட வருவோர் வையை ஆற்றில் நீராடிப் பின் வழிபாடு செய்வது அன்றைய வழக்கமாக இருந்தது. மக்களுக்குப் புதுநீரில் புகுந்து ஆடுவது நீங்காத இன்பத்தைத் தருவதாக மகிழ்ந்தனர். அதனை ஒருவிழாவாகக் கொண்டாடினர். அது நீராட்டுவிழா என்றழைக்கப்படுகிறது. வையையில் வெள்ளம் மிகுதியாகப் பெருகுவதால் அவ்வெள்ளத்தில் புகுந்து கூடி நீராடுவதற்காக மக்கள் புறப்பட்டனர் என்பதை 'புனல்மண்டி ஆடல்புரிவான் சனம்மண்டி' என்னும் தொடர் விளக்குகிறது. தலையில் மகரவலயம் அணிந்த அழகிய நெற்றியையுடைய மகளிர் வையைப் புதுப்புனலில் நீராடிக்களைத்தபின் கரையேறும்போது அவர்கள் பயன்படுத்திய படகுகளைக் கைவிட்டனர் என்பதைப் "புனல்பொழுது மெலிந்தார் திமில்விட" என்கிறது பரிபாடல். மேலும் ஆண், பெண் இருபாலரும் அருவிகளில் நீராடி மகிழ்ந்தனர். இந்நீராட்டுவிழா 'புனலாட்டுவிழா' என்றழைக்கப்பட்டது. இதனை,

**"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்**
**றல்லல் நீத்த உவகை நான்கே"** **(தொல் : 1205)**

என்கிறது தொல்காப்பியம். நீராடல் என்பது உடலைச் சுத்தப்படுத்துவதற்கு மட்டுமல்லாமல் வழிபாட்டினால் மனதைச் சுத்தப்படுத்துவதற்கும் மேற்கொள்ளப்பட்டது என்பதை,

**"புறத்தூய்மை நீரான் அமையும் அகத்தூய்மை**
**வாய்மையான் காணப் படும்"** **(குறள் : 298)**

என்கிறார் திருவள்ளுவர்.

**உணவு**

மக்களின் பண்பாட்டை உணர அவர்தம் உணவுப்பழக்கவழக்கங்கள் காரணமாக அமைகின்றன. அவர்களின் உணவு என்பது மக்களின் பருவச்சூழ்நிலை, வாழும் நிலத்தின் தன்மை, விளையும் பொருள்கள், சமூகப்படிநிலைகள், உற்பத்திமுறை, பொருளாதாரநிலை ஆகியவற்றைப் பொறுத்து அமைகிறது. இதனை, உணவு எனப்படுவது 'நிலத்தொடு நீரே' என்கிறது புறம். சங்ககால மக்கள் இயற்கையாகக் கிடைத்த தாவரங்களையும், உயிரினங்களையும் உணவாகப் பயன்படுத்தினர். அவர்களின் உணவு வகைகள் உடல்நலத்திற்கு ஏற்றவையாக இருந்தன. மா, பலா, வாழை, அவரை, துவரை, தேன், திணைமாவு என்று இயற்கை உணவை உண்டனர். மேலும் உணவினைச் சுவையுறச் சமைப்பதிலும், உண்பதிலும் அம்மக்கள் சிறந்து விளங்கினர். சமைத்தல் என்பது பக்குவப்படுத்துதல் என்று பொருள்படுகிறது. சமைப்பது 'அடுதல்' எனப்படும் சமையல் செய்யப்படும் இடம்

அட்டில் அல்லது அடுக்களை என்று அழைக்கப்படுகிறது. பெரும்பாலும் அக்காலத்தில் உணவினை நீரிட்டு அவித்தல், வறுத்தல், சுடுதல், வற்றலாக்குதல், எண்ணெயிலிட்டுப் பொரித்தல், ஊறவைத்தல் போன்ற முறைகளைப் பின்பற்றினர். மேலும் அவர்கள் வாழும் நிலத்தின் தன்மையைப் பொறுத்து உணவுமுறைகள் மாறுபட்டன.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த கானவர்கள் தேன், கிழங்கு ஊன் பன்றியின்தசை போன்றவற்றால் சமைத்த உணவினை ஓலையால் செய்யப்பட்ட வட்டிலில் உண்டனர் என்பதை,

**"வேட்டுவன் மான் தசை சொரிந்த வட்டிலும்" (புறம் 33:1)**

என்கிறது புறம். மலைப்பகுதியிலுள்ள குறவர் உடும்பு, மான், பன்றி ஆகியவற்றின் இறைச்சியை உண்டனர். தேனும், கள்ளும், பலாக்கொட்டையின் மாவு மற்றும் பாலும் மோரும் சேர்த்து ஆக்கிய மூங்கில் அரிசிச் சோற்றையும் மூங்கில் குழாய்க்குள் இட்டு வைத்த முதிர்ந்த தேன் கலந்த கள்ளையும், நெல்லால் சமைக்கப்பட்டக் கள்ளினையும் உண்டனர். மேலும் இம்மக்கள் இறைச்சியின் பொரியலையும், சிறிய திணைச் சோற்றையும் உணவாக உண்டனர் என்பதை,

**"கிழவிர் போலக் கேளாது கெழிஇச்**
**சேட் புலம்பு அகல இனிய கூறி**
**பருஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேலையொடு" (மலைபடு 166-169)**

என்கிறது மலைபடுகடாம். மேலும் ஊன் உணவினை விரும்பி உண்டனர் என்பதை,

**"இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த**
**அவைப்பு மான் அரிசி அமலை வெண்சோறு**
**சுவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவிர்" (சிறுபாண் 193-195)**

என்று மான் அரிசி சோற்றையும், வெண்சோற்றையும் விருந்தினர்க்குக் கொடுத்து மகிழ்ந்தனர். முல்லை நிலத்து மக்கள் ஆடு, மாடுகளை அதிகமாக வளர்த்தாலும் அவர்களின் உணவு, புன்செய் தானியங்களாகவும், நண்டு குஞ்சுகளைப் போலக் காணப்படும் திணை சோறாகவும், பாலாகவும் இருந்தது என்பதை,

**"மடிவாய்க் கோவலர் குடிவயின் சேப்பின்**
**இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன**
**பசுந்தினை முரல் பாலொடும்" (பெரும் 166-168)**

என்கிறது பெரும்பாணாற்றுப்படை. மற்ற நிலத்து மக்களைக் காட்டிலும் நீர்வளம் மிகுந்த மருத நிலத்து மக்கள் செல்வவளம் படைத்தவர்கள், வறுமை என்பதை அறியாதவர்கள், பசியால் வாடாதவர்கள் என்பதை 'தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை' என்பதனால் அறியலாம். நெய்தல் நிலத்து மக்கள் வெண்ணெயில் வெந்த மிளகுப்பொடியும், கறிவேப்பிலையும் கலந்து மாதுளங்காய்ப் பொரியலையும், மாங்காயின் ஊறுகாயோடு உண்டனர். மேலும் இதனைச் சிலப்பதிகாரத்தில் கண்ணகி கோவலனுக்கு உணவு சமைத்து பரிமாறும்போது, மாதுளங் காயைக் கறி செய்து படைத்தாள் என்பதன் மூலம் அறியலாம். பாலை நிலத்து மக்கள் களர் நிலத்தில்

வளர்ந்திருக்கும் ஈச்சமரத்தின் விதையைப் போல கொழுத்துக் காணப்படும் அரிசியில் ஆக்கிய சோற்றை நாய்களால் பிடித்துக் கொண்டு வந்த உடும்பின் பொரியலுடன் ஒன்று சேர்த்து உண்டனர் என்பதன் மூலம் ஒவ்வொரு நிலத்து வாழும் மக்களின் உணவு வகைகளையும், அதைச் சமைக்கும் முறையும் அம்மக்களது பண்பாட்டு அசைவினையும் அறிந்துகொள்ள முடிகிறது.

**ஆடை**

'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்ற பழமொழிக்கு ஏற்ப மனிதனுக்கு ஆடைகள் மிகவும் இன்றியமையாதது. மனிதனின் தரத்தையும், சிறப்பையும் காட்டுவனவாக ஆடைகளும், அணிகலன்களும் உள்ளன. இலக்கியங்களில் 'ஆடை' என்பது அறுவை, கலிங்கம், உடுக்கை, இழை, நூல், காழகம், சிதாஅர், கந்தல் ஆடை, படம், புடவை, மடி என்றும், இடையில் கட்டும் ஆடை, பா, கச்சை, கம்பலம், கிழி, ஈரணி, பீதாம்பரம், சிதவல், பருஉத்திரி, துகில், நூலாக் கலிங்கம், வம்பு, அகமடிவை என்றும் பல பெயர்களால் வழங்கப்படுகின்றன. மேலும் நாகரிகம் வளராத பழங்காலத்தில் மனிதன் தாவரங்களின் மரத்தின் பட்டைகள், நார், விலங்குகளின் தோல் போன்றவற்றை ஆடையாகப் பயன்படுத்தினான் என்பதை 'மரல்நார் உடுக்கை மலைஉறை குறவர்' என்கிறது நற்றிணை. பின்னர் ஆடை தயாரிப்பதற்காகப் பருத்தி விதைக்கப்பட்டது. அது விளைந்து முற்றியபின் பஞ்சு எடுக்கப்பட்டு பஞ்சிலிருந்து நூல் நூற்றுப் பின்னர் நெசவின்மூலம் ஆடையாக நெய்தனர். பண்டைக்காலத்தில் பருத்தி பயிரிடப்பட்டது என்பதை,

**"கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்**
**தாழி முதல்கலித்த கோழிலைப் பருத்தி"** **(அகம் 129: 6-8)**
**"காஞ்சியின் அகத்துக் கரும்பருத்தியாக்கும்**
**தீம்புனல் ஊரன்"** **(அகம் 156: 6-7)**

என்ற பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

பண்டைக்காலத்தில் பருத்தி பயிரிடப்பட்டு முற்றி முதிர்ந்து வெடித்துப் பஞ்சு வெளியிட்டபோது அவற்றைக் கொய்து வீட்டில் வைத்தனர் என்று புறப்பாடல் சுட்டுகின்றது.

**"கோடைப்பருத்தி வீடு நிறை பெய்த**
**முடைப் பண்டம் மிடைநிறைந்தன்ன"** **(புறம் 393: 12-13)**

என்கிறது. அக்காலத்தில் பருத்தி ஆடைகளுக்குச் சிவப்பு, நீலம், மஞ்சள் முதலான சாயம் ஊட்டினர். ஆனால் வெண்மையான ஆடைகளையே பெரிதும் விரும்பினர். மேலும் பட்டாடைகளும் உடுத்தினர். செல்வந்தர்கள் பருத்தியாடையும், பட்டாடையும் அணிந்திருந்தனர் என்று இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**"பட்டு நீக்கி துகில் உடுத்தும்"** **(பட்டினப் : 105)**
**"கொட்டைக் கரைய பட்டை"** **(பொருநர் : 155)**

**"அரத்தப் பூம்பட்டு அரை"** **(சிலம்பு 4: 86)**

என்று பட்டாடை பற்றிக் கூறுகின்றன. மேலும்,

**பொலம்புரி ஆடை! வலம்புரி வண்ண** **(பரி 3: 88)**

பொலம்புரி ஆடை என்பது பொன்னிறம் உடையப் பட்டாடையினை உடையவனே, வலம்புரிச் சங்கினையொத்த நிறத்தையுடையவனே என்று திருமாலை வணங்குகின்றனர்.

**"நலத்தகைப் புலத்தி பசைதோய்த்து எடுத்துத்**
**தலைப்புடைப் போக்கித் தண்கயத்து இட்ட**
**நீரின் பிரியாப் பருஉத்திரி கடுக்கும்"** **(குறுந் 330: 1-3)**

இப்பாடலில் அழுக்கினை அகற்றித் தூயதாக்கும் நன்மையுடையக் கைகளைக் கொண்ட புலத்தி ஆடையைக் கஞ்சியில் தோய்த்து எடுத்து முதலில் நீளப்புடைத்துப் பின் முறுக்கி அவ்வாடையைக் குளிர்ந்த நீரில் இடுவாள். நீரில் நனைந்த அவ்வாடையினை முற்றிலும் அவிழாத முறுக்கு போல பெரிய இலைகளையுடைய பகன்றைக் கொடியில் அவிழும் நிலையில் உள்ள வெள்ளியப் பூக்கள் தோற்றமளிக்கும் என்று கழார்கீரன் எயிற்றனார் கூறுகின்றார்.

**"உடையோர் பன்மையின் பெருங்கை தூவா**
**வறன்இல் புலைத்தி அல்லித் தோய்த்த**
**புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு"** **(நற் 90: 2-4)**

**"பசைகொல் மெல்விரல் பெருந்தோள் புலைத்தி"** **(அகம் 34:11)**

**"போது விரி பகன்றைப் புதுமலர் அன்ன**
**அகன்று மடி கலிங்கம் உடீஇ"** **(புறம் 393: 17-18)**

**"பாம்புரித் தன்ன பொன்பூங்கலிங்கம்"** **(புறம் 397:15)**

**"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுரி யன்ன அறுவை"** **(பொருநர் : 82-83)**

**"காம்பு சொலித்தன அறுவை"** **(சிறுபாண் : 236)**

**"இழை மருங்கறிய நுழை நூற்கலிங்கம்"** **(மலைபடு : 156)**

என்ற சான்றுகள் மூலம் நூலினால் முரட்டுத் துணிகளும், மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன. குளத்தில் படரும் பாசி போன்ற நூலினால் முரட்டுத்துணிகள் நெய்யப்பட்டன என்றும், பால் ஆவி போன்ற மெல்லிய துணிகளும், பாம்புத்தோல் போன்ற அழகான துணிகளும், காகிதம் போன்ற மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன என்பதை உணரலாம்.

அக்காலத்துத் தமிழர்கள் சட்டை அணியவில்லை. அரையில் ஓர் ஆடையும், தோளின் மேல் ஓர் ஆடையும், ஆக இரண்டு துணிகளை மட்டும் அணிந்தனர் என்று நற்றிணையில் மருதன் இளநாகனார் கூறுகின்றார்.

**“விரைப் பரி வருந்திய வீங்கு செலல் இளையர்**

**அரைச்செறி கச்சை யாப்பு அழித்து அசைஇ”** **(நற் 21:1-2)**

என்று பாடியுள்ளார்.

**“நுண்வினைக் கச்சைத் தயக்கு அறக்கட்டி”** **(குறிஞ்சி : 125)**

என்ற பாடல்.

கச்சை என்பது வீரர்கள் இடையில் அணியும் ஆடையைக் குறிக்கின்றது. இக்காலத்தில் உடுப்பதுபோல் அதிகமாக ஆடைகளை அணியவில்லை.

**“உண்பது நாழி உடுப்பவை இரண்டே”** **(புறம் 189:5)**

என்பதற்கேற்ப துணியைச் சட்டையாகத் தைத்து அணியும் வழக்கம் அக்காலத்தில் இல்லை. ஆனால் சிலப்பதிகாரம் பாண்டியனின் பொற்கொல்லன் சட்டை அணிந்திருந்தான் என்றும், அவனைக் கோவலன் மதுரை நகரத் தெருவில் சந்தித்தான் என்றும் கூறுகிறது.

**“மெய்ப்பை புக்கு விலங்கு நடைச் செலவிற்**

**கைக்கோற் கொல்லனைக் கண்டனாகி”** **(சிலம்பு 16: 107-108)**

என்கிறது. மேலும் சேரன் செங்குட்டுவனுடைய தூதர்களும் அவர்கள் தலைவனாகிய சஞ்சயனும் தலைப்பாகையும், குஞ்சுகமும் அணிந்திருந்தனர் என்பர்.

**“சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற**

**கஞ்சுக முதல்வர் ஈரைஞ் நூற்றுவர்”** **(சிலம்பு 26: 137-138)**

அரசாங்கத்தின் முக்கிய ஊழியர்கள் தவிர சங்ககாலத்தில் மற்ற யாரும் சட்டை அணியவில்லை என்று கூறுகின்றனர்.

**கல்வி**

உலகத்தில் உள்ள உயிரினங்களில் மனித இனம் தலைசிறந்தது. ஏனெனில் மற்ற உயிரினங்களுக்கு இல்லாத ஆய்ந்தறியும் பகுத்தறிவு மனித இனத்திற்கு மட்டும் உண்டு. அத்தகைய அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையானது கல்வி. கல்வி என்பது பண்பற்ற மனிதனைப் பண்படுத்துவது, அறிவு நல்லொழுக்கம், நன்னடத்தை முதலிய நன்னெறிகளையும் புகட்டி மனிதனை உயர்த்துவது தனிமனிதனைச் சிந்திக்கவும் சகமனிதரோடு பழகவும் சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் பயனுடையவனாகத் திகழவும் வழிகாட்டுவது. மேலும் கல்வி என்பதைக் கல் என்றால் தோன்றுதல் என்று பொருள்படுவது. கல்வி படிப்பவர்க்குச் சிந்தனையைத் தூண்டவேண்டும். படிப்போருக்குத் தன்னம்பிக்கை, ஆளுமை, சேவை, மனிதநேயம் போன்றவற்றைத் தரவேண்டும். அத்தகைய கல்வியைக் கசடறக் கற்க வேண்டும் என்பதை,

**“கற்க கசடறக் கற்பவை கற்றபின்**

**நிற்க அதற்கு தக”** **(குறள் : 391)**

என்கிறார் வள்ளுவர். ஔவையார் கல்விச் சிந்தனைப் பற்றி கூறும்போது, தூய்மையான தெளிந்தபால், இனிமை மிகுந்த தேன், சுவை மிகுந்த சர்க்கரைப்பாகு,

பருப்பு ஆகிய நான்கையும் கலந்து உனக்குப் படைக்கிறேன் இறைவா! நீ எனக்கு சங்கத் தமிழாகிய இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் குறைவின்றி வழங்குவாயாக என நெஞ்சுருகி வேண்டுகிறார்.

**"பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை**
**நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்**
**துங்கக் கரிமுகத்து தூமணியே நீயெனக்குச்**
**சங்கத் தமிழ் மூன்றும் தா"**

என்று இவர் இறைவனிடம் வணங்கிக் கேட்கும்பொழுது பொன்னையோ, மண்ணையோ, பொருளையோ அல்லது நீண்ட வாழ்நாளையோ கேட்காமல் தமிழைக் கல்வியாகக் கேட்கிறார். கல்வி என்ற ஒரு சிந்தனை வந்துவிட்டால் மற்ற எல்லாம் தானாக வந்துவிடும் என்பதைச் சுட்டுகிறார். "ஒவ்வொரு மனிதனுள்ளும் தெய்வீகத் தன்மையும் பூரணத்துவமும் உறைந்துள்ளது. அதை வெளியே கொண்டுவர வேண்டுமென்றால் அதற்குக் கல்வியே சிறந்தவழி என்பர்"$_2$ சுவாமி விவேகானந்தர். இவரின் கூற்றிற்கு ஏற்ப அரசன் தன்னுடைய சிறந்த ஆட்சியின் மூலம் மக்களைக் காக்கும் நிலையில் துலாக்கோல்போல் நடுவுநிலையுடைய அரசாட்சி செய்துள்ளான். இச்செயல் தமிழின் நடுநிலைப் பண்பினைக் குறிக்கும் செயலாகும். இச்சிறந்த பண்பு ஒருவனுக்கு அடிப்படையிலேயே இருக்க வேண்டும் எனில் சிறந்த கல்வி வேண்டும் என்பதைக் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தம்முடைய ஆட்சி அலுவல்களுக்கு அப்பாற்பட்டு பொன்னான நேரத்தை ஒரு புதிய திசையில் செலுத்திக் கல்வியின் சிறப்பினை உணர்ந்து அதை மக்களுக்கும் உணர்த்த எண்ணினான். அவனது சிந்தனையின் விளைவே

**"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே"** (புறம் : 183)

இப்பாடல் கல்வியின் சிறப்பு, கற்க வேண்டியதன் இன்றியமையாமை, கற்கும் முறை, அனைவருக்கும் கல்வி பொதுவானது போன்ற உயர்ந்த கல்விச் சிந்தனைகளை வெளிப்படுத்துகின்றது. மேலும் திருவள்ளுவர் கல்வி பற்றி இரண்டு அதிகாரங்களைப் படைத்து அவற்றில் கல்வி இருந்தால் அதனுடைய சிறப்பினையும் அதே கல்வி இல்லையெனில் அதனால் வரும் தீமையினையும் எடுத்துக் கூறியுள்ளார். கல்வியைப் பற்றி நாலடியார்,

**"குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து**
**நல்லம் யாம் என்னும் நடு நிலைமையால்**
**கல்வி அழகே அழகு"** (நாலடி பா: 131)

என்கிறது. இப்பாடல் ஆண்களும், பெண்களும் தன்னைப் பெரிதும் அழகுபடுத்திக் கொள்ளவே விரும்புகின்றனர். இயற்கை அழகு இயற்கையாக அமையாவிட்டாலும் கூட விலை உயர்ந்த ஆடை அணிகலன், வாசனைத்திரவியம், அலங்காரம் போன்ற இன்ன பிறவற்றைக் கொண்டு ஒப்பனை செய்து அழகினை வெளிப்படுத்த முயல்கின்றனர்.

ஆனால் உண்மையான நிலைத்த புகழுடைய அழகு கல்வி என்பதை நாலடியார் உணர்த்துகின்றது. கல்வி கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பதை,

**"ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அ.்.துடையார்**
**நாற்றிசையும் செல்லாத நாடில்லை — அந்நாடு**
**வேற்றுநாடக தமவேயாம் ஆயினால்**
**ஆற்றுணா வேண்டுதல்"** **(நாலடி : 134)**

என்ற பாடல் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றது.

**கலை**

பண்டைய மக்கள் நாகரிகம் அடைவதற்குக் காரணம் அவர்களிடம் கலையுணர்வு இரண்டறக் கலந்திருந்தது. அவர்கள் அழகுக்கலைகள் வளர்ப்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர். தங்கள் கருத்துக்களில் தோன்றிய சிறந்த உண்மைப் பொருட்களைக் கலைகளின் மூலம் வெளியிட்டனர். அவற்றில் கலை என்னும் சொல் 'கல்' என்னும் ஏவற்பகுதியிலிருந்து தோன்றியதாகும். கல்வி என்னும் சொல்லுக்கு இதுவே முதனிலையாகும். கலை என்னும் சொல் மானின் ஒரு வகையினையும், ஆண் குரங்கினையும் குறிப்பதாகத் தொல்காப்பியம் சுட்டுகின்றது. எட்டுத்தொகையில் இச்சொல் கலைமானைக் குறிப்பதாக அமைகிறது. கலை என்பதற்கு இன்கலை, கவின்கலை, நுண்கலை, நற்கலை, அழகுக்கலை எனப்பல பெயர்கள் உண்டு. அவற்றில் கண்ணால் கண்டு உணர்வதும் அறிவால் அறிந்து இன்பம் பெறுவதுமாய் அமைந்த கலைகள் பல. அவற்றில் சிற்பம், ஓவியம், இசை, நடனம், நாடகம் ஆகியவற்றை அழகுக்கலைகள் என்பர். மேலும் கலை என்பதற்கு "கலை என்பது இயற்கை, ஆன்மக் கண்ணாடியில் பட்டு எதிர்த்தோன்றும் சாயலேயாகும். அங்ஙனம் எதிர்த்தோன்றுகையில் மனத்தின் இயல்புகள் உணர்ச்சி ஆசை என்பவற்றோடு கலந்தே அது வெளிவருகிறது"[3] என்று விளக்கம் தருகிறார் அ.ச. ஞானசம்பந்தன். மேலும் தமிழர்கள் அறிந்த கலைகள் 'அறுபத்து நான்கு' என்பதை,

**"ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்"** **(மணிமே : 3:120)**

என்று மணிமேகலை சுட்டுகிறது. இவற்றில் கட்டிடக்கலையில் கோவில், அரண்மனை, மதில், வீடுகள் ஆகியவற்றின் அமைப்பு பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் பல உள்ளன. அவற்றில் பெரிய கட்டிடங்கள் நகர் என்ற சொல்லால் குறிக்கப்பெறுகின்றன. 'கோவில் கட்டிடங்கள்' சுடுமண் ஓங்கிய நெடுநகர் என வருணிக்கப்படுகின்றன. மேலும் கட்டிடங்கள் கட்டுவதற்கு நல்லநாள் குறித்துத் திசைகளையும், திசைத் தெய்வங்களையும் நோக்கி நுண்ணியதாக கயிறிட்டுக் கட்டிட நூல் கூறும் இலக்கணப்படி கட்டினர் என்பதை,

**"நூலறிவு புலவர் நுண்ணிதில் கயிறிட்டுத்**
**தேஎங் கொண்டு தெய்வம் நோக்கிப்**
**பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்பமனை வகுத்து"** **(நெடுநல்: 75-77)**

என்கிறது நெடுநல்வாடை. மேலும் கட்டிடக்கலை வல்லுனர்களால் உயர்ந்த மாடமாளிகைகள் கட்டப்பட்டன என்பதை,

**“மாடம் ஓங்கிய மணல்மலி மறுகின்”** **(பெரும் : 322)**

**“விண்பொர நிவந்த வேயா மாடத்து”** **(பெரும் : 348)**

**“மான்கண் காலதர் மாளிகை இடங்களும்”** **(சிலம்பு : 8)**

**“அயில்திணி நெடுங்கதவு அமைத்து துடைத்து அணிகொண்ட**
**எயில் இடுகளிறேம்பால் இடுமணல் செங்கோட்டை”** **(கலித் 135: 3-4)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. மேலும் சிற்பக்கலையில் சிற்ப உருவங்கள் பெரும்பாலும் தெய்வங்களாக அமைக்கப்பட்டிருந்தன. பண்டைக்காலத்தில் தெய்வ உருவங்கள் கல், மரம் ஆகியவற்றால் செய்யப்பட்டன என்பதை,

**“மண்ணிலும் கல்லினும் மரத்தினும் சுவரினும்**
**கண்ணிய தெய்வம் காட்டுநர் வகுக்க”** **(மணிமே : 130:135-136)**

எனச் சுட்டுகிறது மணிமேகலை. மேலும் முருகனை ஆறுமுகமும் பன்னிருகையும் உடைய உருவமாகச் செய்து வணங்கினர் என்பதை,

**“பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம், ஒருமுகம்**
**ஆர்வலர் ஏத்த அமந்தினிது ஒழுகிக்**
**காதலின் உவந்து வரங்கொடுந்தன்றே ஒருமுகம்**
**வான் அரமகளிர்க்கு வதுகை சூட்ட”** **(திருமுரு 92-117)**

என்று சிற்பக்கலைக்கு அழகூட்டுவனாக அமைந்த முருகனின் அழகு வர்ணிக்கப்படுகிறது.

பண்டையத் தமிழர்கள் போரிலே வீர மரணம் அடைந்த வீரர்களைப் போற்றி அவர்களுக்காகக் கல்நட்டு விழா செய்துள்ளனர். தமிழர்கள் சிற்பக்கலையிலே சிறந்து நின்றமைக்கு இவ்வுருவச் சிலைகள் காரணமாக அமைகின்றன.

**“காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்**
**சீர்த்தகு மார்பில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்**
**சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே”** **(தொல்-பொருள்)**

எனத் தொல்காப்பியம் சுட்டுகிறது. நிரைப்போரில் உயிரிழந்தவர்க்குக் கல்லெடுத்து நினைவுகூறுதலைக் குறிப்பிடுகின்றது. “கலை என்பது அதனிடத்துப் பழகுகிறவர்களை உணர்வுநிலையில் சிக்க வைக்க வேண்டும் என்கிறார்”[4] டால்ஸ்டாய் அவரின் எண்ணத்தின்படி. ஓவியக்கலையும் பார்ப்பவரைப் கவரும் வகையில் இயற்கைக் காட்சிகள் சங்க இலக்கியத்தில் ஓவியங்களாகத் தீட்டப்பட்டிருந்தன. அவற்றில் இயற்கைக் காட்சிகளான ஆறு, மலை, கடல் போன்றவற்றை அரண்மனைகளில் மிகவும் நேர்த்தியாகவும், அழகாகவும் தீட்டிய தன்மையைப் புலப்படுத்துவதோடு

அவ்வோவியம் இயற்கையின் அழகைச் சிதைக்காது வரையப்பட்டிருந்ததையும் குறிப்பிடுகிறது. மேலும் "ஓவியம் வட்டிகை எனவும் ஓவியம் வரையப் பயன்படுத்தப்பட்ட பலகை வட்டிகைச் செய்தி எனவும் ஓவியம் எழுதத் துணைநின்ற கோல் 'துகிலிகை' எனவும்" அழைக்கப்படுகிறது. ஓவியம் என்பது

**"ஓவத்தன்ன உருகெழு நெடுகர்"** **(பதிற் : 88)**

**"வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய**
**கண்கவர் ஓவியம்"** **(மணிமே 3: 130-131)**

**"ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய**
**துகிலிகை யன்ன துய்த்தலை பரிதி"** **(நற் 118:7-8)**

**"முன்னங் காட்டி முகத்தி னுரையா**
**ஓவச் செய்தின் ஒன்று நினைத் தொற்றி"** **(அகம் 5: 20-21)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு சிற்பக்கலை, கட்டிடக்கலை, ஓவியக்கலையோடு, கூத்துக்கலை, நாடகக்கலை, இசைக்கலை போன்றக் கலைகள் எண்ணிக்கையில் அடங்கா நிலையில் பல கலைகள் ஒவ்வொரு நிலத்தில் வாழும் மக்களின் வாழ்க்கைச் சூழலுக்கு ஏற்ப வளர்ச்சி பெற்றிருந்தன.

**விருந்தோம்பல்**

விருந்து பேணுதல் தமிழரின் தலையாய பண்பாடு. சுற்றத்தார்க்கு மட்டுமன்றி முன்பின் தெரியாத அயலவருக்கும் தம்மிடம் உள்ள சிறந்த உணவை விருந்தாக அளித்து மகிழ்ந்தனர். தமிழர்களின் இல்லற வாழ்வின் இயல்பினை அளக்க உதவும் அளவுகோலாக விருந்தோம்பல் திகழ்கின்றது. உண்ணும் உணவு எதுவாயினும் அதனை விருந்தினர்க்கும் கொடுத்து தாமும் உண்டு மகிழ்ந்தனர் என்பதை "மருந்தே ஆயினும் விருந்தொடு உண்' என்கிறது ஔவையின் அமுதமொழி. இல்லற மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். அதனால் பெண்ணின் இலக்கணம் கூறும் தொல்காப்பியர் இல்லறத் தலைவியின் கடமைகளைக் கூறும்போது விருந்தோம்பல் பண்பாட்டையும் இணைத்து 'விருந்து புறந்தருதலும் சுற்றமோம்பலும்' என்று சுட்டுகிறார்.

**"விருந்து பெருகு நன்போலும் திருந்திழை**
**அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல்லியல் குறுமகள்"** **(நற் : 142)**

என்ற பாடலடிகள் விருந்தோம்பும் பண்பாட்டை வலியுறுத்துகின்றன. மேலும் பண்டங்கள் குறைவாக இருந்தாலும் கவலை கொள்ளாமலும், மனங்கோணாமலும் இல்லத்தலைவி விருந்தோம்பல் செய்தாள் என்பதை,

**"தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**

**நின்னொடும் பந்தர் ஊன்முறை ஊட்டும்**

**இற்வொலி மகுடுஉப் போல''** **(புறம் : 331)**

என்கிறது புறம். விருந்தினரை 'மெல்லியர்' என இலக்கியங்கள் சுட்டுகின்றன. விருந்தின் செயல் மென்மையான செயல். இதனால் விருந்தினர் மெல்லியர் எனவும் அனிச்சமலருக்கு ஒத்தவர் எனவும் கூறப்படுகிறது. அனிச்சமலரானது மெல்லியதாக இருப்பதால் நுகர்ந்த அளவில் வாடிவிடும். அதைப்போல விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்க வேண்டும். சிறிது முகம் மாறினாலும் அனிச்சப்பூபோல் விருந்தினர் உள்ளம் வாடிவிடும் என்பதை,

**''மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**

**நோக்கக் குழையும் விருந்து''** **(குறள் : 90)**

என்று விருந்தளிப்போரின் பண்பைச் சுட்டுகிறது. மேலும் விருந்து என்பது இக்காலத்தில் குறைந்துகொண்டே வருகிறது. விருந்தினரின் வருகையும் குறைந்துள்ளது. இக்காலத்தில் விருந்து என்பதை விருந்தும் மருந்தும் மூன்று நாட்கள் என்னும் முதுமொழிக்கு ஏற்ப முதல்நாள் வாழை இலையிலும், இரண்டாம் நாள் தையல் இலையிலும் மூன்றாம் நாள் கையிலும் என்று விருந்தோம்பல் குறுகிய கண்ணோட்டம் பெற்றுள்ளது. ஆனால் சங்ககாலத்தில் அதியமான் நெடுமான் அஞ்சி அவனைத்தேடி வருவாரை ஒரு நாள் சென்றாலும், அதற்கு அடுத்தநாள் சென்றாலும் தொடர்ந்து பல நாட்கள் சென்றாலும் தனியாக அல்லாமல் பலரை அழைத்துக்கொண்டு சென்றாலும் முதல்நாள் எத்தகைய அன்போடு வரவேற்றானோ அதுபோல எல்லா நாளிலும் விருந்தினரை வரவேற்று உபசரித்தான் என்பதை,

**''ஒருநாள் செல்லலாம் இருநாள் செல்லலாம்**

**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**

**தலைநாள் போன்ற விருப்பினன் மாதே''** **(புறம் 11: 2-4)**

என்கிறது புறப்பாடல். மேலும் தம்மை நாடிவந்த கலைஞர்கள் பசித்துன்பத்தால் வருந்துகின்ற நிலையைக் கண்டக் கரிகாலன் அவர்களுக்கு இனிய உணவு தந்து உபசரித்தான். அருகம்புல்லைச் செழுமையாக உண்டதனால் பருத்த கால்தொடையை உடைய செம்மறியாட்டின் வெந்த இறைச்சியையும் பரியத்தசைத் துண்டத்தையும் முகம் மலரக் கொடுத்து அவர்களை விருந்தோம்பினான். இதனை,

**''காழின் சுட்ட கோழ்ஊன் கொடுங்குறை**

**ஊழின் ஊழின் வாய்வெய்து ஒற்றி''** **(பொருநர் 114-115)**

என்று கரிகாலனின் விருந்தோம்பல் பண்பைச் சுட்டுகிறது. விருந்தோம்பலைச் சமுதாயக் கடமையாகக் கொண்டு வாழ்ந்த பண்டைத் தமிழர்கள் பிறரிடம் பொருள் பெற்று விருந்தோம்பலைச் செய்தனர். மறக்குடி மகன் ஒருவன் தன் இல்லத்திற்கு வந்த விருந்தினரைப் பேணுவதற்கு எந்தப் பொருளும் இல்லாததால் தன் வாளை அடகு வைத்துப்பொருள் பெற்று உணவு படைத்தான். இச்செய்தியை,

**''பொருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்**

**இரும்படைப் பழவாள் வைத்தனன்"** **(புறம் : 316)**

என்கிறது புறம். மேலும் வறுமையிலும், மற்றவர்களிடம் கடன் பெற்றும் பொருள்களை விற்றும் விருந்தோம்பல் செய்தனர். மேலும் இல்லத்திற்கு விருந்தினர் வருகை இல்லத்தை அழகூட்டி விழாக்கோலம் பூணச்செய்கிறது என்பதை,

**"விருந்தினர் முகம் கண்டன்ன**
**விழாவணி விரும்புவோரும்"** **(கம்பர பா-13)**

என்கிறது. இரவு நேரத்திலும் எவராவது விருந்தினர் இருக்கிறார்களா என்று பார்த்தப் பின்னர் வாயிற்கதவை அடைப்பதைப் பண்டைத் தமிழர் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

**ஈகை**

செல்வம் உடையவர் இல்லாதவர்க்கு வழங்குவது ஈகை. உலகத்தார் போற்றும் அறங்களுள் காலத்தால் அழியாதது கருத்தால் மாறாதது ஈகை. இது அறநெறியில் சிறந்தது. ஈகைப்பண்பு மனிதநேயத்தின் அடிப்படையான தன்மையினை உணர்த்துகிறது. பிறர்க்குக் கொடுத்துத் தானும் உண்டு புகழொடு வாழ்வதே சிறந்த வாழ்க்கை. அத்தகைய சிறந்த மனித வாழ்வில் மனித நேயத்தை வெளிப்படுத்துகிறது ஈகை. ஈகை என்னும் பண்பு தனிமனிதச் சிந்தனையில் உருவாகிச் சமுதாயப் பயனுடையதாக அமைகின்றது. வறுமையில் வாடும் மக்களுக்குத் தம்மால் இயன்ற உதவியைச் செய்கின்றபொழுது அச்செயல் உயர்ந்ததாகப் பலராலும் போற்றப்படுகிறது. கொடுப்பவர் எதையும் எதிர்பாராமல் கொடுக்கிறார். பெறுபவர் உள்ளம் மகிழ்ந்துப் பெற்றுக்கொண்டு வாழ்த்துகிறார். இதனால் ஈந்து உவக்கும் இன்பம் பிறக்கிறது. இந்த உயர்ந்த சிந்தனையை,

**"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு"** **(குறள் : 231)**

**"செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்போம் எனினே துப்புந பலவே"** **(புறம் : 181)**

**"எத்துணை ஆயினும் ஈதல் நன்றென**
**மறுமை நோக்கின்றோ அன்றே**
**பிறர் வறுமை நோக்கின்று"** **(புறம் : 141)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஒன்றும் இல்லாத ஏழை, எளியோர்கள் கேட்பதைக் கொடுக்க வேண்டும். பொருள் இல்லாத ஒருவன் வந்து உதவி கேட்டால் அவனுக்கு இல்லையென்று மறுக்காமல் உதவவேண்டும். இல்லாத ஒருவன் உள்ளவனிடம் சென்று கேட்பது கொடுமையானது. அதைவிடக் கொடுமையானது கொடுக்காமல் இருப்பது என்பதை,

**"சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை"** **(குறள் : 230)**

என்கிறார் திருவள்ளுவர். அக்காலத்தில் வறுமைநிலையிலும் தாம் பெற்ற பொருளைப் புலவர் பெருஞ்சித்திரனார் மனைவியிடம் சுற்றத்தார்க்குப் பகிர்ந்து கொடுக்கச் சொல்கிறார்.

**"இன்னோர்க்கு என்னாது, என்னோடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே"** **(புறம் : 163)**

என்ற பாடலில் புலவரின் ஈகைக்குணம் புலப்படுகிறது. அதியமான் புலவர்களுக்குக் கொடுக்கும் உள்ளம் கொண்டவன். சிறிது நேரம் கூட ஓய்வில்லாமல் மாரிபோல் ஈயும் தன்மையுடையவன் என்பதை,

**"ஓவாது ஈயும் மாரி வண்கை**
**கடும்ப கட்டு யானை நெடுந்தேர் அஞ்சி"** **(குறுந் 9:5-6)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அதியமான் நெல்லி மரத்தின் அருங்கனி யொன்றைப் பெற்றான். அக்கனியினை ஔவைக்குக் கொடுத்து அறப்புகழ் பெற்றான்.

**"கமழ்பூஞ் சாரல் கவனிய நெல்லி**
**அமிழ்துவினை தீம்கனி ஔவைக்கு"** **(சிறு 100-101)**

என்ற பாடல் அதியமான் ஒருமுறை வேட்டையாடுவதற்குக் காட்டிற்குச் சென்றான். அப்போது அங்குள்ள மலைச்சாரலில் நின்ற ஒரு தெய்வத் தன்மையுடைய நெல்லி மரத்தில் ஒரே ஒரு பழம் கனிந்து கிடந்ததைக் கண்டு அக்கனியைப் பறித்துக்கொண்டு தன் நகரம் வந்தான். பின்னர் அதனை நுகர்ந்தோர் நரை, திரை, மூப்பு இன்றி நீண்டநாள் உடலுரம் பெற்றுவாழ்வர் என்னும் செய்தியைச் சான்றோர் மூலம் அறிந்தான். அதனால் அக்கனியைத்தான் உண்ணாமல் தன்னைக் காணவந்த ஔவைக்கு ஈந்தான் என்பதை உணர்த்துகின்றது.

ஈகின்ற தன்மைக்கு வரையாது பொழிகின்ற மழையை ஒப்பிடுவது பண்டைத் தமிழர் மரபு, மழை வரையாது மிகுதியாகப் பொழிந்து நாட்டைச் செழிக்கச் செய்கிறது. வளர்நிலம், உவர்நிலம் என்று பாராது எங்கும் நிரந்து பொழிகிறது. அதுபோல் வள்ளல்கள் புலவர்களின் வறுமையை ஒழிப்பதோடு புலமைமிக்கார் இல்லார் என்று பாராது அனைவருக்கும் கொடுத்து வறுமையை ஒழித்திருக்கின்றார்கள்.

**"பாரி ஒருவனும் அல்லன்**
**மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே"** **(புறம் : 107)**

என்ற பாடல் வள்ளல்பாரியை மாரியோடு ஒப்பிடும் அளவிற்கு ஈகைக்குணம் மிக்கவன் என்கிறது. பாரிகண்ட முல்லைக்கொடியொன்று படர்வதற்குரிய கம்பின்றிக் காற்றில் அலைபாய்ந்து வருந்துவதைக் கண்டு தான் வந்த பொன்னாலான தேரை அதன் அருகே நிறுத்திப் பற்றிப் படருமாறு செய்தான்.

**"சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**
**பிறங்கு வெள்அருவி வீழும் சாரல்**

**பறம்பிற் கோமான் பரி"** **(சிறு 39-91)**

இப்பாடலில் பாரியின் அஃறிணை உயிர்களுக்கும், ஈயும் குணம் புலப்படுகிறது. இல்லாதவர்க்கு மறைக்காது ஈயும் குணம் உடையவர்க்கு எல்லாருமே உறவாவர் என்பதை,

**"மரம் பழுத்தால் வௌவாலை**
**வாவென்று கூவி**
**இரந்தழைப்பார் யாவருமிங்**
**கில்லை – சுரந்தமுதம்**
**நற்றாதரல் போல்**
**கரவாது அளிப்பரேல்**
**உற்றார் உலகத்தவர்"** **(நல்வழி பா-29)**

என்கிறது இப்பாடல் ஈதலின் சிறப்பை உணர்த்துகிறது. அக்கால மக்கள் ஈகைக்குணம் நிரம்பியவராய் இருந்தனர். தம்மிடம் உள்ளதைப் பிறருக்குக் கொடுத்துப் பேரின்பம் அடைந்தனர். செல்வம் சேர்ப்பது பிறர்க்கு ஈவதற்கே என்பதை உணர்ந்திருந்தனர்.

**நட்பு**

ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தி நெருங்கிப் பழகி உறவினர் அல்லாதவருடன் பற்றும் பாசமும் கொண்டு வாழ்வது நட்பு. இவ்வுலகத்து உயிரினங்கள் அனைத்தும் தனிமையை நாடுவதில்லை. தனித்து வாழ்வதைவிட ஒருவரோடொருவர் நட்புகொண்டு கூட்டாக வாழ்வதையே விரும்புவர். நட்பு என்பதற்கு சிநேகம், உறவு, சுற்றம், நண்பன், யாழின், காதல், அரசாங்கம், கையூட்டு, மாற்றரசரோடு நட்புசெய்தல் எனப்பொருள் தருகிறது மெய்யப்பன் அகராதி. நட்பு என்னும் சொல்லுக்கு "ஒத்த கருத்து நலன், அக்கறை, முதலியவற்றின் அடிப்படையில் பொதுவாக உறவினர் அல்லாதவருடன் கொள்ளும் உறவு"$_5$ என்கிறது க்ரியாவின் தமிழ் அகராதி. வாழ்க்கையின் உயிர்நாடி அன்புதான் அத்தகைய அன்பினால் விளையும் அறமாகிய நட்பு இல்லையேல் உலகம் இருள்மயமானதாகிவிடும். இவ்வுலக வாழ்வில் வெற்றி அடையவேண்டுமானால் நல்லதொரு நட்பு அமைவது அவசியமாகும். 'இடையூறுகள்தான் நட்பின் தகுதியை எடுத்துக்காட்டும் அக்கினிப் பரீட்சையாகும் என்கிறார் காந்தியடிகள்'$_6$ அத்தகைய நல்ல நட்பானது, உடை நெகிழ்ந்தவனுக்கு அப்பொழுதே கை சென்று உதவி செய்வது போல, நண்பனுக்குத் துன்பம் நேர்ந்தால் அப்பொழுதே சென்று அத்துன்பத்தை நீக்க வேண்டும் என்பதை,

**"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு"** **(குறள் : 788)**

என்கிறார் வள்ளுவர் இதனையே பெருங்காப்பியம்,

**"உடையழி காலை உதவிய கைபோல**

**நடலை தீர்த்தல் நண்பனது**

**இயல்பெண்''** **(பெருங். )**

என்கிறது. நம் வாழ்வில் இளமை, முதுமை, ஏற்றத்தாழ்வு, மகிழ்ச்சி, துக்கம் என்று பல்வேறு படிநிலைகளைக் கடந்தபோதும் கடைசிவரை நம்முடன் தொடர்ந்து வருவது உண்மையான நட்பு. இதனை உணர்த்துவது கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பு. சோழநாட்டின் உறையூரை ஆண்ட கோப்பெருஞ்சோழனின் செம்மையும், புலமையும் கேள்வியுற்று அவன்பால் பேரன்பும் நட்பும் கொண்டவர் பிசிராந்தையார். பார்க்காமலே ஒருவர் மீது ஒருவர் குறையாத சிறந்த நட்புகொண்டதை,

**''காதல் கிழமையும் உடையன் அதன்தலை**

**இன்னதோர் காலை நில்லலன்**

**இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே''** **(புறம் : 216)**

என்ற பாடல் பிசிராந்தையாரைப் பார்க்காமலே நட்புகொண்டு வாழ்ந்துவரும் கோப்பெருஞ்சோழன் தான் வடக்கிருந்து உயிர்துறக்கும் நிலையில், அங்கே அவரைச் சூழ்ந்திருந்த சான்றோர்களிடம் என் பிசிராந்தையார் நட்பிலும், அன்பிலும் உண்மையுள்ளவன். அவன் கண்டிப்பாக வருவான். அவனுக்கு என் அருகே ஒரு இடம் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டாராம்.

நட்பு என்பது உள்ளத்தைத் திறந்து காட்டுவதாக இருக்க வேண்டும். இதனை 'உலகிலேயே மிகவும் உன்னதமானது நட்பு. ஒருவன் தன்னுடைய உள்ளத்தைத் தன்னுடைய நண்பனுக்குத் திறந்து காட்டினால் இருவேறுபட்ட நன்மைகள் ஏற்படுகின்றன. அது மகிழ்ச்சியை இரட்டிப்பாக்குகின்றது'$_7$ என்கிறார் பிரான்சிஸ் பேகன். இராமன் மேல் கொண்ட நட்பின் திறத்தால் தன் இதயத்தைத் திறந்துகாட்டினான் அனுமன். இதனை

**''எந்தை! வாழி அதனுங்க! என்**

**நெஞ்சம் திறப்போர் நிற்கான் குவரே''** **(புறம் 175: 1-2)**

என்கிறார் ஆத்திரையனார் என்னும் புலவர். ஆதனுங்கன் என்னும் வள்ளலிடம் தான் கொண்ட நட்பின் மிகுதியை வெளிப்படுத்துகிறார். மேலும் பாரியின் இறப்புக்குப் பிறகு அதை ஏற்கமுடியாது தவிக்கும் கபிலர் உம்மொடு எக்காலமும் சேர்ந்திருக்கும் தகுதி தன் நட்பிற்கு இல்லையோ என்று புலம்புகிறார். இதனை,

**''மேயினன் அண்மையானே ஆயினும்**

**இம்மை போலக் காட்டி உம்மை**

**இடையில் காட்சி நின்னோடு**

**உடன்உறைவு ஆக்குக உயர்ந்த பாலே''** **(புறம் : 236)**

என்ற பாடல் இம்மைக் காலத்தைப் போலவே மறுமைக்காலத்திலும் நட்பானது தொடர என் நல்வினையானது எனக்குத்துணை செய்யுமாறு என்று இரப்போர் போல புலம்பும் கபிலரின் நட்பு ஆழம் அளவிட முடியாததாக இருந்ததை உணர்த்துகிறது.

ஒருவரிடம் நட்பு கொள்ளம்போது ஆராய்ந்து நட்பு கொள்ள வேண்டும். உயர்ந்தவர்கள் சேய்மையில் இருந்தால் அவர்கள் நட்பைப்பெற முற்பட வேண்டும். சிறியவர்களிடம் கொண்ட நட்பு காலைநேரத்து நிழல்போல வரவரக்குறையும் பெரியோரிடம் கொண்ட நட்பு குறையாமல் மாலைநேரத்து நிழல்போல வளர்ந்துவரும். இதனை நாலடியார்,

**"கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும்**
**கருத்திற் குரம்புதின் றற்றே குரத்திற்கு**
**எதிர் செலத்தின் றன்ன தனகத்தரோ என்றம்**
**மதுர மிலாளர் தொடர்பு" (நாலடியார் : 130)**

என்கிறது. கீழ்மகன் நட்பானது அடியிலிருந்து கரும்பினை நுனியை நோக்கி உண்பது போன்றதாகும். உயர்ந்தோர் நட்பு என்பது கரும்பின் நுனியில் இருந்து அடிவரை உண்பது போன்றதாகும். மேலும் நட்பிற்கு இலக்கணம் வகுத்த பழந்தமிழர். நட்பில் உறுதியானக் கொள்கை வேண்டும். நல்லதோர் நட்பினை நாடவேண்டும். நட்பை விட உயிர் பெரிதல்ல என்பதை உணர்ந்தும் உணர்த்தியும் உள்ளனர்.

**காதல்**

காதல் இன்பம் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. இருமனங்களின் இணைவு காதல் எனப்படுகிறது. எல்லா உயிர்களிடத்தும் தோன்றும் அன்புணர்வே காதல் எனக்கொண்டாலும் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் ஏற்படும் அன்புணர்வே காதல் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது. காதல் என்ற சொல் 'அன்பு, வேட்கை' என்ற பொருளைத் தருகிறது என்கிறது தமிழ்ப்பேரகராதி. காதல் என்ற மையப்புள்ளியைப் பற்றிக்கொண்டே இவ்வுலகம் இயங்குகிறது. காதல் இன்பத்திலும், துன்பத்திலும் நிலைக்கும் தன்மை உடையது. சாதி, மதம், நிறம், இனம், மொழி ஆகியவற்றைக் கடந்தது. இதனை 'இருட்டில் ஒளி போன்றது காதல்'[8] என்கிறார் ஷேக்ஸ்பியர். மனித வாழ்க்கையில் காதலென்பது பிறப்பு முதல் இறப்பு வரையிலும் நீங்காத நிலைபேறுடையதாக விளங்குகிறது.

காதல் என்பது மனித வாழ்வில் பல பரிமாணங்களில் சங்கமித்துச் செல்கின்றது. இது கண்களில் அரும்பி இதயத்தில் மலரும். அவ்வாறு மலர்ந்த காதலின் வாசம் மேனியெங்கும் தோற்றுவிக்கும் தலைவனொடு செய்துகொண்ட காதலின் தன்மையைக் குறுந்தொகை,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அளவு இன்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந் : 3)**

என்கிறது. காதலின் அகலத்தையும், உயரத்தையும், ஆழத்தையும் தெரிவிக்கின்றது. 'காதல் உறவுகளுக்கு அப்பாற்பட்டது. காதல் என்பது காதுக்கினியச் சொல்,

கருத்துக்கினியப் பொருள், காதல் உண்டாயின், இவ்வுலகில் எல்லாம் உண்டு. காதல் இல்லையேல் ஒன்றும் இல்லை என்கிறார் ரா.பி. சேதுப்பிள்ளை'[9] காதல் இயற்கையின் ஆணையால் உள்ளத்தில் தோன்றுவது. உள்ளத்தில் உண்டாகும் காதல் இன்னவிடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்தில் தான் தோன்றும் என்று சொல்ல முடியாது. அக்காதலுக்கு உரியர் எவரோ அவர் எதிர்ப்படும்போது அதுதானே தோன்றி அமையும் இருவருக்கும் உறவுமுறை கிடையாது. செம்மண் நிலத்தில் பெய்த மழையானது அந்நிறத்தைப் பெற்றதுபோல காதலர் இருவரும் ஒருவரோடு ஒருவர் கலந்துவிட்டனர். இக்கருத்தினை,

**"யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளீர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"** **(குறுந் : 40)**

என்ற பாடல் விளக்குகிறது. காதலில் பிரிவு ஏற்படும்போது காதலர் துன்பம் அடைகின்றனர். 'இளங்காதலர்களுக்குப் பிரிதல் என்பது முகவாட்டமும், உயிர்வாட்டமும் தரும் கொடுஞ்செயலாகும்'[10] என்கிறார் வ.சுப. மாணிக்கம். காதலில் பிரிவுநிலையில் காதலர் இருவரும் துன்பம் அடைகின்றனர். துன்பத்தை வெளிப்படுத்தும் நிலையில் காதலி தன் மனதிற்குள் வைத்துப் புளுங்கி அழுவாள். காதலன் காதலியின் ஊருக்குச் சென்று தம் காதலை மடலூர்ந்து ஊராருக்குப் புரிய வைத்துக் காதலியைத் தன்னோடு சேர்த்து வைக்குமாறு வேண்டுகிறான்.

**"என் கண் இடும்பை அறிஇயினென்: நுங்கன்**
**தெருளுற நோக்கித் தெரியுங்கால்: இன்ன**
**மருளுறு நோயோடு மம்மா அகல**
**இருளுறு கூந்தலாள் என்னை**
**அருளுறச் செயின் நுமக்கறனுமா றதுவே"** **(அகம் 376:5-9)**

என்கிறது அகம். தான் விரும்பிய பெண்ணைத் தனக்கே திருமணம் செய்து வைத்தால் அதுவே அறமாகும் என்று வருந்திக் கேட்கிறான். உள்ளம் கலந்து வாழும் வாழ்க்கைதான் காதல் வாழ்க்கை அத்தகைய காதல் வாழ்க்கையில் உயர்ந்த குணங்கள் மட்டும் வெளிப்படுகிறது. 'உலகத்தின் எல்லா மொழித்தோட்டங்களிலும் காதல் மலர்கள் அன்றாடம் பூத்துக்கொண்டுதான் இருக்கின்றன'[11] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன். தலைமக்கள் இருவரின் காதல் பார்வைகளில் கருத்து ஒருமித்தநிலையை வாய்ச் சொற்களைவிடவும் நுண்மையாக விளக்கக்கூடியது கண்கள் என்பதை,

**"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல"** **(குறள் : 1100)**

என்கிறார் திருவள்ளுவர்.

**திருமணம்**

திருமணம் என்பது ஒரு இன்றியமையாத நிகழ்ச்சி. தனிமனிதனைச் சமுதாய உறுப்பினராகவும் குடும்பத்தைச் சமுதாயத்தின் அடிப்படை அலகாகவும் ஏற்றுக்கொள்வதற்குத் திருமண உறவுமுறை இன்றியமையதாகக் கருதப்படுகிறது. காதலில் ஈடுபட்டவர்கள் அதனை இல்லையென்று மறுத்த நிலையில் கரணம் தோன்றியது இதனை

**"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (தொல் - பொருள் - 143)**

என்கிறார் தொல்காப்பியர். 'களவு நெறியில் ஒழுகியவன் தனக்கும் அவளுக்கும் தொடர்பில்லை என்று கூறிவிட்டால் கற்பும் இல்லை, கரணமும் இல்லை. ஆகவே களவு முறையில் தோன்றும் பொய்யையும் வழுவையும் கரணம் தடுக்கும். அதனால் தடுப்பதற்காகவே கரணத்தை அமைத்தனர் சான்றோர். களவு நெறிப்பட்ட காதலர்கள் ஊரில் இருப்பினும் அல்லது உடன்போக்கு முறையில் ஊரை விட்டுச் சென்றாலும் 'வரைவு' என்ற நிலைக்கு உட்பட்டு கணவன் மனைவி என்று பலர் வெளிப்படையாகச் சொல்லும் நிலையை திருமண ஒழுக்கமாகக் கொண்டனர். தலைமக்கள் இல்லறம் தொடங்குமுன் நடைபெறும் திருமணச்சடங்குகளைத் தொல்காப்பியனார் கரணம் என்று குறிப்பர்.

**"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
**புணர்ந்துடன் போகிய காலை யான" (தொல்-பொருள்-141)**

என்று தொல்காப்பியர் திருமணம் தாய், தந்தை மற்றும் உறவினர் இல்லாமல் உடன்போக்கும் நிலையிலும் நடைபெறும் என்பதைக் குறிப்பிடுகிறார். ஆண்டுக்கு ஒருமுறை வேங்கை பூக்கின்ற காலமும் திங்களைச் சுற்றி ஒளிவட்டம் சூழும் காலமும் திருமணம் செய்வதற்குரிய காலமாகக் கருதினர் என்பதை,

**"வேங்கை விரிவு இடம்நோக்கி**
**வீங்கு இறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே"(கலி 38:24-26)**

தமிழர்கள் திங்களும் உரோகினியும் கூடிய நன்னாளில் திருமணம் நடந்தத்தினர் வைகறைப் பொழுதில் மணவினை நிகழ்த்தினர். இதனை,

**"கனை இருள் அகன்ற கவின்பெறு காலை**
**கோள் கால் நீங்கிய கொடு வெண்திங்கள்**
**கோடு இல்விழும் புகழ்நான் தலைவந்தென" (அகம் 86:5-7)**
**"வேங்கையும் ஒள் இணர் விரிந்தன**
**நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே" (அகம்:2)**

என்ற பாடலடிகள் இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றன. திருமணம் முடித்த பின்னர் அருந்ததி பார்க்கும் பழக்கம் இருந்துள்ளது.

**"வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்**
**தடமென் தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை" (கலி 2 :21-22)**

என்கிறது கலித்தொகை அருந்ததி என்பவள் அனைவரும் வணங்கி வாழ்த்தும்படியான கற்பினையுடையவள். அதனால் திருமணம் முடித்து அருந்ததி பார்க்கும் தலைவி கற்புக்கரசியாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி இச்சடங்கு நடைபெறுகிறது.

அக்கால மக்கள் வீர விளையாட்டுக்களை நிகழ்த்தி வென்றவனுக்குத் தன் மகளைக் கொடுத்துத் திருமணம் செய்து வைத்தனர் இதனை

**"அவ்வழி முழக்கு எனஇடி எனசமத்து ஆர்ப்ப**
**வழக்கு மாறுகொண்டு வருபு வருபு ஈண்டி**
**நறையொடு துகள் எழு நல்லவர் அணி நிற்ப"** **(கலி 101:10-12)**

என்கிறது. இப்பாடலில் ஆயர்களில் காளையைத் தழுவி அடக்கியவனுக்கு இவள் உரியவள் என்ற குறிக்கோளுடன் வளர்ந்துவரும் காளையைத் தழுவி அவற்றுக்குப் பரிசுப்பொருளாகிய ஆயர் மகளிரை மணப்பதற்குத் துணிவு கொண்டனர். அதனால் ஏறுதழுவுவதற்குரிய இடத்தில் இளைஞர் கூட்டம் அதிகமாக இருந்தது. மேலும் திருமணக் காலத்தில் வீட்டின் முன்பு புதுமணல் பரப்பல் அந்தணர் திருமணத்தில் முறைகள் வேதம் ஓதித்தீயை வலம்வருதல் போன்றச் சடங்கு முறைகள் செய்யப்பட்டன.

சங்ககாலத்தில் திருமணம் நடைபெறுவதற்கு முன்பு முல்லைப்பூச் சூடுவது பண்பாட்டிற்கு எதிரானதாகக் கருதப்பட்டது. இதனை

**"தோழி நாம் காணாமை உண்ட கடுங் கள்ளை மெய்கூர**
**நாணாது சென்று நடுங்க உரைத்தாங்கு**
**கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம் கண்டாய்நம்**
**புல்லினத்து ஆயர் மகன் சூழ வந்தது ஓர்**
**முல்லை ஒரு காமமும் கண்ணியும் மெல்லியால்"** **(அகம் : 387)**

என்கிறது இப்பாடலில் தலைவன் கொடுத்த மாலையைத் தலைவி கூந்தலில் சூடிக் கொண்டாள். தலையில் வெண்ணெய் தடவ வந்த செவிலி கூந்தலை விரித்த போது முல்லை மாலைக் கீழே விழுந்தது. அதனால் அவள் நடுங்கினாள். அதாவது திருமணமானப் பெண்கள் முல்லைப்பூச் சூடுவதும் திருமணமாகாதப் பெண்கள் வேறுப் பூக்களைச் சூடுவதும் அக்கால மரபாக இருந்துள்ளது. "அகத்துறையின் வேர் காதல். அது களவில் அரும்பும் கூடலில் மொட்டாகும் கற்பில் மலரும் இல்லறத்தில் மணம் பறப்பும் மக்கட்செல்வம் என்னும் கனி குலுங்க நிறைவு பெறும்" என்கிறார் பேராசிரியர் அன்பழகன். இவரின் கூற்றிற்கு ஏற்ப ஆண், பெண்ணின் வாழ்க்கை காதலில் அரும்பி, திருமணத்தில் இணைந்து குழந்தைப் பெற்ற பின்னர் நிறைவு பெறுகிறது. மனித வாழ்க்கையின் அங்கமாக அமைவது திருமணம். அதனால் தான் களவு வாழ்க்கையிலிருந்து திருமண உறவான கற்பு நிலைக்கு வர விரும்புகின்றனர் தலைமக்கள்.

**இல்லறம்**

இல்லறம் என்பது மனித வாழ்வின் தொடக்க நிலையாக உள்ளது. இதனை ஔவையார் 'இல்லறமல்லது நல்லறமல்லது' என்று இல்வாழ்க்கையினைச் சிறப்பித்து அழகுபடக் கூறியுள்ளார். இல்வாழ்க்கையில் பெண்கள் முதன்மையானவர்களாய் இருந்தனர். இல்வாழ்க்கையைத் திறமையுடன் நடத்த வேண்டிய முறைப்படி நடத்தினால் அதைக்காட்டிலும் இனிய வாழ்வு வேறு இல்லை என்பதை

**"மனையுறை வாழ்க்கை வல்லியாங்கு மருவின்**
**இனியவும் உளவே"** **(குறுந் : 233)**

என்கிறது குறுந்தொகை 'தலையில் ஒரு பலாக்கனியைச் சுமந்து கயிற்றின் மேல் நிலை தவறாமல் நடப்பதுதான் இல்வாழ்வு'[12] என்கிறார் கலைஞர் எச்செயலைச் செய்தாலும் அன்போடும் அறத்தோடும் செய்வது இல்வாழ்க்கையில் பயனை விளைவிக்கும் என்பதை,

**"அன்பும் அறமும் உடைத்துஆயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது."** **(குறள் : 45)**

என்கிறார் வள்ளுவர். 'தொல்காப்பியத்தில் கற்பு என்று வரும் இடங்களை யெல்லாம் ஆராயின் அ∴து இல்லறம் என்னும் பொருளையேக் குறிக்கின்றது.' அத்தகைய இல்லறத்தில் பெண்கள் இல்வாழ்க்கையின் கடமைகளிலும் பண்புநலன்களிலும் சிறந்து விளங்கினர். இல்லறத்தில் ஆடையின்றி உடுப்பதற்கு ஒரே ஒரு ஆடை உள்ள வறுமை நிலையிலும் வருந்தாமல் ஒருமணப்பட்டு வாழ்பவரின் இல்லறம் உயர்ந்ததாகக் கருதப்பட்டது.

**போர்**

தமிழர் போரைப்பற்றி மிக எளிய இயல்பான எண்ணம் கொண்டிருந்தனர். போரில் விருப்பங்கொண்டு போரிட்டு அதில் மகிழ்ச்சி அடைந்தனர். வாழ்க்கையில் நிகழும் பிற காரியங்களைப் போலப் போரையும் ஒருசமய நிலைக்கு உயர்த்தி அதற்குக் கொற்றவை என்றொரு தெய்வத்தைப் படைத்து அதனை வணங்கினர் போரிட்டு முடித்ததும் சிறந்த கடமையைச் செய்து முடித்துவிட்டதாகக் கருதினர். 'போர் தான் யாவற்றிற்கும் தந்தை எல்லோருக்கும் அரசன் போராட்டத்தின் மூலம்தான் எல்லாப்பொருள்களும் உயிர்த்தன்மை அடைகின்றன என்கிறார் சமூக நூலார்'.

**"போரின்றி வாழும் பொருநர்சீர்"** **(நான்மணி : 42)**
**"மண்ணோடு புகழ்நிற்இப்**
**புண்ணொடு தான் வந்தன்று"** **(புறப்பொருள் :5)**
**"விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும் தன் நாளைஎடுத்து"** **(குறள் : 776)**

போன்ற பாடலடிகள் போரின் இன்றியமையாமையை உணர்த்துகின்றன. வீரர்கள் மேலும் போரில் விழுப்புண்பெறாத நாள்களையெல்லாம் வாழ்நாளில் வீணாகிவிட்ட நாள்களாகக் கருதினர். மேலும் போரில் ஒருவரைஒருவர் பகைக்கொண்டுக் கொல்லுதல் இயற்கை என்பதை,

**"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
**புதுவது அன்று, இவ் உலகத்து இயற்கை"** **(புறம்:76)**

என்கிறது புறம். போர் ஏற்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. மண்ணாசையும், புகழ்பெற வேண்டுமென்ற ஆர்வமும் போரில் இறந்தவர்கட்கு வீரசுவர்க்கமுண்டு என்ற நம்பிக்கையும் உலகு முழுவதையும் ஒருகுடையின்கீழ் கொண்டுவர வேண்டுமென்ற

பேராசையும் சில நேரங்களில் மகட்கொடை மறுப்பும் போருக்குக் காரணமாயின இதனை

**"வையம் காவலர் வழி மொழிந்து ஒழுக**
**போகம் வேண்டி, பொதுச்சொல் பொறாஅது**
**இடம் சிறிது என்னும் ஊக்கம் துரப்ப" (புறம் 8:1-3)**

என்கிறது. இப்பாடல் தன்னாட்டின் நிலப்பரப்பை விரிவுபடுத்திட வேணடும் என்ற ஆர்வத்தின் மிகுதியால் வேந்தன் போர் செய்ததைக் குறிப்பிடுகிறது. போர் தொடங்குவதற்கு முன்னர் போர்ச்செய்தியினை ஆநிரைகளைக்கவர்ந்தும் முரசறைந்தும் தெரிவிப்பர். மேலும் போருக்கு முன்னர் நாட்டில் பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், ஆகியோர்களுக்கும் பாதுகாப்பு அளிக்கப்பட்டது என்பதை,

**"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வர் பெறாஅ தீரும்**
**எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென்**
**அறத்தாறு நுவலும் புட்கை மறம்" (புறம் 9:1-6)**
**"பார்ப்பார் அறவோர் பசுபத்தினி பெண்டிர்**
**மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டுத்**
**தீத்திறத்தோர் பக்கமே சேர்க" (சிலம்பு 21:53-55)**

இப்பாடலடிகள் மூலம் உணரமுடிகிறது. மேலும் போருக்குப் புறப்படுவதற்கு முன்பு விரிச்சிக்கேட்டல் நன்னிமித்தம் பார்த்தல் பழந்தமிழர் மரபாக இருந்தது இதனை

**"நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்" (புறம் 280:6-7)**
**"குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படைமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்" (அகம் 207: 3-4)**

என்கின்றன. அக்காலப் போர்முறை அறப்போர்முறையாக இருந்தது. அவர்கள் வஞ்சகம், சூழ்ச்சி, அடுத்ததுகெடுத்தல் இல்லாத போரில் ஈடுபட்டனர். காலை முரசறைந்துத் தொடங்கும் போர் மாலை முரசறைந்து நிறுத்துவதாக அமைந்தது. முழு இரவு ஓய்விற்குப்பின் மீண்டும் அடுத்தநாள் காலைத்தொடங்கும் அவர்களின் போர் எதிரிகளுக்கு அதிக வாய்ப்பளிப்பதாக அமைந்தது. 'இன்றுபோய் போருக்கு நாளை வா' என்று இராவணனை அனுப்பிய இராமனின் உள்ளம் போரின் அறத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது. அரசமரபினரிடையே மரபு வழியாக வந்த பகைமைகாரணமாகவும் தன்புகழ்கருதியும் மண்ணாசை கொண்டு போர் புரிந்துள்ளனர்.

**நம்பிக்கை**

சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிப்பது அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டவை. அவை சமூகத்தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றின. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வும் நம்பிக்கையை வளர்த்து வருகின்றன.

நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகக் காட்சித் தருகின்றன. இயற்கையின் புதிரானச் செயல்களை உணர இயலாதபோதும் மனித வாழ்வில் நிகழும் ஊறுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையிலும் மனிதமனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கின்றன. அவை நம்பிக்கைகளாக உறுப்பெறுகின்றன. நம்பிக்கைகள் மரபுவழியில் காலங்காலமாக ஒருமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருகின்றன. மனிதனின் பிறப்பு முதல் இறப்புவரை பலவித நம்பிக்கைகளை மக்கள் கைக்கொண்டிருக்கக் காண்கிறோம். நம்பிக்கைதான் மனித வாழ்வினை இயக்குகின்றது என்று கூறும் அளவிற்கு வாழ்வில் நம்பிக்கை பெரும்பங்கு வகிக்கின்றன. “ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் பத்தாயிரக்கணக்கான நம்பிக்கைகளும் நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக்களஞ்சியம் சுட்டுகிறது”$_{13}$. மனிதன் தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முயலும் தற்காப்பு முயற்ச்சியும் நன்மை விளைய வேண்டுமென்ற விருப்பமும் நம்பிக்கைகளை நிலைநிறுத்துகின்றன. மேலும் நம்பிக்கை என்ற சொல் நம்பு, நம்புதல் என்ற பொருளில் ஆளப்படுகிறது.

**“நம்பு மேவு நசையா கும்மே” (தொல் - சொல் 329)**
**“சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்**
**சுடுவான் போல நோக்கும்” (நற் 175 : 7-8)**
**“நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்**
**பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்**
**சாதலு மினிதே காதலந் தோழி” (நற் 327:1-3)**

இப்பாடல்களில் நம்பிக்கை என்ற சொல் விருப்பம், நம்பு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாளும் கோளும் பார்த்து நல்ல செயல்களில் ஈடுபடும் பழக்கம் பண்டைய மக்களிடையே பரவலாகக் காணப்பட்டன. நாட்களை விண்மீன்களின் நிலையை கொண்டு நிச்சயித்த நிலையில் நாளுக்கும் கோளுக்கும் தொடர்பு கற்பிக்கப்பட்டது. கோள்களின் இயல்புகளுக்கேற்ப நாட்களின் நன்மை தீமைகள் நிச்சயிக்கப்பட்டு நல்லநாள் தீயநாள் என்ற கருத்து உருவானது. பின்னர் மக்கள் ஈடுபடும் செயல்களில் நன்மைபயக்க வேண்டுமென எதிர்பார்த்தனர் அதனால் நல்ல காலங்களைத் தேர்ந்தெடுத்தனர். நாள் செய்வதை நல்லோர் செய்யார் என்ற முதுமொழிக்கு ஏற்ப நாளையும் கோளையும் பார்த்துச் சுப காரியங்களைச் செய்யத் தொடங்கினர். அவற்றில் திருமணம், பிறந்தநாள், விதைவிதைத்தல், போன்ற நிகழ்ச்சிகள் நடைபெற்றன என்பதை,

**“சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்**
**பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்” (தொல் - பொருள் 88:7-8)**
**“தன்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி**
**மனை விளக் குறுத்து மாலை தொடரிக்**

**கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்**
**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கட்**
**கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென"** **(அகம் 86:3-7)**
**"கருங்கட் கேழ லுழுத பூமி**
**நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்**
**உழா அது வித்திய பருஉக்குராற் சிறுதினை**
**முந்துவிளை யாணர் நாட்புதி துன்மார்"** **(புறம் 168 : 4-7)**

இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. வாழ்வில் நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் நிமித்தம் பார்த்தும் விரிச்சி கேட்டும் செய்யத் தொடங்கினர் நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் மூலம் முன்னுணர்த்துவதாகும். இதனைச் சகுனம்' என்று இன்று குறிப்பிடுகின்றனர். பழங்காலத்தமிழர் புள், நிமித்தம் ஆகிய இரு சொற்களால் சுட்டுகின்றனர்.

**"வேதின வெரிநி னோதி முதுபோர்த்**
**தாறு செல் மாக்கள் புட்கொளப் பொருந்துஞ்**
**சுரனே சென்றனர் காதலர்"** **(குறுந் 140:1-3)**

என்கிறது குறுந்தொகை. நிமித்தங்கள் மனிதமனம் முடிவெடுக்க முடியாத சூழ்நிலையில் தோன்றின. அவை நல்நிமித்தம், தீ நிமித்தம் என இருவகைப்படும். நிமித்தம் என்பதற்குக் காரணம், சகுனம், அடையாளம் என்று பொருள் தருகிறது. தமிழ்ப்பேரகராதி நிமித்தம் பார்ப்பதற்கு மரம், பறவை, ஊர்வன, விலங்குகள், மாந்தர் கனவுகள் இயற்கை மாற்றம் ஆகியவை காரணமாக அமைகின்றன. சகுனம் என்ற சொல்லை நிமித்தம் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. பாலைக்கலியில் தலைவனைப் பிரிந்த தலைவி விரைவில் தலைவன் என்னைக் காண வருவான் என்று ஆற்றியிருக்கிற வேளையில்

**"மனைவியின்**
**பல்லியும் பாங்கு ஒத்து இசைந்தன**
**நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே"**

எனப் பல்லி இசைக்கிறது. இடக்கண்ணும் துடிக்கிறது. நல்நிமித்தம் இது எனத் தலைவி தோழிக்குக் கூறினாள்.

முல்லைக்கலியில் ஏறுதழுவுதலைக் காணும் தலைவி தலைவன் மேல் கொண்ட காதலால் தலைவனை நினைத்து வருந்துகிறாள் தலைவியைத்தோழி ஆயர்களின் குழலோசையினைச் சுட்டிக்காட்டி ஆயர் மணிமாலை அணிந்து குழலினை ஊதுகின்றனர். நல்ல நிமித்தம் இது. உன் காதலனைக் கட்டாயம் கொண்டு வரும் என்கிறாள் இதனை

**"அணிமாலைக் கேள்வன் தருஉமார் ஆயர்**
**மணிமாலை ஊதும் குழல்"** **(கலி:2)**

என்கிறது கலித்தொகை. ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத்திறனை அளவிடமுடியும். சிந்தனைத்திறன் அதிகமாக உள்ள சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும் சிந்தனைத்திறன் குறைந்த சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதனை யானையினைக் குறிபார்த்துக் தாக்கி வீரம் விளைந்த தமிழன் இன்று

**"பூனைக்குறுக்கானால் போச்சுதடா உயிர் என்று**
**ஞானமொழி பேசுகிறான் தமிழ் வீரன்"**[14]

என்று மூடநம்பிக்கையையும், கருத்தையும் கிண்டலாகச் சாடுகிறார் கலைஞர். கனவுகள் மக்களுக்குப் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்பினர். கண்ணகி மதுரைக்குப் போவதற்கு முன் கனவு காண்கிறாள். பாண்டிமா தேவி மதுரையும் அரசும், அரசனும் அழிவதை முன்கூட்டியே காண்கிறாள். இதனால் இளங்கோவடிகள் கனாத்திறம் உரைத்தகாதையை அமைத்துள்ளார். கனவில் கண்டது நனவில் நடக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்து வருகிறது. நெய்தல் நிலத்து தலைவி கனவில் தலைவன் வருகிறான் தலைவனைப் பிரிந்து இருக்கின்ற தலைவி கனவில் வந்தவன் நனவிலும் வருவான் என்று நம்பிக்கை கொண்டு இருக்கிறாள் என்பதை,

**"கனவில் வந்த கானல் அம் சேர்ப்பன்**
**நனவில் வருதலும் உண்டு"** **(கலி :128)**

என்று கலித்தொகையில் தோழியிடம் தலைவி கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

**வழிபாடு**

இறைச்சிந்தனை தொன்றுதொட்டு மக்களிடையே வரும் ஒரு பண்பு. அது மனித சக்திக்கு அப்பாற்பட்ட வேறொரு ஆற்றல். இந்த உலகினை ஆட்டிப்படைப்பதாகப் பண்டையமக்கள் நம்பினர். தனக்கு ஏற்படும் நன்மைக்கும் அந்த ஆற்றலே காரணம் என நம்பியதால் எந்தவொரு செயலிலும் அறிவாற்றலைப் போற்றும் பண்பினை மேற்கொண்டனர். இந்த இறைச்சிந்தனை முதன்முதலில் அச்சத்தாலேயே மக்களிடம் தோன்றியது இதுவே. காலப்போக்கில் வழிபாடாக மாறியது. இயற்கையின் புதிரான செயலை மனிதன் உணர இயலாத நிலையில் அதனை வழிபட்டு அமைதிப்படுத்த முயன்றபோது வழிபாடு உருவாகியது. அச்ச உணர்வு அன்பாக மாற்றம் பெற்றுக் காலப்போக்கில் அருளாக வளர்தமையினையே வழிபாட்டு முறைகள் தெரிவிக்கின்றன. இயற்கையின் கூறுகளான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், மலை ஞாயிறு, திங்கள் போன்ற பொருட்களை வழிபடும் தன்மையினை இயற்கை வழிபாடாகக் கருதினர். இயற்கை மனித நலத்திற்குப் பயன்பட்டதை உணர்ந்த மக்கள் அவற்றைத் தெய்வமாக வணங்கி வழிபட்டனர் இதனை

**"தயங்குதிரைப் பெருங்கட லுலகு தொழத்தோன்றி**
**வயங்குகதிர் விரிந்த வுருகெழு மண்டிலம்"** **(அகம் 263:12)**
**"விரிகதிர் மண்டிலம் வியல் விசம்பு ஊர்த்தர"** **(கலி:6)**
**"உச்சி நின்ற உவவுமதி கண்டு**

**தொழுதனம் அல்லமோ பலவோ''** **(புறம்:60)**

**கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்''** **(கலி 40:11)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. மேலும் மலை, கடல், ஞாயிறு, திங்கள் ஆகியவற்றை வழிபட்டதைத் தெரிவிக்கும் தொல்காப்பியர் ஞாயிறு திங்கள்,தீச்சுடர் ஆகிய இயற்கையின் முக்கூறுகளை வழிபட்டதனைப் பாடாண்திணையில்,

**''கொடிநிலை கந்தழிவள்ளி என்ற**
**வடுநீங்கி சிறப்பின் முதலென மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே''** **(தொல்:5)**

எனக்காட்டியுள்ளார். இயற்கை வழிபாட்டின் அடிப்படையின் தோன்றிய இறைவழிபாடு காலப்போக்கில் பல தெய்வ வணக்கத்திற்கு வழியமைத்தது. இவற்றில் சிறுதெய்வம், பெருந்தெய்வம் என்ற பாகுபாடு தோன்றியது. அவற்றில் முருகன், திருமால் என்பவை பெருந்தெய்வ வழிபாடாக வழிபடப்பட்டது. சிறுதெய்வ வழிபாடு இயற்கையில் அமைந்த மன்றம், பொதியில், கள்ளி, பெண்ணை ஆகியவற்றில் உறைந்த கடவுளரைக் குறிப்பிடுகின்றது என்பதை,

**''மன்ற மராஅத்த பேஎழுதிர் பேஎழுதிர் கடவுள்**
**கொடியோர்த் தெறுஉ மென்ப''** **(குறுந் 87:1-2)**

**''கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்**
**பலிகண் மாறிய பாழ்படு பொதியில்''** **(புறம் 52: 12-13)**

**கள்ளி நிழற் கடவுள் வாழ்த்தி** **(புறம் 260:5)**

**''தொன்றுஉரை கடவுள் சேர்ந்த பராரை**
**மன்றப் பெண்ணை''** **(நற் 302: 3-4)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. மேலும் வழிபாட்டில் பெண்களும் ஈடுபட்டனர். இல்லறத்தில் இருக்கும் தலைவி மாலை நேரத்தில் நெல்லையும் மலரையும் தூவி வழிபாடு செய்தாள், தெய்வங்களை அமைதிப்படுத்தும் வழிபாட்டில் பலியும், படையலும் அமைக்கப்பட்டது. பழந்தமிழர் கடவுள் வழிபாட்டில், பூ, நெல், திணை போன்ற பல பொருள்கள் படையலாக இடம்பெற்றன.

**''நெல்லு மலருந் தூஉய்க்கை தொழுது**
**மல்ல லாவண மாலை யயர** **(நெடு 43-44)**

**''சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து** **(திரு 2:8)**

**நீத்துடை நெடுங்கயத் தீட்பட மலர்ந்த**
**கடவு ளொண்பூ''** **(பெரும் 289-290)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும் தெய்வத்தை வணங்கும் முறையினை "கைதொழுஉப் பரவிக் காலுற வணங்கி" (திருமுரு:252) எனக் குறிப்பிடுகிறது திருமுருகாற்றுப்படை. கோவிலுக்குச் சென்று வழிபட்டால் ஏற்படும் நன்மையினை,

**''ஆலயம் தொழுவது சாலவும் நன்று''** **(புறம் : 2)**

**''வையந்தொறும் தெய்வந் தொழு''** **(புறம் : 89)**

எடுத்துக் கூறுகின்றன.

பல தெய் வணக்கம் நிலவிய அக்காலத்திலேயே உலகைப் படைத்தவன் ஒருவன் என்ற கொள்கையும் தமிழரிடையே நிலவியது. இதனை,

**"ஐதேகு அம்மஇவ் வுலகுபடைத் தோனே"** **(நற் 240:1)**

என்கிறது நற்றிணை. 'நாள் முழுவதும் நன்றாக வேலை செய்வதற்கான வலிமையை வழிபாட்டின் மூலம்தான் பெறமுடியும்'$_{15}$ என்கிறார் மகாத்மா காந்தி. இவரின் கூற்றிற்கு ஏற்ப இக்கால வழிபாட்டுமுறைகள் அமைந்துள்ளன.

**விழாக்கள்**

மக்களின் வாழ்வில் சோர்வினைப் போக்கி இன்பமும், மறுமலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டுவன விழாக்கள். மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் நோக்கமாகும். மக்களின் துன்பத்தை மறக்கச் செய்து அவர்களை இன்பமடையச் செய்வது விழாக்கள். இவ்விழாக்கள் மனித மனங்களுக்கும், புத்துணர்ச்சியைத் தருவனவாகவும் அத்துடன் ஒரு சமுதாயம் மலர்ச்சி அடைய அடிப்படைக் காரணமாகவும் விளங்குகின்றன. இதனை வரலாற்று ஆசிரியர்கள் மக்களிடையே நின்று நிலவிய விழாக்களைக் கொண்டே ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை அடையாளம் காணமுடியும் என்கின்றனர். இதுபற்றிக் கலைக்களஞ்சியம் விழாக்கள் அறிவூட்டுவதாயும் சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த தன்மைகளை உள்ளடக்கியதாகவும் கருதப்படுகின்றன என்று கூறுகிறது. உள்ளத்துக்கு மகிழ்ச்சியினையும் செயலாற்றுவதற்குரிய நம்பிக்கையினையும் மனிதனுக்கு விழாக்கள் அளிக்கின்றன. இவை நம்பிக்கையின் அடிப்படையிலேயே கொண்டாடப்பட்டு வருகின்றன. மக்கள் விரும்பி ஏற்றுக்கொண்டாடும் நிகழ்ச்சியாதலின் அது விழா எனப் போற்றப்பெறுகின்றது. பண்டைய இலக்கியங்கள் விழாவினை, 'விழவு' 'விழா' 'சாறு' என்ற சொற்களால் சுட்டுகின்றன. இதனை,

**"அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்ப்**
**பழியில ராயினும் பலர்புறங் கூறும்"** **(அகம் 115:1-2)**
**"ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்**
**கால்கோளென் றுக்கிக் கதுமென நோக்கி"** **(கலி 83: 14-15)**
**காதல ருழைய ராகப் பெரிதுவந்து**
**சாறுகொ நெரிற் புகழ்வேன் மன்ற** **(குறுந் 41:1-2)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. பழந்தமிழர் விழாவினைச் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் கொண்டாடினர். விழாவுக்குரிய காலமாக வேனிற்காலத்தைக் குறிப்பிட்டனர். விழாக்களின் இயல்புக்கு ஏற்ப காலையிலும் மாலையிலும் கொண்டாடப்பட்டன. அவற்றில் புனலாடலாகிய நீர்விழாக் காலையிலும், கார்த்திகை விழா மாலையிலும் கொண்டாடப்பட்டன. கொண்டாடப்பட்ட விழாக்கள் பல நாட்கள் தொடர்ந்து நடைபெற்றன. அவற்றில் இந்திரவிழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றதை மணிமேகலை சுட்டுகிறது.

**"விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று**
**மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள்**
**மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த**
**நாலேழ் நாளினு நன்கினி துறைகென**
**அமரர் தலைவ னாங்கது நேர்ந்தது"** **(மணிமே : 5-9)**

என்கிறது. மேலும் விழாக்கள் பலநாட்கள் தொடர்ந்து நடைபெற்றாலும் ஏழு நாள்கள் நடைபெற்றதாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இதுவே இன்றைய சூழ்நிலையிலும் திருவிழா நாள்களாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விழாக்கள் முதல்நாள் தொடங்குவதற்கு நல்லநேரம் நல்ல நாளும் பார்க்கப்பட்டது. வாழ்க்கையினைக் கோள்களின் நிலைமைகள் கட்டுப்படுத்துகின்றன என்பதை உணர்ந்த மக்கள் நல்ல நாளும் நல்ல கோள்களும் கூடிவரும் நேரத்தில் விழாக்களைத் தொடங்கினர். விழாக்கள் பெரும்பாலும் வளர்பிறை மற்றும் மதிநிறைந்த நாட்களில் தொடங்கப்பட்டன.

**"மழைகால் நீங்கிய மாக விசும்பிற்**
**குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து**
**அறுமீன்சேரு மகலிருள் நடுநாள்**
**மறுகுவிளக் குறுத்த மாலை தூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுட னயர"** **(அகம் 141: 6-11)**

இப்பாடல் கார்த்திகைத் தீபவிழா முழுமதிநாளில் தொடங்கப்பட்டதைக் குறிக்கிறது. மேலும் இந்திரவிழா முழுமதிநாளிலும், தைந்நீராடல் வளர்பிறையிலும் தொடங்கப்பட்டது. இவ்விழா தொடங்குவதற்கு முன்னர் பறையறைந்து விழா நடைபெறும் நாளைப் பொதுமக்களுக்கு அறிவிப்பர். இது 'விழாக்கோள்' என்று சுட்டப்படும். பறையறைவோர் இருந்தனர் என்பதை,

**"மணிக்குரல் நொச்சித் தெரியல்சூடிப்**
**பலிக ளார்கைப் பார்முது குயவன்**
**இடுபலி நுவலு மகன்றலை மன்றத்து**
**விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்"** **(நற் 293:1-4)**

எனச் சுட்டுகிறது. மேலும் வச்சிரக்கோட்டத்திலிருந்து முரசை ஐராபதம் நிற்கும் கோட்டத்தில் கொண்டு வந்து யானையிலேற்றி விழாவின் முதலும், முடிவும் அறிவித்தமையைச் சிலம்பு சுட்டுகிறது. விழாக்களில் புதுமணல் பரப்பும் செய்தியும் இடம்பெற்றுள்ளது. இதனை,

**"விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்**
**பழமணல் மாற்றுமின் புதுமணல் பரப்புமின்"** **(மணிமே 1: 50-51)**
**"வார்கழஞ் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநா ளன்ன**
**தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்"** **(அகம் 187: 7-4)**

என்று இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. விழாவில் முழவு, யாழ், முரசு, குழல் போன்ற இசைக்கருவிகள் முழக்கப்பட்டன. அவ்வோசை இடையறாது ஒலித்துக் கொண்டிருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கருவிகளும் விழா பற்றிப் பாடல்களில் முழவு பற்றிய குறிப்புகள் மிகுதியாக உள்ளன. அதனை முழங்கி விழாத் தொடங்குவது மரபாக இருந்தது. இதனை,

**"குழலகவ யாழ்முரல**
**முழுவதிர முரசியம்ப**
**விழவறா வியலாவணத்து"** **(பட்டி 156-158)**
**முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கண்**
**கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்"** **(அகம் 222: 4-5)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. விழாக்களில் குரவை, துணங்கை ஆகிய கூத்துக்கள் நிகழ்த்தப்பட்டன. மேலும் கூத்துக்கள் இருபாலருக்கும் பொதுவானது என்றாலும் அவ்விருவரும் விழாக்களில் தனித்தும், சேர்ந்தும் ஆடினர். விழாக்களில் குருதியோடு விரவிய அரிசியும், தினையும் மலரும் தூவி வழிபாடு செய்தனர். மேலும் வழிபடுவதற்குப் பலியிடும் மரபும் இருந்தது. பழந்தமிழர் பல விழாக்கள் கொண்டாடினர். அவை இறைவனொடு தொடர்புடையவை, தொடர்பற்றவை என இரண்டு வகைப்படும். அவற்றில் பிறந்தநாள், புனலாட்டுவிழா, தனிமனிதனோடு தொடர்புடையது. இவற்றில் பண்டைத் தமிழகத்தில் மன்னர்கள் பிறந்தநாளைக் கொண்டாடியதாக இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

**"சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்**
**பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்"** **(தொல்-பொருள் 88:7-8)**

என்று மன்னன் பிறந்தநாளைப் பெருமங்கலம் என்ற சொல்லால் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். அக்காலத்து மன்னர்களின் பிறந்தநாளை விழாவாகப் பொதுமக்கள் கொண்டாடியதை மக்களுக்கும், மன்னனுக்கும் இருந்த நெருங்கிய உறவுநிலையை வெளிப்படுத்துகிறது. நன்னனது பிறந்தநாளை மக்கள் கொண்டாடியதை,

**"மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்**
**உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ**
**வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்**
**பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள்**
**சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு"** **(மதுரைக் 615-619)**

என்ற பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. இப்பிறந்தநாள் விழாவை 'வெள்ளணி விழா' என்று அழைப்பர். வெள்ளணி நாள் குறித்து நச்சினார்க்கினியர். 'மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து அவ்வுயிர்கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணி என்க' என்று பொருள் கூறுகிறார். மேலும் புனலாட்டு விழாவில் புனலாட்டு என்பது நீரில் குளித்தல் எனப்பொருள்படும். இதனை நீராடல் எனவும் சுட்டுவர். பருவமாற்றம் காரணமாக மழைபொலிந்து, நீரோட்டம் ஏற்பட அதனை வரவேற்க்கும்முகத்தான்

மகிழ்ச்சிப் பெருக்கால் நீராடி வழிபடுவது புதுப்புனலாடலின் நோக்கமாகும். புதுப்புனல் ஆடுதல் என்பது இன்றைய ஆடிப்பெருக்கினை நினைவுபடுத்தும். தங்களது வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்கும் நீரை வாழ்த்தி வழிபடுவதும் வரம் வேண்டுவதும் வளமை வேண்டிச் செய்யப்பட்ட ஒன்றாகவே காட்சி தருகின்றது. புனலாடல் ஆற்றிலும், கடலிலும் நிகழ்ந்ததனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன. இதனை,

**"தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகூடல்**
**தீது நீங்கக் கடலாடியும்**
**மாசுபோகப் புனல்படிந்தும்"** **(பட்டினப் 97-100)**

**"நின்மலைப் பிறந்து நின் கடன் மண்டும்**
**மலிபுன னிகழ்தருந் திநீர் விழவிற்**
**பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை**
**மேவரு சுற்றமொ ருண்டினிது நுகரும்**
**தீம்புன லாய மாடும்**
**காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே"** **(பதிற் 48: 13-18)**

என்கின்றன. நீரால் நிலம் வளமடைவது போன்று மனிதன்தன் வாழ்வில் வளமையை எதிர்நோக்கிய நிலையில் நீரால் பொருள்கள் வளர்ச்சியடைகின்றன. புனலாடுவதற்குக் காலையில் பறையறைவித்ததும் பொன்னாலாகிய சங்கு, நண்டு, இறவு, வாளை ஆகியவற்றைப் புதுப்புனலில் இட்டுப் பெண்டிர் வழிபட்டனர் என்பதைப் பரிபாடல் சுட்டுகின்றது. பூந்தொடைவிழா இலக்கியத்தில் ஒரு இடத்தில் மட்டும் இடம்பெற்றிருப்பதாகக் குறிப்பு உள்ளது. இவ்விழா மறவர்கள் மத்தியில் உருவானதாகும். இவ்விழா குறித்து உரையாசிரியர் மறவர் மக்கள் முதன்முதலாக அம்பு தொடுத்தற்பொருட்டு நிகழ்த்தும் திருவிழா என்று விளக்கம் தருகிறார். இதனை,

**"நம்முயர் அள்ளினர் காதலர் கறுத்தோர்**
**தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி**
**வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநா ளன்ன**
**தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்"** **(அகம் 187: 5-9)**

என்று கூறுவதன் மூலம் மறவர்களின் கலைப்பயிற்சி ஆரம்பநிலையில் கொண்டாடப்பட்ட விழாவாகத் தோன்றுகிறது. 'மனித சமுதாயம் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்தாலும் அவை ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்கள்' என்கிறார் சு.சக்திவேல். இவரின் கூற்றிற்கு ஏற்பப் பல விழாக்கள் மக்களை இணைப்பதற்காக இன்றளவும் கொண்டாடப்பட்டு வருகின்றன.

**நீதி**

நீதி வழங்குதல் முறை செய்தல் எனப்பட்டது. அறநெறி தவறாமைக்கு அடையாளமாகக் கொள்ளப்பட்டது. அக்கால மக்கள் எவ்வித வேறுபாடும் இல்லாமல் தப்புச் செய்தவர்களுக்குத் தண்டனை வழங்கினார்கள். நீதி வழங்கும் இடம் மன்றம் எனப்பட்டது. நீதிமன்றத்தில் காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர்கள் இருந்தனர். அவர்கள் நடுநிலையில் நின்று நீதி வழங்கினர். நீதி வழங்கும் இடம் அறங்கூரவையம் அல்லது நீதிமன்றம் எனப்பட்டது.

**"அறம்அறக் கண்ட நெறி மாண் அவையத்து"** **(புறம் 224:4)**

என்கிறது புறம். அக்காலத்தில் பொய்யான சாட்சி கூறுதல் தவறு. அன்றியும் தேவையான சாட்சியைத் தெரிந்தும் கூறாமல் இருத்தலும் தவறு என்று சுட்டுகிறது நற்றிணை. நீதியை 'நான் என் இதயத்திற்குள்ளேயே ஒருநீதிமன்றம் அமைத்து மௌனமாக விசாரணை செய்து கொண்டிருக்கிறேன்'$_{16}$ என்கிறார் மகாத்மா காந்தி. பாண்டிய மன்னன் நீதி தவறியபோது உயிரைவிடவும் துணிந்தான். ஆராயாது கோவலனைக் கொன்ற பாண்டியனின் உயிர் உடனே பிரிந்தது. இதனை,

**"பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட**
**யானோ அரசன்! யானே கள்வன்**
**மன்பதை காக்கும் தென்புலங் காவல்**
**என்முதற் பிழைத்தது கெடுக! என் ஆயுள்"** **(சிலம்பு 20: 74-76)**

என்ற இப்பாடல் நீதி தவறியமைக்குப் பாண்டியன் தன் நெஞ்சிற்குத் தண்டனை வழங்கியதைச் சுட்டுகிறது. மேலும் குற்றம் செய்தமைக்காகத் தன் கையைக் குறைத்துக் கொண்டான் பொற்கைப் பாண்டியன், மனிதனுக்கு மட்டுமன்றி விலங்குக்கும் நீதிவழங்க வேண்டும் என வற்புறுத்தும் வரலாறுகள் மனுநீதிச்சோழன் வரலாறும் சிபியின் வரலாறுமாகும்.

மன்னனால் நாட்டு வழக்குகள் அனைத்தையும் கேட்டு நீதி வழங்க இயலாத நிலையில் அரசன் நீதிமன்றத்தை அமைத்து அந்நீதிமன்றங்களில் அறிவார்ந்த சான்றோர்களை நடுவராக அமைத்து மக்களுக்கு முறையான நீதி கிடைக்க வழிவகுத்தான். மன்னன் நீதிபதிகளைத் தேர்ந்தெடுத்ததை,

**"அறம்நிலை திரியா அன்பின் அவைத்துத் திறனில்**
**ஒருவனை நாட்டிமெலிதோல் செய்தேனாகுக"** **(புறம் : 71)**

குறிப்பிடுகிறது புறம். மேலும் சான்றோராக இருப்பதற்குச் சில தகுதிகள் இருக்க வேண்டும் என்கிறது மதுரைக்காஞ்சி.

**"குன்றுபல குழிஇப் பொலிவன தோன்ற**
**அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி"** **(மதுரை 489-490)**

இப்பாடலில் அச்சம், அவலம், காட்சிக்கு எளியவராக இருப்பதைத் தகுதிகளாகக் குறிப்பிடுகிறது. மேலும் சான்றோராக இருப்பதற்குக் குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுநிலை, அழுக்காறின்மை அவாவின்மை போன்ற தகுதிகள்

வேண்டப்படுகின்றன. மன்னன் நீதி தவறினால் நாட்டில் மழை பெய்யாது. அதனால் முறையறிந்து மன்னன் நீதி வழங்கி நாட்டில் வளர்ச்சியை உண்டாக்கினான். இதனை,

**"கோல்நிலை திரியின் கோள்நிலை திரியும்**
**கோள்நிலை திரிவறங் கூறும்"** **(மணிமே)**

என்கிறது மணிமேகலை.

சங்க காலத்தில் ஆன்முலையறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல் போன்றவை பெருங்குற்றங்களாகக் கருதப்பட்டன. களவுக்கு அப்பாற்பட்ட காதலில் ஏமாறியவர்கள் காதலைச் சேர்த்து வைக்க நீதிமன்றத்தை நாடினர் இதனை.

**"திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன் அறியேன் என்ற**
**திறன் இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்"** **(அகம் 256:16-18)**

என்கிறது அகம். மேலும் கற்பைக் கவர்ந்தவர்கள் அதனை இல்லை என்று மறுத்த நிலையில் தண்டனை வழங்கப்பட்டது. 'கள்ளூர் என்னும் ஊரில் இளம்பெண் ஒருத்தியின் கற்பைக் கவர்ந்தவன் அவளைத் தெரியாது என்று சூளுறைத்தான். அவையத்தார் அவன் செயலை ஆராய்ந்து அவனுக்குத் தண்டனை வழங்கினர் என்பதைச் சுட்டுகிறது அகநானூறு. இவற்றின்மூலம் அக்காலத்தில் நீதி எவ்வுயிர்க்கும் பொதுவாக இருந்ததை அறிய முடிகிறது.

**மருத்துவம்**

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதற்கு ஏற்ப மக்கள் நோய்நொடி இல்லாமல் வாழ்ந்து வந்துள்ளனர். மருத்துவம் அக்கால மக்களின் பண்பாட்டோடும் பழக்க வழக்கத்தோடும் பின்னிப் பிணைந்துள்ளது. நோய்க்கு இயற்கை மருத்துவத்தையே பெரிதும் பயன்படுத்தினர். மேலும் மருத்துவம் என்பது மக்களிடம் வரும் உடல் மற்றும் உள்ளம் சார்ந்த நோய்களைத் தடுக்கவும் வந்தபின் விலக்கவும் மேற்கொள்ளப்படும் செயல் ஆகும். மேலும் மூவாசையில் மூழ்கி முக்குண வயப்பட்ட மக்களுக்கு நோய்கள் வருகின்றன. நோய் உடம்பை பற்றி உள்ளத்தைப் பற்றி என இருவகைப்படும். ஒன்று வயது செய்தொழில், வாழும், நிலத்தியல்பு பருவக்காலங்களுக்கேற்ப உணவு, உடை முதலியவற்றைச் சரிபடுத்திக் கொள்ளாததால் ஏற்படுகிறது. மற்றவை ஆசையின் மிகுதியால் வரும் கவலை அச்சம், சினம் ஆகியவற்றால் ஏற்படுவது. இவை வராமல் தடுப்பது வந்தபின் போக்குவது மருந்தாகும். இதனை,

**"மறப்பது உடல்நோய் மருந்தென லாகும்**
**மறுப்பது உளநோய் மருந்தெனல் சாலும்**
**மறுப்பது இனிநோய் வாராதிருக்க**
**மறுப்பது சாவே மருந்தென லாமே"**

என்கிறார் திருமூலர். இதனை,

**“உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்**

**றப்பால்நாற் கூற்றே மருந்து”** **(குறள் : 950)**

என்கிறார் வள்ளுவர். மருந்து என்னும் சொல்லுக்கு “பல்வகை நோய்களையும் தடுப்பனவும் தீர்ப்பனவுமான பல்வேறு நலப்பொருள் தொகுதி என்று விளக்கம் தருகிறார். தேவநேயப் பாவாணர் அக்காலத்தில் மருத்துவன் என்ற சொல் புலவரையும் குறிப்பிட்டுள்ளது. மருத்துவன் நல்லச்சுதனார் மருத்துவன் தாமோதரனார் என்று சுட்டுவதிலிருந்து அக்காலப் புலவர்கள் மருத்துவம் கற்றவர்களாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

தமிழ்மக்கள் துன்பம் தரும் எதனையும் நோய் என்றே கூறினர். பசியையும், வேட்கையையும் கூடத் தமிழர் நோய் என்றனர். உணவே மருந்து என்பதால் சேக்கிழார் தண்ணீரையும் உணவையும் இருமருந்து எனக் கூறியுள்ளார். நோய் மனிதனை அடிமைப் படுத்தியதால் பிணி என்று அழைத்தனர். எனவே பசிப்பிணியைப் போக்க, வந்த வள்ளல்கள் பசிப்பிணி மருத்துவன் என்று பாராட்டப்பட்டனர். சோழன் நலங்கிள்ளி என்னும் மன்னன் பாணன் பாராட்டும் வகையில் பசி மருத்துவனாக விளங்கியதை

**“பசிப்பிணி மருத்துவன் இல்லம்**

**அணிததோ செய்தோ கூறுமின் எமக்கே?**

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது. மேலும் நோயினைத் தீர்க்கும் மருத்துவன் மருத்துவத்தை ஒரு தொழிலாகச் செய்யாமல் தொண்டாகச் செய்தனர். இந்நிலையில் மருத்துவர் நோயின் தன்மை அறிந்து அதற்கு ஏற்ப மருந்தினைக் கொடுத்தனர் என்பதை,

**“உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்**

**கற்றான் கருதிச் செயல்”** **(குறள் : 949)**

என்கிறார் வள்ளுவர். மேலும் கலித்தொகையில்

**“வருந்திய செல்லல் தீர்த்த திறனறியொருவன்**

**மருத்தறை கோடலின் கொடிதே”** **(கலித் : 32)**

என்ற பாடலடிகளால் உணரலாம். மேலும் அக்கால மக்கள் இயற்கை உணவை ‘உணவே மருந்து, மருந்தே உணவு” எனச் சுட்டும் வகையில் இயற்கையில் கிடைக்கும் பொருட்களை மருத்துவக் குணத்துடன் கூடிய சுக்கு, மிளகு, திப்பிலி, போன்ற பல பொருள்களை உணவோடு உட்கொண்டனர். இவற்றில் வேம்பு சிறந்த கிருமி நாசினி என்பதால் புண்பட்ட போர் வீரர்களைக் கிருமிகள் தாக்காமல் தடுக்க வேப்ப இலையைக் கூரைகளில் வைத்தனர் என்பதை

**“தீங்கனி இரவமொடு வேம்புமனைச் சேரிஇ”** **(புறம் : 281)**

என்கிறது புறம். மேலும் இயற்கை பொருள்கள் மருந்தாகப் பயன்பட்டதை

**“பிணிநெகிழ் அலர் வேங்கை விரிந்த பூ வெறிகோள் (கலி:32)**

**“நாட்பலி மறந்த பொறி அரை ஆலம்”** **(அகம்:287)**

**“ஆலஅமர் செல்வன் அணிசால் பெருவிறல்”** **(கலி:81)**

என்ற பாடலடிகளால் அறியலாம். சங்க காலத்தில் இயற்கையில் மருத்துவம் இருந்தது என்றும், அது உடலும் உலகமும் ஐம்பெரும் சக்திகளால் இயங்கி வருகின்றது என்றும் கூறப்படுகிறது.

| ஐம்பூதங்கள் | பொறிகள் | புலன்கள் |
|---|---|---|
| விண் | காது | ஒலி |
| காற்று | மூக்கு | நுகர்வு |
| தீ | கண் | ஒளி |
| நீர் | நா | சுவை |
| நிலம் | தோல் | ஊறு |

சித்த மருத்துவத்தின் இக்கருத்தினைப் பரிபாடல்,

**“சுவைமை இசைமை தோற்ற நாற்றமும்**
**அவையு நீயே யடுபோ ரண்ணால்**
**அவை அவை கொள்ளும் கருவியு நீயே**
**முந்தியாய் கூறிய ஐந்தனுள்ளும்”** **(பரி : 13,4)**

என்று கூறுகிறது. மேலும் இயற்கையில் இசைக்கப்படும் இசைக்கருவிகள் மூலம் இசையைப் பயன்படுத்தி நோய்களைத் தீர்த்துக் கொண்ட நிலையினைக் காணமுடிகிறது. என்பதை

**“...................யாழொடு பில்லியம் கறங்கக்**
**கையப் பெயர்த்து மையிழு திழுகி**
**ஐயவி சிதறி ஆம்பல் ஊதி**
**பூம்பொறிக்கழல்கால் நெடுந்தொகை புண்ணே”** **(புறம்:281)**

இப்பாடல் போரில் அடிபட்டுக் காயமடைந்த வீரர்களை அவ்வீரர்களின் இல்லங்களில் கொண்டு சென்று விழுப்புண்களை ஆற்ற மருத்துவம் செய்தனர். மேலும் புண்களால் துயருறும் வீரர்களின் மனநிலையை மாற்றுவதற்கும், புண்சீக்கிரத்தில் ஆறுவதற்கும் வீரனின் அருகிலிருந்து ஆம்பல், குழல் போன்றவற்றை ஊதியும் நல் ஓசையை நல்கும் மணியை இசைத்தும் புண்ணை ஆற்றுவிக்கும் காஞ்சிப்பண்ணைப் பாடினர் என்பதன் மூலம் இயற்கையுடன் இசை பயன்பட்டதை அறியமுடிகிறது. மேலும் விழுப்புண் பட்ட வீரர்களின் புண் பெரிதாக இருந்தால் அதனை ஊசி கொண்டு தைத்தும் அப்புண் தூசுபடாமல் இருக்கப் பஞ்சு வைத்துக் கட்டும் நவீன மருத்துவமுறை அக்காலத்தில் இருந்தது என்பதை

**“நெடு ஊசி பரந்த வடுவாழ் மார்பின்**
**அம்பு சேர் உடம்பினர்**
**கதுவாய் போயை துதிவாயை காமொடு**
**பஞ்சியும் களையாப்புண்ணார்**

சிரல் பெயர்ந்தன்ன நெடு வெள் ஊசி

நெடு வசி பரந்த வடு வாழ் மார்பின்'' (பதிற் 42:1-4)

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது. மேலும் இயற்கையில் "வாதம், பித்தம், கோழை என்னும் மூன்றும் மனித உடலில் அளவோடு இயங்க வேண்டும். இவற்றுள் யாதேனும் மிகின் நோயுண்டாகும்"[17] என்கிறார். மணக்குடவர். இவ்வாறு சங்க இலக்கியத்தில் நோய் உண்டாவதற்கான காரணமும் அந்நோயைத் தீர்க்கும் மருந்தும் குறிப்பிடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**சோதிடம்**

பண்டைத் தமிழ் மக்கள் அவரவர்தம் வாழ்க்கைச் சூழலில் காணும் நிகழ்வுகளின் அச்சம் நிலையற்ற தன்மை ஆகியவற்றின் காரண காரியங்களுடன் கூடிய அல்லது அவையல்லாத காட்சிகள் யாவும் சோதிடமுறை உருவாகக் காரணமாக அமைந்துள்ளன. மேலும் சோதிடம் என்பதற்குக் கிரகங்களின் சஞ்சாரஞ் சொன்ன நூல் என்ற பொருளைத்தருகிறது. அபிதான சிந்தாமணி. பழந்தமிழர் வாழ்வுடன் நெருங்கித் தொடர்பு கொண்ட சோதிடக்கலை வாய்மொழியாகவே பல காலம் பேணிக்காக்கப்பட்டு வந்தது. பின்னர் எழுத்திலக்கியமாக உருப்பெற்று இன்றியமையாத இடத்தைப் பெற்றது சோதிடம். தமிழரிடம் இருந்த எல்லாப் பழக்கவழக்கங்களிலும் நம்பிக்கையிலும் பழமொழிகளிலும் பின்னிப் பிணைந்து காணப்படுகிறது. மக்களிடம் பல்வேறுப்பட்ட சடங்கு முறைகள் இருந்த போதிலும் இவை அனைத்தும் சோதிடத்தின் துணையுடன் செயல்படுத்தப்பட்டன. அவற்றில் மனிதன் திருமணம், மாங்கல்யம், சீமந்தம், உபநயனம், குழந்தைக்குப்பெயர் சூட்ட, முடியெடுக்க, காதுகுத்த, கல்வித் தொடங்க, குருசாந்தி செய்ய, பூச்சூட்ட, ஆடைஆபரணம் நிலம் வாங்க, வாகனமேற தேவ பிரதிஷ்டை என்று மனிதன் தான் செய்த செய்யும் எல்லா காரியங்களுக்கும் நாள் பார்த்துக் செய்தல் என்று சோதிடத்தைச் சார்ந்து வாழ்ந்தான். மேலும் வாழ்க்கையைச் செம்மைப்படுத்த, நெறிப்படுத்தத் தேவையான எதிர்பார்ப்புகளை நிறைவு செய்யக் கோள்களின் இயல்புகளைத் சோதிடம் தொடர்பான காலத்தைக் கண்டறிந்தனர் என்பதை

''மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்

துறந்த ஒழுக்கம் கிழவோற் கில்லை'' (தொல் - பொருள் 44)

என்கிறது தொல்காப்பியம். சோதிடக்காலக்கணிப்பை மாத்திரை, அளவு, நொடி, கணம் எனப் பல்வேறு பெயர்களில் இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன. மேலும் சோதிடர் காலத்தைக் குறிக்க நாழிகை, நேரம், மணி என்ற சொற்களை அதிகமாகப் பயன்படுத்தினர். கண் இமைக்கும் காலமும் கை நொடிக்கும் காலமும் ஒரு மாத்திரை அதைவிடச் சற்றுப் பெரியகால அளவு நாழிகை "அல்லும் பகலும் அறுபது நாழிகையும்" என்பது பழமொழி இன்று, நேரம், மணி என்று குறிப்பிடப்படுவனவற்றை அன்றைய தமிழர் நாழிகையாகக் குறிப்பிட்டுள்ளனர். இன்று 2½ நாழிகை ஒரு மணி என்று கணக்கிடுகின்றனர். அன்று ஒரு நாளினை 60 நாழிகையாக வகுத்துள்ளனர்.

இதனை வெயில், விண்மீன் முதலானவற்றைக் கொண்டு அன்று கணக்கிட்டுள்ளனர். இன்று இக்கணக்கு அறிவியலில் வளர்ச்சி காரணமாகப் புதிய கருவிகள் மூலமாக நேரம் குறித்தறியப் பயன்படுத்துகின்றனர். சங்கக்காலத்தைக் கோள்களின் வழிக் கணக்கிட்டுக் கூறிய சோதிட நூலை "காலக்கணிதம்" என்று சிலம்பும் "காலக்கணிதமுங் கலைகளின் நுணிவும்" என மணிமேகலையும் காட்டுகின்றன. சோதிடம் என்பது கணிதத்தைக் குறித்த நூல்தான் முற்காலத்தில் சோதிட நூல்கள் அனைத்தும் கணித நூல்களாகவே எழுதப்பட்டன. பிறந்த நேரத்தின் போது சாதகக் குறிப்பு எழுதுவதற்கும் ஒவ்வொரு முறையும் பலனறிவதற்கும் கணிதம் அடிப்படையாக அமைவதால் சோதிடம் பார்த்தல் என்பது சோதிடம் கணித்தல் என்ற பொருண்மையைத்தான் தருகின்றது. தொடக்கக்காலத்தில் சோதிடத்தை நூல்களின் வாயிலாக

இயற்கை சோதிடம்
கணிப்புச் சோதிடம்

என இரு வகைப்படுத்தினர். இராசிவட்டம் பற்றிய கோள்கள் சந்திரன், சூரியன் முதலியவற்றின் நகர்ச்சி பற்றிய அடிப்படை விதிகளை உணராமல் மனிதன் அறிந்து வைத்திருந்த செய்திகள் இயற்கைச் சோதிடம் எனப்படுகிறது. இயற்கைச் சோதிடத்திலுள்ள வானநூல் உண்மைகளை வாழ்க்கை முறைகளோடு தொடர்புப்படுத்திப் பார்ப்பது கணிப்புச் சோதிடம் எனப்படும். கணிப்பு சோதிடத்திலிருந்து சாதக சோதிடம் என்று ஒருகிளை தோன்றியது. சோதிட முறைகளுள் இம்முறையே இன்று புகழ்பெற்றுத் திகழ்கிறது.

**சோதிடத்தின் வகைகள்**

- ❖ நல்லநேரம் அறியப் பயன்படும் "பஞ்சாங்கச் சோதிடம்' பிறந்த நேரத்தில் இருந்த கோள்களின் அமைப்புப்படி முகூர்த்த சாத்திரம் என்று அழைக்கப்படுகிறது.
- ❖ நோயாளி பற்றியும் அதற்கான மருத்துவம், மருந்து பற்றியும் அறிய உதவுவது 'மருத்துவ சோதிடம்'
- ❖ சமுதாயத்தையும், நாட்டையும், மனித இனத்தையும் கோள்கள் சேர்க்கும். எவ்வகையில் பாதிக்கும் என்பதை அறியப் பொதுநிலை சோதிடம் பயன்பட்டது.
- ❖ சாதகக் குறிப்பில்லாதவர்களின் பலனை அறிய அவர் கேட்கும் கேள்விக்குரிய நேரத்தைக் கொண்டு கூறிப்பிடுவது 'பிரசன்ன சோதிடம்'
- ❖ வானியல் சோதிடம் வளிமண்டலத்தின் விளைவுகளை முன் கூட்டித் தெரிவிக்கிறது.
- ❖ சந்திரன் ஒரு குறிப்பிட்ட இராசியில் ஒரு குறிப்பிட்ட பிறையில் இருக்கும் போது பயிர்களை நட்டால் பயிர் நன்றாக வளரும் என்பன போன்ற உயிரியல் அடிப்படை சோதிடம் ஒரு வகை
- ❖ கோள்கள் மனிதனுடைய உள்ளத்தை எங்ஙனம் பாதிக்கின்றன என்பது உளவியல் சோதிடம்.

மேலும், எண்கணிதம் சாமுத்திரிக லட்சணத்தின் ஒரு பகுதியான கைரேகை. நாடி சோதிடம் போன்ற பல அங்கங்களுடன் சோதிடம் மனையடிசாத்திரம் முதல் வாழ்வியலின் அடிப்படையாக அமைகிறது. மேலும் இலக்கியங்களிலும் மக்கள் வாழ்விலும் சூரியன், சந்திரன், வெள்ளி, வியாழன், ராகு, கேது, போன்ற கோள்நிலைகள் இடம் பெற்றுள்ளன.

சக்கரம் போன்ற உருவம் படைத்தவன் கதிரவனைப் பகல் செய் மண்டிலம் என்றே அழைத்தனர். பெரும்பாணாற்றுப் படையில் கதிரவனைக் கூறவந்த ஆசிரியர்

**"குண கடல் வரைப்பின் முந்நீர் நாட்பண்**

**பகல் செய் மண்டிலம் பாரித்தாங்கு" (பெரும் 441 – 442)**

என்று கூறுவது சூரியனுடைய உண்மைத் தோற்றத்தை அறிவியல் நோக்கோடு கண்டனர் என்பதைத் தெளிவுப்படுகிறது. மேலும் ஞாயிற்றை முதலாகக் கொண்டே பிறகோள் சுற்றிவந்தன எனத் தமிழர் சங்க காலத்திலேயே அறிந்திருந்தனர் என்பதை நீலகண்ட சாஸ்திரி

**'என்றூழ் உறவரு மிருசுடர் நேமி**

**ஒன்றிய சுடர்நிலை யுள்படு வோரும்" (பரி 19:46-47)**

என்ற பரிபாடலின் அடிகளை ஆதாரமாகக் கொண்டு கூறுவர்.

செவ்வாய் கோள் சிவந்த நிறமுடைய தென்பதையும் பௌர்ணமியன்று கிழக்கில் தோன்றும் என்பதையும்

**"முந்நீர் நாப்பண் திமில்சுடர் போலச்**

**செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்**

**உச்சி நின்று உவவுமதி கண்டு" (புறம் : 60)**

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. வெள்ளி, வியாழன் போன்ற கோள்கள் இடம்பெற்றதை

**"புந்தி மிதுனம் அடைய" (பரி 11:5)**

**"வெள்ளி எழுந்து வியாழன் உறங்குகிற்று.**

**பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி**

**உருவ வான் மதியூர் கொண்டாங்கு" (சிறு 250 – 51)**

**"அரவு நூங்குமதி" (குறுந் 395 :4)**

**"பாம்பு ஊமதி" (நற் 128 :2)**

**"பாம்பு சேர்மதி" (கலி 15:17)**

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது. மேலும் மக்களின் வாழ்வில் இன்பமும், துன்பமும் மாறி மாறி வருவது போன்று பிறைகளிலும் வளர்பிறையும், தேய்பிறையும் மாறி வந்தது. பிறை தோன்றிப் பதினான்காம் நாள் நிறைவு பெறும் வரை வளர்பிறை. இப்பிறை பதினாறு கலைகளோடு கூடிய மதி சேர்ந்து வரும் நிறை மதியை அமரர்

உணவாகக் கொள்ளுதலினால் தேய்கிறது என்பது புராணக் கதை. இதுவே தேய்பிறை காலம் என்பதை

**"அணி நிழல் வயங்க ஒளி ஈர் எண்தீம் கதிர்**

**பிறைவளர் நிறைமதி உண்டி"** **(பரி : 51:53)**

என்கிறது பரிபாடல். மேலும் மதுரைக் காஞ்சியில் வளர்பிறை, தேய்பிறைக்குக் பெருகுதலும், சுருங்குதலும் சுட்டப்படுவதை

**"குடல்முதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்**

**வழி வழிச் சிறக்க நின் வலம்படு கொற்றம்"** **(மதுரை 193-194)**

என்று சுட்டுகிறது. சோதிடத்தின் உயிர்நாடி காலக்கணிப்பாகும். இன்ன ஆண்டில், இன்ன திங்களில் இது நிகழ்ந்தது என்று கூறுதல் சோதிடத்தின் சிறப்பம்சம். "எண் கணிதமும் எழுத்து துறையும் இரு கண்களுக்குச்சமம் எதையும் கூர்ந்து பார்க்கவும் அறிவைக் கூர்மையாக்கவும் உதவும் என்கிறார்' ஔவையார். அதைப் போல் சிலப்பதிகாரத்தில் மதுரை எரிந்துபடும் என்னும் உரை முன்பே உள்ளமையைக் கண்ணகிக்கு எடுத்துக் கூறியதை,

**"ஆடித்திங்கள் பேரிருட் பக்கத்து**

**அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று**

**வெள்ளி வறுத்து ஒள்ளெரியுண்ண"** **(சிலம்பு 23:133-137)**

என்கிறது. இதனை கி.மு. சுப்பிரமணியப் பிள்ளை கணித நூல் வழி கி.மு.100 முதல் கி.பி. 144. இது நடந்திருக்க வேண்டும் எனக் கணிக்கிறார். மேலும் இக்காலக் கணிப்பை

**'விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு"** **(பரி 11:1)**

என்பது பொதிய மலைக்கண் மழை பொழிய வையமலை வெள்ளம் வந்தது என்ற பொருளைத் தரும். இதன் காலம் அறியக் கணக்கிட்ட அறிஞர் கூறியதாவது கி.மு.161 ஆகிய கலி 2941 என்பதாகும். மேலும் சோதிடத்தின்வழி முக்காலத்தையும் அறிய விரும்பினர். இக்காலத்தில் சோதிடம் என்பது மக்களின் வாழ்வில் உணவு, உடை, போன்று இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது.

**புராணம்**

மனித வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பு கொண்டவை புராணக்கதைகள். அவை உண்மையில் நிகழ்ந்த கதைகளா என்பது ஆராயத்தக்கது. ஆயினும் நடந்த நிகழ்வின் மீது புனிதத் தன்மை புகுத்தப்பட்டு தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பட்டு வருதலின் அது தொன்மமாக நிலைத்து நிற்கிறது. பெரும்பாலும் தொன்மக்கதைகள் சமயங்களோடு தொடர்புபடுத்திப் பேசப்படுகின்றன. 'தொன்மம் கடவுள்களையோ கடவுளை ஒத்த மனிதர்களையோ பாத்திரங்களாகக் கொண்ட கதை என்றும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகளைக் கொண்டதாகவும் அமைந்திருக்கும்"[17]

என்கிறார். நார்த்ரப்பிரை, தொன்மம் என்னும் சொல் ஆங்கிலத்தில் உள்ள Myth என்னும் சொல்லிற்கு இணையாகக் கருதப்படுகின்றது. இச்சொல் பழைய மரபுக்கதைகள், புராணக்கதைகள் என்ற பொருள்களை வழங்குகிறது. இதனை

**"தொன்மைதானே சொல்லுங்காலை**

**உரையோடு புணர்ந்த பழமை மேற்றே" (தொல் : 940)**

எனத் தொல்காப்பியர் தொன்மைக்கு விளக்கம் தருகிறார். இதற்கு இளம்பூரணர் தொன்மையானது உரையோடு பொருந்தியப் பழமையான பொருள்மேல் வருவன அவை இராம சரிதம், பாண்டவ சரிதம் போன்றவற்றின் மேல் வருஞ்செய்யுள் என விளக்கம் தருகின்றார். மேலும புராணம் என்பது உள்ளதை உள்ளபடிக் கூறுவதும் உள்ளதைப் புனைந்து கூறுவதும் இல்லாததை இருப்பது போல் கூறுவதும் உண்டு. உயர்ந்த உண்மைகளையும் தத்துவக் கருத்துக்களையும் ஒன்றும்அறியாத பாமர மக்களும் உணர்ந்து கொள்ளும்படி எளிய இனிய கருத்தின் மூலம் உணர்த்துவது புராணம். சங்கப்பாடல்களில் புராணச் செய்திகள் ஆற்றுப்படை நூல்களிலும், பதிற்றுப்பத்து, பரிபாடல் நூல்களிலும் அதிகமாகக் காணப்படுகின்றன.

கந்தபுராணத்தில் முருகப் பெருமான் சூரபதுமனை அழித்தது பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ளது.

**"சூருடை முழு முதல் தடிந்த பேர் இசை**

**கடுஞ்சின விறல் முதல் களிறு ஊர்த்தாங்கு (பதிற் 11:5-6)**

இப்பாடல் தேவர்களுக்கும் மக்களுக்கும் துன்பம் தருகின்ற சூரபதுமனை அழிப்பதற்கு முருகப் பெருமான் வருகின்றான். அப்போது சூரபதுமன் கடலுக்குள் சென்று தான் ஒரு மரமாக அமைந்துவிட முருகன் சூரபதுமனை அடியோடு வெட்டி அழித்த புராணச் செய்தியைச் சுட்டுகிறது. மேலும் சிவபெருமான் திருநீலகண்டராக விளங்கிய புராணச் செய்தி கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது.

**"காணான் திருதரும் கொல்லோ மணிமிடற்று**

**மாண்மலர்க் கொன்றை யவன்" (கலித் 142:27-28)**

என்று இப்பாடல் தேவர்களும் அசுரர்களும் இணைந்து அமுதம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தனர். அப்போது பாற்கடலிலிருந்து நஞ்சு வர அப்போது அனைவரும் சிவபெருமானை வேண்ட சிவபெருமான் அந்நஞ்சினை உண்டு திருநீலகண்டராகக்காட்சியளித்தார்.

இரணியாக்கண் என்பவன் பூமியைச் சுருட்டியப் பாதாளத்தில் மறைத்தான் தேவர்கள் அவன் செயல்கண்டு அஞ்சினர். அவர்கள் பிரம்மனிடம் முறையிட பிரம்மனோ திருமாலை நாடினார். திருமால் கேழல் உருவங்கொண்டு இரணியாக்கணைக் கொன்று பாதாளத்தில் இருந்த பூமியைத் தன் கொம்பில் தாங்கி வந்து மீண்டும் முன்போல் விரித்தான் என்றப் புராணச் செய்தியை,

**"ஊழி ஆழிக்கண் இருநிலம் உருகெழு**

**கேழலாய் மருப்பின் உழுதோய்" (பரி 3:24-25)**

எனச் சுட்டிக்காட்டியுள்ளது பரிபாடல்.

கத்துரு மகன் ஆதிசேடன் நாகர்த் தலைவனாய் இருந்தவன். ஒருமுறை சிவனது தலையில் நாம் இருக்கிறோம் என்று செருக்குக் கொண்டான். தேவரும் பிறரும் தன்னையே வணங்குகின்றனர் என்று ஆணவம் கொண்டான். இதனை உணர்ந்த சிவன் தலையிலிருந்து ஆதிசேடனை இழுத்து எறிந்தார். இதனால் அவன் தலை ஆயிரமாகச் சிதைவுண்டது. பின் தன் தவறை உணர்ந்து தவம் செய்யத் தலைகள் ஆயிரமாகப் பெற்றான் இந்தப் புராணக்கதையை அடிப்படையாகக் கொண்டு இளவெயினனார்,

**''ஆயிர அணர்தலை அரவுவாய்''** **(பரி3:59)**

என்று பாடுகிறார். மேலும் திருமால் விண், மண், பாதாளம் என்ற மூவுலகை அளந்த புராணச் செய்தி பெரும்பாணாற்றுப்படையில் சுட்டப்படுகிறது.

**''இருநிலம் கடந்த திருமறு மார்பன்**
**முந்நீர் வண்ணன்''** **(பெரும் 29-30)**

இப்பாடல் மாவலி என்னும் மன்னனை அடக்குவதாகப் திருமால் வாமனாகி அவன்பால் சென்று மூன்றடி நிலம்கேட்க அவன் அதை அவர் கையில் நீர்வார்த்துக் கொடுக்கத் திருமால் நெடுமாலாக உயர்ந்து நிலவுலகை ஓரடியாலும் விண்ணுலகை மற்றோர் அடியாலும் அளந்து மூன்றாவது அடியினை மாவலியின் தலையில் வைத்ததைக் குறிப்பிடுகிறது. சமயம் சடங்கு மெய்யியல் பழக்கவழக்கம் இவற்றோடு தொடர்புடையவை புராணங்கள்''[18] என்கிறார் தமிழண்ணல், சங்கப்பாடல்களில் சில இடங்களில் புராணச் செய்திகள் சுட்டப்படுகின்றன. குறிப்பாகக் கலித்தொகையிலும் பரிபாடலிலும் தனியே சுட்டும் அளவிற்குப் புராணச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவையே பிற்காலத்தில் புராணங்கள் தோன்றுதற்குக்காரணமாக அமைந்துள்ளன.

**மன்னன் வரிவசூலிக்கும் முறை**

மன் என்பதற்கு நிலைபெறுதல் என்பது பொருள் அதுபோல் மன்னவன் என்பவன் மக்களிடம் நிலைத்த பேறுடைய நல்லாட்சிபுரிந்து நிலையான புகழுடையவனாக விளங்குதல் வேண்டும். மன்னன் குடிமக்களுக்குக் குறைவுண்டாகாமல் பாதுகாக்க வேண்டும். மன்னவனுக்கு இருவகை கடமைகள் உண்டு நாட்டின் வளத்தைப் பெருக்கி மக்களை வாழவைப்பது மற்றொன்று பிற மன்னர்களிடமிருந்து நாட்டுமக்களைக் பாதுகாப்பது. இவை இரண்டும் மன்னனின் கடமை "மண்ணிற்கு உரிமை பூண்டவன் நிலத்தின் ஆதிக்கக் குடிகள் என்ற முறையில் இவர் தம்மை மன்னர் என்றும் வேள் என்றும் குறித்திருக்கின்றனர்"[19] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன் தன் உயிர் போல் மன்னுயிரைக் கருதி ஆட்சிசெய்த மன்னனை மக்கள் மிகவும் விரும்பிப் போற்றினர். மன்னனும் மக்கட்பணியே மகேசன் பணி என்று பணியாற்ற வேண்டும் என்பதை,

**''முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**

**இறையென்று வைக்கப் படும்''** **(குறள்:388)**

என்கிறார் திருவள்ளுவர். தலைவனின் கடமை தன் கீழுள்ள மக்களைக் காப்பாற்றுதலாகும். அவ்வாறு காப்பாற்ற வேண்டின் அவற்றிற்குப் பொருள் தேவை. அதற்குத்தான் மன்னன் மக்களிடமிருந்து வரியைப் பெறுகின்றான். இவ்வாறு அரசன் பெறும் வரி மக்களின் வளத்துக்கேற்பவும் கொடுக்கும் ஆற்றலுக்கேற்பவமு் அமைய வேண்டும் என்பதை,

**''வளங்கெடப் பொன்றுங் கொள்ளர் மன்னர்''** **(அகம் 70:11)**

எனும் தொடர் உணர்த்துகின்றது. நாட்டில் வாழும் உயிர்களைடியல்லாம் தன்னுயிரைப் போல எண்ணிப் பாதுகாப்பவனே மக்களால் மதிக்கப்படும் மன்னவன் என்பதை

**''தன் உயிர் போலத் தழிஇ உலகத்து**
**மன் உயிர் காக்கும் மன்னவன்''** **(கலி 143:53-54)**

என்கிறது கலித்தொகை. மன்னனின் ஆட்சி செங்கோல் நிறைந்ததாக இருக்க வேண்டும். குடிமக்களிடம் அளவுக்கு மீறி வரிவாங்கித் துன்புறுத்தினால் அவன் நாடு கெடும் அவன் அரசும் அழியும் என்பதை

**''மழை வளம் சுரப்பின் வான் பேரச்சம்**
**பிழையுயிர் எய்தின் பெரும் பேரச்சம்**
**குடிபு ரவுண்டும் கொடுங்கோல் அஞ்சி**
**மன்பதை காக்கும் நன்குடில் பிறத்தல்**
**தொழுதகவு இல்''** **(சிலம்பு 25:100-104)**

என்கிறது சிலம்பு. அரசிற்குக் குடிகள் செலுத்தும்வரி அரசின் வருமாத்திற்குரிய வழிகளில் முக்கியமானது வரிவசூலிப்பது.

வரிக்கொள்கை மக்கள் நலம்நாடுவதாக இருத்தல் வேண்டும். பொருள் கொள்வதை மட்டும் நோக்கமாகக் கொள்ளாது மக்கள்பால் அருளுடன் பொருள் பெறும் அருளாளர்களாக இருத்தல் வேண்டும்.அரசாட்சி நலமுடன் நடைபெறப்பொருள் மிகவும் இன்றியமையாதது. ஆனால் அருளொடும் அன்பொடும் வாராப்பொருளாக்கம் நாட்டிற்கு நன்மை தராது குடிமக்கள் திரைப்பொருட்களை மனம் உவந்து கொடுக்கும் வண்ணம் புதிய வருவாய் வழிகளை அரசன் பெருக்கிக் கொடுத்தல் வேண்டும். அப்போது தான் மன்னனுக்குப் புதுப்புது வரிகளைப் பெறுவதற்கு வாய்ப்பு கிடைக்கும் என்பதை,

**''அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே**
**கோடி யாத்து நாடு பெரிது நந்தும்''** **(புறம் 184:5-6)**
**''நல்லற நெறி நெறிஇ உலகாண்ட அரசன்''** **(கலி 129:4)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

மன்னன் நெறியறிந்து வரிவாங்குதல் வேண்டும். வருவாயைப் பெருக்கும் எண்ணத்தில் மக்கள் வரிகொடுக்கும் ஆற்றலை அறியாது துன்புறுத்தியவர்களும்

உண்டு. அதனால்தான் பாண்டியன் அறிவுடை நம்பியை நோக்கிப் பிசிராந்தையார் ஒருமா நிலத்தில் விளைந்த நெல்லை உணவாக்கிக் கவளமாகக் கொடுத்தால் யானைக்குப் பல நாட்களுக்கு உணவாகும். நூறு வயலாக இருந்தாலும் தனித்து உண்ணுமாயின் வாயிற்புகுந்த நெல்லைவிடக் காலில் கெட்டது மிகுதியாகும். அறிவுடையரசன் நெறியறிந்து வரி வாங்குவனாயின் நாடு செழிக்கும். வரிசை அறியாது துன்புறுத்தினால் யானை புகுந்த நிலத்தைப் போல தானும் உண்ணாது உலகமும் கெடும் என்பதைச் சுட்டியுள்ளார்.

**"வாய்படும் கேடும் இன்றாம் வரிசையின் அறிந்து நாளும்**
**காய்த்த நெற்கவளம் தீற்றின் களிறுதான் கழனி மேயின்**
**வாய்ப்படல் இன்றிப் பொன்றும் வல்லானாய் மன்னன் கொள்ளின்**
**நீத்தநீர் ஞாலமெல்ல நிதிநின்று சுரக்குமென்றே" (சீவகசிந் - 2907)**
**"காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே**
**மா நிறைவு இல்லதும், பல் நாட்டு ஆகும்**
**நூறு செறு ஆயினும் தமித்துப், புக்கு உணினே**
**வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்**
**யானை புக்க நிலம் போல**
**தானும் உண்ணாள் உலகமும் கெடுமே" (புறம் : 181)**

என்று மன்னன் அறநெறி தவறி வரியைப் பெறக்கூடாது என்று இப்பாடலடிகள் சுட்டுகின்றன. அரசர் மக்களிடமிருந்து பெரும் வரியைக் கொண்டு நடுவு நிலைமையுடன் செயல்படுவர்.

**"படுவதுண்டு பகலாற்றி**
**இனிதுருண்ட சுடர்நேமி**
**முழு தாண்டோர் வழி காவல்" (புறம் 95:7-9)**

என்று புறநானூறு சுட்டுகிறது.

**"மாவின் வயின் வயின் நெல் (பொரு:180)**
**குடியோம்பிக் கொள்ளுமா கொள்வோர்க்குக்**
**காண்டும் மாநிதியம் வெள்ளத்தின் மேலும்பல" (நீதிநெறி :29)**

மன்னன் நெறியறிந்து வரிவாங்க நல்ல சுற்றம் உடையவனாக இருக்க வேண்டும் என்பதை,

**கல்லென சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும் (பெரும்:21)**
**கல்லென சுற்றக் கடுங்குரல் அவித்து (குறிஞ் :151)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

**குடவோலை முறை**

பழந்தமிழகத்தில் மன்னராட்சி முறை நிலவியிது அக்கால அரசர்களில் தலைசிறந்தவராகிய சேர, சோழ, பாண்டியர்கள் மூவரும் மன்னர்களாகவும் மற்றச்சிறு

ஊர்களில் வாழ்வோர் சிற்றரசர்கள் எனவும் குறிப்பிடப்பட்டனர். அவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு ஆட்சி மன்றங்கள் இருந்தன அம்மன்ற உறுப்பினர்கள் ஊர்மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்களைத் தேர்ந்தெடுப்பதற்குக் குடவோலை முறை பயன்பட்டது என்பதை,

**"கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்**

**பொறி கண்டு அழிக்கும் ஆவண மாக்கள்" (அகம் 77:7-8)**

இப்பாடலில் ஊரின் ஒவ்வொரு பகுதியினரும் தங்கள் பகுதிக்குரிய ஒருவரைத் தேர்ந்தெடுப்பதற்கு வாக்காளர்கள் ஓலைகளைக் குடத்தினுள் இடுவர். பின்னர் அக்குடத்தின்மேல் அரசாங்க முத்திரை வைக்கப்படும். பின்னர் அவை ஓரிடத்தில் கொண்டு சேர்க்கப்பட்டு தேவர்களால் குடத்தின் சீல் ஆராயப்படும். பின்னர் அவ்வோலை குடத்திலிருந்து வெளியே எடுக்கப்பட்டு எண்ணி வெற்றி தோல்விகளை அறிவித்தைக் குறிப்பிடுகிறது. இன்றைய சூழ்நிலையில் நடைபெறும் தேர்தல் முறை வாக்காளர்கள் பற்றிய விவரம் தொகுதி தேர்ந்தெடுக்கப்படும் முறை போன்றவை சங்ககால மக்களிடம் இருந்து தோன்றியவை என்பது புலப்படுகிறது.

**வாணிபம்**

ஒரு பொருளை உற்பத்தி செய்து தேவையானவற்றை வைத்துக்கொண்டு உபரியாக உள்ள பொருள்களை விற்பனை செய்வது வாணிபம் இதனை வியாபாரம் என்றும் அழைப்பர்

**"வாணிகம் செய்வோர்க்கு வாணிகம் பேணிப்**

**பிறவும் தமீபோற் செயின்" (குறள்:120)**

என்று வள்ளுவர் கூறியுள்ளார். பண்டைக்காலம் முதல் தமிழ்நாடு வாணிபத்தில் சிறந்து விளங்கியது. தம்மிடம் உள்ள பொருளை அல்லது நாணயத்தைக் கொடுத்து தம்மிடம் இல்லாத பொருளைப் பெறுவது வாணிபம் எனப்படும். ஒவ்வொரு நிலத்திற்கேற்பத் தொழில்கள் வேறுபடும், தொழில் வேறுபாடுகளுக்கு ஏற்ப வாணிபமும் வேறுபடும். தம் நிலத்தில் கிடைத்த பொருளை வேற்று நிலத்திற்குக் கொண்டு சென்று விற்று மற்றொரு பொருளைப் பெற்றுள்ளனர். எனவே வாணிபத்தின் பொருட்டு ஒரு நிலத்து மக்கள் இன்னொரு நிலத்திற்குப் பயணம் மேற்கொண்டுள்ளனர்.

வாணிபம் என்பது ஒரு முக்கிய தொழில். தொழில்கள் பெரும்பாலும் வாணிப நோக்கத்தோடுதான் நடைபெறுகின்றன. சங்க காலம் முதல் இன்றுவரை வாணிபம் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்று வருகின்றது அவற்றை,

**"வாணிபம் வியாபாரம் வணிகஞ் செட்டுக் கச்சவடம்**
**பேணரைத்தல் பிட்டுவம்பி ழைத்தலுய்தல் காண்வழுக்க**
**லாளி சும்பா மண்ண லலம்பல் கழுவல்பிரச்**
**சாளம் நௌ றுக்கல் தகர்த்தல்"**

என்கிறது இப்பாடலில் வாணிபத்தின் வேறுபெயர்களாக வாணிபம், வியாபாரம், வணிகம், செட்டு, கச்சவடம் என்று நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளன. செட்டு என்ற சொல்லில் இருந்துதான் செட்டி என்றசொல் வந்திருக்க வேண்டும் செட்டி என்றால் வணிகம் செய்பவன் என்று பொருள். வாணிபம் என்பது ஒரு நாட்டின் பொருளாதாரப் பண்பாட்டு நிலைகளை வெளிப்படுத்தும் கருவியாகும் என்பதை,

**"வணிகச் செயல் வியாபாரம் வாணிச்சியம்**

**வாணிகம் என்று வகுத்தனர் புலவர்"**

என்கிறது. ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு உழவு, வாணிகம் ஆகிய இருதொழில்கள் இன்றியமையாதவை என்பது பழந்தமிழர் கண்ட உண்மையாகும். சங்ககாலத்தில் வாழ்ந்த மாங்குடி மருதனார். மதுரைக் காஞ்சியில்

**"வியன் மேவன் வழுச் செல்வத்து**

**இரு வகையான் இசை சான்ற**

**சிறு குடிப்பெருந் தொழுவர்**

**குடி கெழிகுய நானில வரோடு"** **(மதுரை 120 - 123)**

என்று குறிப்பிடுகிறார். உலகத் தொழில்களுக்கெல்லாம் சிறந்த தொழில் இரண்டு என்பர். அவை உழவும் வாணிகமும் ஆகும். இதனால் சங்ககால மக்களிடையே உழவும் வணிகமும் தலைசிறந்த தொழில்களாகக் கருதப்பட்டு வந்தமை புலனாகும். பல்வகைத் தொழில்களுள் ஒன்றாக அமையும். வாணிபம், வணிகம் வாணிகம் என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்களாகின்றன. வாணிபம் என்பது "இலாபநோக்கில் பொருட்களை வாங்கி விற்கும் தொழில்" எனக் க்ரியாவின் தற்காலத் தமிழகராதி இதற்கு விளக்கம் அளிக்கிறது. ஒரு நாட்டின் பொருளியல் நிலையை மதிப்பிட உதவும் ஒரு சிறந்த அளவுகோலாக வாணிபத்தைக் கருதலாம் அதே போன்று வணிகரும் வணிகத்தில் நடுவுநிலைமை தவறாதவர்கள். அறநெறியில் வாழ்பவர்கள், நன்னெறியில் நடப்பவர்கள், வாங்குவதை அதிகமாக வாங்கிக் கொண்டு கொடுப்பதைக் குறைவாகக் கொடுக்கமாட்டார்கள். பிறர் பொருளைப் பறிக்க வேண்டும் என்ற பேராசை இல்லாதவர்கள். பழிக்கு அஞ்சி உண்மையையே பேசுபவர்கள். அவர்கள் விற்பனை செய்யும் பண்டங்களின் விலையையும் இலாபத்தையும் வெளிப்படையாகக் கூறி வியாபாரம் செய்வார்கள் என்று பட்டினப்பாலைப் புலப்படுத்துகின்றது.

**"நெடுநுகத்துப் பகல்போல**

**நடுவு நின்ற நன்னெஞ்சினோர்**

**வடுவஞ்சி வாய்மொழிந்து**

**தமவும் பிறவு மொப்பநாடிக்**

**கொள்வதூஉ மிகை கொளாது**

**கொடுப்பதுஉங் குறை கொடாது**

**பல்பண்டம் பர்ந்து வீசும்"** **(பட்டினப் 206-211)**

என்று வணிகர்களின் நேர்மையையும் நடுவுநிலையையும் எடுத்துக் காட்டுகின்றது.

வணிகர்கள் அறநெறி பிறழாது ஊதியம் ஈட்டுவதை நோக்கமாகக் கொள்ளாது, வணிகம் செய்வதன் மூலம் அறத்தையே ஊதியமாக ஈட்டும் அறநெஞ்சினை உடையவர்களாகத் திகழ்ந்தனர். இவர்களின் நேர்மை தவறாத பண்பினால் வடமலையில் பிறந்த மணியும், பொன்னும் குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும், குணகடல் துகிரும் வாரியும், காவிரிப் பயனும், ஈழத்துணவும் காழகத்து ஆக்கமும் போன்ற பன்னாட்டுப்பண்டங்கள். அவர்களுடைய பரந்த உயர்ந்த சிறந்த இல்லத்தில் சிறுசிறு குன்றுகளைப் போல் குவிந்து கிடக்கும். அவற்றுக்கு ஈடாகப் பல நாடுகளிலிருந்தும் கொண்டுவந்து குவித்திருக்கின்ற சிறந்த பல பண்டங்களைக் கொடுப்பார்கள். இத்தகைய சிறந்த வணிகர்கள் பலர் மதுரை நகரில் வாழ்ந்தனர் என்பதை இப்பாடல் விளக்குகின்றது.

**துறைமுகம்**

நாகரிக வளர்ச்சியில் விவசாயத்தோடு வாணிபமும் ஒரு முக்கிய பங்கு வகித்ததை இலக்கியச் சான்றுகள் எடுத்தியம்புகின்றன. வாணிபத்தின் வளர்ச்சியில் துறைமுகப்பட்டினங்களின் உருவாக்கமும் ஒரு மையில்கல்லாக அமைந்துள்ளது. இவை பெரும்பாலும் ஆறுகள் கடலுடன் சேர்கின்ற கழிமுகங்களில்தான் காணப்பட்டன. வாணிகச் செழிப்புள்ள வணிகரும் பல்வேறு வினைஞர் கூட்டத்தினரும், சிறப்புடன் அமைக்கப்பட்டிருந்த வீடுகளிலும் பெரும் மனைகளிலும் வாழ்ந்ததை இவை குறிக்கின்றன. இத்துறைமுகங்களில் கப்பல்கள் நேராக வந்து தங்குவதற்கான வசதிகள் இருந்தன. இக்கப்பல்களில் தனித்தனிக் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. பண்டங்களைச் சேகரித்து வைப்பதற்குப் பண்டகசாலைகளும் இருந்தன. தமிழகத்தில் கிழக்குத் துறைமுகப்பட்டினங்களான எயில்பட்டினம், அரிக்கமேடு, காவிரிப்பூம்பட்டினம், மருங்கூர், கொற்கை, குமரி ஆகியனவும் மேற்குத் துறைமுகப்பட்டினங்களான நறவு, தொண்டி, முசிறி ஆகியனவும் சிறப்பான துறைமுக நகரங்களாகும். இத்துறைமுக நகரங்களின் எழுச்சி வரலாற்றுக்காலத்தில் ஒரு சிறப்பம்சமாகக் கருதப்பட்டது.

பண்டைக்காலத்தில் துறைமுகங்களில் இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகள், பரதவர் நிறைந்த தெருக்கள், மாடி வீடுகள் ஆகியன காணப்பட்டன என்று பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது.

**"வாலுளைப் பரவியொடு வடவளம் தருஉம்**
**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**
**...........................பல்வேறு தெருவில்"** **(பெரும் 320-323)**

இங்கே காணப்பட்ட மற்றொரு துறைமுகம் எயிற்பட்டினமாகும். இவைபற்றிச் சிறுபாணாற்றுப்படை விளக்குகிறது.

**"கானல்வெண் மணல் கடல் உலாய் நிமிர்தர**
**பாடல்சான்ற நெய்தல் நெடுவழி**
**மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய**
**பனிநீர்ப் படுவின் பட்டினம் படரின்"** **(சிறுபா 150-153)**

என எயிற்பட்டினத்தில் இறக்குமதி செய்யப்பட்ட அகல்மரங்கள் குவியல்களாகக் காட்சியளித்ததை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

**"வீங்குதிரை கொணர்ந்த விரை மரம்"** **(சிறுபா : 155)**

என்கிறது. காவிரிப்பூம்பட்டினம் 'செங்கடற் செலவு' என்னும் நூலில் கமரா என்று அழைக்கப்பட்டுள்ளது. கிரேக்க ஆசிரியர்களது குறிப்புகளை நோக்கும்போது அக்காலத்திலுள்ள துறைமுகப் பட்டினங்களிலே காவிரிப்பூம்பட்டினம்தான் துறைமுகப் பட்டினத்திற்குரிய எல்லா வசதிகளும் கொண்ட தலைசிறந்த பட்டினமாக விளங்கியது எனலாம்.

காவிரிப்பூம்பட்டினமானது மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இரு பகுதிகளுக்குமிடையே நாளங்காடி அமைந்திருந்தது. மருவூர்ப்பாக்கத்தில் பற்பல தொழில் செய்வோர் தனித்தனித் தெருக்களில் வாழ்ந்தனர். பட்டினப்பாக்கத்தில் அரசருடைய மாளிகை, அவரது சுற்றம், பெருங்குடி, வணிகர், உழவர் முதலியோர் வாழ்ந்தனர். இவர்களோடு இங்கு கணிகையர், கூத்தியர், மருத்துவர், சோதிடர் ஆகியோரது இருப்பிடங்களும் இருந்தன. அத்துடன் வேற்று நாட்டவரும் சிறப்புடன் இங்கு வாழ்ந்ததைப்,

**"புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**
**முட்டாச் சிறப்பின் பட்டினம்"** **(பட்டினப் 216-218)**

என்று பட்டினப்பாலை உணர்த்துகிறது. பாண்டிய நாட்டுத் துறைமுகங்களில் மருங்கூர், தொண்டி, கொற்கை என்பவை குறிப்பிடத்தக்கவையாகும். தொண்டி துறைமுகத்திற்குத் தென்கிழக்காசிய நாடுகளிலிருந்து அகில், சந்தனம், பட்டுத்துணி, சாதிக்காய், இலவங்கம், குங்குமம், கற்பூரம் போன்ற பொருள்கள் வந்து குவிந்தன. முத்துக்குப் பெயர் பெற்ற துறைமுகமாகக் கொற்கை விளங்கியது. இதனை

**"முத்துப் படுபரப்பிற் கொற்கை முன்துறை"** **(நற் 23:5)**

என நற்றிணையும்

**"கொற்கையும் பெருந்துறை முத்து"** **(அகம் 27:9)**

என அகநானூறும் குறிப்பிடுகின்றன.

சங்ககாலத்தில் பல நாட்டு வணிகர்களும் காவிரிப்பூம்பட்டினத்தில் வந்து தங்கியிருந்தனர். வேற்றுமை உணர்வின்றி அனைவரும் மக்கள் கூட்டம் உடையதாய்க் காவிரிப்பூம்பட்டினம் காட்சியளித்தது. பின் அக்காலத்தில் பட்டினம் என்றாலே அது காவிரிபூம்பட்டினந்தான் என்று அறியும் அளவிற்குப் புகழ் பெற்றிருந்தது. சங்ககாலம் வெளிநாட்டு வாணிகத்தில் செழிப்புற்று விளங்கியது. கப்பலோட்டும் மாலுமிகள் ஆழ்கடலிலும் அச்சமின்றிச் சென்றனர். அவ்வாறு செல்வோர்க்குப் 'பெருநீரோச்சுநர்' என்று பட்டம் அளித்துப் பாராட்டியுள்ளனர். கடற்கரைகளில் கப்பல்கள் இரவில் கரைவந்து சேர்வதற்கு உதவியாகக் கலங்கரை விளக்கங்கள் இருந்தன. 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது பழமொழி.

துறைமுகங்கள்தோறும் கப்பல்கள் ஏற்றிவந்த பண்டங்களை இறக்குதலும் வெளிநாடுகளுக்குக் பண்டங்களைக் கப்பல்களில் ஏற்றுதலும் ஓய்வு ஒழிவின்றி

நிகழ்ந்து கொண்டிருந்தது. எற்றுமதி இறக்குமதிப் பொருள்களுக்கு வரிகள் விதிக்கப்பட்டன. ஏற்றுமதி செய்யும் பொருள்களின் மீது சோழ அரசின் அடையாளமான புலி முத்திரையைப் பொறித்தனர். அங்குபணி செய்கின்றவர்கள் நாட்டுப் பற்றும், அரசர் பற்றும் உடையவராய் இருந்தனர். அங்கு கட்டற்ற வாணிபம் நடந்தது. அதாவது கடலிலிருந்து நீராவியாகச் சென்று நீர்மலையில் பெய்வதும் மழையில் பெய்த நீர் மீண்டும் கடலுக்குள் வருவதும் இயற்கையாக மாறி மாறி நிகழ்வது போன்று பொருள்கள் இந்நாட்டிலிருந்து வெளிநாட்டுக்குச் செல்வதும் வெளிநாட்டிலிருந்து இந்நாட்டுக்கு வருவதும் எனத் தங்கு தடையின்றித் துறைமுகம் இயங்கிக் கொண்டிருந்தது. இவ்வாறு காவிரிப்பூம் பட்டினம் சிறப்புடன் விளங்கியது.

**"நல்லிறை வன்பொருள் காக்கும்**
**தொல்லிசைத் தொழில் மக்கள்**
**காய் சினத்த கதிர்ச் செல்வன்**
**தேர்பூண்ட மாசுபோல**
**வைக றொறும் அசைவின்றி**
**..................................................**
**மதி நிறைந்த மலிமண்டபம்**
**பொதி முடைப்போர்"** **(பட்டினப் : 122-137)**

என்கிறது பட்டினப்பாலை.

**சுங்கவரி**

வரி என்னும் சொல் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. 'இறை' என்னும் சொல் வரியைக் குறிக்கிறது. சுங்கம் என்பது வணிகத்தின் பொருட்டு வெளிநாடுகளிலிருந்தும் உள்நாடுகளிலிருந்தும் வரும் பண்டங்களுக்கு வாங்கப்படும் வரிதான் சுங்கம் ஆகும். சங்க இலக்கியத்தில் 'உல்கு' என்று கூறவதே பின்னாளில் 'சுங்கம்' என்று சுட்டப்பட்டுள்ளது. 'உல்கடைப் பெருவழி' என்ற தொடரைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. தலையில் சுமந்துவரும் பொருட்கள் மீது வணிகத் தலங்களில் வாங்கப்பட்ட வணிகவரி 'சுமை ஆகும். நாரிகை என்பதற்கு 'கூட்டம்' என்று பொருள். வணிகச்சாத்து என்பதும் வணிகக் கூட்டத்தையே குறிக்கும். ஆதலால் வணிகச் சாத்தினர் செலுத்திய வரியே நாரிகையாகும். வணிகச் சாத்துக்கள் சென்ற வழிகளிலே சுங்கச் சாவடிகள் இருந்தன. சுங்கச் சாவடியில் வேலை செய்வோருக்கு நாள் முழுமையும் ஓய்வே கிடையாது என்பதை,

**"வாலிணர் மடல்தாழை**
**வேல்ஆழி வியன் தெருவில்**
**நல்இறைவன் பொருள் காக்கும்**
**தொல்லிசைத் தொழில்மாக்கள்**
**காய்சினத்த கதிர்செல்வன்**

.....................................................

**வலியுடை வல் அணங்கினோன்**
**புலி பொறித்துப் புறம் போக்கி**
**மதிநிறைந்த மலி பண்டம்**
**பொதி முடைப்போரேறி''** **(பட்டினப் 118-137)**

என்று பட்டிப்பாலை கூறுகின்றது. இக்காலத்தில் இருப்பதைப் போன்றே சங்ககாலத்தில் இறக்குமதி, ஏற்றுமதிப் பொருளுக்கு அரசாங்கம் வரி விதித்தது. அவை அரசாங்கத்தின் முக்கிய வருவாய்களுள் ஒன்றாகும். நிலத்திலிருந்து வந்த பண்டங்களும் நீர் வழியாக வந்த பண்டங்களும் முதலில் சுங்கச் சாவடியில் பரிசோதிக்கப்படும். பின் பரிசோதிக்கப்பட்டதற்கு அடையாளமாகப் புலி முத்திரையிடுவர். பண்டத்தின் நிறைக்கும் அளவுக்கும் ஏற்ப வரிவாங்கப்பட்டன. நல்ல பாதுகாப்பையும் சிறந்த காவலையும் உடைய சுங்கச் சாவடியில் புலி முத்திரை பொறித்து பொருட்களை வெளியே அனுப்பினர். பண்டங்கள் பாழடையாமலும் திருட்டுப் போகாமலும் இருப்பதற்குச் சுங்கச்சாவடிகள் பயன்படுத்தப்பட்டன. புலிபொறித்து இருந்தது பற்றி

**''புலிப் பொறித்து, புறம் போக்கி''** **(பட்டினப் : 135)**

என்கிறது பட்டினப்பாலை.

பண்டைக்காலத்தில் கடற்கரைத் துறைமுகங்களும் நாட்டு எல்லைகளும் சுங்கம் வசூலிக்கக்கூடிய இடங்களாக இருந்தன. சுங்கம் வாங்குவோர் நாள்தோறும் சோம்பல் இல்லாமல் சுங்கத்தைப் பெறுவர். இவர்கள் அரசனது பொருளைப் பிறர் கொள்ளாமல் பாதுகாப்பர் சுங்கம் வாங்கும் இடத்தில் வில் வீரர்கள் காவல் காத்தனர். அக்காலத்தில் சுங்கவரியின் மூலமே அதிக வருவாய் கிடைத்துள்ளது. நாட்டை ஆள்வதற்கும், போர் செய்வதற்கும் குடிகட்கு நன்மை செய்வதற்கும், மன்னனுக்கும் பொருள் வேண்டும். அப்பொருள் இடைவிடாது வேண்டியிருத்தலின் அது வரும் வழிகளும் நிலையானவையாயிருத்தல் வேண்டும். அவை வரி, புதையல், பிறங்கதை (வாரிசு) இல்லாச்சொத்து, கையுறை நன்கொடை திறை போன்றவற்றின் மூலம் நிலையான வருவாயைப்பெற முடியும்.

சங்ககாலத்தில் 'மன்று' என்பதற்கு ஆநிரை கட்டும் இடம் என்று பொருள். அதனை 'மன்று நிறையு நிரையெங்கோ' என்று புறநானூறு கூறுகிறது. எனவே உள்ளூர் மக்கள் ஆநிரைகளைக் சரிவரக் கவனிக்காததால் அது மற்றவரின் விவசாய நிலத்தைப் பாழ்படுத்திய குற்றங்களுக்காக விதிக்கப்படும் வரிதான் 'மன்றுபாடு' வரியாகும். இவ்வரியைக் கோவிலுக்கே செலுத்தியுள்ளனர். மன்னனைக் காணவரும்பொழுது சிற்றரசர்கள் ஆண்டுதோறும் வரியைக் காசாகவோ பணமாகவோ கொடுத்தனர்.

**''திறை சுமந்து நிற்கும் தெவ்வர் போல''** **(சிலம்பு 25:36)**

என்ற இப்பாடல் வரியை உறுதிப்படுத்துகின்றது. கடற்போரில் வென்ற அரசன் தோற்றவனிடமிருந்து பெற்ற பொருள் 'கொண்டி' எனப்படுகிறது. "கொண்டி வேண்டு வனாயினி" (புறம் 51:6) என்னும் தொடர் வருவாய் பற்றிக் கூறுகிறது. வரியானது அவ்வவற்றின் தொழிலுக்கேற்ற ஆயம், இறை, கடன், கடமை, இறை, காணிக்கை, தீர்வை, பகுதி, பாட்டம், பூட்சி, பேறும், மகமை, மகன்மை, திறை, சுங்கம், உல்கு, புரவு எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகிறது. இவற்றுக்கெல்லாம் வரி என்பது பொதுப்பெயராகும்.

விளைநிலங்கட்கு மக்கள் தரவேண்டிய நிலவரி செய்கடன் எனவும் வழங்கப்பெற்றது. இவ்வரியை மக்கள் செலுத்தமுடியாமல் போவதும் உண்டு. அப்போது அரசன் மக்களிடம் வற்புறுத்தி வரியைப் பெற முயல்வான். இவ்வாறு நேர்ந்த போது வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் அறிவுரைகூறிச் செலுத்த வேண்டிய வரியிலிருந்து விடுபெற்றதாக அவர் பாடிய பாடல் சுட்டுகிறது. வரி என்பது கட்டாய வசூல் ஆகும். அவை வெறும் அரசுப்பணிகள் என்று மட்டும் கருத இயலாது. அரசன் தான் பெற்ற பொது ஆதிக்கத்தையும் அதிகாரத்தையும் நிறுவும் நடவடிக்கைகளாகும்.

**கொடிகள்**

இன்று விளம்பரங்கள் வெளியிடுவதற்கு அடிப்படையாக இருந்தவை. பண்டைக்காலத்தில் ஏற்றப்பட்ட கொடிகளேயாகும். அக்காலத்தில் வாணிபத்தின் பொருட்டுக் கடைகளிலும் கடை வீதிகளிலும் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. அக்கொடிகள்தான் கடைகளில் என்னென்ன பொருள்கள் விற்கப்படுகின்றன என்று அடையாளப்படுத்தின. பழங்காலத்தில் பலவகையான கொடிகள் கட்டப்பட்டிருந்தன. பண்டைக்காலத்தில் அனைத்திற்கும் கொடிகட்டுதல் மரபாகும். விற்பனை செய்யும் பொருள்களை அறிவிப்பதற்குக் கொடிகளைக் கட்டி வைத்தனர். புகார் நகரில் கோயில்களின் வழிபாட்டை அறிவிக்கும் முகமாக உயர்ந்த கொடிக்கம்பங்கள் கட்டப்பட்டிருந்தன என்பதை,

**கொடி நிழற்பட பொன்னுடை நியமித்து"** **(பதிற்று 15:19)**
**மலர் அணி வாயில் மலர் தொழு கொடியும்** **(பாட்டினப் 160)**
**ஆடு கொடி உச்சி அணி கூம்பின்** **(சீவக : 501)**
**பைங்கொடி நுடங்கும் பலர் புகுவாயின்** **(பெரும்:337)**

இப்பாடலடிகளால் உணர்த்தப்படுகின்றன. மேலும் பல கேள்வியறிவும் கற்றுத் துறை போகிய ஆசிரியர்களும் வழக்கிடுதலை அறிவிக்கும் முகமாகப் பட்டிமன்றங்களில் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. போரில் இறந்த வீரர்களுக்கு வணக்கம் செலுத்துவதற்கு அடையாளமாகக் கொடிகள் உயர்த்தப்படுகின்றன மற்றும் புகார்த் துறைமுகத்தில் மரக்கலன்கள் வரிசையாக நிற்கின்றன. அம்மரக்கலன்களின் மேல் வணிகரால் விரும்பிக் கட்டப்பட்ட கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. அந்நகரில் கள் விற்றலைக் குறித்தும் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. இக்கொடிகள் பல வண்ணங்களையும் பல வடிவங்களையும் உடையனவாய் உள்ளன. இக்கொடிகளின்

நிழலில் ஞாயிற்றின் கதிர்களும் நுழையமுடியாதவாறு உள்ளன என்று பட்டிப்பாலை சுட்டுகிறது.

**"மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய**
**மலர் அணி வாயில் பலர் தொழு கொடியும்**
**பல கேள்வித் துறை போகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்"**
**உரல் குறித்து எடுத்த உருகெழு கொடியும்**
**வெளில் இளக்கும் களிறு போல**
**தீம்புகார்த் திரை முன்துறை**
**தூங்கு நாவாய்: துவன்று இருக்கை**
**மிசைக் கூம்பின், நசைக் கொடியும்"** **(பட்டினப் 159-175)**

புகார் நகரத்தில் மட்டுமின்றி, மதுரை நகரத்திலும் பல்வேறு கொடிகள் கட்டப்பட்டுப் பறந்தன என்று மதுரைக்காஞ்சி சுட்டுவதைக் காணலாம்.

**"ஓவுக்கண் மன்ன இருபெரு நியமித்துச்**
**சாறுயர்ந்த தெடுத்த உருவப் பல்கொடி**
**வேறுபல் பெயர ஆரெயில் கொளக்கொள**
**நாடோ றெடுத்த நலம்பெறு புனைக்கொடி**
**கள்ளின் களிறவில் கொடியொடு நன்பல**
**பல்வேறு குழுஉக் கொடிப் பதாகை நிலைஇ"** **(மதுரை 365, 373)**

என்கிறது. பண்டைக்காலத்தில் கொடிகளின் மூலமே அனைத்தும் அடையாளம் காணப்பட்டன. அவற்றின் எச்சங்கள்தான் இன்றைய விளம்பரங்கள் எனலாம்.

**அறம்**

மனிதன் வரையறுத்துக்கொண்ட ஒழுக்க நெறிமுறைகளின் தொகுதியே அறம் எனப்படுகிறது. அறக்கருத்துக்கள் மனிதனின் மனதைச் செம்மையுறச் செய்கிறது. அறம் என்பது நீதியை உணர்த்துவதோடு பழந்தமிழர் பண்பாட்டையும், உயர்ந்த நெறியையும் வாழ்வியல் தத்துவத்தையும் உணர்த்துகிறது. இவ்வுலகத்திற்கு நல்வழிகாட்டியாக உலக மக்களால் பெரிதும் போற்றப் பெறுவதாகிய இறையாற்றலையும் உணர்த்துகிறது. அறம் செய்ய விரும்பு என்கிறார் ஔவையார். அறம் என்ற சொல் தமிழ் இலக்கியத்தில் ஒழுக்கம், நீதி புண்ணியம் ஈகை அறக்கடவுள் சமயம் என்னும் பல பொருளில் வழங்கப்படுகின்றன. இந்தியப் பண்பாட்டுப் தளத்தில் அடிப்படையாகத் தர்மம் ' என்ற சொல் வழங்கப்படுகிறது. நிலை நிறுத்தப்பட்ட மனித கடமைகளை வலியுறுத்துவது அறம். மேலும் மதம், மரபு, பாரம்பரியம் பழக்கவழக்கங்கள் வாழ்க்கை முறை நடைமுறைச் செயற்பாடுகள், நீதிநெறிமுறை, குணச்சிறப்புகள், குணத்தன்மைகள், சமுதாய ஒழுக்க நெறிமுறைகள் இன்னும் பல்வேறுபட்ட கடமைகள் முதலிய பலவும் அறம் என்ற சொல்லில் அடங்கும்.

**"அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்**

**மறவாது இதுகேள் மன்னுயிர்க்கெல்லாம்**

**உண்டியும் உடையும் உறையுளும்"** **(மணிமே)**

என்று அறத்திற்கு சிறந்ததோர் உதாரணம் காட்டுகிறது மணிமேகலை. தனக்கும் உலகிற்கும் நன்மை தரும் பொருட்டு தீமை தராத வழியில் சென்ற பொருள் ஈட்டி இன்பம் அனுபவிப்பதும் கிடைக்கக் கூடிய அடிப்படை விதிகளைப் பெற்று வாழ்வதும் அறமாகும்.

அறமாவது காலம், இடம், சூழ்நிலைப் பொறுத்து அமையும். அறம், இல்லறம், துறவறம், சொல்லறம், நட்பறம், போர் அறம், மனத்தறம், பொது அறம், ஈகையறம், கொடையறம், தொழில் அறம், ஈட்டல் அறம், வேட்டல் அறம் போன்ற பல துறைகளிலும் பேசப்படுகிறது. மனம், சொல், செயல், எனப்படும் மூன்று நிலைகளிலும் தடம் புறளாத தவமே அறமாகும். நல்லதை நினைத்து நல்லவற்றிற்காக நல்லதைச் செய்யும் நலமே அறம் எனப்படும் தவறுகள் தடுக்கப்படுவதற்கும் மனிதநேயம் வளர்வதற்கும் அறக்கருத்துக்கள் காரணமாக அமைகின்றன. என்பதை

**"அறவை ஆயின் 'நினது' எனத்திறத்தல்:**

**மறவை ஆயின், போரொடு திறத்தல்:**

**அறவையும் மறவையும் அல்லையாக**

**திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்** **(புறம் 44:11-14)**

என்கிறது புறம். விரும்பிச் செய்யும் செயலால் நன்மையே விளையும் என்பதால் அறத்தை விரும்பி செய்ய வேண்டும். இதனை முகம் மலர்ந்து மனத்தின் அடி ஆழத்திலிருந்து இனிமையான சொற்கள் சொல்வதுதான் அறம் என்கிறார் வள்ளவர்

**"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்**

**இன்சொ லினதே அறம்"** **(குறள் : 93)**

என்கிறது. உயர்ந்த குறிக்கோள் கொண்டு மனிதன் வாழ வேண்டுமானால் அவன் அறநெறியைப் போற்றி வாழ்தல் சிறப்பு. "தனி மனிதனையும் சமுதாயத்தையும் வளம்பெறச் செய்வதும் மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதும் அமைதியோடு வாழச் செய்வதும் அறம், தவம் என்னும் இரு உயர் முறைகளேயாகும்"[20] என்கிறார். வேதாத்ரி மகரிஷி மேலும் வாழ்க்கை வட்டத்தில் போகிற போக்கில் அறத்தைச் செய்ய வேண்டும் என்கிறார் நாலடியார்

**"பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன்**

**ஓசை யவிந்தபின் ஆடுதும் என்றாற்றல்**

**இல்செய் குறைவினை நீக்கி அறவினை**

**மாற்றி வாம் என்றிருப்பின் மாண்பு"** **(நாலடி : 332)**

தனி மனிதவாழ்வில் அமைந்த சிறிய செயல்களைச் செய்துவிட்டுப் பின் அறம் செய்வோம் என்பது இழிசெயல் என்றும் அலை ஓய்ந்தபின் கடலில் நீராடல் என்பதற்கு ஒப்பானது என்பது நாலடியாரில் விளக்கப்படுகிறது. அறமாகிய நற்செயல்களை வாழ்வின் கடமைகளை நிறைவேற்றியப்பின் செய்வோம் என்பது மூடத்தனம். மனித வாழ்வின் அடிப்படையாக அறத்தக் கைக் கொள்ள வேண்டும் இதனால் மனித சமூகம்

முழுமையும் எல்லாச் செயல்களையும் உண்மையான அறத்துடன் மேற்கொண்டால் முழுப்பயனை அடைய வழிவகை ஏற்படும்.

**நடுகல்**

சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்கும் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல்லே நடுகல் ஆகும். நடுகல் என்றால் நடப்பட்ட கல் எனப் பொருள்படும் இதனை அகநானூறு 'நட்டபோலும் நடாஅ நெடுங்கல்' எனக் குறித்துள்ளது. வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நம்பிக்கையின் பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது. வீரயுகத்தில் நினைவுச் சின்னமாகக் கருதப்பட்ட ஒன்று காலப்போக்கில் வழிபாடாக மாற்றம் பெற்றதனையே இது காட்டுகிறது. நடுகல்லுக்குரியோராகப் போரில் மாய்ந்தோர், கறவையினை மீட்டோர், வடக்கிருந்தோர், பத்தினிப் பெண்டிர் ஆகியோர் அமைகின்றனர். உயிர்நீத்த பின்னரே நடுகல் எடுக்கும் வழக்கம் நிலவியதனை மேற்காட்டிய சான்றுகள் தெரிவிக்கின்றன. வடக்கிருந்து உயிர்துறந்தார்க்கு நடுகல் எடுத்தல் தன் நிலைமையில் தாழ்வு, மானம், நட்பு ஆகிய நிலைகளில் அமையக்காண்கிறோம். தொல்காப்பியர் புறத்திணையியலுள் வெட்சித்திணையின் மறுதலையாகிய நிரைமீட்டலாகிய கரந்தைத் திணைத்துறைகளுள் நடுகல் எடுக்கும் வழக்கத்தினை.

**"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இருமூன்று மரபிற் கல்லொடு புணர (தொல்பொருள் 63 : 9-12)**

எனக்குறித்துள்ளார். வீரத்தினையே உயர்வாகக் கருதிய வீரயுகத்தில் தோன்றிய நடுகல் எடுக்கும் வழக்கம். காலப்போக்கில் வேறு சில சமுதாய மதிப்புப் பெற்ற மனிதப் பண்புகளுக்கும் சிறப்பளித்ததை நட்பு, மானம், புகழ் ஆகியவற்றிற்காக உயிர்நீத்து நடுகல்லான மாந்தரின் வாழ்வியல் நிகழ்ச்சியை உணர்த்துகின்றன. இறந்து போனவர்களுகடைய ஆன்மாவிற்கு ஆற்றல் அதிகம் எனவும் அது ஆக்க சக்தியாகவும் அழிவு சக்தியாகவும் வெளிப்படலாமென்பது கல்நட்டியோரின் நம்பிக்கையாகும்.

முன்னோர் வழிபாட்டையும் நடுகல் வழிபாட்டையும் ஒன்றாகவே கருதுவர். இவை வேறு வேறு என்பதனை இலக்கியச் சான்றுகள் தெளிவாக்குகின்றன. பழந்தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்படும் தென்புலத்தாரே நமது முன்னோராவர். முன்னோர்க்கு நடுகல் எடுத்ததற்கான சான்று இலக்கியத்தில் சுட்டப்படவில்லை. எனினும் தென்புலத்தார் வழிபாட்டிலும் நடுகல் வழிபாட்டிலும் வழிபடுவோருக்கு உதவும் நிலையில் ஒன்றிணைந்த நம்பிக்கையே இரண்டையும் ஒன்றாகக் கருதும் போக்குக்குக் காரணாமாகலாம். இவ்விரண்டிற்கும் பொதுவானதாக அமைவது வழிபட்டோர்க்கு உதவுதல் என்ற நம்பிக்கையே. அதிலும் நடுகல் வழிபாடு வழிபட்டோர் அனைவருக்கும் உதவும் நிலையில் அமைகின்றது.

வீரத்தைப் பாராட்டுவதற்காகத் தோன்றிய நடுகல் வணக்கம். காலப்போக்கில் மனிதனின் பிறபண்புகளைப் பாராட்டும் நிலையினதாக அமைவதனை வடக்கிருந்தோர் நடுகற்கள் தெரிவிக்கின்றன. நடுகல் எடுக்கும் வழக்கம் சங்ககாலத்தில் ஆண்களுக்குரிய ஒன்றாகக் காட்டப்படுகிறது. காலப்போக்கில் பெண்ணுக்கும் நடுகல் எடுத்துக் கடவுளாக்கிய நிலையினை முதன் முதலில் சிலம்பில்தான் காண்கிறோம். இளங்கோவடிகள் தொல்காப்பியர் காட்டும் நெறியில் நின்று கண்ணகிக்குக் கல் நட்டிக் கடவுளாக்கிய புதுமையினைச் செய்துள்ளார். இதனைக் காலத்தால் ஏற்பட்ட வழிபாட்டு மாற்றம் எனக் கொள்ளுதல் பொருந்தும். ஆனால் 'ஜி.எல்.ஹார்ட் என்பவர் கணவனை இழந்த பெண்டிர் தீப்பாய்ந்து உயிர்நீத்தபின் அவர்களுக்குக் கல்நடும் வழக்கம் தென்னிந்தியாவில் பரவலாகக் காணப்பட்ட தெனினும் அதனை இலக்கியங்கள் சுட்டவில்லையெனக் கூறி அடிக்குறிப்பில் கண்ணகிக்குக் கல்நாட்டியதனைச் சான்றாக்குகின்றார்" இவற்றிலிருந்து சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு நடுகல் எடுக்கும் நிலை இல்லாதிருந்தமை புலனாகின்றது. சிலம்பில் செங்குட்டுவன் இறவாது வானுலகடைந்த கண்ணகிக்குக் கல் எடுத்துப் பத்தினிக் கோட்டம் அமைத்தமை கடவுள் வழிபாடு என்ற நிலையில் நோக்கத்தக்கதாகும்.

ஒரு சமுதாயத்தினுடைய மரபு அச்சமுதாயத்தில் வாழும் மக்களின் நிலையைக் கொண்டே நிர்ணயிக்கப்படுகிறது. தமிழ் இலக்கிய மரபில் சங்ககாலப் பொதுமக்களிடத்தில் வீரம் முக்கியமான ஒன்றாகப் போதிக்கப்பட்டிருக்கிறது. என்பதை,

**"குழவி யிறப்பெனு மூனறடி பிறப்பினும்**
**ஆளன் றென்று வாளிற் றப்பார்"** **(புறம் 74: 1-2)**

என்கிறது புறம். மேலும் இறப்புபற்றிக் குறிப்பிடும் போது குழந்தை இறந்த நிலையிலோ அல்லது தசைப்பிண்டமாகவோ பிறந்தாலும் அப்படியே எடுத்துப்புதைத்து விடாமல் உடம்பில் கத்தியால் கீறி ஒரு வீரத் தழும்பை உண்டாக்கி விட்டே புதைக்க வேண்டும் என்ற மரபு சங்க காலத்தில் இருந்திருகிறது. போர்க்களத்தில் இறந்துபடுகிற தலைவன் நேரே வீரச் சொர்ககத்தை எட்டிப் பிடிக்கிறான் என்பது அக்கால நம்பிக்கை அப்படி வீரச் சொர்க்கத்திற்குப் போகிற தலைவனை விட்டுபிரிய விரும்பாத தலைவி தன் உயிரை விட்டுத் தன் கணவனுக்கு முன்னாலே சொர்கத்திற்குப் போக நினைப்பதை

**"தரைமகள்தன் கொழுநன்தன் உடலந் தன்னைத்**
**தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்டு**
**அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்**
**ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்".** **(கலிங்க : 484)**

என்ற பாடல் உணர்த்துகிறது. வீரர்களுக்கு எவையெல்லாம் கருவியாக இருந்தனவோ அக்கருவிகளையும் நடு கல்லோடு சேர்த்து வைத்து வழிபடும் வழக்கத்தைப் பட்டினப்பாலை

**''கிடுகு நின்றத்தெகு கூன்றி**

**நடுகல்லிரைன் போல''** **(பட்டினப் 78-79)**

என்ற பாடல்அடிகள் சுட்டுகின்றன. அழகான கல் ஒன்றை வெட்டி எடுத்து அதில் இந்தப் போர்க்களத்தில் இவ்வாறு இறந்தான் என்பதை எழுதிச் சுருக்கமான வரலாற்றோடு உலகமறிய வாழ்த்தி எழுதி மராமரத்தின் நிழலில் நட்டு அதைத் தெய்வமாகப் போற்றியதை,

**''செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்**

**கல்லெறிந் தெழுதிய நல்லரை மரா அத்த**

**கடவுளோங்கிய காடேசு கவலை''** **(மலைபடு 394-396)**

என்றும்,

**''ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தென**

**நல்வழிக் கொடுத்த நானுன்ட மறவர்**

**செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட**

**கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே''** **(மலைபடு 386-89)**

என்று கூறுகின்றன. இவ்வாறு உலகறிய வீரத்தோடு வாழ்ந்த மறவர்களைப் பாராட்டி வணங்கும் வழக்கம் நல்ல மரபாகும்.

நடுகல் கடவுளை வழிபடுவதற்கு அக்கல்லில் மயில்தோகைகளை அணிவித்துத் துடியை அடித்து நெல்லாலாகிய கள்ளோடு செம்மறி ஆட்டின் குட்டியையும் பலி கொடுத்துக் கொண்டாடியிருக்கிறார்கள் என்பதை,

**''நடுகற் பீலி சூட்டி நாரரி**

**சிறுகலத் துகுப்புவுங் கொள்வன் கொல்லோ''** **(புறம் 232:3-4)**

என்ற புறநானூற்றுப் பாடலாலும்,

**''நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**

**தோப்பிக் கள்ளொடு துருஉட்பலி கொடுக்கும்**

**போக்கருங் கவலை''** **(அகம் :35)**

என்ற அகநானூற்றுப் பாடலாலும் அறிய முடிகிறது. இன்றும் தமிழகத்தில் கிராமப்புறங்களில் காக்கும் கடவுளாக விளங்கும் மதுரை வீரன், இருளன், கருப்பன் முதலியவர்களின் வணக்கம் நடுகல் வழிபாட்டிலிருந்து உருவான எச்சங்களாக இருக்கலாம்.

சங்க இலக்கியம் உருவான காலம் போர் மிகுந்த காலம் என்பர். அதனால் அதற்கேற்ப நடுகல்லைத் தொட்டு வழிபடும் வழக்கமும் சான்று தருகிறது. வீரநிலைக் காலத்துக் குடி மக்களிடம் நடுகல்லை வழிபடும் வழக்கமே நிலவியிருந்தது, கண்ணால் காண முடியாத கற்பனையில் உருவான தெய்வங்களை வழிபடுவதை விடக்கண்ணுக்கு முன்னால் வாழ்ந்து வழிகாட்டித் தம்மவர்க்கு வெற்றி தந்து மறைந்திருக்கிற வீரர்களை வழிபடுவதே சிறந்தது என்பதை

**"ஓன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி**
**ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்**
**கல்லே பரவின் னல்லது.**
**நெல்லு குத்துப் பரவுங் கடவுளுமிலவே"** **(புறம் 335: 9-12)**

என்ற புறநானூற்றுப் பாடல் உறுதிபடுத்துகிறது. இத்தகைய மறவர்களுக்குச் சிறப்புச் செய்யும் மரபு தமிழகத்தில் மட்டுமல்லாமல் கிரேக்கம் முதலிய நாடுகளிலீும் நிலவியிருந்தது. பெரிக்கிளிசு தன்னுடன் போரில் ஈடுபட்டு வீர மரணம் அடைந்த மறவர்களின் வீரத்தைக் குறித்து ஆற்றிய சொற்பொழிவு இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்டும் கூட அதனைச் சிறந்த சொற்பொழிவாகக் கருதும் நிலைக்கு உயர்வு பெற்றுள்ளதாக வெ. சாமிநாதசர்மா கூறுவார் இவ்வாறு நடுகல்லைத் தெய்வங்களாக்கி வழிபடும் உயர்ந்த மரபைச் சங்ககால மக்களின் வாழ்க்கைத் தரத்தை நிர்ணயிப்பதற்குரிய அளவுகோலாகக் கொள்ளலாம்.

**பண்பாடு**

மனிதனை விலங்கினின்று வேறுபடுத்துவது பண்பாடு இப்பண்பாடு காலத்திற்குக்காலம் நாட்டிற்குநாடு இனத்திற்கு இனம் வேறுபடுகிறது. மனிதன் எத்தகைய கூறிய அறிவு பெற்றிருப்பினும் பட்டங்களையும் பல்வேறு சிறப்புகளையும். பெற்று உயர்ந்திருப்பினும் செல்வத்தால் செழித்திருந்தாலும் பண்பாடு என்ற ஒன்று அவ்வினத்திற்கு இல்லையெனில் எந்த ஒரு பயனும் இல்லை. என்று கருதப்பெறும் பண்பாடு என்னும் செல்வம் மனிதனை உயர்த்தி நிலைக்கச் செய்கிறது. பண்பாடு மனித இனத்துடன் இயைந்து காணப்பெறுவது அது பிரிக்க இயலாதது பிற உயிரினங்களிலிருந்து மனித குலத்தை வேறுபடுத்திக் காட்ட உதவுகின்றது. சங்ககால மக்களின் வாழ்க்கை இயற்கை அமைப்பினை அடிப்படையாகக் கொண்டது இத்தகைய சங்ககால மக்களின் தமிழர்களுக்கென்று தனித்தன்மை மிக்க பண்பாடு இருந்ததை,

**"தமிழன் என்றொரு இனமுண்டு**
**தனியே அவர்க்கொரு குணமுண்டு**
**அமிழ்தம் அவனது மொழியாகும் - அன்பே**
**அவனது வழியாகும்"**

என்ற நாமக்கல் கவிஞரின் பாடல் தமிழனின் தனிச்சிறப்பையையும் உயர்ந்த பெருமையையும் உணர்த்துக்கிறது. அன்பு, பாசம், நேசம், ஈரம், வீரம், கொடை போன்ற உயரிய பண்புகளைக் கொண்டு தன் இல்லறக் கடமைகளை இனிதே நிறைவேற்றி வாழ்பவன் தமிழன் பார் புகழும் விதத்தில் பண்பாடுகளைப் பெற்றுப் பலரும் வியக்கும் வண்ணம் வாழ்ந்துகாட்டி என்றும் பெருமை கொள்பவன் தமிழன் பண்பாட்டுச் சிறப்புடையவன் என்கிறார். மேலும் பண்பாட்டை,

**"பண்புடையார்ப் பட்டுஉண்டு உலகம் அது இன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்"** **(குறள் : 996)**

என்ற திருவள்ளுவரின் வாக்குப்படி நல்லபண்பு உடையவர்கள் வாழ்ந்து கொண்டிருப்பதனால்தான் இவ்வுலகம் நிலைபெற்று இயங்கிக் கொண்டிருக்கிறது.

ஆங்கிலத்தில் உள்ள கல்ச்சர் (culture) எனும் சொல்லுக்கு இணையாகாத் தமிழில் பண்பாடு எனும் சொல் ஆளப்பட்டது. பண்பாடு என்பதனை "மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினன் என்னும் நிலைமையில் அறிவு நம்பிக்கை அறவாழ்க்கை சட்ட வழக்கங்கள் முதலியன பற்றிய ஒரு வகை வாழ்க்கை முறையாகும் என்பர்''$_{21}$ டெய்லர் என்னும் அறிஞர் பண்பாடு என்றதும் உயர்ந்த பண்புடைமை எனப் பொதுவாகப் பலரும் கருதுவர் ஆனால் பண்பாடு என்பது மனித சமுதாயத்தின் வாழ்வியல் ஒழுங்கைக் குறிக்கிறது. ஒரு சமுதாயத்தில் உள்ள மக்கள் தம் வாழ்க்கையை நடத்தும் முறையே பண்பாடு ஆகும் என மானுடவியல் இலக்கணம் கூறுகின்றது. பண்பாடு என்னும் சொல் சங்க இலக்கியங்களிலோ அவற்றிற்குப் பிற்பட்ட இலக்கியங்களிலோ இடம் பெறவில்லை. ''பண்பு'' என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

**''இசையினும் குறிப்பினும் பண்பினுந் தோன்றி''** **(தொல் :)**

**''பாடறிந்து ஒழுகும் பண்பினரே''** **(புறம் : 197)**

**''பண்பெனப்படுவது பாடறிந் தொழுகுதல்''** **(கலி : 133)**

**''ஒத்த பண்பி ரொண்டவது மன்னர்''** **(சிலம்பு 27:119)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ''பண்பாடு என்பது திருத்திய ஒழுக்கம் அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறருக்கும் பயன்படுத்துவது சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாடே பண்பாடு என்கிறார்'' தொ.பொ.மீ. மனித இனங்களில் பண்பாடற்ற இனமே இல்லை எனலாம் ஒவ்வொரு இனமும் தனக்கென ஒருவகையான பண்பாட்டைப் பெற்று இருக்கும் இப்பண்பாடு பொருள் பற்றியவை ஆன்மா பற்றியவை என இருவகைப்படுத்துவர் கருவிகள், ஆயுதங்கள் அணிகள், ஆடைகள் முதலியவற்றைப் பொருள் பற்றிய பண்பாடு எனவும் பழக்கவழக்கங்கள் சட்ட திட்டங்கள். கொள்கைகள். மனப்பான்மைகள் கலைகள் முதலியவற்றை ஆன்மா பற்றிய பண்பாடு எனவும் பகுப்பர். பண்பிற்குப் பொருள் விளக்கம் கூறும் சென்னைப் பல்கலைக்கழக அகராதி பிறர் இயல்பை அறிந்து நடக்கும் நற்குணம்' எனக்குறிப்பிடுகின்றது. எனவே மனிதனின் பண்பு பொருந்துதலே பண்பாடு எனலாம்.. சிறந்த பண்பாடு என்பது ஒழுக்கமுடைமை, பண்புடமை, அன்புடமை, உறவினரைப் போற்றுதல், நட்பு, அறம், இரக்கம் செய்ந்நன்றியறிதல் போன்றவைகளாகும். பண்பாடு என்பது மக்கள் உள்ளத்தின் செம்மையையும் சீர்மையையும் குறிக்கிறது மனதால் உணரக் கூடியவற்றை அகப்பண்பாடு என்பர்.

**''அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம்**
**வாய்மை மெய்யுணர்வு தெய்வ நம்பிக்கை**

**அருள் புலனடக்கம் நன்றி சீலம் முதலிய**
**அடிப்படையில் உணரலாவது அகப்பண்பாடு''**

என்று செ. வைத்திலிங்கம் அகப்பண்பாட்டினைக் கூறியுள்ளார். புறப்பண்பாடு சமுதாய அமைப்புகள் பண்பாடு செம்மையுறுவதற்கு உதவுகின்ற சமுதாயத்தில் வெளிப்படையாக உணரக்கூடிய கலைகள் போர்முறைகள் பொழுது போக்குகள், விழாக்கள், பொருளாதாரம் கல்வி போன்றவை புறப்பண்பாடாகின்றன. மேலும் ஒருவன் தன் குணநலன்களை நிரப்புவதிலும் தன்னைச் சூழந்திருக்கும் சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும் பேரவாக் கொண்டிருக்கும் நிலையே பண்பாடு என்கிறார். மத்யூ ஆர்னால்ட். சங்கத் தமிழரின் பண்பாடு உலக அரங்கில் தனிப்பெரும் சிறப்புக்கு உரியது. பண்பாடு என்பது காலம் காலமாக ஒரு தலைமுறை மக்களிடமிருந்து அடுத்த தலை முறையினருக்கு உரிமையாக்கப்பட்டு வருவது. பண்பாடு என்ற சொல் மனிதனோடு மட்டும் தொடர்புடையது. மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து பிரித்துக் காட்டுகிறது.

**நாகரிகம்**

தமிழர் நாகரிகம் மிகப்பழமையானது. இன்றைய உலக நாகரிங்களுக்கெல்லாம் அடிப்படையானது. மக்கள் ஒன்று கூடி வாழ்வதற்கான பழக்கவழக்கங்களை அறிவின் துணைக் கொண்டு உருவாக்கிக் கொள்வது நாகரிகம். நாகரிகம் நகர மக்களின் திருந்திய வாழ்க்கையைக் குறிக்கிறது. ‘உலகப்பெரு நாகரிகங்கள் அனைத்தும் பேராற்றங்கரைகளிலேயே உருவாயின’ என்கிறார். அ. தட்சிணாமூர்த்தி பழமையான நாகரிகம் நாடு நகரங்களுக்கு உருவாயின என்பதை

**‘பாழியன்ன கடியுடைவியகனா்’ (அகம் : 15)**

என்கிறது அகம். பண்டைய இலக்கியங்களிலே நாகரிகம் கண்ணோட்டம் என்ற பொருளில் வழங்கி வந்திருக்கின்றது. நாகரிகம் என்பது கண்ணோட்டம், இரக்கமுடைமை, அன்பின் மிகுதியால் தோன்றும் இரக்கம், தாட்சண்யம் என்ற பொருளில் வழங்கப்படுகிறது. இலக்கியங்களில் நாகரிகம் என்ற சொல் பயன்பட்டதை

**‘நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்’’ (நற் : 355)**

**“பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயக்கத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்’’ (குறள் : 10)**

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது. நாகரிகம் என்ற சொல்லைக் ‘கண்ணோட்டமுடையார்’ என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயரும் ‘கண்ணோட்டத்தினை வேண்டுபவர்’ என்று பரிமேலழகரும் விளக்கம் தருகின்றனர். உலகின் மிகத் தொன்மையான நாகரிங்களில் ஒன்று தமிழ் நாகரிகம். மேலும் பண்டைய தமிழகத்தில் இயற்கையை எதிர்த்து வாழத் தொடங்கிய மனிதனின் வாழ்வில் ஒரு சிறந்த நாகரிகம் தோன்ற பல நூற்றாண்டுகள் தேவைப்பட்டன. மனிதன் கடந்து வந்த நாகரிகத்தின் படிக்கட்டுக்கள் வேட்டையாடல், நாடோடி வாழ்க்கை, கால்நடை மேய்த்தல், இவை கலந்து இருக்கும் நிலத்தைச் சார்ந்த இயற்கை வளங்களின் இயல்புகள் நாகரிக வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன.

**தொகுப்புரை**

- சங்ககால மக்கள் இயற்கையுடன் அதிகாலை எழுந்து நீராடி ஆடை அணிந்து இயற்கை உணவை உண்டு நோயில்லாமல் கலை நயத்துடன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர் என்பதை அறிய முடிகிறது.
- மற்ற உயிரினங்களுக்கு இல்லாத ஆய்ந்தறியும் பகுத்தறிவு மனித இனத்திற்கு உண்டு. அத்தகைய அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையான கல்வி சங்க காலத்தில் சிறப்பான நிலையில் இருந்தது குறிப்பிடப்பட்டுள்ளது.
- விருந்தோம்பலும் ஈகையும் ஒன்றுடன் ஒன்று கலந்து வறுமையுற்றவர்க்குச் சேவை செய்ய வேண்டும் என்பது கூறப்பட்டள்ளது.
- நட்பு இல்லை என்றால் இவ்வுலக வாழ்வில் இன்பம் இல்லை மனிதனிடம் துன்பமும் வறுமையும் உண்மையான நட்பின் தன்மையில் வெளிப்படுத்துகிறது. நட்போடு கலந்திருக்கும் உண்மையான காதலுக்கு அழிவில்லை என்பது கூறப்பட்டுள்ளது.
- திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்டு ஆண், பெண் இருபாலரிடமும் விருந்தோம்பும் பண்பை ஊட்டி அறத்தொடு வாழ வழிவகை செய்கிறது.
- நீதி என்பது எல்லா மக்களுக்கும் பொதுவானதாகக் கருதப்பட்டது. மருத்துவத்தில் இயற்கையோடு அறுவை மருத்துவத்தையும் மேற்கொண்டனர். சோதிடம் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளது.
- புராணங்கள் பழமையான கருத்தை வேரூன்றியுள்ளது என்பது கூறப்பட்டது.
- மன்னனது ஆட்சியில் வரி வசூலித்தல், வாணிபம் துறைமுகப் பட்டினங்களின் சிறப்பு கூறப்பட்டது. ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்டது. வாணிபத்தில் சுங்கவரி விதிக்கப்பட்டது.
- இறந்தவரின் உடலைப் புதைத்தனர். வீரத்தினை உயர்வாகப் போற்றியது நடுகல். நடுகல் பற்றியும் நடுகல் வழிபாடுபற்றியும் கூறப்பட்டுள்ளது.
- மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது நாகரிகமும், பண்பாடும் உலக மக்களிடையே பழமையான நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் வழி வகுத்தது சங்க இலக்கியம் என்பது புலனாகிறது.

## அடிக்குறிப்புகள்

1. பாரதிதாசன் கவிதைகள், ப-146
2. சுமதி கனகசபை, குறுந்தொகை காட்டும் காதல் வாழ்க்கை, ப-177
3. அ.ச. இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப-33
4. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப-682
5. மகாத்மா காந்தி பொன்மொழிகள், ப-183
6. ந. சுப்பிரமணியன் சங்ககால வாழ்வியல், ப-61
7. கதிர் மகாதேவன் தமிழர் பண்பாடு, ப-61
8. கதிர்மகாதேவன் தமிழர் பண்பாடு, ப-137
9. ரா.பி. சேதுப்பிள்ளை, ஊரும் பேரும், ப-197
10. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப-65
11. கு.வெ. பாலசுப்பிரமணியன் ஆய்வுக்கோவை, ப-87
12. மு. கருணாநிதி, சங்கத்தமிழ், ப-79
13. க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும், ப-7
14. மு. கருணாநிதி இளைய சமுதாயம், ப-20
15. மகாத்மா காந்தி பொன்மொழிகள், ப-37
16. மகாத்மா காந்தி, சுய சரிதை, ப-789
17. பரிபாடல் ஆய்வுக்கோவை, ப-24
18. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப-90
19. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப-81
20. சாலினி இளந்திரையன், சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள், ப-29
21. செ. பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப-12

# முடிவுரை

**"சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு ஆராய்ந்தபோது கீழ்க்காணும் மெய்ம்மைகளை அறிய முடிந்தது.

தமிழ்மொழி, செந்தமிழ், வன்தமிழ், முத்தமிழ், நற்றமிழ், கன்னித்தமிழ், என்றெல்லாம் சான்றோர்களால் போற்றப்பெற்றச் சிறப்புக்குரியது.

பழந்தமிழ் மக்களின் எண்ண ஓட்டங்களையும் பண்பாட்டுச்சிறப்புகளையும் உலகம் கண்டுகொள்ள உதவும் ஒப்பற்றக் கரூவூலமாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. இவ்விலக்கியங்கள் தமிழ்மொழியின் பழமைக்கும் வளத்திற்கும் சான்றுகளாக உள்ளன. வாழ்வியலுக்குரிய அகம், புறம் ஆகிய நெறிமுறைகளை வகுத்துக் கூறுகின்றன. ஆங்காங்கே மனம் மாசற்று வாழ்வதற்குரிய அருளியல் கூறுகளையும் நுட்பமாகச் சுட்டிச் செல்கின்றன.

தமிழ்நாட்டில் சங்கம் அமைத்து மொழி வளர்த்த பெருமை தமிழ்ச் சான்றோர் பெருமக்களுக்கு மட்டுமே உண்டு. இவர்கள் இலக்கியங்களைச் சங்ககால இலக்கியங்கள் என்பர். அக்காலத்தில் வாழ்ந்த மன்னர்கள், புலவர்கள் மற்றும் குடிமக்கள் ஆகியோர் பண்பாட்டு நெறியுடன் வாழ்ந்துள்ளனர். என்று சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தமிழ் இலக்கியம் கடல் போன்றது. இவ்விலக்கியத்தில் பலவிதமான பண்பாட்டுக் கூறுகள் நிறைந்து காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் கடமையில் சிறந்து விளங்குதல் பிறருக்கு அருளும் தன்மை, பிறருக்கு உதவி செய்தல், அறநெறித்தன்மை, அன்புகாட்டுதல், விருந்தோம்பல், நம்பிக்கை, காதல் போன்றவையாகும். சங்க இலக்கியம் இன்பம், பொருள், அறம் என உணர்த்த அதன்பின் தோன்றிய பதினென்கீழ்கணக்கு நூல்கள் கால மாற்றத்தை உணர்த்தும் வகையாக அறம், பொருள், இன்பம் என்ற நிலைப்பாட்டை உலகிற்கு உணர்த்துகின்றன.

தமிழ்மொழி பழமையானது. அப்பழமையான மொழி பேசிய மக்களின் வாழ்க்கை மரபுகள், உணர்வுகள் போன்றவற்றை இலக்கியமாகப் பதிவு செய்வதற்கு ஒரு இலக்கண வரைமுறையை வகுத்துக் கொடுப்பது சங்க இலக்கியம். இது பழமையான நூல் மட்டுமல்லாமல் பழங்காலத் தமிழக மக்களின் வாழ்வியலைக் குறிப்பிட்டுக் காட்டும் காலக்கண்ணாடி எனலாம்.

நிலத்தைக் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என ஐந்து வகையாகப் பிரித்துள்ளனர். இந்நிலங்களுக்குரிய உரிப்பொருளாகப் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐந்து ஒழுக்கங்களைக் கூறுகின்றனர்.

மனிதன் நாகரிகம் அடையாமல் காட்டில் விலங்குகளோடு விலங்காக வாழ்ந்தபொழுது அவர்களின் உறைவிடம் மலைக்குகை மற்றும் அடர்ந்த பெரிய மரத்தடிகளேயாகும். அவர்கள் தேடிப்பெற்றக் காய்கனியும், கிழங்கும், வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியும்தான் அவர்களது உணவானது. விலங்குகளின் தோல் மரப்பட்டைகள், இலைகள் போன்றவற்றை அவர்கள் ஆடைகளாக அணிந்தனர். சிலர் ஆடையின்றியும் வாழ்ந்தனர். மனிதன் காட்டுமிராண்டி நிலையில் வாழ்ந்த காலத்தில் முதன்முதலில் நெருப்பின் பயனை அறிந்து கொண்டான். பின்னர் காட்டில் வாழும் விலங்குகளை அடக்கித் தனக்குப் பாதுகாப்பாக வைத்துக்கொண்டு நிலையான ஒரு இடத்தில் தங்கத் தொடங்கினான்.

மனிதன் நிலையான வாழ்க்கை வாழ ஆரம்பித்தபோது முல்லை நில மக்களின் ஒரு பகுதியினர் ஆற்றங்கரைகளிலே குடியேறி விவசாயம் செய்யக் கற்றுக்கொண்டார்கள் பின்பு குளங்கள் தோண்டப்பட்டன. ஆறுகளை மறித்து அணைகள் கட்டப்பட்டன. அகன்ற நிலப்பரப்புகள், விளைநிலங்களாக மாறின. இப்புதிய வாழ்க்கையின் ஆரம்பக் காலத்தில் சிறிதளவு உணவுக்குப் போகத் தானியம் மிஞ்சியது. நீண்ட வாய்க்கால்களைத் தோண்டியும், மடைகளை அமைத்தும் விளைச்சலைப் பெருக்கினர். மேலும் உழவுக்கு வேண்டிய கருவிகள் செய்யவும் ஆடு மாடுகளைப் பாதுகாக்கவும் ஆடைகள் நெய்யவும் விலங்குகளின் தோலில் பைகள் செய்யவும் கற்றுக் கொண்டனர்.

பண்டைக்கால மனிதனின் வாழ்க்கை முதன்முதலில் மலைச்சாரலில் தோன்றியது. அப்பொழுது அவர்கள் வேட்டையாடி உணவைப் பெற்றனர். பின்னர் புன்செய் நிலத்தில் பயிர்செய்ய ஆரம்பித்தனர். அவர்கள் புல், பூண்டுகள், இலை தழைகளால் வேயப்பட்ட குடிசைகளில் குடியிருந்தனர். இக்கூட்டத்தார் குயவர், எயினர் என அழைக்கப்பட்டனர்.

இயற்கையை நம்பி வாழ்ந்த மக்கள் ஆடு மாடுகளை வளர்க்கத் தொடங்கினர். அவர்கள் தனக்கும் தன்னுடைய கால்நடைகளுக்கும் வேண்டிய உணவைப் பெறப் பயிர் செய்து கொண்டனர். அதுமட்டுமில்லாமல் விலங்குகளின் தோலை ஆடையாகவும் செருப்பாகவும் தைத்துப் பயன்படுத்தினர். பின்காடுகளில் உள்ள மரங்களில் இருந்து குழல் என்னும் இசைக்கருவியைக் கண்டுபிடித்தனர். இவர்கள் வேலைசெய்த களைப்புத் தீரவும் மழைவளம் வேண்டியும் தெய்வத்தை வணங்கினர்.

அன்பொடு புணர்ந்த ஐந்திணையில் தலைவன் தலைவியை விட உயர்ந்தவனாக இருப்பது வரவேற்கப்பட்டது. களவு வாழ்விலும் கற்பு வாழ்விலும் தலைவனையும் தலைவியையும் இணைத்து வைக்கும் பாலமாகத் திகழக் கூடியவள் தோழி என்பதனை அறிய முடிகிறது.

களவு வாழ்வு கற்பு வாழ்வாக மாறும்போது கற்பு வாழ்வில் தலைவன் பொருளின் தேவையை உணர்ந்தனவாகக் காட்டப்படுகிறான். தலைவி அவனது பொருட் செலவைத் தடுப்பவளாகக் காட்டப்படுகிறாள்.

பிரிந்து சென்ற தலைவன் தலைவியின் நினைவின்றி வினையில் ஆழ்ந்திருப்பவனாகக் காட்டப்படுகிறான். தலைவி பிரிவுத் துயரைத் தாங்காது வருந்துபவளாகக் காட்டப்படுகிறாள். தலைவி பிற நினைப்பின்றித் தலைவன் நினைவிலேயே இருப்பது அக்காலத்தில் ஆண் உயர்ந்தனவாக இருப்பதைக் காட்டுக்கிறது.

தோழியின் செயல்கள் அனைத்தும் அவளின் அறிவாற்றலைப் புலப்படுத்துவதாக அமைகின்றன. களவு மணம் புரிந்த தலைவன் கற்பு மணம் புரியாது வரைவு நீட்டித்த போதும் அவன் சொற்களின் மீது மிகுந்த நம்பிக்கையுடையவளாக இருக்கிறாள் தோழி.

இல்வாழ்க்கையை நடத்தப்பொருள் தேவைப்படுகிறது. அப்பொருட் செல்வத்தின் தேவையை ஆண் உணர்ந்தவனாகக் காட்டப்படுகின்றான் பிரிவு என்பது இருவருக்கும் ஒன்று என்றாலும் அப்பிரிவில் அதிக அளவில் வருந்துபவளாகத் தலைவி படைக்கப்படுகிறாள்.

காதல் அனைவரிடமும் நிலவியதைப் போலவே பரத்தமை விழைவும் சமுதாயம் முழுவதிலும் ஒரு நோய் போலப் பரவியிருந்தது. அறுவகைப் பிரிவினுள் ஒரு பிரிவாகப் பரத்தமைப் பிரிவு இலக்கண ஆசிரியரால் வரையறுக்கப்பட்டிருக்கிறது.

பொருள் தேடித் திரும்பி வந்த தலைவன் இன்பம் துய்க்கப் பரத்தை வீடு செல்கிறான் நாட்கள் சென்றதும் மீண்டும் தலைவியிடம்வரப் பாணனைத் தூது அனுப்புகிறான். முதலில் தலைவி மறுத்தாலும் பின் குழந்தைகளின் நலன்கருதி ஏற்றுக் கொள்கிறாள் இது தலைவியின் பெருந்தன்மையைக் காட்டுகிறது.

தனிமனிதத் தேவை அவன் வாழும் சமுதாயத் தேவையாகின்றது. அதன் அடிப்படையில் அரும்பி மலர்ந்து பயன்தருவது தொழில் அவற்றில் உணவினை நிறைய விளைவிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் உழவர்கள். அவ்வுழவர்கள் உழுதல், விதைத்தல், நீர்ப்பாய்ச்சுதல், அறுவடைசெய்தல் போன்ற தொழில்களைச் செய்து உலகைக் காத்தனர்.

அக்காலத்தில் கைத்தொழில் வல்லார் குறைந்த மூலதனத்தைக் கொண்டு எளிய கருவிகளையும் திறனையும் பயன்படுத்தித் தத்தம் இருப்பிடத்திலேயே தொழில் செய்தனர். தொழிலில் ஏற்படும் உயர்வுக்கும் தாழ்வுக்கும் தொழிலாளியே பொறுப்பாவான், அதை உணர்ந்து உலோகத்தொழில், அணிகலத்தொழில் என உயர்வாகப் போற்றப்பெற்றத் தொழிலில் ஈடுபட்டதோடு செருப்புத் தைக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

உழவினால் விளைவிக்கப்படும் பொருட்களையும், கைத்தொழிலால் செய்யப்படும் உற்பத்திப் பொருட்களையும் உள்நாட்டில் பகிர்ந்தளித்தனர். வேளாண் பெருமக்களால் உற்பத்திச் செய்யப்பட்ட பொருட்களையும், உள்நாட்டு மக்களிடையே பகிர்ந்து கொள்வதற்கும் எஞ்சிய பொருட்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கவும் செய்தனர். மேலும் தேவையான வெளிநாட்டுப் பொருட்களை உள்நாட்டில் இறக்குமதி செய்யவும், மக்கள் நலனுக்கும், நாட்டு வளத்திற்கும், பெரும் செல்வத்தை ஈட்டவும் வாணிகமே சிறந்தது என்பதை மக்களும் மன்னரும் அக்காலத்தில் நன்கு உணர்ந்திருந்தனர்.

ஒவ்வொரு தொழில் செய்யவும் தனித்தனிப் பிரிவினர் தோன்றினர். இச்சமூக அமைப்பில் மனிதன் வளமாக வாழ்ந்த காரணத்தாலும் மிகுந்த ஓய்வு கிடைத்ததன் காரணமாகவும் கலைகள் வளர்ந்தன. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களைச் செய்து கொடுத்தத் தொழிலாளர்கள் ‘செய்யும் தொழிலே தெய்வம்’ என்று தாம் செய்த தொழிலை மதித்து வாழ்ந்தனர்.

பண்டைத் தமிழர் இளவேனில் காலத்தில் காலை நேரத்தில் திருமணம் நிகழ்த்துதல், திருமண வீட்டின்முன்பு மணல் பரப்புதல், புள்நிமித்தம் பார்த்து மணவினை நடத்துதல் போன்றவற்றை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

விழாக்கள் வேனிற்காலத்தில் நிறைமதி வளர்பிறை நாட்களிலும், காலை, மாலை ஆகிய இருவேளைகளிலும் கொண்டாடப்பட்டுள்ளன. மகிழ்ச்சியினை அடிப்படையாகக் கொண்ட விழாக்கள் மற்றும் சடங்குகளை நல்ல நாளில் நிகழ்த்துவதனையே தமிழர் வழக்கமாகக் கொண்டிருந்தனர். திருமணத்திற்குரிய பெரும்பொழுதாக இளவேனிலையும் உரோகினியும், திங்களும் கூடும் நாளைத் திருமணத்திற்குரிய சிறுபொழுதாகவும் தமிழர் கருதினர்.

காதல் அடைதல் உயிரின் இயற்கை என்பதனால் பருவமடைந்த மனித குலத்தினர் அனைவரிடமும் காதல் காணப்படுகிறது. ஐந்திணைக் காதலுக்குக் கட்டுப்பாடுகள் வேண்டுமானால் விதிக்கப்படலாமே தவிர அது உருவாகாமல் தடுத்துவிட முடியாது. இதனால் சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள எளிய மனிதரும் அன்பின் ஐந்திணைக் காதல் வாழ்க்கைக்கு உரியவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது.

நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகக் காட்சி தருகின்றன. நம்பிக்கைகள் உள்ளத்தின் உருவாக்கமாகவே அமைகின்றன. சங்க இலக்கியத்தில் நம்பு என்ற சொல் நம்பிக்கை என்ற பொருளில் ஆளப்பட்டிருப்பது தமிழின் தொன்மையினை வலியுறுத்துகிறது.

முதல்நிலையில் நினைவுச் சின்னமாயிருந்த நடுகல் காலப்போக்கில் வழிபாட்டு நிலைக்கு உயர்ந்தமையும் பின்பு முன்னோர் வழிபாடு நடுகல்வழிபாடும் வேறுபட்டமையும் நடுகல் நட்டுதல் ஆண்களுக்குரியது என்பதும் கூறப்பட்டுள்ளது.

மக்களின் அகப்புற நிலைகளை வெளிக்காட்டும் பண்பினதாக அமையும் பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் வாழ்வியலோடு ஆராய்வதோடு தமிழரின் வாழ்வியல் மரபுகள் விழாக்கள் ஆகியவை ஆராயத்தக்கன. பின்னர் அவற்றை மொழி இனப்பண்பாட்டு உறவு நிலைகளில் ஒப்பிட்டு ஆராய்வது பண்பாட்டு நாகரிக வளர்ச்சியினை இனங்காண்பதற்கு வழிகாட்டுகிறது.

# துணைநூற்பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**


1. இராகவவையங்கார் — குறுந்தொகை விளக்கம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்
பதிப்பு – 1993

2. இளம்பூரணர் (உ.ஆ) — தொல்காப்பியம் (பொருளதிகாரம்)
சாரதா பதிப்பகம்,
சென்னை.
பதிப்பு – 2005

3. இராமசுப்பிரமணியன், வ.த (உ.ஆ) — புறநானூறு
திருமகள் நிலையம்
சென்னை
பதிப்பு – 2000

4. சண்முகம்பிள்ளை, (ப.ஆ) — தொல்காப்பியம் பொருளதிகாரம்
இளம்பூரணர் உரை
பாரிநிலையம்,
சென்னை

5. சதாசிவ ஐயர், தி. — ஐங்குறுநூறு (மூலமும் உரையும்)
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1999

6. சாமிநாதையர், உ.வே. — பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும்
உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்
சென்னை பதிப்பு – 1918
பதிப்பு – 1918

7. சிவலிங்கனார், ஆ. (தொ.ஆ) — தொல்காப்பியம் உரைவளம்
பொருளதிகாரம், களவியல்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1994

8. சிவசுப்பிரமணியன், வே. — அகநானூறு மூலமும், உரையும்
உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்
சென்னை
பதிப்பு – 1990

9. நாராயண வேலுப்பிள்ளை, எம். — சங்க இலக்கியம் வழங்கும் பரிபாடல்
நற்கவி பிரசுரம்,
சென்னை
பதிப்பு – 1918

10. நாராயண வேலுப்பிள்ளை, எம். — சங்க இலக்கியம் வழங்கும் பத்துப்பாட்டு
நர்மதா பதிப்பகம்,
சென்னை

பதிப்பு – 2008

11. பதிப்பாசிரியர்கள் — பாட்டும், தொகையும்
திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை
பதிப்பு – 2009

12. பரிமளம், அ.மா. — சங்க இலக்கியம், பதிற்றுப்பத்து
கோவிலூர் மடாலயம், கோவிலூர்
பதிப்பு – 2003

13. பார்த்தசாரதி, நா. — கலித்தொகை, பரிபாடல் காட்சிகள்
கலைஞன் பதிப்பகம், சென்னை
பதிப்பு – 2000

14. பாலசுப்பிரமணியன், சி. — பாட்டும் தொகையும் ஓர் அறிமுகம்
பாரிநிலையம், சென்னை
பதிப்பு – 1998

15. பிரபாகரபாபு (உ.ஆ) — குறுந்தொகை
தமிழ்க்கவி பதிப்பகம், சென்னை
பதிப்பு – 2003

16. புலியூர் கேசிகன் (உ.ஆ) — புறநானூறு
பாரிநிலையம் சென்னை
பதிப்பு – 1958

17. மீனவன், நா.
சுப. அண்ணாமலை, (உ.ஆ) — சங்க இலக்கியம் அகநானூறு
மணிமிடை பவளம்
கோவிலூர் மடாலயம் கோவிலூர்
பதிப்பு – 2004

18. விஸ்வநாதன், ஆ. (உ.ஆ) — கலித்தொகை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட் சென்னை
பதிப்பு – 2004

19. வெங்கடராமன், ப. (ப.ஆ) — நற்றிணை மூலமும், உரையும்
உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை
பதிப்பு – 1989

**துணைமை ஆதாரங்கள்**


1. அடைக்கலசாமி, எம்மார் — தமிழ் இலக்கிய வரலாறு
ராசி பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 1960

2. அழகம்மை, கே.பி — சமூக நோக்கில் சங்க மகளிர்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 2001

3. அறவாணன், க.ப — தமிழ்மக்கள் வரலாறு
தமிழ்க்கோட்டம்
சென்னை
பதிப்பு – 2006

4. அன்புச்செல்வி, மு. — சங்க இலக்கிய பெண்களின் மனிதநேயம்
அய்யா நிலையம்,
தஞ்சாவூர்

5. அன்னிதாமசு — தமிழர் சமூகவியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 2000

6. அகத்தியலிங்கம், ச. முனைவர் — சாகாவரம் பெற்ற சங்கப்பாடல்கள்
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்
பதிப்பு – 2002

7. அண்ணாமலை, சுப. டாக்டர் — திருக்குறள் சிந்தனை
வானதி பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 1987

8. அப்பாத்துரையார். க — சங்க இலக்கிய மாண்பும்
சங்கப்புலவர்களும்
வசந்தா பதிப்பகம்
சென்னை

9. இளங்குமரன், இரா. புலவர் — மதுரை நான்காம் தமிழ்ச்சங்கம்
விஜயா பிரிண்டர்ஸ்
மதுரை
பதிப்பு – 1987

10. இராமலிங்கம், அரங்க. டாக்டர் — சங்க இலக்கியத்தில் வேந்தர்
ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 1987

11. இராமகிருஷ்ணன். அ — அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு
சர்வோதய இலக்கியப் பண்ணை
மதுரை

12. இராசரெத்தினம், கு. — சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்
குகன் பதிப்பகம்,
வடுவூர்,
பதிப்பு – 2004

13. இராசா, கி — தமிழ் இலக்கிய வரலாறு
அன்னை நிலையம்,
திருச்சி
பதிப்பு – 2001

14. ஈசுவரப்பிள்ளை, தா. — பத்தொன்பதாம் நூற்றாண்டின் சமுதாய மாற்றங்களும்
தமிழ் இலக்கியப் போக்குகளும்

15. இளங்குமரனார், இரா. புலவர் — தமிழர் வாழ்வியல் இலக்கணம்
அமிழ்தம் பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 2004

16. கடிகாசலம், ந.
பாலாஜி, பு. (ப.ஆ) — சங்கச் சமூகம்
அமுதம் நிலையம்,
சென்னை
பதிப்பு – 1995

17. கணபதி, அ. — தமிழக வரலாறு
மல்லிகை பதிப்பகம்
மதுரை
பதிப்பு – 1977

18. காந்தி, க. டாக்டர் — தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1980

19. குருசாமி, ம.ரா.போ. — சங்ககாலம்
மல்லி வெளியீடு,
கோவை
பதிப்பு – 1967

20. கோவிந்ததன், கா. புலவர் — தமிழர் பண்பாடு
தென்னிந்திய சைவசித்தாந்த நூல் பதிப்புக்கழகம் லிமிடெட்,
சென்னை

21. குழந்தை, புலவர் — அருந்தமிழ் அமிழ்து
சாரதா பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 2006

22. கருணாநிதி, மு. — சங்கத்தமிழ்
ராக்போர்ட் பப்ளிகேஷன்ஸ்
சென்னை
பதிப்பு – 1987

23. சசிவல்லி, வி.சி — பண்டைத்தமிழர் தொழில்கள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1989

24. சண்முகம்பிள்ளை, மு — சங்கத்தமிழர் வாழ்வியல்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை

25. சண்முகம்பிள்ளை. மு — சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1996

26. சாம்பசிவன் — தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
பதிப்பு – 1964

27. சாரங்கபாணி, இரா. — சங்கச்சான்றோர்கள்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 1993

28. சாலினி இளந்திரையன், முனைவர் — சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 1995

29. சிதம்பரனார், சாமி — தொல்காப்பியத் தமிழர்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 2000

30. சிதம்பரனார், சாமி. — பத்துப்பாட்டும் பண்டைத்தமிழரும்,
அறிவுப் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 2003

31. சிதம்பரனார், சாமி. — எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்
அறிவுப் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 2003

32. சுப்பிரமணியன், ந — சங்ககால வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை
பதிப்பு – 1986

33. சுமதி கனகசபை — குறுந்தொகை காட்டும் காதல் வாழ்க்கை
செங்காமிர்தம் பதிப்பகம்
சென்னை

பதிப்பு – 1996

34. செயராமன், நா. — சங்கத்தமிழ் செய்யுள்கோவை
முத்துப்பதிப்பகம்,
மதுரை
பதிப்பு – 1977

35. செயராமன், நா. — முல்லைப்பாடல்கள்
பப்ளிஷிங் ஹவுஸ்,
மதுரை
பதிப்பு – 1976.

36. செயராமன், நா. — நெய்தல் பாடல்கள்
குமரன் பதிப்பகம்
மதுரை
பதிப்பு – 1978

37. செல்லம், வே.தி. — தமிழக வரலாறும் பண்பாடும்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 1995

38. சேதுப்பிள்ளை, ரா.பி. — தமிழகம் ஊரும் பேரும்
பழனியப்பா பிரதர்ஸ்
சென்னை
பதிப்பு – 1946

39. நக்கீரன், அ. — பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும்
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 1966

40. சோமசுந்தரனார், பொ.வே (விளக்கவுரை) — புறப்பொருள் வெண்பாமாலை
தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்பு
கழகம் லிமிடெட்,
சென்னை
பதிப்பு – 2002

41. செல்லப்பன், சு — நாலடியார் மூலமும் உரையும்
பாரதி பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 2000

42. நடராசன், அ.லெ. — தமிழர் சமுதாய நெறிகள்
திருமகள் நிலையம்,
சென்னை

43. நாராயண வேலுப்பிள்ளை — உரைநடைத் தமிழில் சங்க இலக்கியம்
(எட்டுத்தொகை)
நர்மதா பதிப்பகம்,
சென்னை

44. தட்சிணாமூர்த்தி, அ. — தமிழர் நாகரிகமும் பண்பாடும்
யாழ் வெளியீடு,

சென்னை
பதிப்பு – 1994

45. நாராயண வேலுப்பிள்ளை, எம். — சங்க இலக்கியம் வழங்கும் பத்துப்பாட்டு
நர்மதா பதிப்பகம்
சென்னை

46. தமிழண்ணல் — புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை

47. தமிழண்ணல், முனைவர் — உலகத்தமிழிலக்கிய வரலாறு
(தொன்மை முதல் கி.பி.500 வரை)
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 2004

48. திலகவதி, க. — சங்ககால மகளிர் வாழ்வியல்
இறையருள் பதிப்பகம்,
திருச்சி
பதிப்பு – 2001

49. தேவநேயபாவாணர் — பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 1999

50. பழனிச்சாமி, செ. — புறநானூற்றில் தமிழர் பண்பாடு
வாணி பதிப்பகம்,
கோவை
பதிப்பு – 1989

51. பகவதி, கு. — தமிழர் ஆடைகள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 2003

52. பாலசுப்பிரமணியன், கு.வெ — சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்
மதராஜ் ரிப்பன் பிரஸ்,
புதுக்கோட்டை
பதிப்பு – 1994

53. பாலசுப்பிரமணியன், கு.வெ — சங்க இலக்கியத்தில் கலையும்
கலைக்கோட்பாடும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்ப – 1998

54. பாலசுப்பிரமணியன், கு.வெ — சங்க இலக்கியத்தில் புறப்பொருள்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
பதிப்பு – 2000

55. பாரதிதாசன் — பாரதிதாசன் கவிதைகள்
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்

சென்னை

56. பாஸ்கரதாஸ், ஈ.கோ. — மானிட மதிப்புகள்
தென்னிந்தியசை சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி
பதிப்பு – 1997

57. பெருமாள், தெ.பெ. — இலக்கியத்தில் இன்பச்சுவை
நிலா நூகலம்,
சென்னை
பதிப்பு – 1989

58. பிள்ளை, கே.கே. — தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 2004

59. பொற்கோ, டாக்டர் — பண்பாட்டுக் கருத்தோட்டம்
பூம்பொழில் வெளியீடு
சென்னை
பதிப்பு – 2001

60. மணிசங்கர், வெ — சிலப்பதிகாரம்
மகாலட்சுமி பதிப்பகம்
வேலூர்

61. மணி, பெ.சு — சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்
மெய்யப்பன் தமிழாய்வகம்
சிதம்பரம்

62. மணி, பெ.சு — சங்கத் தமிழியல்
மாதவி பதிப்பகம்
சென்னை

63. மாணிக்கம், வ.சுப. — சங்கநெறி
மணிவாசகர் பதிப்பகம்
சிதம்பரம்
பதிப்பு – 1987

64. மாணிக்கம், வ.சுப. — தமிழ்க்காதல்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
பதிப்பு – 2002

65. மாணிக்கம், அ. புலவர் — தமிழ்விடு தூது
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை

66. மாணிக்கனார். அ — அறநெறிச்சாரம்
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 1991

67. மாணிக்கம், வீ. டாக்டர் — தமிழர் வாழ்வியல் கி.பி.300 வரை

CLIO PUBLICATIONS
மதுரை
பதிப்பு – 2010

68. மாதையன், பெ. அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்
பாவை பப்ளிகேஷன்ஸ்
சென்னை
பதிப்பு – 2009

69. மாதையன், பெ தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை
பதிப்பு – 2009

70. வரதராசன், மு. தமிழ் இலக்கிய வரலாறு
சாகித்ய அகாதெமி
புதுதில்லி
பதிப்பு – 1972

71. வரதராசன், மு. குறுந்தொகைச் செல்வம்
பாரிநிலையம்,
சென்னை
பதிப்பு – 1958

72. வாசுதேவன், க. பன்முகநோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு
தேவன் பதிப்பகம்
திருச்சி
பதிப்பு – 2006

73. வேங்கடசாமி, மயிலை, சீனி பழங்காலத் தமிழர் வாணிகம்
திருநெல்வேலி, தென்னிந்திய சைவ நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை
பதிப்பு – 2001

74. வேங்கடசாமி நாட்டார், ந.மு நல்வழி நறுந்தொகை
சாரதா பதிப்பகம்,
சென்னை
பதிப்பு – 2005

75. ரவிசந்திரன், எம்.எஸ். சங்க இலக்கியம் (ஓர் அறிமுகம்)
பிரபாத் புக் ஹவுஸ்
சென்னை
பதிப்பு – 2002

76. வாணி அறிவாளன், முனைவர் சங்க இலக்கியத் தேடல்
சபாநாயகம் பிரிண்டர்ஸ்
சென்னை
பதிப்பு – 2009

77. ருக்மணி, இரா. நற்றிணை காட்டும் வாழ்வியல் சிந்தனைகள்
ஜோதி பதிப்பகம்,

சென்னை
பதிப்பு – 2006

78. ராமலிங்கம், கே.கே. டாக்டர் — நாலடியார் கூறும் நன்னெறிகள்
ஜெனரல் பப்ளிஷர்ஸ்
சென்னை

79. ராஜகோபாலன், சரளா. டாக்டர் — சங்க இலக்கியத்தில் தோழி
ஒளிப்பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 1986

80. நமசிவாயம். சே — தமிழர் உணவு
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை
பதிப்பு – 2003

**களஞ்சியங்கள்**

1. அருணாசலம், ப. (ப.ஆ) — சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்
தொகுதி 1-4
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

2. பாலுசாமி, நா (மு.ப.ஆ) — வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 1,2,10
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

**அகராதிகள்**

1. கதிர்வேற்பிள்ளை — சூடாமணி நிகண்டு மூலமும் உரையும்
வித்தியாகரநாக அச்சுக்கூடம்,
சென்னை
முதற்பதிப்பு – 1914

2. குமாரசுவாமிப்பிள்ளை — இலக்கியச் சொல்லகராதி
யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கம்
சென்னை
முதற்பதிப்பு – 1980

3. சிங்காரவேலு முதலியார், ஆ. — அபிதான சிந்தாமணி
சாரதா பதிப்பகம்
சென்னை
பதிப்பு – 2001

4. சுப்பிரமணியக் கவிராயர் சே.நா — தமிழ்ச்சொல் அகராதி
மதுரைத் தமிழ்ச்சங்கம்
மதுரை
முதற்பதிப்பு – 1923

5. திவாகர முனிவர் — சேந்தன் திவாகரம்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த, நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்,
சென்னை
முதற்பதிப்பு – 1958

**ஆய்வுக்கோவை**

1. அலிபாவா. உ, இராஜராஜன், இரா. (ப.ஆ) — செம்மொழித்தமிழ்
உலகத்தமிழ்ச் செம்மொழி
மாநாட்டையொட்டிய சிறப்பு வெளியீடு
வளர்தமிழ்ப் பதிப்பகம்
திருச்சிராப்பள்ளி – 620 020.
பதிப்பு – 2010

2. ஜெகதீசன், இரா., விசாலாட்சி, சி.சௌ. — பரிபாடல்
பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கம்
குறிஞ்சி பதிப்பகம்
மதுரை
பதிப்பு – 2010

3. வைத்தியநாதன், கே (ப.ஆ) — தினமணி, செம்மொழிக்கோவை
உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு
2010 சிறப்புமலர்
தமிழ்நாடு அரசு,
சென்னை
பதிப்பு – 2010

**முனைவர் பட்ட ஆய்வேடுகள்**

1. இராஜேஸ்வரி. ந — அகநானூற்றில் வாழ்வியல் செய்திகள்
இலக்கியத்துறை

தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
2005

2. கந்தசாமி, S.M. — புறத்திணை வாழ்வியல்
இலக்கியத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1989

3. கிரிஜா. ச — அரசு சங்க இலக்கியங்கள்
இலக்கியத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
2003

4. பாரதி, கு — சங்க இலக்கியத்தில் குழூகியம்
இலக்கியத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
2010

**ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடுகள்**

1. அனிதா. ஹ. கலித்தொகையில் வாழ்வியல் சிந்தனைகள்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
2008

2. கவிதா. பெ. நாலடியாரில் வாழ்வியல் செய்திகள்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
2003

3. கீதா. மு கலித்தொகை காட்டும் வாழ்வியல் சிந்தனைகள்
ஏ.பி.சி.மகாலட்சுமி மகளிர் கல்லூரி
தூத்துக்குடி
2010

4. சிவசங்கரி. மெ சிலப்பதிகாரத்தில் ஐந்திணைப்பாடல்கள்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
2005

5. சிவானந்தம், இரா முல்லைத்திணைப் பாடல்களில் தலைவி
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
1998

6. தங்கையன். இரா குறுந்தொகையில் வரலாற்றுக்கூறுகள்
அறிவியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
1998

7. சந்தியா. பெ. சங்க இலக்கியத்தில் மருதத்திணை ஓர் ஆய்வு
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
1997

**இதழ்கள்**

1. சௌமியா. அ. பசுமைத் தாயகம் சுற்றுச்சுழல் (மாத இதழ்)
திலக் தெரு,
தியாகராய நகர்,
சென்னை
2008

2. பாலகிருஷ்ணன். கே உழவன் உரிமை (மாத இதழ்)
டி.எஸ்.தனுஷ்கோடி நினைவகம்
சென்னை
2008

3. மணியரசன். பெ புதிய தமிழர் கண்ணோட்டம்
44-1 பசனைகோயில் தெரு,
சென்னை
2009

4. ஜெயகிருஷ்ணன் — தமிழ் கம்ப்யூட்டர் (மாதம் இருமுறை இதழ்)
வளர்தமிழ் பதிப்பகம்
சென்னை
2010

**ஆங்கில நூல்கள்**

1. Subramanian, A.V. — Sips from the Sangam Cup
The South India Saiva Siddanda Works,
Publishing Society
Tirunelveli
1968

2. Purnalingam Pillai, M.S. — Tamil India
The South India Saiva Siddhanda Works
Publishing Society
Chennai
1963